Agatha Christie™

# அகதா கிறிஸ்டி

# அங்கும் இங்கும் கொலை உண்டு





LORD EDGWARE DIES







கண்ணதாசன் பதிப்பகம்

# அங்கும் இங்கும் கொலை உண்டு

அகதா கிறிஸ்டி

தமிழில்:

**கொரட்டூர் ஸ்ரீனிவாஸ்**

மேலும் மின்நூல்களுக்கு
www.tamilnesan1981.blogspot.in

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
போன் : 2433 2682
*கிளைகள்:* மதுரை ❖ பாண்டி ❖ கோவை ❖ வேலூர்

கண்ணதாசன் பதிப்பக வெளியீடு எண்: 582
முதற் பதிப்பு : அக்டோபர், 2008
இரண்டாம் பதிப்பு : ஆகஸ்டு, 2010
© 2008 - Agatha Christie Limited, a Chorion Company, All rights reserved.
E-mail: kannadhasanpathippagam@gmail.com
Our website : www.kannadhasanpathippagam.com

பதிப்பாசிரியர் : **காந்தி கண்ணதாசன்**

**எச்சரிக்கை**

காப்பிரைட் சட்டத்தின் கீழ் பதிவு பெற்றுள்ள இந்நூலில் இருந்து எப்பகுதியையும் முன் அனுமதியின்றி பிரசுரிக்கக் கூடாது. தவறினால் சிவில், கிரிமினல் சட்டங்களின்படி நடவடிக்கை எடுக்கப்படும். **- காந்தி கண்ணதாசன், பி.ஏ.பி.எல்.**

**Copyright Warning**: No part of this book may be reproduced or transmitted in any form or by any means electronic or mechanical including photocopying or recording or by any information storage and retrieval system without permission in writing from Gandhi Kannadhasan, B.A., B.L., Chennai.

Any violations of these conditions, legal action will be initiated in civil and criminal proceedings under the Copyright Act 1957.

*Published in arrangement with*
**Agatha Christie Ltd, a Chorion Company, United Kingdom.**

**Price Rs. 130/-**

**"ANGUM INGUM KOLAI UNDU"** - Tamil
Translated from the English Original **"Lord Edgware Dies"**

- Written by : **Agatha Christie**
- Translated by : **Dr. Korattur K.N. Srinivas**
- Second Edition : August, 2010
- Publishing Editor : **GANDHI KANNADHASAN**
- Published by : **KANNADHASAN PATHIPPAGAM**
  23, Kannadhasan Salai, T.Nagar
  Chennai - 17. Ph: 2433 2682, 24338712

ISBN : 978-81-8402-527-9

- Our Branches
  - No. 1212, Range Gowder Street,
    **Coimbatore - 641 001.** Ph: 0422-2479774
  - No.1, Annai Complex, III Street,
    Vasantha Nagar, **Madurai - 625 003.**
    Ph. 0452 - 2373793, 2373180
  - No. 37, Bharathy Street,
    **Puducherry - 605 001.** Ph: 0413-2221241
  - No. 32 & 33, Old Bus Stand,
    Municipal New Shopping Complex, Ist Floor,
    **Vellore - 632 004.** Ph: 0416 - 2223312
- Our Bankers : State Bank of India, T. Nagar, Chennai-17
- Printed at : **Jayam Offset Printers, Ph: 9884888345**

# மொழி பெயர்ப்பாசிரியரின் உரை

ஒரு நாள் தூர்தர்ஷனில் செய்தி படித்து முடித்துவிட்டு அடுத்த புல்லிட்டினுக்கான இடைப்பட்ட நேரத்தில் சாய்வாய் நாற்காலியில் மடிந்தமர்ந்து கண்களை மூடி சிந்தனையிலிருந்தேன். நேயர்கள் கைகளில் தவழ்ந்துக் கொண்டிருக்கும் *அங்கும் இங்கும் கொலை உண்டு* நாவலை என்னமாய் திட்டமிட்டிருக்கிறார், அகதா கிறிஸ்டி என்ற பிரமிப்பு தான் என் சிந்தனையின் சாராம்சம். இதன் தாக்கத்தால் என் முகத்தில் பெருமித புன்னகை தானாய் விளைந்திருக்க வேண்டும். இதைக் கவனித்த அங்கிருந்த ரிப்போர்ட்டர் பெண்ணொருத்தி என்னைத் தட்டியெழுப்பி 'மூளையில் பிசகொன்றும் கிடையாதே...' என்பது போல சைகையில் கேலி சொன்னாள்.

என் 'தானாய் சிரித்த' சிரிப்புக்கான காரணத்தை சொன்னேன். உடனே அவள் முகத்திலும் 'தானாய் சிரிப்பு' உண்டானது. ஏனென்றால் அவளும் இக்கதையை ஏற்கெனவே படித்திருக்கிறாள். பிரமித்திருக் கிறாள். நாவலின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே 'ஆஹா ... அக்கதையை நானும் படித்திருக்கிறேன்' என்ற எண்ணமே அவளைப் பெருமிதம் கொள்ள வைத்தது.

அப்படிப்பட்ட நாவலிது. இதனைப் படித்தோம் என்று சொல்வதே கூட ஒரு பெருமையாகின்றது. அத்தகைய பெருமையை நானும் கண்ணதாசன் பதிப்பகமும் உங்களுக்கு எனது இம்மொழி பெயர்ப்பின் வாயிலாய் உண்டுபண்ணித் தருகின்றோம்.

உலகளாவிய அளவில், அகதா கிறிஸ்டியின் விண்ணுயர் நாவல்களில் ஒரு சில, மிக உன்னத 'க்ரைம் மிஸ்டிரி' நாவல்களாய் கௌரவிக்கப்பட்டுள்ளன. *அங்கும் இங்கும் கொலை உண்டு* - அவற்றில் ஒன்று!

இந்நாவலின் விமரிசையென, மடித்து மடித்துக் காட்சிகளை அழகாய் அடுக்கியுள்ள நேர்த்தியை சொல்வேன். எத்தனை பெரும் திட்ட மிடல் இருந்திக்க வேண்டும் என வியக்கிறேன், உலக அளவில் அங்கீ காரம் பெற்றுள்ள இந்நாவலின் கதையமைப்பினை நோக்கும் போது.



அன்பன்.

**முனைவர். கொரட்டூர் கே.என்.ஸ்ரீனிவாஸ்,**

மனை எண் 252, இரண்டாவது தெரு,
கொரட்டூர், சென்னை - 80.
போன்: 044-2635 8948
மின்னஞ்சல்: srinivaskns@yahoo.co.in

## கதாபாத்திரங்கள்

| | |
|---|---|
| *எட்ஜ்வேர்:* | *ஒரு நாட்டின் சில குறுநிலங்களை ஆளும் பிரபுத்துவ அமைப்பின் பிரபு (அல்லது சீமான்).* |
| *ஜானே வில்கின்ஸன் :* | *சீமான் எட்ஜ்வேரின் மனைவி, நடிகை.* |
| *கெரால்ட் மார்ஷ் :* | *சீமான் எட்ஜ்வேரின் முதல்தார வழி மகள்* |
| *மார்ஷ் :* | *கெரால்டின் சகோதர முறை* |
| *ப்ரையன் மார்ட்டின் :* | *ஜானே வில்கின்ஸனுடன் இணைந்து நடிக்கும் கதாநாயகன்.* |
| *மிஸ் ட்ரைவர் :* | *ப்ரையனை விரும்புபவள்* |
| *கர்லோட்டா ஆடம்ஸ்:* | *கலைஞர், ஓவியர். விகடகவி செய்பவர்.* |
| *டொனால்ட் ராஸ் :* | *வளரும் இளம் நடிகன்* |

*மற்றும் பணியாளர்கள், வேலைக்காரர்கள்*

*மற்றும்*

துப்பறியும் நிபுணர் ஹெர்குல் பொய்ரெட் மற்றும் அவரது ஆத்ம நண்பன் கேப்டன் ஹேஸ்டிங்ஸ்.

# பொருளடக்கம்

*

அத்தியாயம் - 1

# ஒரு கலாரங்க விருந்து

போதுஜனங்களின் நினைவாற்றலானது எப்பொழுதுமே மிகக் குறுகியது. ஆகவே, ஏற்கெனவே சீமான் எட்ஜ்வேரின் கொலை ஜனங்களிடையே தூண்டியிருந்த ஆழ்ந்த கிளர்ச்சியும் பரபரப்பும், கொஞ்சங் கொஞ்சமாக மறந்தும் மறைந்தும் போய்விட்ட சங்கதியாய் ஆகியிருந்தன. பிறகு நாட்டில் நடந்த சந்தோஷ மற்றும் துக்க சங்கதிகள் தந்திருந்த தாக்கங்கள் அதனிடத்தை ஆக்கிரமித்துக் கொள்ள, புதிதாய் உணர்ச்சிவயப்பட்டுக் கட்டுண்டிருந்தனர் மக்கள்.

என் நண்பனான துப்பறியும் நிபுணர் ஹெர்குல் பொய்ரெட் பங்கு கொண்டு துப்புத் துலங்க பேருதவி செய்த வழக்குகள் பற்றி குறிப்பிடும்போது, அவன் சம்பந்தப்பட்டிருந்ததாய் வெளிப்படையாய் அறிவிக்கப்படுவதேயில்லை. எப்பொழுதுமே! இது, முழுக்க முழுக்க, அவன் முன் வைக்கும் வேண்டுகோள்படியே நிகழும் ஒன்று என்றே நான் சொல்வேன். தான் எவ்விதத்திலும் முன்னிலைப்படுத்தப் படுவதை அவன் விரும்பியதில்லை. நற்பெயரும் புகழும் வேறிடம் சென்றன - இப்படியே அமைய வேண்டும் என்று தான் அவனும் எதிர்பார்த்தான். ஒரு கொலை வழக்கின் உண்மை புலர வேண்டும் எனும் சத்தியம் தான் ஹெர்குல்'லின் ஒரே குறிக்கோளாய் இருந்து வருகிறதே அன்றி, வழக்கினை முடித்தவன் தான் தான் எனும் அறிவிப்பால் விளையும் கௌரவமன்று! மேலும், பொய்ரெட்டின் விநோதமான விமர்சனத்தின்படி, இவ்வழக்கு அவனின் சில தோற்றுப் போன வழக்குகளுள் ஒன்றாய் ஆயிற்று. ஏனென்றால், இந்த எட்ஜ்வேர் வழக்கினை முடிக்கவே முடியாமல் பொய்ரெட் கடைசியில் அல்லாடிக் கொண்டிருந்தபோது, தெருவோரத்தில் போய்க் கொண்டிருந்த பாதசாரியொருவனின் எதிர்பாரா வசனங்கள் இவனுக்குள் உண்டு பண்ணிய பொறி தான் வழக்கினை முடித்துப் போட பேருதவியாய்

அமைந்ததாய் அவனது எண்ணம். அவனைப் பொறுத்தவரை தோற்றதோ ஜெயித்ததோ அது போகட்டும்! ஆனால், அந்தத் தெருவோர வசனத்தையும் சரியாய் பிடித்து வழக்குள் புதைந்துக் கிடந்த உண்மையான விவகாரங்களைக் கண்டறிந்து வழக்கினை முடித்தது பொய்ரெட்டின் பேரறிவும் சாதுர்யமும் தான் என்பதில் எனக்கு சந்தேகம் கிடையாது. ஆகவே, இவ்வழக்கு குறித்து நானறிந்துள்ள அத்தனை விவகாரங்களையும் மற்றும் விவரங்களையும் பட்டவர்த்தனமாக இறக்கி வைக்க வேண்டிய தருணம் வந்து விட்டதாய் உணர்ந்தேன். இவ்வழக்கின் இண்டு இடுக்கெல்லாம் துல்லியமாய் அறியப் பெற்றவன் நான். இப்படிச் செய்வதால் வசீகரம் மிகும் ஒரு கவர்ச்சிப் பெண்ணின் வேண்டுகோளையும் நான் முடித்தவனாவேன்!

எனவே --- லண்டன் கலையரங்கமொன்றில் துப்பறியும் நிபுணனான பொய்ரெட்டுக்கும் எனக்கும் இவ்வழக்கு சம்பந்தமாய் ஆரம்பமான முதல் அனுபவத்திலிருந்து, நான் என்னுடைய பிரசங்கத்தை ஆரம்பிக்கிறேன்!

அந்தக் காலகட்டத்தில், (நான் சொல்வது கடந்த வருடம் ஜூன் வாக்கில்), கர்லோட்டா ஆடம்ஸ், லண்டனில் அனைவராலும் தீவிரமாய் ரசிக்கப்பட்ட கலைஞராய் பவனி வரத் துவங்கியிருந்தார். அதற்கு முன் வருடம் அவர் அளித்திருந்த இரு கண்காட்சிகள் மாபெரும் வெற்றி கண்டிருந்தன. அதிலிருந்தே தனக்கென ஒரு பெரும் ரசிக வட்டம் அமையப் பெற்று புகழேணியில் சிரமமின்றி ஏறி விட்டார் ஆடம்ஸ். இவ்வருடம் மூன்று வார கால மேடைக் காட்சி அளிக்க வந்துள்ளார். இன்று, கடைசிக்கு முந்தைய நாள் இரவு!

கர்லோட்டா ஆடம்ஸ், ஓர் இளைய, அமெரிக்க யுவதி. எவ்வித படாடோபமோ ஒப்பனையோ இட்டுக்கட்டலோ இன்றி, யதார்த்தமான உண்மையாய் கோட்டுச் சித்திரங்களை வரைவதில் பேராச்சரியம் உண்டு பண்ணுமளவுக்கு திறமை கொண்டு விளங்குபவர். வரி வடிவச் சித்திரங்கள் வாயிலாக நுண்ணிய உணர்வுகளைக் கூட நுணுக்கமாய் அளித்து கலை உலக விமர்சகர்களால் ஒரு சேர பாராட்டப்படுபவர். மாலையின் மந்தகாசத்தை சமீபத்தில் கோட்டுச் சித்திரமாய் ஆக்கிப் படைத்திட்ட ஆடம்ஸின் திறமை, ஓர் அபூர்வம்! அதிசயம்! அமெரிக்க உல்லாசிகள், ஜெர்மனி சுற்றுலா வாசிகள், நடுத்தர குடும்பஸ்தர்கள், கலை கலை என்றலையும் கலாரசிகர்கள், என அனைவரும் இவ்வோவியத்தை ரசிக்க ஒன்று கூடி பொருந்தி நின்றனர்.

கல்லறையிலிருந்து உல்லாசம் வரை அத்தனை உணர்வுகளையும் கர்லோட்டாவின் கோட்டுச் சித்திரங்கள் தொட்டு ஊஞ்சலாடியிருக்கின்றன. போரில் மடியும் ஒரு பெண்மணியின் உணர்வுகளைப் பிரவாகமாய் பிரதிபலித்த இவரின் ஒரு கோட்டுச் சித்திரம், சோக உருண்டை ஒன்றினை தொண்டைக்குள் கொண்டு வந்து நிறுத்த தவறவில்லை.

இத்தகைய கண்காட்சி, அடுத்து இடம் பெறவுள்ள 'சில நிழல்கள்' எனும் கடைசி நிகழ்ச்சியின் துவக்கம் குறித்த அறிவிப்போடு அன்று முடிந்தது.

'சில நிழல்கள்', ஒரு விகடகவி நிகழ்ச்சி. அதனை வழங்குவதிலும் ஆச்சரியத்தக்க திறமை காட்டிப் பிரகாசித்தார், ஆடம்ஸ். எவ்வித அரிதார ஒப்பனையுமின்றி, அவருடைய முக பாவம், சடுதியில் கரைந்து - ஓர் அரசியல் வாதியாக, ஒரு பிரபல நடிகராக அல்லது யாவருமறிந்த ஓர் அழகனாக சீராய் முன்னேறி - புதுப் புது அவதாரங்களை எடுத்த வண்ணமிருந்தது. இப்படி உருமாறும் ஒவ்வொரு பாத்திரத்திலும், பிரத்யேக சிறு உரையும் தந்தார். அவ்வுரைகள் ஒவ்வொன்றும் புத்திசாலித்தனமாக வடிவமைக்கப் பட்டிருந்தன என்பதை சொல்லியாக வேண்டும். எடுத்துக் கொண்ட பாத்திரத்தின் அத்தனை பலஹீனங்களையும் சிரிக்கச் சிரிக்கத் தொட்டுப் பார்க்கும்படி நேர்த்தியாய் அமைந்திருந்தன அவை.

இவ்வாறு ஆள் மாறாட்டமே செய்தது போல் தத்ரூபமாக ஆடம்ஸ் நடித்துக் காட்டிய பிரபலர்: *ஜானே வில்கின்ஸன்.* லண்டனில் பிரபலமான திறமை மிகும் இளம் நடிகை. ஜானே மீதான விகடகவி நிகழ்ச்சி, அளந்தளந்து வடிவமைக்கப்பட்டு, சோடை போகாத பங்களிப்பாய் அமைந்திற்று. உணர்ச்சிபூர்வ பாவத்தைக் கொட்டி அனைவரையும் சுண்டி ஈர்த்தபடி ஆடம்ஸ் உதடுகள் வழி நழுவிய வீரியமான வசனங்கள், இது கிண்டல் செய்யவென இடம்பெறும் நகல் ஆட்டம் எனும் உண்மையையும் மறக்க வைத்து, காண்போரை, ஏதோ உள்ளர்த்தமும் அந்த அர்த்தங்களை உரக்கக் கூறும் உண்மையும் பொதிந்து உதிர்க்கப்படும் சக்திமிகு வார்த்தைகளாய் ஏற்க வைத்தன. தேர்ந்தெடுத்துக் கொண்ட பாத்திரத்திற்கு பங்கமேற்படாதவாறு பொருந்தி விடும்படி ஈடு இணையற்ற நேர்த்தியில் பதப்படுத்தப் பட்டிருந்த ஆடம்ஸின் குரல், கிறக்க ஒலியுடன் அமையுமாறு பேசப்பட்டு, கண்காட்சி அறை முழுவதையும் போதையில் தள்ளி

மயக்கியிருந்தது. ஜானே வில்கின்ஸன் பற்றி பேசும்போது அர்த்தபுஷ்டியோடு ஆடம்ஸ் பிடித்துக் காட்டிய அபிநயங்கள், அப்போதெல்லாம் மெலிதாய் அப்படியும் இப்படியும் மேடையில் ஆடி மேடையையே ஆட்சி புரிந்த அவரின் மேன்மை, சிறு சிறு முத்திரைகள், உடல் சமிக்ஞைகள் - எப்படித்தான் அவரால் மேடையில் சக்ரவர்த்தினியாக இப்படி அரசாட்சி செய்ய முடிகிறதோ - என்னால் எண்ணிக் கூட பார்க்க முடியவில்லை!

நான், ஜானே வில்கின்ஸனின் பூரிக்கும் அழகை மிகப் போற்றும் ரசிகனாவேன். கவர்ச்சி கொட்டும் காட்சிகள் மட்டுமல்ல... உணர்ச்சி வெடிக்கும் போராட்டக் கட்டங்களிலும் அவர் நடிப்பு என்னை சிலிர்க்கத் தான் வைத்துள்ளது. அவரின் கவர்ச்சிக் காட்சிகளை மட்டும் ருசித்துப் பார்த்துவிட்டு, ஆனால் உச்சபட்ச பங்களிப்பெல்லாம் இல்லாத நடிகை அவர் என விமர்சிக்கும் கூட்டத்தோடு, நான் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு பேசாமல் கூட இருந்திருக்கிறேன். நடிப்புக்கலை சம்பந்தமான ஆழமான திறமை மிகும் ஜானே வில்கின்ஸனை யாராவது விமர்சிக்க வேண்டும் எனும் இலக்கில் பேசினால் எனக்குத் தாளாது!

திருமணம் செய்துக்கொண்டு, இன்னும் சில வருடங்கள் கழித்து மீண்டும் நடிக்க வருவேன் என அறிவித்து விட்டு செல்லும் சில நடிகைகளின் வகையைச் சேர்ந்தவராவார், ஜானே வில்கின்ஸன். மூன்று வருடங்களுக்கு முன்னால், பண பலம் மிகுந்த ஆனால், 'க்ஷண சித்தன் க்ஷண பித்தன்' என்று வர்ணிக்கத்தக்க திடமற்ற விநோத மனப்பான்மை மிக்க சீமான் எட்ஜ்வேரை மணந்துக் கொண்டார் ஜானே வில்கின்ஸன். துரித கதியிலேயே அவரை விட்டு வில்கின்ஸன் தனியாய் பிரிந்து வந்துவிட்டதாய் ஒரு புரளி உண்டு. இந்நிலையில் தான், கலியாணமான பதினெட்டு மாதங்கள் கழித்து, ஒரு புது அமெரிக்க படத்தில் நடிக்கத் துவங்கியுள்ளதாய் சேதி வெளியாயிற்று. இந்த விடுமுறையில் வெற்றிகரமான ஒரு நாடகத்திலும் நடித்து வருவதாய் திரையுலக சேதி வந்தது.

கர்லோட்டா ஆடம்ஸின் நுணுக்கமான ஆனால் ஏனோ சற்றே வன்மம் தலை தூக்கி நிற்கும் நடிப்பினைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது தான், எடுத்துக் கொண்ட நபர் பற்றி பலரது பாராட்டும் கிடைக்கும் வண்ணம் விகடகவி பங்களிப்புத் தர வேண்டுமாயின், அதற்காக எத்தனை தூரம் அந்த நபரைப் பற்றிக் கூர்ந்து கவனித்து உள்

வாங்கி நினைவில் நிறுத்தி அந்த நபராகவே ஆகி, மேடையில் அப்படியே அச்செடுத்தாற் போல் அவரது நகலாய் நிற்க வேண்டியுள்ளது எனும் ஆச்சரியம் என்னுள் தோன்றியது. கலைஞன் என்ற அளவில், இக்கலை, ரசிகர்களிடம் நல்ல பெயரை சம்பாதித்துத் தந்தாலும், இப்படி கேலி செய்வதால் - அதுவும் சம்பந்தப்பட்ட நபரின் பலஹீனங்களையெல்லாம் பட்டியலிட்டு, கற்பனை கலந்து கேலி செய்வதன் மூலம் - அந்த நபரிடமிருந்தும் அவர் சார்ந்தோரிடமிருந்தும் விளையும் பகைமைக்கும் கெட்ட பெயருக்கும், ஆடம்ஸுக்கு சம்மதம் தானா? எனக்குள் கேள்விகள் விளைந்தன. ஒருவேளை 'எனக்கு பிறத்தியாரை பிரதியெடுத்து நடித்துக் காட்டுவதில் எத்தனை திறமையிருக்கிறது, பார்த்துக் கொள்ளுங்கள்' என்று வெளிக்காட்டி, அதனால் சம்பந்தப்பட்ட நபரை வெறுப்பேற்றி விடுவதையே, தான் அடையும் வெற்றியாகக் கருதிக் கொள்கிறாரா? இல்லை, ஒருவேளை இப்படியிருக்குமோ - இதே போல் வித்தைக் காட்டும் போட்டி கலைஞனின், 'ம்கும்...! ஆடம்ஸ் செய்வது ஒரு த்ரேதாயுக வித்தை! அரதப் பழசு! அவர் எப்படி, இப்படி எல்லோரையும் பிரதியெடுத்துக் காட்டுகிறார் என, இதோ நான் செய்து காட்டுகிறேன்' என்கிற வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதில் வன்ம திருப்தி காண்கிறாரோ...! அவரது மேடைப் பங்களிப்பு முழுவதும் ஒரு வகை வன்மப் போர்வை முகம் முழுவதும் தெரிவதற்குக் காரணம் இந்த தலைக்கனம் தானோ...!

எனக்கு தெரியவில்லை!

ஆனால், கர்லோட்டா ஆடம்ஸ் கிண்டலடித்துத் தள்ளும் நபராய் மட்டும் நான் தேர்வாகியிருந்தால், நிச்சயம் நான் கோபத்தின் உச்சிக்கு சென்றிருப்பேன் எனும் கருத்து எனக்குள் தீர்க்கமாய் தீர்மானமாயிற்று. ஒருவேளை, நகைச்சுவை கருதி, ஆடம்ஸ் அடிக்கும் கூத்தினால் எனக்குள் முண்டியடித்துக் கொண்டு பெருகியிருக்கவல்ல வெறுப்பையும் குரோதத்தையும் வெளிக்காட்டிக் கொள்ளாமல் நான் ரகசியமாய் அடக்கிப் போட்டிருக்கலாம். ஆயினும் என்னை இந்த அளவுக்கு ஆடம்ஸ் வாரியிருந்தாராயின் அதனை நான் விரும்பியிருக்கவே மாட்டேன் என்பது மட்டும் நிச்சயம். ஈவிரக்கமற்று ஹாஸ்யம் எனும் போர்வையில் இடம்பெறும் இது போன்ற தனி மனித விமர்சனங்களைத் தாங்கி ஏற்றுக் கொள்ள, ஒருவருக்கு, அதீத நகைச்சுவை உணர்வும் மிகப் பெரிய பரந்த மனப்பான்மையும் அவசியம்.

இவ்வகையான முடிவினை நான் எடுத்துக் கொண்ட போது, மேடையில் ஆடம்ஸிடமிருந்து ஒலி பெருக்கி வழியே வழிந்துக் கொண்டிருக்கும் கவர்ச்சி மிகு சிரிப்பு, அப்படியே அச்சு அசலாக, எனக்குப் பின் வரிசையிலிருந்து எதிரொலித்து என்னை அடைந்ததைக் கேட்டேன்.

துரிதமாக என் தலையைத் திருப்பி, ஒலி வந்த திசை நோக்கிப் பின் வரிசையைப் பார்த்தேன். என் இருக்கைக்கு மிகச் சரியாய் பின்னால், தன் இருக்கையிலிருந்து சற்று வளைந்து முன் வந்து ஆர்வம் பொங்க அமர்ந்து, முக மலர்ச்சியோடு இரு இதழ்களையும் நகைச்சுவையால் அகல விரித்து சிரித்தபடி, காட்சியை ரசித்துக் கொண்டிருந்தது, வேறு யாருமல்ல! சாட்சாத் ஜானே வில்கின்ஸனே! கர்லோட்டா ஆடம்ஸின் இன்றைய நகலாக்கப் பொருளாய் மேடையில் விமர்சிக்கப்பட்டுக் கொண்டிருக்கும் ஜானே வில்கின்ஸனே தான்!

அவரது முக மலர்ச்சியைக் கண்ணுற்ற அக்கணமே, ஒரு வேளை என்னை ஆடம்ஸ் தெரிந்தெடுத்து கேலிப் பொருளாக்கியிருந்தால் என எண்ணி நான் போட்டிருந்த அத்தனை கணக்கும் தப்பு என்று உளமார உணர்ந்தேன். கேலிக் கூத்தினை உண்மையென எடுத்துக் கொள்வது தான் எத்தனை முட்டாள்தனம்! வாயகல சிரித்துக் கொண்டு, ஏதோ கீழேயே விழுந்து விடுவது போல இன்னும் கொஞ்சம் இருக்கை யிலிருந்து முன் வளைந்து அமர்ந்திருந்த வில்கின்ஸனின் கண்களில் தான் என்னே புத்துணர்ச்சி! எத்தனை கொம்மாளம்! எவ்வளவு இன்பக் கிளர்ச்சி!

காட்சி முடிந்ததும், நிறைவான எக்காள ஓசையெழுப்பியபடி படபடவென கைகளைப் பாராட்டித் தட்டிய வில்கின்ஸன், தன்னுடன் வந்திருந்த சிநேகிதனைப் பார்த்து சிறப்பான பங்களிப்பு எனும் தொனியில் திருப்தியாய் சிரித்துக் கொண்டார். அவரருகில், ஓவியங்களில் காணப்படும் திடகாத்திரமான கிரேக்க கடவுள் போல வாளிப்பான உடல் பெற்று அமர்ந்திருந்த நல்ல உயரமான அந்த வசீகரனின் ஆணழகு முகம், வெண் திரையில் மிகப் பிரபலமான முகம் என உடனடியாய் அறிந்துக் கொண்டேன். அது, ப்ரையன் மார்ட்டீன். இன்றைய தேதியில் முதலிடம் பெற்றுள்ள சினிமா அழகன். மார்ட்டீனும் ஜானே வில்கின்ஸனும் இணைந்து பல படங்களில் ஜோடியாக நடித்து ரசிகர்களின் ஒப்புக் கொள்ளப்பட்ட வெள்ளித் திரை ஜோடியாக திகழ்கின்றனர்.

''அதியற்புத நடிப்பு! அப்படியே நானே மேடையேறி நின்றது மாதிரி!'' என்று பிரமித்துக் கொண்டிருந்தார் வில்கின்ஸன்.

மார்ட்டீன் சிரித்துக் கொண்டார். ''ஜானே...' புல்லரித்துப் போயிருக்கிறாய், நீ!'' என்றார்.

''பின்னே! அற்புதமாய் ஒருவரை நகலெடுத்துக் காட்டுகிறார் கர்லோட்டா ஆடம்ஸ்! நான் நினைத்திருந்ததை விட பல மடங்கு உயர்ந்த பங்களிப்பு!''

இதற்கு விளையாட்டாக மார்ட்டீன் அளித்த மறு பதிலில் நான் கவனம் செலுத்த முடியாமல் போயிற்று. ஆடம்ஸ், தன் பிரத்யேக முத்திரைகள் செறிந்து, இன்னுமொரு பிரபல்யரை நகலெடுத்துக் காட்ட ஆரம்பித்திருந்தார்.

இதெல்லாம் முடிந்த பிறகு, நினைக்கும் போதெல்லாம் எனக்குள் பரபரப்பினைத் தூண்டும்படியான சம்பவமொன்று நிகழ்ந்தது.

நானும் ஹெர்குல் பொய்ரெட்டும், ஓவியக் கண்காட்சியும் பல குரல் காட்சியும் நிறைவு பெற்ற பிறகு, இளைவு இடம்பெற்ற சவாய் ஓட்டலில் இரவு சாப்பாட்டுக்காக அமர்ந்திருந்தோம். எங்களுக்கு அடுத்த உணவு மேஜையிலேயே ஜானே வில்கின்ஸனும் மார்ட்டீனும், அவர்களுடன் நானறிந்திராத மேலும் இருவரும் அமர்ந்திருந்தனர். அவர்களைக் குறிப்பிட்டு நான் ஹெர்குல்லிடம் விளக்கிக் கொண்டிருக்கும் போதே, இன்னொரு ஜோடி, ஜானே அமர்ந்திருந்த மேஜையையும் தாண்டியிருந்த மேஜையில் வந்து அமர்ந்துக் கொண்டனர். அங்கமர்ந்த பெண்ணின் முகம் எனக்கு மிகப் பரிச்சயமாக இருப்பினும், பார்த்த கணத்தில், அது யார் என்று என்னால் பிரித்தறிய இயலவில்லை.

இப்படி யோசித்துக் கொண்டிருக்கும் போதே, மின்னல் வெட்டினாற்போல், யார் என்று யோசித்தபடி நான் முறைத்துப் பார்த்துக் கொண்டிருக்கும் பெண், கர்லோட்டா ஆடம்ஸ் என்பது பொறி தட்டியது. அவருடன் வந்திருந்த ஆடவன் யாரென தெரியவில்லை. சவரமெல்லாம் செய்யப்பட்டு அவன் முகம் நேர்த்தியாயும் சந்தோஷமாயுமிருந்தாலும் அதில், ஒரு வெற்றிடம், அறிவு சூன்யம் மிகுந்திருந்தது. எனக்குப் பிடிக்காத ஒன்று இது.

ஆடம்ஸ், கவர்ச்சியேதுமற்ற கறுப்பு நிறத்தைத் தேர்ந்தெடுத்து சிரத்தையின்றி அலங்காரம் செய்துக் கொண்டிருந்தார். சட்டென கவரும் ஈர்ப்போ, பார்ப்போரின் விழிகளை நிறுத்தி வைக்கும் ஆதிக்கமோ அற்ற முகமாய் இருந்தது, அவரின் முகம். அம்முகம்,

உணர்வுக் கடலாய், எந்த பாத்திரத்தையும் ஏற்று நகலெடுத்துக் காட்டத் தயாராய் தகதகத்துக் கொண்டிருக்கும் உயிர்ப்பு மிகும் முகமாய், விகடகவிக் கலைக்கே அர்ப்பணமாகி விட்ட தலைசிறந்த சிரேஷ்ட முகமாய் அமைந்திருந்தது; ஆயினும், எந்த நபரையும் உள் வாங்கிப் பிரதிபலித்துவிட வல்ல அம்முகத்துக்கென்று, அடையாளம் சொல்லும் படியான தனித்துவ பிரத்யேகத் தன்மை ஏதும் தென்படவில்லை.

எனது இந்நிலைப்பாட்டை பொய்ரெட்டின் மீது இறக்கி வைத்தேன்! நான் குறிப்பிடுவதைக் கவனித்தான். பிறகு, தலை திருப்பிய சேவலாய், எங்கள் விவாதப்பொருளானவர்கள் அமர்ந்திருந்த உணவு மேஜைகள் பக்கம் திரும்பி பார்வையை மேய விட்டான்.

''ஓ! அது தான் எட்ஜ்வேரின் மனைவியா! ஜானே வில்கின்ஸன்! ஆமாமாம்! அவரே தான்! அவர் நடிச்ச படங்களை நான் பார்த்திருக்கிறேன்!கவர்ச்சிப் புயல்!''

''நல்ல நடிகையும் கூட!''

''இருக்கலாம்.''

''ஏன், சந்தேகம்...! திருப்தியா ஒத்துக்கிற மாதிரி தெரியலியே!''

''அவர் நடிக்கும் காட்சி அமைப்பைப் பொறுத்தது அது, நண்பா! காட்சியின் மையப் பொருளாய் அவர் அமைந்து, அவரைச் சுற்றி இன்னும் பிற பாத்திரங்களும் சுழன்றுக் கொண்டிருந்தால், ஒப்புக்கறேன்... தான் முக்கியமாக்கப்படும் அப்படிப்பட்ட கதைகளில், அவருக்களிக்கப்பட்ட கட்டத்தினை மிகச் சரியா நடித்துத் தந்துடுவார். ஆனால் ஒரு தனி ஆவர்த்தனமோ அல்லது உணர்ச்சி பூர்வமான ஒரு குணச்சித்திரப் பாத்திரத்தையோ ஏந்தி அவரால் நடித்துத் தர முடியுமா என்பது, என்னைப் பொறுத்தவரை சந்தேகமே! டேய், ஹேஸ்டிங்ஸ்! கதை, அவரைப் பற்றி அவருக்காக எழுதப்படணும்டா! இந்த திருப்தி அவருக்குத் தரப்படணும்! தன்னைப் பற்றி மட்டுமே கவனமும் ஈடுபாடும் செலுத்தும் பெண் வகையாய் தான் எனக்கு அவர் தோன்றுகிறார்.'' நிறுத்தியவன், திடுமென பின்வரும் குறிப்பினையும் நிதானமாய் தந்தான்: '' இவரைப் போன்ற படைப்புகள், வாழ்க்கையை, ஆபத்துக்கள் சூழ்ந்திருக்கக் கடக்கிறார்கள்.''

''ஆபத்துக்கள்?'' - சிறு ஆச்சரியம் ஒலிக்கக் கேட்டேன்.

''நான் உபயோகப்படுத்திய வாக்கியம் உன்னை ஆச்சரியத்தில், தள்ளிடுச்சுனு நினைக்கிறேன்! யெஸ்... ஆபத்துக்கள்! ஒண்ணு தெரிஞ்சுக்கோ ஹேஸ்டிங்ஸ்! இப்படிப்பட்ட பெண்களின் பார்வையும் கவனமும், இருபத்தி நாலு மணி நேரமும் ஒன்றில் தான்

குவிந்திருக்கும். அது - அவர்களே! அவங்களுக்கு வெளியில் இயங்கும் எதுவும் அவங்களோட கண்களுக்குப் படவே படாது! அவர்களைச் சூழ்ந்து நிற்கும் ஆபத்துக்களையோ அல்லது பின்னப்படும் சூழ்ச்சி களையோ அல்லது எதிர்படும் தடைகளையோ, துளிக் கூட அறியும் பக்குவமற்றப் பெண்கள், இவர்கள். விவாதங்களும் கருத்து வேற்றுமைகளும் முரண்பாடுகளும் கொண்டு அவங்களை சுற்றி இயங்கும் எண்ணிலடங்கா மனித உளவியலை உணராதவர்கள். அவர்கள் கரு விழிகளின் ஒளி காண்பதெல்லாம், தங்கள் எண்ணப்படி முன்னே விரித்துக் கொண்டு நீளும், அவர்கள் முன்னேறும் பாதையை மட்டும் தான். எனவே, உடனடியாகவோ அல்லது கொஞ்சங்காலந் தாழ்த்தியோ ப்ரளயம் ஏற்பட்டு விடுகின்றது.''

ஈடுபாடானேன். இப்படியெல்லாம் தீர்க்கமான ஆராய்ச்சிகள் எனக்குள் விளைவதில்லை என எனக்கு நானே ஏற்றுக் கொண்டேன். கேட்டேன். ''அந்த அடுத்தவர்?''

''யார்? செல்வி ஆடம்ஸா?'' - கேட்ட ஹெர்குல், ஆடம்ஸை உற்றுப் பார்த்துக் கொண்டே ''ம்ம்ம்'', என சிறுசிரிப்பினூடே ராகம் பாடி, ''அவரைப் பற்றி நான் என்ன பேச வேண்டும் என எதிர்பார்க்கிறாய்?'' என்றான்.

''அவர் உன்னை என்ன மாதிரி பாதிக்கிறார் என்று மட்டும்.''

''ஏய், ஏய், ஏய்! இந்த நள்ளிரவில், கை ரேகையைப் பார்த்து எதிர்காலத்தையும் குணாதிசயங்களையும் சொல்லவல்ல ஒரு ஜோசியக்காரனா என்னை மாத்திட்டியா, நீ!''

பொய்ரெட்டின் இந்த ஹாஸ்யத்துக்கு இணையாக ''எந்த ஆரூடக்காரனையும் விட, உளவியல் பற்றி நீ கொண்டுள்ள ஞானம், எதிரே இருப்பவரின் குணாதிசயங்களை சிறப்பாகவே விண்டு வைக்கும்'' என்று நான் குறிப்பிட்டதை சற்றே பெரிதாய் புன்முறுவி ரசித்தான் அவன். சொன்னான் : ''ஹேஸ்டிங்ஸ்! என் மீது அபரிமித நம்பிக்கை வெச்சிருக்கே! அது என்னைத் தொடுது! நாம் ஒவ்வொருவரும் - இருட்டைப் போல அடையாளம் காண முடியாத புதிர்கள் என்றும் - மனித புத்திக்குள் அகப்படாத அடங்காத ரகசியங்கள் என்றும் - முரண்பட்ட ஆசைகளும் தேவைகளும் இலக்குகளும் கொண்டபடி கலக்கமும் பிரமையும் நிறைந்து, எப்படி நடந்துக் கொள்வார் என்று தீர்மானமே செய்யயியலா வண்ணம் திகைப்பூட்டிய படி உலவும் மனித மாமிசங்கள் என்றும் - என் நண்பா, உனக்குத் தெரியாதா என்ன! ஒவ்வொரு விஷயத்திலும் மேதாவித்தனமாய் ஒரு

முடிவினைத் தான் மனிதன் எடுக்கின்றான் - ஆனால் பாவம், பத்தில் ஒன்பது முடிவுகள் தவறாய் தான் முடிகின்றன!''

''ஆனால் ஹெர்குல் பொய்ரெட்டின் முடிவுகள் அப்படிப்பட்டவை அல்லவே! அவை என்றும் சரியானவை!''

''ஓஹ்! ஹெர்குல் பொய்ரெட் உட்படவும் தான்! எனக்கு தெரியும்... நான் ஏதோ தற்பெருமை மிகும் அகந்தையானவன்னு உன்னிடம் கொஞ்சமாய் ஓர் அபிப்ராயம் இருப்பது எனக்கு நல்லாவே தெரியும்! பல முறை அது உன்னிடமிருந்து நீ அறியாமலேயே கொட்டி உள்ளது. இதோ, இப்பொழுதுகூட, 'ஹெர்குல் பொய்ரெட்டின் முடிவுகள் அப்படிப்பட்டவை அல்லவே'னு நீ சொன்னதில் கூட, அந்த அபிப்ராயம் தான் மிகுந்து நிக்குது, நண்பா! இனி அப்படி எண்ணாதே! சரியா! சத்தியம் செய்து தரேன்! நான் மிக எளிமையானவன்!''

''........''

''பழகுவதிலும் பந்தா அறியாதவன் நான். என் மீசையும் அதன் அமைப்பும் என் முகத்துக்கு வாய்த்திட்ட மாபெரும் வரம் எனும் ஒரே ஒரு கூற்றினை அடித்துச் சொல்வதைத் தவிர, எந்த தருணத்திலும் நான் தம்பட்டம் அடித்துக் கொண்டவனே கிடையாது. இங்கு லண்டனில், இன்று வரை, என் கம்பீரமான அதே சமயம் நம்பிக்கை தரும் மீசையைப் போல இன்னொன்றை நான் பார்த்ததில்லை.''

''இது விஷயத்துல உனக்கு கவலை வேண்டாம்'' என்ற நான், ''நிச்சயமாய் உன் கர்ஜிக்கும் மீசைக்கு இணையாய் ஒன்று இங்கு கிடைக்காது. சிங்கத்தின் மீசை வாய்த்துள்ள ஆண் வீரன் நீ'' என்றேன். வீண் டம்பமடித்துக் கொள்ளாத குணம் தான் பொய்ரெட்டின் குணம் என எனக்கு நன்றாகவே தெரியும் என்று ஊர்ஜிதப்படுத்திய நான், ஹெர்குல் ஒரு மாபெரும் துப்பறியும் நிபுணர் என்ற பெருமை தான் என்னிடம் உள்ளதே அன்றி, தற்பெருமை அன்று என்று திருத்தி விளக்கிவிட்டு, ''எப்படியோ தப்பிச்சுட்டே'' என்றேன் வறட்சியாய். இப்படிச் சொன்னதற்கான காரணமாக, ''நீ, கர்லோட்டா ஆடம்ஸ் பற்றி கருத்துக் கூறப் போவதில்லை?'' என்ற நான், ''ஆடம்ஸும், தன் வாழ்க்கையில் அபாயங்களையும் ஆபத்துக்களையும் எதிர்கொண்டு தான் வாழ வேண்டும்னு நீ நினைக்கலையா?'' என்று கேட்டேன்.

மனம் ஆழ்ந்த முக்கியத்துவத்தைப் பிரதிபலித்த ஹெர்குல்லின் முகம், ''நாம் எல்லோருமே வாழ்க்கையை ஆபத்துக்கள் சூழத் தான் கடந்துக்கிட்டிருக்கோம். இனிய நண்பா! தொட்டிலிருந்து நாம் நீள்

குழல்கள் போல, நம்மை நோக்கி தினம் தினம் வாழ்க்கை ஆபத்துக்கள் கை நீட்டிக் கொண்டு தானிருக்கின்றன'' என்றான். தொடர்ந்தான். ''நம்மீது திபுதிபுவென விழுவதற்காக, வீட்டு வாசலிலேயே, பல துரதிர்ஷ்டவசங்கள் காத்துக்கிட்டு தான் இருக்கு! ஆனால் செல்வி ஆடம்ஸ் அப்படி எதிர்படும் ஆபத்துக்களை கையாண்டு ஜெயிச்சுடு வார் - உன் கேள்விக்கு இது தான் பதில்! அவர், விவேக நுட்பமுள்ளவர். சராசரிக்கும் ஒரு படி மேலான புத்திசாலி. இருப்பினும் ஹேஸ்டிங்ஸ்...! ஆடம்ஸ்ஸிடமும், ஓர் ஆபத்துக்கான, அவரே, அவரை அறியாமல் தன் வாழ்க்கைக்குள் நுழைய விட்டு விடும் ஓர் ஆபத்துக்கான வாய்ப்பு உள்ளது. நாம் அவர் வாழ்க்கையில் ஆபத்தே இல்லையா என பேசிக் கொண்டிருப்பதால் எனக்குள் தோன்றும் இதனை சொல்கிறேன்.''

''அது எது?''

''பண ஆசை. பணத்தாசை, விவேகமானவரை கூட, முன்னெச்சரிக்கையிலிருந்தும் ஜாக்கிரதையான பாதையிலிருந்தும் வழுக்கச் செய்து விடும்.''

''இது நம் எல்லோருக்கும் கூட நடக்கலாமே'' என்றேன் நான்.

''நடக்கலாம். ஆனா நமக்கு எதிர்பாராது நடக்கும் வழுக்கல், பணத்தாசைப் பிடித்தோருக்கு ஓர் ஆபத்தாய் நிகழும், விளக்கறேன். கவனமா கேள். பணத்தில் மட்டுமே குவிந்திராத நம் எண்ணத்தால், கையிலுள்ள பணம் உண்டுபண்ண வல்ல அத்தனை ஆபத்துக்களையும் நீயும் நானும் கணக்கிட்டு வெச்சிருப்போம். பணத்தால் விளையவல்ல ஆதாயங்களையும் பாதகங்களையும் ஒரு சேர எடை போட்டு வைத்து எச்சரிக்கையாய் நகர்வோம். ஆனால் *பண வெறி* - பணம் பணம் எனும் பணத்தைப் பெட்டி பெட்டியாய் சேர்க்கும் குணம் மட்டும் வளர்ந்துட்டா, அந்தப் பணம் மட்டும் தான் கண்களுக்கு புலப்படும். அதனை சுற்றியிருக்கும் ஏனைய எதுவும் நிழலாய் போய் விடும் -ஆபத்துக்கள் உட்பட! அதனால தான் பணத்தாசையை பண வெறி என்று சிறுமை படுத்தறோம்.''

ஹெர்குல்லின் மனப்பூர்வமான விளக்கத்தை, ''ஆயினும் 'எங்கே தேடுவேன், பணத்தை எங்கே தேடுவேன்'னு தானே பாடி அலைய வேண்டியிருக்கு'' என நான் நகைத்துக் காட்டினாலும், ஹெர்குல்லுக்கே உரிய கோபப்படாத குணத்தின் அடிப்படையில், ''மனோதத்துவ சாத்திரம் மிக பொதிந்த ஒன்று'' என்று தான் பேசிக் கொண்டிருந்த திலிருந்து விலகாது தொடர்ந்தான்: ''உளவியலில் ஈடுபாடும், திறனும்

அற்ற ஒருவரால் கொலை, போன்ற தீவிரமான குற்றங்களைப் பிரித்தாராய முடியாது, ஹேஸ்டிங்ஸ்! நான் குறிப்பிடுவது மனோ தத்துவ இயல் - உளவியல் - சைக்காலஜி. மனோ வியாதி, அதாவது சைக்கியாட்ரிக் அல்ல! ஒரு துப்பறியும் நிபுணருக்கு, எந்த ஆயுதத்தைக் கொண்டு அதை எந்தக் கோணத்தில் உபயோகப்படுத்தி கொலை நிகழ்த்தினான் என்பதல்ல, முக்கியமாய்படுவது! அந்த நிகழ்தலுக்குப் பின்னால் புதைந்துக் கிடக்கும் மன ஆக்கம் தான் நிபுணரின் கவனத்தைக் கவர்ந்து ஈர்த்து உருக்கும். என்ன, புரியுதா? அல்லது ஏதாவது பேயறைந்தாற் போலுள்ளதா?''

அட்சர சுத்தமாக ஹெர்குல் விளக்குவதை நான் தொடர்ந்துக் கொண்டிருப்பதாய் கூறினேன்.

''வழக்குகளில் நீயும் நானும் சேர்ந்து பணியாற்றும் போதெல்லாம் கவனிச்சிருக்கிறேன், ஹேஸ்டிங்ஸ்! பௌதீக அல்லது தேக சம்பந்தமான - அதாவது வெளிப்படையாய் தெரியக் கூடிய துப்புகளை மட்டும் தேடும்படி நீ என்னை ரொம்ப இம்சிப்பே! கொலைக் களத்தில் அகப்படும் காலடித் தடங்களை அளக்கச் சொல்லி... அங்கு கிடக்கும் துண்டு சிகரெட்டை ஆராயச் சொல்லி... அதிலிருந்து சிந்திக் கிடக்கும் சாம்பலைக் கீறியெடுத்துப் பரிசோதிக்கச் சொல்லி... இப்படி யெல்லாம் தான் நீ முனைப்பாய் இருப்பாய். ஆனா, ஓய்வாய் சாய்வு நாற்காலியில் சாய்ந்து, அப்படியே கண்களைத் தளர்வாய் மூடி படுத்துக் கொண்டு அமைதியாய் சிந்திக்கும் போது, எந்தப் பிரச்சினைக்குமான தீர்வும் மிக அருகில் கிட்டி விடும் என்பதை மட்டும் நீ புரிந்துக் கொள்வதே கிடையாது. அப்போது, இரண்டு புறக் கண்களும் மூடிய அந்நிலையில். அகக்கண் கொண்டு ஒருவன் பிரச்சினையை அணுகுகிறான் என்பது உனக்கு ஏன் தான் விளங்குவதேயில்லையோ!''

''ஏன்னா'' - என்று அதற்கான காரணத்தைப் பின்வருமாறு சொன்னேன். ''சாய்வு நாற்காலியில், வசதியாய் சாய்ந்துக் கொண்டு கண்களையும் தளர விட்டுக் கொண்டேனென்றால், உன்னைப் போல அகக் கண்ணெல்லாம் திறந்துக் கொள்வதற்கு பதிலாக எனக்கு ஒன்று தான் - ஒன்றே ஒன்று தான் வருகின்றது - அது தூக்கம்!''

''கவனிச்சிருக்கேன்!'' - சிரித்துக் கொண்டான் பொய்ரெட். அவன் பேசிக் கொண்டிருந்த விளக்கத்தைத் தொடர்ந்தான்: ''இந்த அனுபவம் தியானம் போல பழகப்பட வேண்டிய ஒன்று. விசித்திரமானது. அமைதியும் தனிமையும் கலந்துதவும் அந்த சிந்தனை தருணங்களில்,

மூளை மிதமிஞ்சி இயங்க வேண்டும். இயங்கும்! ஒழுங்கற்று திரிய விடக்கூடாது! மூளையின் இயக்கத்தைக் கட்டிப் பிடித்து இழுத்து பிரச்னைக்குள் புகுத்தி துளாவ விடணும். சிந்தனைக்குச் சிதறல் ஏற்படாதவாறு துளாவ விடணும்! அதனால் தான் தியானம் போல என்றேன்! நண்பா! இது மட்டும் தான் நம்பகத்தன்மை வாய்ந்தது! பனி மூட்டம் போல தெளிவற்ற நிலையிலிருந்து விலகி, உண்மையை வெளிச்சம் போட்டுக் காட்டுமளவுக்கு நம்பகத்தன்மை வாய்ந்தது.''

இந்தத் தருணத்தில் தான், என் கவனம், அடுத்த உணவு மேஜையில் அமர்ந்திருந்த நால்வரின் மீதும் அலைந்துச் சென்றது. பொய்ரெட்டின் தனி ஆவர்த்தனம் முடிவுக்கு வந்ததும், ''நீ சாதிச்சுட்டேடா பொய்ரெட்'' என சொன்னேன் - என் பார்வையில் அகப்பட்டுக் கிடந்த திருமதி எட்ஜ்வேரைக் கவனித்தபடி. ''வெண்ணிற தேவதையாய் மிளிரும் திருமதி எட்ஜ்வேர் உன் மீது பதிந்து விட்ட அவர் கண்களை இப்படி அப்படி நகர்த்த முடியாமல் எப்படி மலைத்துப் போயிருக்கிறார்... கவனி'' என்றேன்.

''சந்தேகமில்லை'' என்றான், நான் குறிப்பிட்ட காட்சியைக் கவனித்த பொய்ரெட். ''அவருக்கு நான் யாரென்று சொல்லி யிருப்பார்கள்.''

''உன் மிடுக்கான, வீரம் மிகுந்து விறைத்து நிற்கும் அந்த வளைந்த மீசை தான் பொய்ரெட்! அது வெளியேற்றும் ஆண்மையில் தான் திருமதி. ஜானே வில்கின்ஸன் எட்ஜ்வேர், கட்டுண்டு சுருண்டு விட்டார்.''

பொய்ரெட், கள்ளத்தனமாக தன் மீசையை செல்லமாய் சீராட்டும் தொனியில் தடவிக் கொண்டான்!

''என் மீசை தனித்துவம் வாய்ந்து காண்போரிடம் என் மீது பெருத்த நம்பிக்கையை உண்டு பண்ணிடுது என்பது நிஜம் தான்'' என்று பெருமையாய் ஒப்புக் கொண்ட பொய்ரெட், ''ஆனால் நண்பா'' என பயந்தவனைப் போல் விளையாட்டாய் காட்டிக் கொண்டு, ''உன் மீசை இருக்கிறது பார்... அது பல் துலக்க பயன்படும் பிரஷ்! கோரமாய் பயமுறுத்தும் கோரைப் பற்கள்! இனி உனக்கு அது வேண்டவே வேண்டாம்! புண்ணியமாய் போகும் உனக்கு. அதை, முழுக்க முழுக்க வழித்தெடுத்து விடு'' என்றான்.

இருவரும் விமரிசையாய் சிரித்துக் கொண்டோம்.

எங்கள் சிரிப்புக்குக் காரணமான வில்கின்ஸன் பக்கம் நான் மறுபடியும் என் பார்வையை அலைய விட்ட போது, ''பொய்ரெட்!

அவங்க எழுந்துக்கிறாங்க!'' என்றேன், அந்த நால்வர் மேஜை பக்கத்தையே கவனித்தபடி. ''நம்மைப் பார்த்தபடி தான் எழுந்திருக்கிறாங்க பொய்ரெட்! எனக்கென்னவோ நம்மகிட்டே பேசத் தான் கிளம்பறாரோனு தோணுது. ஆனால் அங்கே பார்... மார்ட்டீன், ஏனோ எழுந்திருக்கும் அவரைப் பிடித்திழுத்து உட்கார வைக்க முயற்சி செய்யறார். ம்ம்! மார்ட்டீனை வில்கின்ஸன் சட்டை செய்வார்னு தோணலே.''

மிக நிச்சயமான தீவிரமும் அவசரமும் கொண்டு, தனது இருக்கையை விட்டு நகர்ந்த வில்கின்ஸன், எங்கள் மேஜை நோக்கி, வந்தார். சற்றே விரைவாய் வந்தடைந்தவரை எதிர்கொள்ளும் விதமாய் எழுந்த பொய்ரெட் மரியாதை கலந்து சன்னமாய் முதுகு வளைத்து வணக்கம் தெரிவிக்க நானும் எழுந்து நின்றுக் கொண்டேன்.

''நீங்கள், திருமிகு ஹெர்குல் பொய்ரெட் தானே? துப்பறியும் நிபுணர்?'' தீர்மானமாய் தெரிந்தாலும் சிறு சந்தேகம் கலந்து கேட்டது, வில்கின்ஸனின் சன்னமான கவர்ச்சி குரல்!

இக்கேள்விகளுக்கான பதிலாக, ''உங்கள் சேவைக்காக'' என்றான் பொய்ரெட், அழகாய்.

''திருமிகு பொய்ரெட், வணக்கங்கள். நான் உங்ககிட்டே பேச விரும்பறேன். பேச வேண்டும். பேசியேத் தீர வேண்டும்.''

''நிச்சயமா திருமதி வில்கின்ஸன்! உட்கார்ந்துப் பேசலாமே!''

''இல்லை, இல்லை. இங்கே வேணாம். தனிப்பட்ட இடத்தில் பிரத்யேகமாய் பேசணும். நேரா மாடியில் நான் தங்கியிருக்கும் என் அந்தரங்க அறைக்குப் போயிடலாம்.''

இப்பொழுது ப்ரையன் மார்ட்டீனும் வந்து இணைந்திருந்தார். வில்கின்ஸனின் செயலை நிராகரிக்கும் போக்கில் பழித்துச் சிரித்தவர், ''நீ கொஞ்சம் காத்திருக்க வேண்டும் ஜானே'' என்றார். அதே கண்டனக் குரலில், ''திருமிகு பொய்ரெட் மிக மரியாதைக்குகந்தவர். அவரின் டின்னரைத் தடை செய்து அழைப்பது ரொம்பத் தவறு. அதிகப் பிரசங்கித்தனம்'' என்றார்.

ஆனால் தான் எழுந்து வந்ததற்கான இலக்கிலிருந்து வில்கின்ஸன் பின்வாங்குவதாயில்லை. ''ஏன் மார்ட்டீன், ஏன்? என்னாச்சு இப்போ? நம்ம அறைக்கு தடபுடலான உணவு வகைகளைக் கொண்டு வரச் சொன்னா ஆச்சு! ம்! சர்வரிடம் இதைப் பற்றிப் பேசு!ஏய், மார்ட்டீன்...! என்னாச்சு....? ஏன் விலகிப் போறே? புது மனிதர்களுக்கு முன்னால என்னது இது?''

முகத்தைத் திருப்பிக் கொண்டு சென்றவனின் பின்னாலேயே விரைந்தார் வில்கின்ஸன். தலையை மறுத்தசைத்து, கால்களை நிலத்தில் எத்தி என்று மார்ட்டீன் செய்த செய்கைகளிலிருந்து, தன் அணுகுமுறையிலேயே மார்ட்டீன் பிடிவாதமாயிருப்பது புலப்பட்டது. ஆனால் அவன் பிடிவாதத்தையும் விஞ்சிய அழுத்தத்தோடு கைகளைக் காற்றில் அசைத்தும் குத்தியும் வாக்குவாதம் செய்த வில்கின்ஸனின் வழிக்கே மார்ட்டீனும் வந்துவிடும்படி ஆயிற்று. வெறுத்துப் போய் ஏற்றுக் கொண்டார் மார்ட்டீன்!

இப்படியாய் இருவருக்குள்ளும் நிகழ்ந்த உரையாடலின் இடையிடையே, கொஞ்சம் தள்ளி கர்லோட்டா ஆடம்ஸ் அமர்ந்திருந்த உணவு மேஜையை ஓரக் கண்ணால் பார்த்த வண்ணமிருந்தார் வில்கின்ஸன். மார்ட்டீனுடனான ஆலோசனைகளில், ஆடம்ஸும் ஒரு பொருளாய் கொள்ளப்பட்டிருப்பாரோ என்று எனக்குள் சிறு ஆச்சரியம் மிகுந்தது.

தன் கட்சிக்கு மார்ட்டீனை இழுத்துச் வென்ற வில்கின்ஸன், இன்னும் பிரகாசமாய் எங்களை வந்தடைந்தார்.

''தாமதிக்காது நேரே மாடிக்குப் போவோம்'' என்று பொய்ரெட்டிடம் சொன்ன வில்கின்ஸன், நானும் உடனிருக்கலாம் என்பதை, அவரது இளமை மிகு கண்களிலிருந்து என்னை நோக்கி விடுவித்த கவர்ச்சி மிகு அங்கீகரிப்பால் உணர்த்தினார்.

அவரது இந்த திட்டத்திற்கு நாங்களிருவரும் உடன்படுகிறோமா மறுக்கிறோமா என்பது குறித்தெல்லாம் அவரது மண்டைக்குள் எட்டியதாக தெரியவில்லை. நாங்கள் பின்தொடருவோம் எனும் எதிர்பார்ப்பில் சிறு 'எக்ஸ்க்யூஸ் மீ...' கூட கூறாமல் புயலாய் முன்னேறினார் வில்கின்ஸன்.

''இந்த இனிய மாலைப்பொழுதுல இங்கே உங்களை நான் சந்திச்சது என் அதிர்ஷ்டத்திலும் அதிர்ஷ்டம், திருமிகு பொய்ரெட்'' என்றார். மாடிப்படிகளை நோக்கி வழி காட்டியபடி, ''நான் நினைப்பதெல்லாம் சாதகமாய் எனக்கு மாறிப் போவதைப் பார்க்கப் பார்க்க அவ்ளோ சந்தோஷமா இருக்கு. அகப்பட்டுள்ள இக்கட்டினை எப்படி கையாண்டு வெல்வது... இந்த பூமியில் உதவிக்கரம் நீட்டி வரப் போவது யார்... என்றெல்லாம் எண்ணிக் குழம்பியபடி நிமிர்ந்தேன். எனக்கு அடுத்த டைனிங் டேபிளிலேயே நீங்க உட்கார்ந்திருக்கீங்க. அப்போ, 'இதோ! இதோ... ஆபத்பாந்தவன்! திருமிகு ஹெர்குல்

பொய்ரெட்! இனி என்ன கவலை! இவர் சொல்வார், நான் என்ன செய்ய வேண்டும்' அப்படினு என எனக்கு நானே சொல்லிக்கிட்டேன்.''

''என்ன வகையான உதவியாய் நான் உங்களுக்கு இருக்கப் போறேன்?'' என்று, வில்கின்ஸன் எதிர்கொண்டிருக்கும் இக்கட்டு தான் என்ன என்பதைக் கவிதையாய் கேட்டான் ஹெர்குல்.

''எல்லா வகையான உதவியாயும்! உங்களால் இயலும்! துப்பறியும் துறையில் உங்களைப் போல அதிசயிக்கத்தக்க திறமை கொண்டு ஒருவர் உயிர் வாழ்ந்ததாய் சரித்திரம் கிடையாதுனு பற்பலர் கூற கேட்டிருக்கிறேன். யாராவது ஒருவர், இப்பொழுது நான் அகப்பட்டு சிக்குண்டு கிடக்கும் சிடுக்கிலிருந்து அத்தனை முடிச்சுகளையும் அவிழ்த்துப் போட்டு என்னை வெளியேற்ற வேண்டும். அது, உங்கள் ஒருவரால் மட்டுமே முடியும் என்பது என் கணிப்பு.''

இப்பொழுது பிரம்மாண்ட உறைவிடமான ஐந்து நட்சத்திர சவாயின் இரண்டாம் தளத்திலிருக்கிறோம். வழி காட்டியபடி முன்னே சென்ற வில்கின்ஸன் ஓர் அறையின் வாயிற் கதவை அடைந்ததும் அதனை சாவியிட்டு திறந்து படாடோபமான ஒரு பணக்கார அறையை எங்கள் முன் விரித்துப்போட்டார்.

வரவேற்பெல்லாம் நிகழ்த்தாமல், தன் விலையுயர்ந்த மேலங்கியைக் கழற்றி நாற்காலியில் வீசினாற் போல் போட்டுவிட்டு கையில் மாட்டிக் கொண்டிருந்த வெள்ளி முத்துக்கள் பதிக்கப்பட்ட ஆடம்பரமான தோள் பையையும் அதன் மீது எறிந்துவிட்டு, தன்னை ஒரு நாற்காலியில் போட்டு புதைத்துக் கொண்டது போல அமர்ந்த வில்கின்ஸன், இனியும் காலந்தாழ்த்துவது தன்னால் இயலாத ஒன்று எனும் குறிப்பில், தீர்க்கமாய் சொன்னார்: ''என்ன செய்வீங்களோ, ஏது செய்வீங்களோ.. அல்லது, ஏதாவது மாய மந்திரம் போடுவீங்களோ, அது உங்க பாடு! ஆனால், திருமிகு பொய்ரெட்...! நான் உடனடியா என் கணவனிடமிருந்து விடுதலையாக வேண்டும்!''

# திரு கலைஞர்களுடனான விருந்து

கணப்பொழுது அதிசயத்துக்குப் பிறகு சுயப்பிரக்ஞைக்குள் நுழைந்தான் ஹெர்குல்!

''ஆனா, திருமதி எட்ஜ்வேர்'' என்று வியந்துப் போய் அழைத்த அவன், ''கணவனிடமிருந்து விடுதலை வாங்கித் தருவதல்ல நான் விசேஷமாய் படித்து வாங்கிய பட்டம்'' என விளக்கலானான்.

''ம்... எனக்கும் அது தெரியும்.''

'உங்களுக்கு இப்போ உடனடி தேவை - ஒரு வக்கீல்.''

''அங்கு தான் நீங்க தப்பு செய்றீங்க. தயவு செஞ்சு இந்த வக்கீல்களைப் பற்றி மட்டும் பேசிடாதீங்க. அவங்க துணையோடு முயன்றதில், சலித்தும் வெறுத்தும் களைத்தும் போய்ட்டேன். சட்டத்துக்கு தலை வணங்கும் வக்கீல்களையும் பார்த்துட்டேன். பணத்துக்காக வாதாடும் வக்கீல்களையும் பார்த்துட்டேன். எவ்வகை யினரும் எனக்குக் கடுகத்தனையும் நன்மை பண்ணலை. வக்கீல் களுக்கு சட்டம் தான் தெரியும். சட்டம் மட்டுமே! நாம் எதிர்பார்க்கும் அவசரத்துக்கு இயைந்து இயங்க இயற்கையாய் தேவைப்படும் அறிவே இல்லாத, வெறும் வாதாடும் இயந்திரங்கள்.''

''எனக்கு இருக்கிறதுனு நினைக்கறீங்க, ஆங்? அப்படித்தானே?''

நகைச்சுவையைப் பிடித்து சிரித்தார், அவர்.

''நீங்க ஒரு பூனை என எல்லோரும் வியந்து வியந்துக் குறிப்பிட நான் கேள்விப்பட்டிருக்கிறேன்!''

''பாராட்டா? பூனை? எனக்கு விளங்கலை.''

''அடுத்து எங்கிருக்கும், என்ன பண்ணும் என கணிக்க இயலாத- கண்டுபிடிக்க இயலாத- வீச்சு! பூனை வீச்சு! அது தான் நீங்கள்!''

''திருமதி ஜானே! எனக்கு இயற்கையான மூளை இருக்கிறதா இல்லையா என்றெல்லாம் ஆராய்வதை விட்டு விடுவோமா! துப்பறியும் கலை என்னிடம் மிகுந்துள்ளது. இல்லையென நான்

பாசாங்கு செய்ய விரும்பலே! இது ஒரு வரம்! ஆனா உங்களுடைய விவகாரத்துக்கு நான் உதவ தகுதி அற்று நிற்கிறேன்.''

''அப்படி எனக்குத் தோணலே. இது விவகாரமில்லை. பிரச்சனை - பிரச்சனைகளை உங்களுடைய மதி நுட்பத்தால் களைந்தெறிந்து முடிவு கண்டுபிடித்து தருபவர், நீங்கள்!''

''அப்பப்பா..! என்னை எப்படி வளைக்கப் பார்க்கிறீங்க..! எத்தனை நம்பிக்கை என் மீது உங்களுக்கு...! பிரச்சனையைக் களைந்தெறிபவன் நான் - ஆஹ்!''

''மேலும் இது ஒரு கடினமான பிரச்சனை'' என்று தொடர்ந்த ஜானே வில்கின்ஸன், ''கடினமான பிரச்சனைகளைக் கண்டு துவண்டு மறைவாய் அமர்ந்து விடும் வகையில்லாத, சுத்த வீரனல்லவா நீங்கள்'' என்றார்.

''என்னைப் பற்றிய ஆழமான மற்றும் சரியான கணிப்புக்கு நான் உங்களைப் பாராட்டறேன். கொலை வழக்கு ஒன்றுக்கு மட்டுமே இந்த பொய்ரெட் துப்பறிய உதவுவான். விவாகரத்து போன்ற பிரச்சனைகளில் நான் துப்பறிவதில்லை. எனக்கு விவாகரத்தில் உடன்பாடில்லை.''

''அன்பு பொய்ரெட்! உங்களை நான் வேவு பார்க்கும்படி சொல்லலே. பிரிய வேண்டும்னு ஸ்திரமா முடிவெடுத்த பிறகு ஒற்றன் வேலை பார்த்தும் ஒன்றும் ஆகிடப் போவதில்லை. அந்த ஆளிடமிருந்து நான் விடுதலை அடைந்தே தீர வேண்டும்! ஊஃப்ப்ப்! என் பிரச்சனை இது தான்! இதனை எப்படி அடைவதுனு உங்களால் வழி காட்டி உதவ முடியும் என்பது என் அசையா நம்பிக்கை!''

இதற்கு மறுபதில் பேசுவதற்குள் கொஞ்சம் நிதானித்தான் பொய்ரெட். பின் பேச ஆரம்பித்த போது, ஒரு புதுவிவாத தளத்திற்கான ஆரம்பம், அவன் குரலில் தெறித்தெழுந்தது.

''முதலில் தெளிவாய் விளக்கிடுங்க, திருமதி ஜானே வில்கின்ஸன்! ஏன் இந்த அளவுக்கு அரக்க-பறக்க திரு எட்ஜ்வேரிடமிருந்து விலகியே தீரணும்னு துடிதுடிக்கிறீங்க?''

இதற்கு வில்கின்ஸன் அளித்த பதிலில் தயக்கமோ தாமதமோ இருக்கவில்லை. தன் தீர்மானத்தின் மீது தான் கொண்டிருந்த முனைப்பை உடனடியாய் முன்வைத்தார். ''ஏன், அவசரப்படக் கூடாதா! நான் மறுபடியும் மணம் புரிந்துக் கொள்ள விரும்பறேன். வேறு என்ன காரணம் இதற்கு இருக்க முடியும்?''

அவருடைய கவர்ச்சி மிகு நீல நிற விழிகள் கபடத்தனமற்று படபடத்தன.

''எனில், வலுவான இக்காரணத்துக்கு விவாகரத்தை உடனடியாய் வாங்கிவிடலாமே! நீதிமன்றத்துக்குப் போகாமல், என்னிடம் ஏன்?''

''என் கணவர் பற்றி உங்களுக்குத் தெரியாது, திருமிகு பொய்ரெட். அவர்... அவர்.... அவன்...'' என்று படிப்படியாக மரியாதையைக் குறைத்துக் குறிப்பிட்டவர், லேசாய் பயங்கொண்டவர் போல் நடுங்கினார். ''அவரை எப்படி விவரித்துக் கூறுவதுனே எனக்குப் பிடிபடவில்லை. நிலை குலைந்த, ஒழுங்கற்ற விந்தையான மனிதர் அவர். மற்றவர்களைப் போல் சராசரியானவரல்ல.''

தன் கணவரைப் பற்றி நினைத்துக் கொண்டதால் சற்றே தடுமாறினார். பின் ''நான் என்ன பேசறேன் என்ற தெளிவுடன் தான் சொல்லப் போறேன்'' என்று அறிவித்து விட்டு, தொடர்ந்தார்: ''அவர் கலியாணமே செய்து கொண்டிருக்கக் கூடாது. யாரையுமே. அவரை என்னால் வர்ணிக்க இயலாது. ஆனால், அவர், புரிந்துக் கொள்ளவே முடியாத விந்தையானவர் என்பது மட்டும் உறுதி. அவர் முதல் மனைவி, விட்டால் போதும் என்று அவரிடமிருந்து ஓடியே போய்விட்டார், தெரியுமா! மூன்று மாதக் குழந்தையையும் இவர் தலையில் கட்டி விட்டு வெறுமனே ஓடியே விட்டாள்! யாரைத் தான் வாழ விடுவார் இவர்! கடைசி வரை அந்தப் பெண்மணிக்கு இவர் விவாகரத்தே தரலே. அவளும் ஏதோ ஒரு வெளிநாட்டில் பரிதாபகரமாய் இறந்து போனாள் என்பது செய்தி. பிறகு என்னை கலியாணம் செய்துக்கிட்டார். போதும் போதும்னு ஆயிடுச்சு. இனி என்னால இந்த பந்தத்தை இழுத்துக்கிட்டு வாழ முடியாது. அந்த அளவுக்கு என்னை பயமுறுத்தி வெச்சிருக்கிறார். போடானு உதறிட்டு கிளம்பி அமெரிக்கா போயிட்டேன். இந்த நிலையில அந்த மனுஷனை ரத்து செய்வதற்கு அடிப்படைக் காரணம் - சட்டமும் நீதிமன்றமும் வரையறுத்து வைத்துள்ள ஆதார காரணங்கள் - எதுவுமே என்னிடம் இல்லை. அப்படி எதையாவது இட்டு கட்டி அவருக்கு மனு அனுப்பினாலும் அதையெல்லாம் சட்டை செய்யாமலேயே இருக்கும் ரகம் அது! ஒரு வகை வைராக்கியம் நிரம்பியவர் - கட்டியவளைக் பயப்படுத்தி கலங்கடித்தே வைக்கணும் எனும் வைராக்கியம்!''

''ஒரு சில அமெரிக்க மாகாணங்களில் எவ்வித அடிப்படை காரணங்களும் இன்றி காலையில் மனு செய்தால் மாலையிலேயே

விவாகரத்து பெற முடியும், திருமதி ஜானே வில்கின்ஸன் எட்ஜ்வேர்....!''

''அது எனக்கு பிரயோஜனப்படாது, திருமிகு பொய்ரெட். அப்படிப்பட்ட ரத்துக்கள் அமெரிக்காவில் தான் செல்லும். இங்கிலாந்தில் வாழப் போகும் எனக்கு அது செல்லாது.''

''இங்கிலாந்திலா வாழப் போறீங்க?''

''ஆமாம்.''

''நன்று, எனில் இங்கு நீங்க மணந்துக் கொள்ளப் போகிற ஆண் மகன் தான் யார்?''

''இது நல்ல கேள்வி. மெர்ட்டான் பிரதேசத்தின் இளைய சீமானை!''

நீண்ட மூச்சினை உள்ளுக்கிழுத்துக் கொண்டேன். மெர்ட்டான் பிரதேசத்து இளைய பிரபு! அவருக்குக் கலியாணப் பொருத்தம் பார்த்த அத்தனை பேரும் ஒரு சேர நம்பிக்கையிழந்த, மெர்ட்டான் பிரதேசத்து இளைய பிரபு! இளையவன் தான், ஆனாலும்,தான் சார்ந்த ஆங்கில கத்தோலிக்க மதத்தின் மீது வெறியாய் பற்று வைத்து, அம்மதத்தைப் பரப்புபவரைப் போன்ற உடை மற்றும் நடை அலங்காரங்களோடு, சந்நியாசி போல உலா வருபவன். அவனது விதவைத் தாயாரின் கட்டை விரல் அசைவுக்கு சிரம் தாழ்த்தி சலாம் போட்டு வாழும் அம்மா பிள்ளை என்பது குறிப்பு! நெறி வழுவாத வாழ்க்கையை மிகக் கடுமையாக கையாண்டு, எளிமையாய் வாழும் வாழ்க்கையின் உச்சத்தைக் கடைபிடித்து நிற்பவன். கலையுணர்வு நிரம்பிய மெர்ட்டான் இளைய பிரபுவுக்கு, சைனா களி மண்ணில் பண்ணப்படும் பீங்கான் பொருட்களை சேகரித்து மகிழ்வதில் அசாத்திய அபிலாஷை உண்டே தவிர, பெண்களைப் பற்றி கிஞ்சித்தும் பிரியப்படாதவன் என்பது அவனது பிரத்தியேகக் குணம். அவனுக்கு கலியாணப் பொருத்தம் பார்த்தோரை, அப்பணியில் தோற்கடித்த குணம்!

''அவர் மீது பைத்தியமாய் இருக்கேன்'' என கற்பனையால் சொன்னார் ஜானே. ''நான் இதுவரை சந்தித்த எந்த ஆடவன் போலும் இல்லாத தனித்துவம் பொதிந்து மிளிர்பவர். அந்த மெர்ட்டான் மாகாணத்துக் கோட்டை....! வாவ்... அரண்மனை போன்று என்னே அழகு...! மெர்ட்டான் இளைய சீமானோடு சம்பந்தப்பட்டு நான் எதிர்கொண்ட ஒவ்வொன்றுமே என்னை வசியமாக்கிக் கட்டிப் போட்டுள்ள காதல் சமாச்சாரங்கள்! பாதிரி போலவே அலைந்தாலும்,

அவர், மேலும் அவரின் கம்பீர கட்டுமஸ்தான உடல்வாகு எல்லாமும், கனவில் வந்து, உடலில் மேவி, தூக்கம் சிதைக்கும் சினிமா நாயகனுக்கு ஒப்பானவை.''

கொஞ்சமாய் நிறுத்தினார். பிறகு மெர்ட்டான் மாகாணத்து இளைய பிரபுவை மணமுடித்ததும், நடிப்புக்கு நிரந்தர முழுக்குப் போட்டு விடப் போவதாய் சொன்னார். ''போதும் புகழும் பணமும். இனி நடிப்பைப் பொருட்படுத்தப் போவதில்லை.''

''உங்களுடைய இந்தத் திட்டங்களுக்கு இடையில்'' என்று வறட்சியாய் ஆரம்பித்த பொய்ரெட், ''...அதாவது உங்களுடைய இந்தக் காதல் மணக்கும் திட்டங்களுக்கு இடையில் வழியை மறித்துக் கொண்டு சீமான் எட்ஜ்வேர் நிற்கிறார்'' என கருத்து சொன்னான்.

''அப்படி! சரியா சொன்னீங்க! ஆமாம். இது, செய்யும் விஷயங்களின் மீது கவனத்தை ஒருமுகப்படுத்தி என்னை இயங்க விடாம சிதறடித்து தடுமாற வைக்குது.'' அமர்ந்திருந்த இருக்கையில் வசதியாய் சாய்ந்துக் கொண்ட ஜானே, முக்கியம் அளித்து, ''நடிக்கும் போது, ஏற்றுக் கொண்ட பாத்திரத்தில் முழுவதுமாக நுழைந்து பங்களிக்க இயலா வண்ணம் தடுமாறிக் கிட்டிருக்கேன்'' என்றார். தொடர்ந்தார்: ''நான் மட்டும் சிக்காகோ போன்ற மாகாணங்களி லிருந்திருந்தால், யாராவது ஒரு முரடனை அமைத்து, பணத்தையோ, நிலத்தையோ அவனுக்குத் தந்து, அந்த மனுஷனை சுட்டுத் தள்ளி யிருப்பேன். அங்கு அதற்கு வசதி உண்டு. இங்கு அப்படியெல்லாம் சுலபமாக செய்துவிட முடியாது இல்லையா?!'' என்று கேட்டார், அனலாய்.

''இங்கு'' என்று, தான் வாழும் இங்கிலாந்து பகுதியின் பெருமையைக் கூறும் போக்கில் ஆரம்பித்து ''ஒவ்வொரு மனித உயிரும் வாழ்வதற்கு உரிமை உள்ளவர்கள் என்று கருதி தான், அடியும் முடியுமாய் சட்டம் அமைத்துள்ளோம். கொல்வதோ... கொல்லத் தூண்டுவதோ.,.. தாதாக்களை உருவாக்குவதோ இவையெல்லாம், மற்ற இடங்களைப் போல குற்றம் மட்டுமல்ல. அவை போன்றவை, இங்கு தேசத் துரோகம்'' என்றான் பொய்ரெட்.

''ஓ...! தேசத் துரோகமா?'' என சிறு அதிர்வோடு, ஹெர்குல் சொன்னதை ஜானே உள்வாங்கி நிலைநிறுத்திக் கொள்ளும்போது, மூடியிருந்த அறைக் கதவு தட்டப்பட்டது. உடனேயே, இரவு பதார்த்தங்களிருந்த தட்டை ஏந்திக் கொண்டு காவலாளி உள்ளே வந்தான். அவனிருப்பதைக் கூட கருத்தில் கொள்ளாது, பேசிக்

கொண்டிருந்த சமாச்சாரத்தைத் தொடர்ந்தார் ஜானே. ''ஆனா, ஆனா... நான் எட்ஜ்வேரைக் கொல்லும்படி உங்களைத் தூண்டவில்லை, திருமிகு பொய்ரெட்.''

இதற்கு பதிலாக, ''திருமதி ஜானே வில்கின்ஸன் எட்ஜ்வேர்'' என்று அதிரடியாய் அழைத்தான் ஹெர்குல் பொய்ரெட் - ஒரு கருணை மிகும் மனிதனிடம் பேசிக் கொண்டிருக்கிறீர்கள், நினைவிருக்கட்டும் என்று உணர்த்தும் வகையில்!

''அவருடன் சாதுர்யமான முறையில் விவாதித்து, எடுத்துக்கூறி, என்னை விவாகரத்து செய்து விடுவதே மேல் என்றொரு ஸ்திரமான கருத்தை எப்படியாவது அவரிடம் ஏற்படுத்திடுவீங்க எனும் நம்பிக்கையால் தான் உங்களை அணுகியிருக்கேன். இது நிச்சயம் உங்களால் முடியும். இத்திறமை மிகுந்தவர் நீங்கள்'' என்று சற்றே வெகுண்ட ஹெர்குல்லுக்கு, தன் எதிர்பார்ப்பு என்ன என்பதைத் தெளிவுபடுத்தினார் ஜானே.

''என் சொல்வன்மையால் பேசுவோரை அப்படியே என் வயப்படுத்தவல்ல என் அணுகுமுறையை நீங்க அதிகமா எடை போடறீங்க, திருமதி ஜானே!''

''ஆமாம், கொலையைத் துப்பறிவதில் உபயோகிக்கும் இத் திறமையை நீங்கள் இன்னபிற தேவைகளுக்கும் - உதாரணத்திற்கு என் தேவையை எடுத்துக்கங்களேன் - இது போன்றவற்றிற்கும் நீட்டித்து உதவ முன்வரலாமே! தவறா, என்ன!'' அதிகாரமாய் கேட்டுவிட்டு தன் இருக்கையின் நுனி வரை வளைந்து ஹெர்குல்லுக்கு அருகில் வருமாறு அமர்ந்துக் கொண்டவர் கேட்டார்: ''நான் சந்தோஷ நாட்களை எட்டிப் பிடிக்க வேண்டும். இப்படி உங்களுக்கும் ஆசை இருக்குமில்லையா?''

கேட்ட வில்கின்ஸனின் குரல், கிறக்கமும் கவர்ச்சியும் மயக்கமும் கொண்ட கலவையாய் பெண் ஈர்ப்பு மிகுந்து அமைக்கப்பட்டிருந்தது.

''உலகிலுள்ள அனைவரும் சுபீட்சமும் அமைதியும் நிறைந்து வாழ வேண்டும் எனும் கருணையே, நான் எப்போதும் வேண்டும் வரம்'' என்றான் பொய்ரெட், எச்சரிக்கையாய்.

''ஆனால் நான் மற்றவர்களைப் பற்றியெல்லாம் கவலைப் படுவதேயில்லை. நான்! *நான்!* இதுதான் என் நிரந்தர எண்ணம்! இப்போதும் நான் என்னைப் பற்றியே தான் எண்ணியிருந்தேன்!''

துப்பறியும் நிபுணர், அப்போது உணவகத்தில் பார்த்த மாத்திரத்தில், ஜானேயை எத்தனை துல்லியமாய் எடை போட்டுவிட்டார் என்று நான்

இங்கு பிரமித்துப் போயிருக்க, ''நீங்கள் எப்போதும் இப்படிப்பட்டவர் தான்!'' என்று முகத்திலறைந்தாற் போல் குறிப்பிட்டான் ஹெர்குல் - ஆனால் சிரித்த முகத்துடன்!

''என்னை சுயநலவாதினு குறிப்பிடறீங்களா?''

''ஓஹ்... நான் அந்த அர்த்தத்தில் சொல்லலை.''

''நான் துணிவாய் ஒப்புக் கொள்கிறேன். ஆமாம் - நான் சுயநலவாதிதான். ஆனா, ஒண்ணு தெரிஞ்சுக்கோங்க. நிம்மதியற்ற வாழ்வினை நான் வெறுக்கிறேன். அப்படி அமைந்து விடும்போது, அதிலிருந்து உடனடியாய் வெளிவர முடிவு செய்யறேன்! என் சந்தோஷத்திற்கு குறுக்கே வருபவற்றை என்னால் நீண்ட காலம் அனுமதிக்க முடியாது. இது தான்- *நான்* அவர் மட்டும் விவாகரத்துக்கு ஒப்புக் கொள்ளலைனா, நான் நிரந்தரமாய் நிம்மதியற்றவளாகி விடுவேன்.'' இப்படி சொல்லும் போதே, சொன்ன நிம்மதியற்ற அந்த வாழ்வினை தன்னால் அனுமதிக்கவே முடியாது என குரோதமானார் வில்கின்ஸன். இந்த மனோபாவத்தை ஊர்ஜிதப்படுத்தும்படி சொன்னார்: ''ஒன்று - விவாகரத்து வந்தாக வேண்டும். உடனேயே! இல்லை - அவர் செத்துப் போக வேண்டும்!''

நான் சற்றே அரண்டு போய்விட, ஹெர்குல், வில்கின்ஸன் சொன்னதை வெறும் வசனமாக எதிர்கொண்டான்.

''மொத்தத்தில்'' என்று தன் சிந்தனையிலிருக்கும் எதிர்பார்ப்பாய் தொடர்ந்த வில்கின்ஸன், ''அவர் மண்டையைப் போடுவது தான் அவரிடமிருந்து எனக்குக் கிடைக்கும் மிக உகந்த விடுதலையாகும்'' என்றார்.

அந்த அளவுக்கு நான் அவரிடம் பாடுபட்டு விட்டேன். அதனால் தான் இத்தனை வெறுப்பு என்று ஹெர்குல்லிடமிருந்து அனுதாபத்தை வேண்டி பார்த்தார் வில்கின்ஸன்.

''இனியாவது, நீங்கள் எனக்கு உதவுவீர்கள் இல்லையா, திருமிகு பொய்ரெட்?'' - கேட்ட வில்கின்ஸன், குளிருக்கு அடக்கமாக போர்த்திக் கொள்ள என அருகிலிருந்த சிறு கம்பளிப் போர்வையை எடுத்துக் கொண்டு எழுந்து பிரார்த்தனை மிகுந்த முகபாவத்தோடு ஹெர்குல்லைப் பார்த்தபடி நின்றார். இப்போது, ஒருக்களித்திருந்த அறைக் கதவின் வழியே கசிந்து நெருங்கிக் கொண்டிருந்தன கலவையான சில குரல்கள்! ''நீங்க மட்டும் உதவ மறுத்துட்டீங் கன்னா....'' தொடர்ந்து சொன்ன வில்கின்ஸனுக்கு பதிலாய், ''...ம்!

நான் மட்டும் உதவவில்லை என்றால்....? என்னவாகும்!'' என்று கேட்டான் ஹெர்குல் பொய்ரெட்.

நகைச்சுவை ஒன்றினை உதிர்க்கப் போவதை உணர்த்தும் வகையில் சிறு சிரிப்பினை முகத்தில் வளர்த்துக் கொண்ட வில்கின்ஸன், ''ஒரு வாடகைக் காரை அமர்த்திக் கொண்டு நானே நேராக சென்று எட்ஜ்வேரை சுட்டு வீழ்த்திட்டு வந்துடுவேன்.'' கலகலவென சிரித்துக் கொண்டார். நாங்களிருவரும் கூட அவர் சொன்ன விதத்தைக் கேட்டு சன்னமாய் சிரித்துக் கொண்டோம். ''எனக்குத் தேவை உடனடி விடுதலை - இந்த க்ஷணமே!''

அதே சிரிப்புக் குறையாமல், அருகிலிருந்த மற்றோர் அறைக்குள், கையில் சுமந்திருந்த சிறு கம்பளியோடு நுழைந்து மறைந்தார் வில்கின்ஸன். அப்போது, ப்ரையன் மார்ட்டீன், மேடையை ஆக்கிரமித்திருந்த அமெரிக்க யுவதியான கர்லோட்டா ஆடம்ஸுட னும், அவரின் பாதுகாவலனுடனும், மேலும், வில்கின்ஸன் மற்றும் மார்ட்டீனுடன் உணவருந்திக் கொண்டிருந்த மற்ற இருவருடனும் உள்ளே நுழைந்தார். அந்த இருவரும் திரு மற்றும் திருமதி விட்பர்ன் என்று எங்களுக்கு அறிமுகப்படுத்தப்பட்டனர்.

எங்களிருவருக்கும் ஒரு பொதுவான வணக்கத்தைத் தெரிவித்த மார்ட்டீன், ''ஜானே எங்கே?'' என்று கேட்டார். ''அவள் நிறைவேற்றித் தரும்படி எனக்கு சொல்லியிருந்ததை செவ்வனே முடித்துவிட்டேன்னு தெரிவிக்கணும்.''

அரவம் கேட்டு அடுத்த அறையின் வாயில் வழியே எட்டிப் பார்த்தார் ஜானே வில்கின்ஸன், ஒரு கையில் உதட்டுச் சாயக் குழலினைச் சுமந்திருந்தார்.

வந்திருப்போர் யாரென்று அறிந்துக் கொண்டதும், ''ஹே மார்ட்டீன்...! கூட்டிட்டு வந்துட்டியா! மிஸ் ஆடம்ஸ்! ஆஹாஹா! எத்தனை அதிசயம்! உங்களுக்கு என் மனமார்ந்த நல்வரவு! உங்களுடைய மேன்மையான விகடகவி காட்சிகளை நான் மிக வியந்து போற்றுபவள்! உங்களை சந்திக்கணும்... ஒருவரை ஒருவர் அறிமுகப்படுத்திக்கணும் என்பது என் விருப்பம். கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி தான் மார்ட்டீன்கிட்டே இது பற்றி சொல்லிக்கிட்டிருந்தேன். நன்றி மார்ட்டீன், என் ஆசையை இத்தனை உடனடியாய் நிறைவேற்றித் தந்ததற்கு! இப்படி வாங்க, மிஸ் ஆடம்ஸ். முகம் கழுவி அலங்கரிச்சுக்கிட்டிருக்கிறேன். என் முகம், களைத்து, களையிழந்து,

நோய் போலாகியுள்ளது!'' என்று நிறுத்தாது பேசிக் கொண்டேயிருந்தார் ஜானே.

கர்லோட்டா ஆடம்ஸ் ஜானேயின் அழைப்பினை ஏற்றுக் கொண்டார். மார்ட்டீன் தன்னை அங்கிருந்த இன்னொரு குஷன் நாற்காலியில் அப்படியே போட்டுக் கொண்டார். ''உஃப்ப்ப்'' என்று களைப்பினை விரட்டிக் கொண்டவர், ''திருமிகு பொய்ரெட்'' என எதையோ விளக்கவுள்ளதாய் உணர்த்திப் பேசத் தொடங்கினார்: ''சரியான நேரத்தில் கைப்பற்றப்பட்டு விட்டீர்கள்! ஜானேயால்! இப்போது மனத்தாலும் உடலாலும் ஜானே செய்துக் கொண்டிருக்கும் போருக்கு உங்களைத் தளபதியாக இருக்கச் சொல்லியிருப்பாளே! நீங்களும் இது என் பணியல்ல அப்படினு விலகப் பார்த்திருப்பீர்கள்! பிரயோஜனமில்லை! இன்றோ நாளையோ நாளை மறுநாளோ, நீங்களே வழிக்கு வந்துவிடுவீர்கள்! அவள் அகராதியில், இல்லை என்பதற்கான அர்த்தம் கிடையாது.''

''அப்படி ஒப்புக் கொள்ள மறுக்கும் மனிதரை, ஒரு வேளை, இது வரை அவர் சந்திக்காமலிருந்திருக்கலாம்!''

''ஓர் அதிசயமான விதத்தில் காண்போரின் கவனத்தை ஈர்க்கும், மங்கை - ஜானே'' என்றார் மார்ட்டீன். இருக்கையில் சாய்ந்து, முடிக் கற்றைகளை விரல்களால் கோதி பின்னுக்குத் தள்ளிக் கொண்டவர், சிகரெட் புகையினை உருண்டைகளாக்கி விட்டத்தை நோக்கிப் பறக்க விட்டார். அப்படியே தொடர்ந்தார்: ''வேண்டாதவற்றை ஒதுக்கி விலக்கித் தள்ள அஞ்ச மாட்டா. பெருக்கி எறிஞ்சுடுவா. இதற்கெல்லாம் அறம், நல்லொழுக்கம் இத்யாதியெல்லாம் பார்த்து காலத்தை வீணாக்கவும் மாட்டா. பாபகரமான பெண் எனும் அர்த்தத்தில் சொல்ல வரலே. அப்படிப்பட்டவளுமல்ல, அவ. எது செய்தாயினும் தான் நினைத்ததை அடைந்தே தீரும் வகைனு சொல்ல வந்தேன். அவள் வாழ்க்கையில் ஒன்றே ஒன்றை தான் எப்போதும் பார்ப்பாள் - அது - அவள் வாழ்வில் என்ன வேண்டும் என அவள் நினைப்பது!''

தன் தோழியைப் பற்றி சரியாய் வர்ணித்து விட்டதாய் சிறு சந்தோஷம் பொங்க புன்முறுவியவர், ''தனக்கு வேண்டாம்னு முடிவாகி விட்டவரை, மிக உற்சாகமாய் கொல்ல வல்லவள் தான் இந்த ஜானே! வருந்த மாட்டாள்! இதில் சங்கடம் என்னன்னா - தப்பிக்கத் தெரியாமல் மாட்டிக் கொண்டு விடுவாள் என்பது தான்' அவளுக்கு

மூளை கிடையாது. ஒரு வாடகை டாக்ஸியை அமர்த்திக்கிட்டு, அதில் தன் சொந்தப் பெயரிலேயே பயணித்து, எந்த ஒளிவு மறைவுமற்று தான் வெறுப்பவரை சுட்டுவிடுவது தான், ஜானே வில்கின்ஸனைப் பொறுத்த மட்டில் ஒரு கொலை என்பது! '' என முடித்தார்.

''இதை இப்பொழுது என்னிடம் சொல்ல காரணம்'' என சிறு ஆச்சரியம் தொனிக்க முணுமுணுத்தான் பொய்ரெட்.

''.......'' மார்ட்டீனிடம் பதிலில்லை.

''ஜானே பற்றி ஆழமாய் அறிந்துள்ளீர்களா, மார்ட்டீன்?''

''ஆமாம் என்பது தான் என் ஸ்திரமான பதில்!''

இப்படிச் சொல்லிவிட்டு சிரித்தார் மார்ட்டீன். அந்தச் சிரிப்பில் வழக்கத்திற்கு மாறான பகை உணர்வு பூசியிருந்ததை என்னால் காண முடிந்தது.

''என்ன... சரிதானே'' என்று கேட்டார், அருகிலமர்ந்திருந்த மற்றவர்களைப் பார்த்து. ''என் கருத்தினை ஆமோதிக்கிறீங்க, இல்லையா?''

''பேஷா!'' என்றார் திருமதி விட்பர்ன். '' 'என்', 'நான்' என்றே, தன் - முக்கியத்துவம் மிகுந்து ஆக்கப்பட்டுள்ள நடிகை. என்ன செய்வது... ஆணாதிக்கத் திரையுலகுல, இந்த அளவு பெயர் புகழ் கொண்டு நிலைத்திருக்க இப்படி ஓர் அகங்காரப் போர்வை தேவையாத் தானிருக்கு. அப்பொழுது தானே அவரது தனித்துவம் உணரப்படும்.''

பொய்ரெட் பதில் பேசவில்லை. துப்பறியும் நிபுணரின் கண்கள் ப்ரையன் மார்ட்டீனின் முகத்திலேயே பதிந்துக் கிடந்தன. நடிகனின் முகத்திலேயே நன்றாய் துணிந்து பதிந்து வாசம் செய்த அந்த வீரியமான பொய்ரெட்டின் கண்கள், அம்முகம் குறித்து எதையோ தீவிரமாய் சிந்தித்துக் கொண்டுமிருந்தன! எதை என்று என்னால் பிரித்தறிய முடியவில்லை!

அக்கணத்தில், ஜானே, அடுத்த அறையிலிருந்து வெளிப்பட்டு நுழைந்தார். பின்னால், கர்லோட்டா ஆடம்ஸ். முகமெல்லாம் கழுவி, தான் விரும்பியவாறு புது அலங்காரத்தில் வந்திருந்தார் ஜானே என புரிந்துக் கொண்டேன். ஆனால், ஏதோ மிக வித்தியாசம் காட்டப் போவதாய் சொன்னதைப் போல, அப்படி ஒன்றும் பெரும் மாற்றத்தை அவரது புது ஒப்பனையில் காண முடியவில்லை.

தொடர்ந்து இடம்பெற்ற இரவு விருந்து, நடிகையும் ஓவியரும் ஆக இரு கலைஞர்களுடன் பகிர்ந்துக் கொள்ளப்பட்ட இரவு விருந்து, மிக களிப்பாயும், சந்தோஷம் மிகுந்தும், நிறைவாயும் அமைந்தது.

ஓ,பிஷுடும், ஏனோ தெரியவில்லை... கலக்கம் ஏதுமற்று இருக்கும் நீரோட்டத்தின் அடியில் வீரியமாய் இருந்துக் கொண்டிருக்கும் மின்சார ஓட்டத்தினை, உட்பிரவாகத்தினை, நான் இனம் பிரித்துக் காணயியலாத அதிர்வினை - விருந்தில் ஆங்காங்கே அறிய முடிந்ததாய் உணர்ந்தேன்.

வினை நிறைந்த சூட்சுமம் கொண்ட தந்திரங்கள் மிகுந்தவர் என்றெல்லாம் சொல்லப்பட்ட கோணத்திலிருந்து, ஜானே வில்கின்ஸனை விலக்கி வைத்தேன். அப்படியேதும் எனக்கு அவரிடம் தோன்றவேயில்லை. அவர் வெறும் ஒரு நடிகை-ஒரு சமயத்தில் ஒன்றைப் பற்றி மட்டுமே கருதவல்ல பெண்மணி - அந்த ஒன்று, அவளாகவே இருப்பது அவர் குணம் - அவ்வளவே! இந்த அவரது குணம் குறித்த என் கணிப்புக்கு இன்று நடந்த ஒரு சம்பவத்தைக் கூட விரிவிசையான உதாரணமாய் கூறலாம். பொய்ரெட்டுடனான ஒரு சந்திப்புக்கு விழைந்திருக்கிறார் - தனது அந்த தாகத்தினை நிறைவேற்றிக் கொண்டும் விட்டார் - அதுவும் எப்படி... துளியும் கால தாமதமின்றி, நினைத்ததும்! விளைவு - மன நிம்மதி! எனவே, இதோ, அந்த திருப்தியில் இருக்கிறார். கர்லோட்டா ஆடம்ஸையும் விருந்தில் நுழைத்துக் கொண்டது, அவரின் திடீர் முடிவு - சிறு சலனம்! கர்லோட்டாவின் பிரமாதமான விகடகவி திறமையில், பலூனைக் கண்டு பிரமித்துப் போகும் ஒரு குழந்தையாய் ஆச்சரியித்துப் போனதன் விளைவு!

அக, உட்பிரவாகமாய் இவ்விருந்தில் இயங்கிக் கொண்டிருக்கும் அதிர்விற்கும் வில்கின்ஸனுக்கும் கிஞ்சித்தும் சம்பந்தம் கிடையாது. பிறகு வேறு எந்த திசையில் அம்மின்சார அதிர்வு விழுந்துக் கிடக்கின்றது?

இதற்கு விடை தேட அறையிலிருந்த அனைவரையும் வெகு விரைவாய் ஆராய்ந்து முடிவெடுக்க விரும்பினேன்.

ப்ரையன் மார்ட்டீன்? இவர் நிச்சயமாய் சராசரி விருந்தாளி போல் நடந்துக் கொள்ளவில்லை. சற்றே அசாதாரணமாகத் தான் என் கண்ணுக்குப் படுகிறார். ஆனால், இது, அதீதமாகவே இயங்கிப் பழகிவிட்ட ஒரு சினிமாக் காரனின் இயல்பு என எனக்கு நானே கூறிக் கொண்டேன். பாத்திரங்களை சினிமாவுக்காக மிகைப்படுத்தி நடித்து நடித்தே, நிஜ வாழ்க்கையிலும் வீணாய் ஜம்பமாகவே வாழும்படி ஆகிவிட்ட இவர்களது சுய ரூபத்திற்காக, இவர்களை தனியே ஒதுக்கி வைத்துவிடலாம்.

கர்லோட்டா ஆடம்ஸ், வந்தது முதல், மிக முதிர்ச்சியுடனும் ஒரு புது இடத்தில் எத்தனை நாசூக்காகவும் நாகரீகமாகவும் நடந்துக் கொள்ள வேண்டுமோ அது போலவும் தான் நடந்து வருகிறார். சன்னமான ஒலி கொண்டு இனிமையான குரல் பெற்ற அமைதியான பெண். அவரை அருகாமையில் இருந்து படிக்கும் வாய்ப்பு இப்போது கிட்டியுள்ளதால், சற்றே தீவிர கவனம் செலுத்திப் பார்க்க ஆரம்பித்தேன்.

தனித்துவம் ததும்பும் வசீகரம் அவரிடமிருந்து வெளியாகிக் கொண்டிருந்தது - ஆனால், அது, எதிர்மாறான தரத்தில் இருப்பதாய்... ம்... எப்படி சொல்வது... ஆங்... மனதிற்குள் ஏதோ ஏக்கத்தைப் பொத்தி வைத்து அதன் மீது எழுப்பப்பட்டு நிலவும் வசீகரமாய் எனக்குப் பட்டது. அவர் முகம், படாடோபத்தையும், கொடூரத் தனத்தையும் மறைத்து வைத்து, அதன் மீது அமைதி எனும் முகமூடி போடப்பட்டிருப்பதாய் காட்சி தந்தது. மிருதுவான மனிதனுக்கு சீரிய உதாரணமாய் அமையும்படி உருவகப்படுத்தப்பட்டவராய் தோன்றினார். அவரைப் பார்த்ததுமே எதிர்மறையாய் அமைந்துள்ள இக்குணாதிசயங்களெல்லாம் தான் விரிந்தன. சரியாக வாரப்படாத கூந்தல், உணர்ச்சியற்ற சோர்ந்த நீல விழிகள், சோகையாயிருந்த முகம், கேட்டால் மட்டும் பதில் பேசும் ஜீவனற்ற இதழ்கள், இவையெல்லாம், மேற்கூறிய என் அனுமானங்களுக்கு சாட்சியாய் நின்று உதவின. பார்க்கும் போது வசீகரிக்கும் முகமாயிருந்தாலும் கூட, மறு முறை பார்த்தால், உதாரணத்திற்கு முழுக்க முழுக்க வித்தியாசமான உடை மற்றும் அலங்காரத்தில் என எடுத்துக் கொள்ளுங்களேன்... அப்படி மாறுபட்டுப் பார்த்தால், இவர் தான் கர்லோட்டா ஆடம்ஸ் என அடையாளம் காண்பது மிகக் கடினமாய் போகும் அளவுக்கான விலாசமற்ற முகமாய் இருந்தது.

கர்லோட்டா ஆடம்ஸ், ஜானேயின் மேன்மையான விருந்தோம்பலிலும், பாராட்டு வார்த்தைகளிலும், அதிகம் திருப்தி அடைந்து தெரிந்தார். இது எந்தப் பெண்ணுக்கும் உள்ள சாதாரண குணம் தான் என்று தோன்றினாலும், உடனேயே, அந்தக் கணத்திலேயே எதுவோ விளக்க முடியாத ஒன்று எனக்குள் நெருடு ....அது, இந்த சற்றே அவசரமாய் நான் உணர்ந்த முடிவினை மறுபரிசீலனை செய்யும்படியும் தூண்டிற்று.

கர்லோட்டா ஆடம்ஸ் தன்னை விருந்துக்கழைத்த நடிகையை நிமிர்ந்து பார்க்க, வில்கின்ஸனோ, அச்சமயத்தில் தன் தலையைப் பொய்ரெட் பக்கமாய் திருப்பி அவனோடு எதையோ பேச

ஆரம்பிப்பதற்காக அமர்ந்திருந்தார். பார்த்துக் கொண்டிருந்த ஆடம்ஸின் கண்களில், ஏதோ ஆவல் உந்தித்தள்ள ஆழ்ந்துப் பரிசோதிக்கும் தரம் மிகுந்திருந்தது. ''இது தான் முடிவு'' என்று எதையோ தீர்மானிக்கும் பாவம், அவர் முகத்தில் குடி கொள்ள ஆரம்பித்திருந்தது. அதே சமயம் ஆடம்ஸின் சோர்வான அந்நீல விழிகளில், வெகு நிச்சயமாக, பகையும் விரோதமும் கனன்றுக் கொண்டிருப்பதாயும் எனக்குள் பட்டது.

புதிராய் தோன்றினார் கர்லோட்டா ஆடம்ஸ் - பயமுறுத்தும் புதிர்.

நானே நினைத்துக் கொள்கிறேனோ... இருக்கலாம்! இல்லை, ஒரு வேளை, தொழில் ரீதியான பொறாமையால் தெறிக்கும் உணர்வாகக் கூட இருக்கலாம்! ஜானே தன் திறமைகளை நிரூபித்து லட்சோப லட்ச ரசிகர்களின் உள்ளங்களில் நிலைத்துவிட்ட கனவுக்கன்னி! ஆடம்ஸோ இப்போது தான் கலையுலக ஏணியில் முதலடி வைத்திருக்கும் சிறு நடிகை!

இப்போது, விருந்தில் வந்து இணைந்திருக்கும் மற்ற மூன்று பேரையும் கணிக்க ஆரம்பித்தேன். திரு மற்றும் திருமதி விட்பர்ன். அவர்கள் பற்றி? திரு விட்பர்ன் ஒரு நெட்டையான உணர்ச்சிகள் பிரதிபலிக்காத மர முகம் கொண்ட ஆண் ; திருமதி விட்பர்ன், மிகக் கொழுத்த அதே சமயம் விறுவிறுவென இயங்கும் பெண்மணி, உடம்பைப் போலவே கொழுத்த பணக்காரர்களாகத் தான் இருவரும் தோன்றினர். மேடைக் கலையோடு சம்பந்தப்பட்ட அத்தனையையும் ரசிக்கும், நேசிக்கும் மக்களாயும் தோன்றினர். மேடைக் கலைகளைத் தவிர வேறு எது குறித்தும் பேசுவதில் நாட்டமற்றிருந்தனர். இங்கிலாந்தில் சமீப நாட்களாக நான் வசிக்காததால், அவர்கள் பேசும் கலைச் செய்திகளோடு சிறப்பாய் பங்கேற்க முடியாத என்னைப் பரிதாபமாகப் பார்த்து ஒதுக்கினர்! எனவே, நீ இருப்பதும் ஒன்று தான் இல்லாததும் ஒன்று தான் என்று உணர்த்துவது போல், கொழுகொழுத்த தன் தோள்களை என்னைப் பார்த்து ஓர் இடி இடித்து, வேறு பக்கமாய் திரும்பி அமர்ந்துக் கொண்டார் திருமதி விட்பர்ன்.

விருந்துக்கு வந்திருந்தவர்களில் நான் கடைசியாய் கவனித்துக் கொண்டது வட்ட முகம் அமையப் பெற்ற கலகலவென தெரிந்த கர்லோட்டா ஆடம்ஸின் பாதுகாவலனை ! கரிய இளையவன். வந்ததிலிருந்தே, வழக்கமாக இவன் இருக்கத்தக்க நிதானமிழந்து, தன் நிலை தடுமாறிய போதையில் இவன் இருப்பதாகத் தான் எனக்கு சந்தேகம்எழுந்துக் கொண்டேயிருந்தது. பிரான்ஸ் தேசத்துக்கே உரிய

பிரத்யேக திராட்சை மதுவை அள்ளி அள்ளி அவன் குடித்துக் கொண்டேயிருந்ததிலிருந்து என் சந்தேகம் மிகத் தெளிவாயிற்று.

அவன் ஏதோ ஒரு மனக் காயத்தால் அல்லாடிக் கொண்டிருப்பதாய் தோன்றினான். விருந்தின் முதல் பாதி முழுதும் எதையோ பறி கொடுத்தவன் போல் பனிமூட்டமாய் இருந்தது, அவன் முகம். பிற்பாதியில், ஒரு வேளை போதை செய்த வேலையோ என்னவோ, என்னை அவனுடைய ஒரு பழைய நண்பனாய் கருதி, மேலே விழுந்து விடாத குறையாய் பேச ஆரம்பித்தான்.

''அதாவது... அதாவது... நான் என்ன சொல்ல வரேன்னா...'' - கொஞ்சம் குழறியபடி சொன்னான். ''இல்லை. அது நீ கிடையாது. என் இனிய பழைய நண்பன். அது நீ கிடையாது.''

விட்டுவிட்டு வந்த வார்த்தைகளைக் கோர்த்துத் தான், போதையிலிருக்கும் அவன் பேசுபவற்றை அர்த்தப்படுத்திக் கொள்ள வேண்டும் என அறிந்து, அவன் வசனங்களிலிருந்த தடுமாற்றங்களை ஒதுக்கித் தள்ளி கவனிக்க ஆரம்பித்தேன்.

''அதாவது... அதாவது... நான் என்ன சொல்ல வரேன்னா...?'' என்று மறுபடியும் ஆரம்பித்தான்! ''ஒண்ணு கேட்கட்டுமா? ஆட்சேபணைகளையும் மீறி, ஒரு பெண்ணை இழுத்துக்கிட்டு ஓடுவியா? நீ? ம்? பதில்? என்ன முறைக்கிறே? அவளுடன் சுற்றிக் கூத்தடிச்சு, அவ பெற்றோரைக் கலங்க வைத்து... நான் அப்படி செய்திருக்கக் கூடாதா? வந்து... வந்து... ஆனா... அவள் அப்படிப் பட்டவ கிடையாதே! அவள் நேரடியானவ! அதாவது... அதாவது....! ஏய்...! என்ன, நான் சொல்வதையெல்லாம் கிரகிச்சுக்கிட்டிருக்கியா...! நீ என்ன உளவாளியா! ஆங், ஆங், நான் என்ன பேசிக் கொண்டிருந்தேன்?''

நான் பதில் பேசவில்லை. அவன் பேசட்டும். உள் மனக் காயங்கள் வருகின்றன.

''போகட்டும் ...அதையெல்லாம் பெருக்கித் தள்ளு. இந்த ஆட்டத்திற்கு வருவதற்காக, தையல்காரனிடமிருந்து நான் போட்டிருக்கும் இவ்வுடையைக் கடன் வாங்கி போட்டு வந்திருக்கேன். தெரியுமா? இப்படி பல முறை! ஒவ்வொரு முறையும் வாடகைக்காசு தரவே இல்லை கடன்! பல வருடங்களாய்! என் மேல் அப்படி என்னவோ அவனுக்கு ஒரு ப்ரீதி! அதனால் இருவருக்குள்ளும் ஓர் உடன்படிக்கை! உறவு உடன்படிக்கை! மனம் ஒன்றிய உறவுக்கு

இணையாய் வேறு ஏதாவது இவ்வுலகில் உண்டா, மை டியர் ஓல்ட் ஃபிரண்ட்! நீ... நான் ...! ஆமாம், நீ யார்? என் பழைய நண்பன் போல தோன்றினாலும் தோன்றினாலும்.... அப்படியா..?''

இப்போது பேசினேன். ''என் பெயர் ஹேஸ்டிங்ஸ்.''

''இவ்வளவு நேரமா என் வாயைக் கிளறி பேச விட்டாயே. மொதல்லேயே சொல்லித் தொலைச்சிருக்க வேண்டியது தானே! பிசாசே! என் நண்பன் ஸ்பென்ஸர்னு நினைச்சுல்லே நான் பேசித் தீர்த்துட்டேன்! ஒருவரைப் போல் இன்னொருவர் இருக்க முடியுமா? சொல், நீ... நீ... ஸ்பென்ஸர் தானே? ஏய்... ஏய்...!''

ஆனாலும், உடனடியாய் சோகமானான் அவன். சற்று கடந்தது. மறுபடியும் குதூகலமானான். எதற்காகவோ ! ஒரு மடக்கு ப்ரெஞ்சு மதுவினை 'மடக் மடக்'கென ஓசையெழுப்பி அருந்திக் கொண்டான். ''ஆனா தையல்காரன் கடனை அப்படியே விட்டு வைக்க மாட்டேன். அடைப்பேன்'' என அந்தரத்தில் ஆரம்பித்தான். தொடர்ந்தான்: ''எனக்கும் பிரகாசமான நாட்கள் வரும், மகனே! எனக்கு ஐம்பத்தைந்து வயசு ஆகும்போது, என் பணக்கார மாமனுக்கு மிகமிக வயதாகியிருக்கும். எனவே மண்டையைப் போட்டுடுவான். நான் அதீத பணக்காரனாகிடுவேன். அப்போ தையல்காரனின் கடனை அடைச்சுடுவேன்'' என்று அர்த்தமற்றுப் பேசியவன், அந்நினைவு களுக்குள் புகுந்து திருப்திகரமாய் அமர்ந்துக் கொண்டான்.

பிறர் விரும்பத்தக்க விசித்திரமான ஏதோ ஒரு பிடிப்பு அவனிடம் காணப்பட்டது. வட்ட வடிவ அவன் முகமும், அதில் மிகச் சிறிதாய் அமைந்திருந்த அவன் மீசையும், இவை பிரதிபலித்த சோகமும், ஆளேயற்ற பாலைவனத்தில் அகப்பட்டு விட்ட மனிதனாய் அவனை முன் நிறுத்தின.

கவனித்தேன். கர்லோட்டா ஆடம்ஸ், தன் கண் பார்வையை அவன் மீது பதித்த வண்ணமே இன்னபிறரோடும் இயங்கிக் கொண்டிருந்தார். இப்போது கூட தன் பாதுகாவலன் காட்டிய கண் குறிப்பினை கவனித்த பிறகே, விருந்து உபசரிப்பிலிருந்து விடை பெற்றுக் கொள்வதாய் அறிவித்தார் அவர்.

''எங்கள் வரவேற்பினை மதிச்சு, இவ்ளோ தூரம் வந்து சிறப்பித்ததற்கு மிக்க நன்றி'' என்றார் ஜானே. ''திடுமென சடுதியில் முடிவெடுத்து, ஒரு காரியத்தை வெற்றிகரமாக நிகழ்த்தி முடித்துக் காட்டுவது எனக்கு மிகப் பிடிக்கும். அது அள்ளித் தரும் திருப்தியே அலாதி தானே!''

''எனக்கு இதில் உடன்பாடில்லை'' என்றார் ஆடம்ஸ். ஏற்றுக் கொள்ளவே மாட்டேன் என சிறு பிடிவாதம் தெரிந்தது அவரிடம். ''எனக்கு சட்டென ஒரு காரியத்தை ஆரம்பித்து முடிப்பது இயலாத ஒன்று. திட்டமிடுவேன். ஆற அமர. பிறகு தான் செயல்படுத்துவேன். இது அந்தக் காரியத்தை முடிப்பதில், நம்மை வீணான கவலை களிலிருந்து காப்பாற்றி விடும்.''

''எப்படியோ... திட்டமிட்டு செய்யும் உங்களுடைய அணுகுமுறை யும் சரியானதே என்று உங்க வெற்றிகள் விளக்கிடுதே...'' என புன்னகை சிதறாது பதில் தந்த வில்கின்ஸன், ''இன்றிரவு உங்க காட்சியைக் கண்டு விழுந்து விழுந்து சிரித்து மகிழ்ந்தேனே.. அது போல இன்னொரு காட்சி அமைந்து என்னைப் புளகாங்கிதம் அடைய வைக்குமா என்பது சந்தேகமே'' என்றார் அபரிமித திருப்தி தெறிக்க.

ஆடம்ஸின் முகம் இன்பமாயிற்று. ''இப்புகழுரை, உங்கள் பெருந்தன்மையைக் காட்டுகின்றது'' என்றார் வெதுவெதுப்பாய். ''நீங்க என்னைப் புகழ்ந்துரைத்ததற்காக நான் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன். புகழுரை... முன்னேற உதவும் உற்சாக வார்த்தைகள்... எனக்கு மிகத் தேவைப்படும் ஓர் ஊக்க மருந்து. எல்லா கலைஞர்களுக்கும் தானே!''

''கர்லோட்டா'' என்றான் பாதுகாவலன். ''விடைபெற்றுக் கொண்டு, விருந்துக்கான நிறைவான நன்றியை *பெரியம்மா* ஜானேவுக்குக் கூறி விட்டு, என் பின்னால் வா...''

எழுந்து கர்லோட்டாவுக்காகக் காத்திராது அவன் விறைப்போடு வெளியேற, விகடகவி கலைஞரும் அவன் அடி ஒற்றி நடந்து மறைந்தார்.

''யாரவன்? எத்தனை கொழுப்பு அவனுக்கு? நான் பெரியம்மாவா? அவனை... அவனை...!''

''ஓ... டியர்...'' என்று, கோபப்பட்ட வில்கின்ஸனை அழைத்தார் திருமதி விட்பர்ன். ''அவனை விட்டுத் தள்ளு. போதை ! நாங்களும் கிளம்புகிறோம். நானும் சார்லஸும் தட்டுத் தடுமாறி போய் சேர்வதற்குள்..'' என்றவாறு தன் பெரும் உடலைச் சுமந்துக் கொண்டு அவர்கள் கிளம்ப, இருவரையும் மார்ட்டீன் அழைத்துக் கொண்டு வழியனுப்பச் சென்றார்.

''என்ன, திருமிகு பொய்ரெட்...?''

சிரித்த முகத்தோடு அழைத்த ஜானே வில்கின்ஸனுக்கு பதில் சிரிப்பினை அளித்தார் பொய்ரெட். ''சொல்லுங்க, திருமதி எட்ஜ்வேர்'' என்று கேட்டான்.

''போதும், போதும்! அந்தப் பேரால என்னை இன்னொரு முறை கூப்பிட்டுடாதீங்க... அந்த நாசமாப்போற பெயரை மறக்க விடுங்க'' என்றவர், ''நீங்கள் என் கணவரைப் போய் பார்ப்பீங்க, இல்லையா? எனக்குத் தேவையானதைக் கொடுத்து விடும்படி அறிவுறுத்துவீங்க, இல்லையா?'' என கேட்டார்.

''சரி... போய் சந்திக்கிறேன்'' என்று உறுதி அளித்தான் இவன்.

எனக்கென்னவோ பொய்ரெட்டும் அளவுக்கதிகமாக ப்ரெஞ்ச் மதுவினை அருந்திவிட்டுப் பிதற்றுகிறானோ என்றே தோன்றியது! விவாகரத்து வழக்கெல்லாம் பொய்ரெட் கையாள ஒப்புக் கொள்ளும் வழக்குகளா என்ன?

''அவர் உங்களை அவமதிச்சு நடந்துக்கிட்டா - அது அப்படித்தான் செய்யும் - திரும்பி விடாமல், மற்றொரு திட்டத்தை மறு கணமே செயல்படுத்தி முன்னேறுவீங்க, இல்லையா?! அப்படித்தான்! நீங்கள் அப்படிப்பட்ட அதி புத்திசாலினு இந்த இங்கிலாந்தே இல்லை வியந்துக் கிடக்கு.''

விடை பெற எழுந்துக் கொண்ட ஹெர்குல் பொய்ரெட், ''மிஸஸ் ஜானே வில்கின்ஸன் ! நான் இப்போதைக்கு உங்களுக்கு எந்த வாக்குறுதியும் தரலே. ஓ. கே,? அவர் மனநிலையை அறிந்துக் கொள்ள, முதல்ல ஒரு சந்திப்புக்கு ஏற்பாடு செய்யப் போறேன்'' என்றான்.

''அவர் மன ரீதியா எண்ணமாயிருக்கார் என்பதை அறிய எத்தனை பரிட்சை செய்ய வேண்டுமோ அத்தனையையும் செய்யுங்க. அவை, அவருக்கு ஏதேனும் நன்மை பயக்கலாம். ஆனா அதைப் பற்றியெல்லாம் எனக்கு கவலையில்லை. ஆனா என் வேண்டுகோள், நீங்க அவரை விவாகரத்து தருவதற்கு ஒப்புக் கொள்ள வைக்க வேண்டும் என்பதாகும். இதனைத் தவற விட்டுடாதீங்க. என் மனம் கவர்ந்தவரோடு நான் இணைய வேண்டும்.... வாழ வேண்டும்... ரொம்பமிகு பொய்ரெட்.''

சொன்னவர் காதல் கனவில் சஞ்சரிப்பவராய் ரசித்துச் சொன்னார்: ''அந்தக் கணம் எத்தனை வாத்ஸல்யம் மிக்கதாய் இருக்கும்!''

அத்தியாயம் - 3

# தங்கப்பல் கட்டிய மனிதன்

ஓரிரு நாட்கள் கழித்து, காலை சிற்றுண்டிக்காக நான் அமர்ந்திருந்த ஒரு காலைப் பொழுதிலே, திறந்திருந்த ஒரு தபால் உறையினை எடுத்துக் கொண்டு காட்டாறாய் என்னிடம் ஓடி வந்தான் பொய்ரெட்.

''இதைப் பார்'' என்றான். ''பார்த்துட்டு, நீ இதைப் பற்றி என்ன நினைக்கிறேனு சொல்லு.''

அக்கடிதாசியிலிருந்த குறிப்பு பிரபு எட்ஜ்வேரிடமிருந்து வந்திருந்தது. உயர்வான மற்றும் இறுக்கமான ராஜ்ய ஸ்தானத்தில் வடிவமைக்கப்பட்டிருந்த அக்கடித வார்த்தைகளில் நாளை முற்பகல் பதினொரு மணிக்கு பிரபு எட்ஜ்வேரோடு சந்தித்துப் பேச, பொய்ரெட்டுக்கு நேரமளிக்கப்பட்டிருந்தது.

நான் ஆச்சரியத்தின் உச்சத்தில் எறியப்பட்டேன் என்று தான் சொல்ல வேண்டும். பொய்ரெட், ஏதோ ப்ரெஞ்ச் மது அருந்திய களிப்பில் தான் நம்பிக்கை வார்த்தைகளை உதிர்த்திருந்ததாய் நான் நினைத்திருந்தேன். கொடுத்த வார்த்தையை நிறைவேற்ற இந்த அளவுக்கு துரிதமாய் ஆயத்தங்கள் செய்வான் என நான் சிறிதும், நினைத்திருக்கவில்லை.

காண்போரின் முக பாவத்திலிருந்து சட்டென மனநிலையினைப் படித்தறியும் திறன் மிகுந்த பொய்ரெட், என் மன ஓட்டங்களையும் படித்து அறிந்திருக்க வேண்டும்! கிண்டலாய் கண்ணடித்துக் கேட்டான்: ''நண்பா ! வில்கின்ஸனிடம் சொன்னவை, சத்தியமாய் மது தந்த போதையினால் அல்ல.''

''நான் அப்படிச் சொல்லலே.''

''சொன்னாய், சொன்னாய்! விருந்துபச்சார சம்பிரதாயப்படி நான் பேசுவதாய் அப்போ நீ உனக்குள்ளே எண்ணிக்கிட்டே! உண்டா

இல்லையா! சும்மா ஒரு பேச்சுக்கு வாக்குக் கொடுப்பதாய், நான் நிச்சயம் நிறைவேற்றாமல் கைவிட்டு விடப் போகிற ஒரு விஷயத்துக்கு, நம்பிக்கை தந்து குடி போதையில் பேசுவதாய் நீ நினைச்சே! நான் பிரபு எட்ஜ்வேரையெல்லாம் சர்வ நிஜமாய் தொடர்புக் கொள்ளப் போவதில்லை என்றும் நீயா முடிவு கட்டிக்கிட்டே! ஆனால், நண்பா! பொய்ரெட்டின் சத்தியங்கள் போதைக் கலப்பெல்லாம் அற்ற புனித வார்த்தைகள்.''

தன்னைத் தானே ஓர் உயர் ஸ்தானத்தில் பொருத்திக் காட்டிக் கொண்டான், கடைசி வார்த்தைகளைச் சொன்ன போது!

''எனக்கும் .... என...க்கும்... அது தெரியும் பொய்ரெட்'' என்றேன் நான் சற்று அவசரத்தோடு. ஆனால் அது ஒட்டியும் ஒட்டாமல் தனித்து நின்றது! ''நான் அப்போ என்ன நினைச்சேன்னா, உன்னோட சம்மதம், சற்றே... சற்றே... ம்.. எப்படிச் சொல்வது? ஆங்.. சற்றே ஆதிக்கம் செலுத்தப்பட்டதால் - வில்கின்ஸனின் வசீகரம் ஆதிக்கம் செலுத்தியதால் விளைந்ததோனு நினைச்சேன்.''

''நீ வர்ணிப்பதைப் போல், என் முடிவுகள் எவராலும் 'ஆதிக்கம்' செலுத்தப்படுவதை நான் அனுமதிப்பதேயில்லை. ஹேஸ்டிங்ஸ். சாறெடுத்து அளிக்கப்படும் ப்ரெஞ்ச் மது, பாகங்கள் பிதுங்கித் தெரிய உடையுடுத்தியுள்ள மாது, பெட்டிப் பெட்டியாய் விரித்துப் போடப்படும் தங்கக்கட்டிகள், இவற்றில் எதுவுமே பொய்ரெட் எடுக்கும் தராசுத் தனமான முடிவுகளை ஆக்கிரமிக்க இயலாது. என் கவனமும் ஈர்ப்பும் இவை எதிலும் இருக்காது.''

''பின்? ஜானே வில்கின்ஸனின் காதல் விவகாரத்தினால் ஈர்க்கப்பட்டியா?''

''அப்படியும் சொல்லிவிட முடியாது. ஜானேயின் காதல் விவகாரம், ஒரு பொதுப்பிரச்சினை. அவரவர்களே தீர்த்துக் கொள்ள வேண்டிய விவகாரம். மிக அழகான சினிமா நடிகைகளின் தவிர்க்கயியலா வாழ்க்கை நிகழ்வுகள். மெர்ட்டான் மாகாணத்து இளைய பிரபுவுக்கு மட்டும் கொட்டிக் கிடக்கும் ஐஸ்வர்யமும், 'இளைய பிரபு' எனும் பட்டமும் இல்லாமற் போயிருந்தால், அந்த சந்நியாச வாழ்க்கையை இந்த ஜானே விரும்பியா இருப்பாள்? எல்லாம், பணம் படுத்தும் பாடு! எனவே, என்னைத் தூண்டுவது, இந்த விவகாரத்தில் பொதிந்துள்ள உளவியல் சமாச்சாரங்கள் தானே அன்றி வேறெதுவும் இல்லை' குணாதிசயங்களின் உள் குமுறல்கள்! 'க்ஷண

சித்தன், க்ஷண பித்தன்' உண்மையில், சீமான் எட்ஜ்வேர், இப்படிப்பட்டவர்தானா? அவரை மிக மிக அருகில் சென்று படிக்க வாய்த்துள்ள இந்த மனோ தத்துவ வாய்ப்பினை நான் உளமார ஏற்கிறேன்.''

''இந்த இலக்கில் வெற்றி கிடைக்கும்னு நீ நினைக்கிறியா?''

''கற்றது கை மண் அளவு, ஹேஸ்டிங்ஸ்! முழுக்கவும் மனோ ரீதியாக எதிர்கொள்ள வேண்டிய வழக்கு இது. உனக்குப் பரிச்சயமில்லாத இந்த அணுகுமுறையால், என்னை நம்பி ஒப்படைக் கப்பட்டுள்ள இந்த இலக்கிலிருந்து நான் வழுவி விடலாம் என நீ நினைக்கிறாய்! ஆனால் நானோ, என் திறமைக்கு கொடுக்கப்படும் சவால்களை என்றுமே மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்பவன்.!''

திருப்தியானேன். ''ஆக, நாமிருவரும் நாளை பதினொரு மணிக்கு ரீஜெண்ட் அரண்மனைக்குச் செல்கிறோம். இல்லையா?'' என்று கேட்டேன், சிறு ஆர்வம் பொங்க.

''செல்கிறோம்?'' தன் புருவங்களை, அகலமாய் மேலே தூக்கி, புதிராய் கேட்டான்.

''பொய்ரெட்!'' - கெஞ்சினேன். ''என்னை இங்கு விட்டுட்டு நீ மட்டும் போகக் கூடாது! நான் எப்போதும் உன் நிழல் போல உன்னுடனேயே தானே இருக்கேன்!''

''இது மட்டும் ஒரு கொலை வழக்காயிருந்தால்....அதாவது, மர்மமான முறையில் விஷம் வைத்துக் கொல்லப்பட்ட வழக்கு... ஆள் வைத்து செய்யப்பட்ட சதிக் கொலை... ஆஹ்! இது போன்ற களங்கள் தான் உன் தேடலுக்குக் கிடைக்கும் அரிய விருந்து! ஆனால், புருஷன் பெண்டாட்டிக்குள் நடைபெறும் பூசல்களிலெல்லாம், நீ எப்படி....?''

''இனி ஒரு வார்த்தை கூடாது'' - திட்டவட்டமாகச் சொன்னேன். ''நானும் வருகிறேன்.''

சரி என்ற சம்மதம் மிளிர சிறு கோடாய் புன்னகைத்துக் கொண்டான் பொய்ரெட். அப்போது எங்களைக் காண ஓர் ஆடவன் வந்திருப்பதாய் தகவல் வந்தது.

வரச் சொன்னோம்.

எங்களது பேராச்சரியத்திற்குக் காரணமாக உள்ளே நுழைந்தது ப்ரையன் மார்ட்டீன். அரிதாரமில்லாத அவர் முகம், பகல் வெளிச்சத்தில் சற்று வயதாகித் தெரிந்தது. எனினும் ஆணழகு தவழும் வசீகர முகமாய் தான் அது இருந்தது. ஒரு வித மனக்கிலேசத்தைப் பிரதிபலிக்கும், ஏமாற்றப்பட்ட ஆணழகு முகம்! இப்படி சூறையாடப்

பட்டதாய் முகம் அதிர்ந்து தோன்ற, தொடர்ச்சியாய் போதை மருந்துகள் உட்கொள்வதே காரணமாயிருக்கலாம் என்று மின்னலாய் ஓர் எண்ணம் எனக்குள் வெடித்து உணர்த்தியது. அவரிடம் தென்பட்டுக் கொண்டிருந்த ஒரு வித நரம்பதிர்வும், இருப்புக் கொள்ளாத படபடப்பும் இந்த சாத்தியக் கூறினை எனக்குள் தோற்றுவித்தன.

''வணக்கங்கள், திருமிகு பொய்ரெட்'' என்றார் தனக்கே உரிய சினிமாத் தனமான புத்துணர்ச்சியோடு. ''நீங்க ரெண்டு பேரும் ஏதோவொரு மிக முக்கியமான விவகாரத்தை விவாதித்துக் கொண்டிருப்பதாய் தோணுது'' என்றார்.

இனிமையாய் சிரித்தான் பொய்ரெட். ''இல்லை'' என்றான். ''இந்த நொடியில் முக்கியத்துவம் வாய்ந்த எந்த விவகாரமும் என்னிடமில்லை.''

''நம்ப முடியலே?'' - சிரிப்போடு பேசினார் மார்ட்டீன். ''ஸ்காட்லாண்ட் போலீஸ் உங்களை எந்த வேலையுமின்றி விட்டு வைத்திருப்பது மகா அதிசயம்! உங்கள் திறமைக்கு சவால் விடும், விடையறிய முடியாத நுணுக்கமான ஒரு வழக்கு கூடவா இல்லே? மீண்டும் சொல்றேன், என்னால் நம்ப முடியலே! ஒரு வேளை உங்களைக் கண்டு பேச நான் புறப்பட்ட நேரம் மிக நல்ல நேரமாயிருந்திருக்க வேண்டும்! திருமிகு பொய்ரெட்!இப்பொழுது எனக்கும் கொஞ்சம் செவி மடுக்க முடியுமா?''

சிறு சிந்தனையோடு இப்படிக் கேட்ட கட்டழகு நாயகனை அங்கீகரித்தான் பொய்ரெட். உடனேயே கேட்டான்: ''என்னிடம் ஆலோசிக்க எதாவது விவகாரம் கொண்டு வந்திருக்கீங்களா?''

''எப்படிச் சொல்வது? இரண்டும் தான்! விவகாரம் இருக்கிறது - விவகாரம் இல்லை!''

இப்படிப் பேசிய போது மார்ட்டீன் உதிர்த்த சிரிப்பில் நடுக்கமிருந்தது. அவரை ஆழ கிரகித்துக் கொண்டே, எதிரேயிருந்த நாற்காலியைச் சுட்டிக் காட்டி அமரும்படி உணர்த்தினான் பொய்ரெட். துப்பறியும் நிபுணரின் அருகில் நான் அமர்ந்திருந்தபடியால், எங்களிருவரையும் பார்த்தபடி எதிரே அமர்ந்தார் மார்ட்டீன்.

''இப்பொழுது...'' என்ற பொய்ரெட், ''நீங்கள் ஆரம்பிக்கலாம். உங்கள் வழக்கை முழுவதுமாகக் கேட்கிறோம்'' என்றான்.

ஆயினும் ப்ரையன் மார்ட்டீனுக்குள், உரையாடலைத் துவங்குவதற்கு சிறு தயக்கமிருந்தது. இதை ஊர்ஜிதப்படுத்தும்

வகையில், ''நான் எந்த அளவுக்கு உங்களிடம் சொல்ல வேண்டுமோ அந்த அளவுக்கு சொல்ல இயலாதவாறு சிறு சங்கடம் உள்ளது'' என்றார். ''வந்து விட்டேனே ஒழிய வார்த்தைகளைக் கோர்க்கக் கஷ்டமாயுள்ளது'' என்று தயங்கினார். பிறகு ''முழு சமாச்சாரமும் அமெரிக்காவில் துவங்கியது'' என ஆரம்பித்தார்.

''அமெரிக்காவில்? சரி! பிறகு?''

''ஒரு சிறு நிகழ்வு தான் என்னை இந்த விவகாரத்துக்குள் கவர்ந்திழுத்துப் போட்டுக் கொண்டது. எப்படி ஆரம்பிப்பது? ஆங்.... அன்னிக்கு நான் ரயிலில் போய்க்கிட்டிருந்தேன். அப்பொழுது ஒரு பயணியைக் கவனித்தேன். அழுக்கானவன், சற்றே குள்ளன். மழுமழு வென்று முகச்சவரம் செய்திருந்தான். மூக்குக்கண்ணாடி போட்டிருந்த அவனுக்கு ஒரு தங்கப் பல் இருந்தது.''

''பிரத்யேகமாய் தெரியவல்ல அடையாளம் - *தங்கப்பல்.*''

''மிகச் சரியான குறிப்பினைப் புள்ளியிட்டுப் பிடிச்சுட்டீங்க. அது தான் இந்த விவகாரத்தின் கரு.''

பொய்ரெட், நினைத்தேன் என்பது போல சில முறை ஆமோதித்து தலையை ஆட்டிக் காட்டினான். ''*எனக்குப் புரிகிறது*'' என்றான். ''மேலே?''

''நன்றி. எதேச்சையாய் அவனைப் பார்த்துக் கொண்டேன். அப்போது நான் நியூயார்க் பகுதிக்கு பயணம் பண்ணிக்கிட்டிருந்தேன். இது நடந்து முடிந்து ஆறு மாதம் கழித்து நான் லாஸ் ஏஞ்சல்ஸில் இருந்தேன். அங்கு, அதே குள்ளப் பயணியைக் கவனித்தேன். கவனித்த மாத்திரத்தில், இவனைத் தானே அன்று ரயிலில் பார்த்தோம் என்றும் என்னால ஞாபகப்படுத்திக்க முடிஞ்சது. எதற்காக இப்படி ஞாபகம் வந்தது என விளங்கவில்லை. ஆனா வந்தது! இப்போது கூட, குறிப்பாய் சொல்ல இதில் ஒன்றுமில்லை.''

''ம்! தொடருங்க.''

''ஒரு மாதம் கழிந்தது. சியாட்டீல் மாகாணம் வரை போக வேண்டிய வேலை வந்தது. அங்கு சென்ற கொஞ்ச நேரத்திற்குள்ளாகவே, நான் மறுபடியும் கவனித்தது, வேறு யாரையுமில்லே. என் அதே நண்பனை, அழுக்குக் குள்ளனை! இம்முறை, சற்றே வளர்க்கப் பட்டிருந்த தாடியுடன்!''

''முற்றிலும் தனித்துவம் மிகுந்தது. ஆர்வத்தைத் தூண்டும் விவகாரம்!''

''இல்லையா? எனக்கும் அப்படித்தான் இருந்தது! ஆனா, அந்த சமயத்தில், இதில் எனக்கு ஏதேனும் தொடர்பு இருப்பதாய் நான் கற்பனை கூட செய்யலே. ஆனா, மறுபடியும், லாஸ் ஏஞ்சல்ஸில் அவனை தாடியின்றி பார்த்தபோது, சிக்காகோவில் தடிமனான மீசையோடு பார்த்த போது - ஒரு மலைப் பிரதேசக் கிராமத்தில் படப்பிடிப்பில் இருந்த நான், வித்தியாசமான புருவ அமைப்போடு வந்திருந்த அவனைப் பார்த்த போது - மெல்ல மெல்ல ஆச்சரியமும் பிறு அதிர்ச்சியும் அடைய ஆரம்பித்தேன்.''

''இயற்கையா!''

''இது தொடர்ந்தது. கடைசியில், ஒரு நாள், வழக்கமாயில்லாது விசித்திரமாய் தொடர்ந்த இச்சம்பவங்கள் என்ன என்பது சந்தேகத்துக் கிடமின்றி விளங்கின. - ஆமாம்... நான், நிழல் போல் தொடரப்படு கிறேன்.''

''குறிப்பிடத்தக்க விளக்கம். சரியான கணிப்பு. சபாஷ். பிறகு?''

''என் கணிப்பு சரிதானே...?''

''மிகச் சரி!''

'எங்கெல்லாம் நான் செல்கிறேனோ, அங்கெல்லாம், கைக்கெட்டும் தூரத்தில், என் நிழல், வேறு வேறு வேடங்களில் தொடர்வதைக் கண்டதும், என் சந்தேகம், சந்தேகத்துக்கிடமின்றி ஊர்ஜிதமாயிற்று. அதிர்ஷ்டவசமா அவனுக்கு அமைந்திருந்த தங்கப் பல்லின் காரணமாக, அவனைக் கண்டறிவது மிக சுலபமாயிற்று!''

''ஓ! தங்கப்பல்! அது தான் அமைந்த அனுகூலம்.''

''ஆமாம்''

''இடை மறிப்பதற்கு மன்னிக்க திரு மார்ட்டீன்! நீங்க அவனோடு பேசவே இல்லையா? ஏன் என் நிரந்தர நிழலாய் பின்னாலேயே தொடர்ந்துக்கிட்டிருக்கே என்ற ரீதியில் எதுவும் கேட்கவே யில்லையா..?''

''இல்லை.,.. நான் பேசவே இல்லை'' - இப்படிச் சொன்ன நடிகனிடம், சிறு தயக்கம் நிறைந்திருந்தது. எனினும் தொடர்ந்தார். ''ஓரிரு முறை, அவனைக் கூப்பிட்டு கறாரா கேட்டுடலாமானு கூடத் தோன்றியதுண்டு. ஆனா அந்த ஒவ்வொரு முறையும் ''கூடாது'' என வலுவாய் முடிவெடுத்துக் கொள்வேன். 'என்னை அவன் பாதுகாவலன் போல தொடர்ந்துக் கொண்டேயிருக்க வேண்டும். ஆனால் என்னைப் பற்றி ஒன்றும் தெரிந்துக் கொள்ளக்கூடாது' எனும்

நிலையில் அவனை வைப்பது தான் நல்லதுனு எனக்குப்பட்டது. ஒரு வேளை அவன் என்னைத் தொடர்ந்துக் கொண்டே இருப்பதை நான் கவனிச்சுட்டேன்னு அவர்கள் உணர்ந்து விட்டார்கள்னா அவ்வளவு தான். வேறு யாரையாவது, அதாவது என்னால் எந்தக் கும்பலில் பார்த்தாலும் சட்டென கண்டுபிடிக்கும்படியான குறிப்புகளற்ற யாரையாவது, என்னை நிழல் போல் தொடரும் காவல் பணியில் போட்டு விடுவார்கள்.''

''யாராவது! நமக்கு உதவும் தங்கப்பல் போன்ற ஒன்று இல்லாத யாரையாவது...! இல்லையா!''

''மிக, மிகச் சரியாக! ஒரு வேளை என் நினைப்பு தவறாகக்கூட இருந்திருக்கலாம்... ஆனால் நான் இப்படியெல்லாம் தான் உணர்ந்தேன்!''

''திரு மார்ட்டீன். உங்க உரையாடல்ல 'அவர்கள்' என்று சற்று முன் உபயோகப்படுத்தினீங்க! யாரந்த 'அவர்கள்?' ''

''என் மனத்திலிருந்த நிலைப்பாட்டை விளக்க, அது வசதியாக நான் உபயோகித்த ஒரு வார்த்தை, அவ்வளவே'' என்றவர், தனக்குத்தானே, ''ஏன்? உரையாடலில், 'அவர்கள்' என்ற அர்த்தமற்ற சூன்ய வார்த்தையை ஏன் நானாக அமைத்துக் கொண்டேன்? தெரியவில்லையே!'' என்று யோசித்துக் கொண்டார்.

''இப்படிச் சொன்னதற்கு ஏதாவது காரணம் பளிச்சிடுதா? சிந்திச்சுப் பாருங்க!''

''எதுவுமில்லை.''

''உங்களைப் பின்தொடர்ந்து நிழல் போல வர, யார் ஆளை அனுப்பியிருப்பார்கள் என்றோ, எந்தக் காரணத்துக்காக என்றோ, காரணமே புலப்படவில்லையா?''

''துளிக் கூட கிடையாது'' மார்ட்டீன் வறட்சியாய் சொன்னார். ''நிழல் போல் அந்த ஆள் வந்ததைக் கூட, என் ஊகத்தின் அடிப்படையில் தான் விளக்கினேன். எனக்கு, அவன் என்னைத் தொடர்ந்துக் கொண்டேயிருப்பதாய் தோன்றிற்று!''

''ஊகங்கள் பிரம்மாண்டமாய் உதவும், திரு மார்ட்டீன்.''

''லண்டனில், ரெண்டு வருடங்களுக்கு முன்னாடி நடந்த ஒரு நிகழ்வினை மறுபடியும் நினைவு கூரும்படி, இதுவரை நான் குறிப்பிட்டவை முடிச்சிட்டு நிற்கின்றன. அது ஒரு சிறு நிகழ்வு தான். காரணம்கூறி விளக்க முடியாத நிகழ்வு. மறக்க முடியாத சம்பவமும்

கூட! அது குறித்து பல முறை சிந்தித்து, ஆச்சரியம் அடைந்துள்ளேன். புதிராய் யோசித்துள்ளேன்! அச்சம்பவத்திற்கு விளக்கம் ஏதும் கிடைக்காத ஒரே காரணத்திற்காகத் தான், நிழல் போல் என்னைத் தொடரும் சமீபத்திய நிகழ்வுகள் ஏன் அதனோடு தொடர்புடையவை யாக இருக்கக்கூடாது என எண்ணும்படி ஆயிற்று! ஏன் தொடர்புக் கொண்டிருக்க வேண்டும்? இரு வருடங்களுக்கு முன் நிகழ்ந்த ஒரு சம்பவமும், தொடர்ச்சியாய் நிகழ்ந்துத் தள்ளும் தங்கப்பல் சமாச்சாரங்களும் எப்படி, எந்த வகையில் தொடர்பு கொண்டிருக்க முடியும்? என் தலையில் அடித்துச் சொல்கிறேன் - எனக்கு விளங்கவில்லை.''

''என்னால் விளக்க இயலும்!'' என்ற பொய்ரெட், நீங்கள் மீதியுள்ள தகவலும் தந்து உதவினால்... என்பதை சொல்லாமல் சொன்னான்!

''ஆமாம்... ஆனா ... ஆனா ...'' மறுபடியும் அவரை ஆட்டிப் படைத்த தயக்கத்திற்குள் சஞ்சலமாய் போய் விழுந்தார் மார்ட்டீன். ''அசௌகரியமான விஷயம் என்னவென்றால்... என்னால் இப்பொழுது அதை உங்களிடம் சொல்ல முடியாது. அதாவது இப்பொழுது. ஓரிரு நாட்களுக்குப் பிறகு என்னால் சொல்ல முடியும்!''

கண்களாலேயே விசாரித்தும், கிடைக்கும் பதிலை அளந்தும் முன்னேறிக் கொண்டிருந்த பொய்ரெட்டின் திறமைக்கு முன், வேறு வழியின்றி தொடர்ந்தார் மார்ட்டீன்.

''ஒரு... ஒரு ... ஒரு பெண் சம்பந்தப்பட்டது அது.''

''ஓர் ஆங்கிலப் பெண்?'' சட்டென கேட்டான் பொய்ரெட்.

''ஆ... ஆமாம்! எப்படி... எப்படித் தெரியும்?'' - விக்கித்துப் போய் கேட்டார் மார்ட்டீன்.

''சுலபம். அந்த சம்பவத்தை இப்பொழுது உடனடியாக என் முன் விரித்துப் போட உங்களால முடியலே - ஆனா ஓரிரு நாட்களில முடியும்னு நினைக்கிறீங்க. எனில், விஷயத்தைப் போட்டு உடைக்க அந்த இளம் பெண்ணின் அனுமதி உங்களுக்குத் தேவைப்படுது. எனவே, அவள், இங்கிலாந்தில் தான் இருக்கிறாள். மேலும் நீங்க அமெரிக்காவில் நிழலாய் தொடரப்பட்ட போதெல்லாம் கூட, அவ இங்குதானிருந்திருக்கணும். அப்போதும் அவள் அமெரிக்காவிலேயே இருந்திருந்தால், சந்தேகம் வந்த ஒவ்வொரு தடவையும் அவளைத் தேடித் தேடி நீங்க போய் ஆலோசித்திருப்பீங்க. அப்போதே ஏதேனும் ஒரு வழி கிட்டியிருக்கும்! ஆக, கடந்த பதினெட்டு மாதங்களாக அவ

இங்கிலாந்திலேயே வசித்து வந்திருப்பதால் அவ இங்கிலாந்துக் காரியாகத் தானிருக்க வேண்டும். அல்லது வேறு நாட்டுக்காரி! நிச்சயம் அமெரிக்கக் காரி அல்ல! எப்படி என் உளவு?''

''பிரமிக்கிறேன். நான் பேசியதைக் கேட்டுக் கொண்டேயிருக்கும் போது, இத்தனை விஷயங்களா உங்கள் மூளைக்குள் நடந்தேறி யுள்ளன!''

''இன்னும் நிறைய!'' - சிறு பெருமை மிளிர சிரித்துக் கொண்டான் பொய்ரெட்.

''திருமிகு பொய்ரெட். சொல்லுங்க... அவ அனுமதி மட்டும் எனக்குக் கிடைச்சிட்டா, நீங்க இந்த வழக்கை எடுத்துக்குவீங்க, இல்லையா?''

ஒரு சிறு இடைவேளை விளைந்தது. முழு விவகாரத்தையும் பொய்ரெட், தன் மூளைக்குள் போட்டு விவாதித்துக் கொண்டிருப்பதாய் தோன்றிற்று. இறுதியாய் கேட்டான்: ''அவரிடம் போய் அனுமதி வாங்குவதற்கு முன்னால், இப்போ ஏன் என்கிட்டே நேராய் வந்திருக்கீங்க?''

அதியற்புதமான சமயோஜித கேள்வி. தொழிலுக்குள் நுழைந்து விட்டால் பொய்ரெட்டை வெல்வோரில்லை என்பதை மறுபடியும் நான் பிரமித்துப் போய் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன்.

''அதாவது, அதா...வது...நான் என்ன நினைச்சேன்னா...'' தடுமாறினார் மார்ட்டீன். ''அவள்கிட்டே போகணும்னு தான் நினைச்சுக்கிட்டிருந்தேன். போய் பேசி, எப்படியாவது விவகாரங்களை முடித்து விடலாம்னு விளங்க வெக்க, விசாரணைக்கு சம்மதிக்க வைக்கணும்னு தான் எண்ணியிருந்தேன். ஆனா, அதற்கு முன், உங்களிடம் சம்மதம் பெற்றுக் கொள்வது சிறந்ததா இருக்கும்னு தோன்றவே இங்கு வந்துட்டேன். என்ன சொல்ல வரேன்னா, நீங்க இவ்வழக்கினைக் கையாள எடுத்துக்கிட்டீங்கன்னா, காதும் காதும் வைத்தாற் போல், எதையும் விளம்பரப்படுத்தாமல் முடிச்சுடலாம் இல்லையா... அவகிட்டே சொல்ல வேண்டிய தேவைகளே அப்ப எழாதே?''

''சொல்ல முடியாது'' - அமைதியாக ஆனால் ஸ்திரமாகப் பேசினான் பொய்ரெட். ''அது வழக்கின் தன்மையைப் பொறுத்தது.''

''என்ன சொல்றீங்க?''

மார்ட்டீன் கேட்ட கேள்விக்கு, இதோ, இந்தக் கேள்வி தான் பதில் என்பது போலக் கேட்டான்: ''இந்த சமாச்சாரங்களில் சட்ட விரோதமான குற்றம் உள்ளதா - கொலை போல?''

''ஓஓஓ! நிச்சயமாய் அப்படியெல்லாம் ஒன்றும் கிடையாது.''

''உங்களைப் பொறுத்தமட்டில் இல்லை. ஆனால் இருக்கலாம்.''

''திருமிகு பொய்ரெட்! உங்களால் இயன்ற மிகச் சிறந்த உதவியை, நீங்கள் அவளுக்கு... எங்களுக்குச் செய்வீங்க... இல்லையா?''

''நிச்சயமா. சட்டமும் நீதியும் வழுவாது!''

ஒரு துப்பறியும் நிபுணராய் பொய்ரெட்டின் முகம் மிக நடுநிலைத் தன்மை வாய்ந்தது என்பதை இப்போது மார்ட்டீன் உணர்ந்திருக்க வேண்டும். சில நொடிகள் தலையைக் குனிந்துக் கொண்டு அமைதியாய் இருந்தார்.

பொய்ரெட் கேட்டான்: ''சொல்லுங்கள், திரு மார்ட்டீன்... உங்களைப் பின்தொடர்ந்தவன், உங்கள் நிழல் அவனுக்கு எத்தனை வயது இருந்திருக்கும்?''

''இளையவன் தான். முப்பது சொல்லலாம்.''

''ஆஹ்...'' என்ற பொய்ரெட், ''இது மிக முக்கியமானது. இது, முழு சங்கதியையும் மிக ருசிகரமாய் ஆக்குகின்றது'' என சற்றே மிளிர்த்துக் கொண்டான்.

நான் பொய்ரெட்டை வைத்த கண் வாங்காமல் பார்த்தேன். மார்ட்டீனும் அப்படியே. எனக்கும் மார்ட்டீனுக்கும் சற்றும் விளங்காத கருத்தாய் அமைந்தது, பொய்ரெட்டின் இக்கருத்து! இதிலென்ன ரசிக்க இருக்கிறது என்று புருவத்தை உயர்த்தி என்னைக் கேட்டார் மார்ட்டீன். என்னால், ''தெரியவில்லை'' என்று உணர்த்தும் வெறும் தோள் குலுக்கலைத்தான் பதிலாக்க முடிந்தது.

''ஆமாம்'' என்று தனக்குத்தானே ரசித்துச் சொல்லிக் கொண்டான் பொய்ரெட். ''உங்களுடைய இந்தப் பதில் இவ்வழக்கினை ஈடுபாடு மிகுந்ததாய் காட்டுகின்றது.''

தன் பதிலை இத்தனை முக்கியமாய் பொய்ரெட் எடுத்துக் கொண்டதை உணர்ந்த மார்ட்டீன், ''அவன் இன்னும் கொஞ்சம் கூட வயதானவனாக இருக்கலாம்'' என்றார் சிறு சந்தேகம் தொனிக்க! ''ஆனால் அப்படியும் தோன்றவில்லை.''

''இல்லை, இல்லை, உங்கள் கிரகிப்பு ரொம்பச் சரி தான், திரு மார்ட்டீன். குழம்ப வேண்டாம். அதிசயம்! மிக ருசிகரமாய் அமைந்துவிட்ட அதிசயம்!''

முப்பது வயதிருக்கும் என்றதற்குப் போய், இப்படி, வழக்கே முடிந்து விட்டதைப் போல பொய்ரெட் புளகாங்கிதம் அடைவதைப் பார்த்த மார்ட்டீனுக்கு அடுத்து என்ன சொல்வது அல்லது என்ன செய்வது என்பது கூட தெரியாமல் போனது. தேவையற்ற வசனத்தை திக்குத் தெரியாமல் விழித்தபடி உதிர்க்கலானார் அவர்.

''அன்றிரவு நடந்தது, ஒரு கிளர்ச்சியூட்டும் விருந்து, இல்லையா?'' என ஆரம்பித்தார் மார்ட்டீன். ''தான் நினைத்ததை நடத்தியே காட்டுவேன் என்று தன் கரம் மட்டுமே ஓங்கி இருப்பதை விரும்பும் வகை - ஜானே வில்கின்ஸன்.''

''அவருக்கு கண் கட்டிய குதிரை போல எப்போதும் ஒரே பார்வை தான்'' என்று மார்ட்டீனின் உரையாடலுக்கு உதவினார் பொய்ரெட். ''ஒரு செயல் தான் - ஒரு நேரத்தில்!''

''அப்படிப் பிடிக்கும் பிடிவாதத்தில் வெற்றியும் பெற்று விடுகிறாளே'' என்றார் மார்ட்டீன். ''அவளை எதிர்கொள்வது தான் படு கஷ்டம்.''

''அழகு பதுமையாய் ஜொலிக்கும் பெண்கள் எவ்வளவு செய்தாலும் மக்கள் தாங்கிக் கொண்டு விடுவார்கள், திரு மார்ட்டீன்'' என்றான் பொய்ரெட் கண்ணடித்தபடி. ''அவருக்கு மட்டும் குடை மிளகாய் மூக்கும், தடித்த உடலும், சிடுக்கு விழுந்த கூந்தலும் வாய்த்திருந்தால், அப்போது அவர் செய்யும் எதுவும் தவறாய் முடிந்து, நீங்க குறிப்பிட்டது போல கரமெல்லாம் ஓங்கியில்லாது, ஒடுங்கியே போயிருப்பார்.''

''ஒப்புக் கொள்ள மாட்டேன்'' - மறுத்தார் மார்ட்டீன். ''மத்தவங்களை மயக்கிப் போடுவதெல்லாம் நடந்துக் கொள்ளும் விதத்தில் உள்ளது என்பது என் கணிப்பு'' என்றவர், ''இன்னொன்றையும் கவனித்திருக்கிறேன்'' என்று தொடர்ந்தார்: ''இருபத்தி நாலு மணி நேரமும் ஜானேக்கு நான் தாசானு தாசனாகத் தான் பணிவிடை செஞ்சுக்கிட்டிருக்கேன். ஆனாலும் சில நேரங்களில், குறித்துக் கொள்ளுங்கள் திருமிகு பொய்ரெட்... அவள், இருக்கும் இடத்தை விட்டு, பேசிக் கொண்டிருக்கும் சங்கதியை விட்டு, அப்படியே நழுவி நழுவி, வேறு சிந்தனைக்குள்ளும் நினைவுக்குள்ளும் விழுந்து விடுவதாய் நம்புகிறேன்.''

''தவறான கணிப்பு...! அந்தச் சமயத்திலெல்லாம் கூட, அவர் செயலிழக்காமல், ஜம்மென்று, இருக்கும் இடத்தில் தான் நிற்கிறார் - மனத்தாலும், உடலாலும்!''

மார்ட்டீன் பேசிக் கொண்டிருந்த விஷயத்துக்குள் மீண்டும் நுழைந்தார். ''அவளுக்கு ஒரு தொழிலதிபரின் சாதுர்யமும் திறனும் மிதமிஞ்சியே இருக்கு. அவளுக்கு வேண்டியதை அவள் அடைந்து விட்டுப் போகட்டும். ஆனால் - நெறி தவறாது! அதனை நெறி தவறாது அன்றோ அடைய வேண்டும்.''

''நெறி தவறாது...'' - விட்டத்தைப் பார்த்து, கருத்துப் பொதிந்து சொன்னான் பொய்ரெட்.

''அவளுக்கு, சரியும் கிடையாது - தவறும் கிடையாது. அப்படி ஒரு பிறப்பு. நினைத்தது நடந்து விட வேண்டும். இதுதான் அவளைப் பொறுத்தவரை - சரி.''

''இப்படித்தான் - இந்த அர்த்தத்தில் தான் அன்று மாலையும் நீங்கள் ஜானேயை விவரித்தீர்கள்.''

''திருமிகு பொய்ரெட்! நாம் கொலை பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம் - சற்று முன்.''

''யெஸ்.''

''குட், ஜானே ஒரு கொலையை செய்து விட்டதாய் ஒரு வேளை எனக்குத் தெரிய வந்தால், அது என்னை நிச்சயமாய் ஆச்சரியத்தில் தள்ளாது.''

''நீங்கள், ஜானேயை மிக நன்றாய் அறிந்தவர், திரு மார்ட்டீன்'' என்ற பொய்ரெட், ''நீங்களும் அவரும் அதிகப் படங்களில் ஜோடி சேர்ந்து நடிச்சிருக்கீங்க'' என குறிப்பிட்டான்.

''ஆமாம். என்னைப் பொறுத்தவரை, உள்ளும் புறமும், மேலும் கீழும், ஜானேயை நான் மிக நன்றாய் அறிந்திருக்கிறேன் என்பது உண்மை. ஆகவே தான் சொல்கிறேன்.அவள் மிக சுலபமாய் செய்வாள் ஒரு கொலையை!''

''ஆஹ்! அவ்வளவு கொடுமையானவரா?''

''இல்லையில்லை. கொடுமையானவளல்ல. வெள்ளரி போல குளுமையானவளே. இதில் சந்தேகமில்லை. அவ வழியில யாரேனும் குறுக்கிட்டு நிம்மதியைக் குலைத்தால், துளியும் சிந்திக்காது சீவி விடுவாள் என்ற அர்த்தத்துல சொன்னேன். இதுதான், அவளைப் பொறுத்தவரை, அறம்! தர்மம்! ஆகவே, பிறகு, அவளை ஒருவரும் குற்றம் சொல்ல முடியாமல் போய்விடும். அற நெறி ரீதியாக! அவ வழியில குறுக்கிடும் யாராக இருந்தாலும், அவளைப் பொறுத்தவரை, விலகிப் போயிடணும் - ஒரேயடியாக.''

இதுவரை அவர் குரலிலில்லாத கசப்பு, அவர் கூறிய கடைசி வார்த்தைகளின் போது விளைந்திருந்தது. எந்த நிகழ்வினை ஞாபகப்படுத்திக் கொள்வதால் இப்பொழுது அவர் வெறுத்து உணர்கிறார் என நான் வியந்துக் கொண்டேன்.

''அவர் ஒரு கொலை செய்யக்கூடியவர்னா நினைக்கிறீங்க?'' - வேண்டுமென்றே கேட்டுவிட்டு மார்ட்டீன் முகத்தினைக் கூர்மையாக கவனிக்கலானான் பொய்ரெட்.

ப்ரையன், நீண்ட பெருமூச்சினை உள்ளுக்கிழுத்துக் கொண்டார். ''என் உயிர் மீது ஆணையிட்டுச் சொல்றேன், போதுமா? வெகு விரைவில் இப்படி எதையாவது செஞ்சு அவ தன் நிஜ அடையாளத்தை உங்களுக்கு நிரூபித்துக் காட்டத்தான் போறா. பார்த்துக்கிட்டே இருங்க! அவளைப் பற்றி எனக்கு நல்லாவேத் தெரியும். ''நான்..எனது... என்னுடையது...'' - இவை தான் ஜானே! காலை எழுந்ததும் காபி குடித்து நாம இளைப்பாறுவது போல, தேவைப்பட்டால், கொலை செய்துவிட்டு ஆறுவாள் அவ. இரண்டும் அவளுக்கு ஒன்று தான்! எனக்குத் தெரிந்து தான் சொல்றேன், திருமிகு பொய்ரெட்.''

எழுந்துக் கொண்டார் மார்ட்டீன்.

''ஒப்புக் கொள்கிறேன்'' என்றார் பொய்ரெட் மிருதுவாக, ''உங்களுக்குத் தெரிந்துள்ளதை, இப்பொழுது என்னால் உணர முடிகின்றது.''

''அவளை எனக்கு நல்லா தெரியும்'' என மீண்டும் சொன்ன மார்ட்டீன், ''அடி முதல் நுனி வரை'' என்றார் ஆணித்தரமாய்.

அப்படியே ஓரிரு நிமிடங்கள் கரைய, தன் குரலின் பாவத்தை மாற்றிக் கொண்டு ''நாம் பேசிக் கொண்டிருந்த விஷயத்தை விட்டு விட்டோமே'' என சிறு முன்னுரை தந்து ''ஓரிரு நாட்களில் மீண்டும் உங்களை சந்திக்க வரேன். வழக்கை எடுத்துக்குவீங்க, இல்லையா?'' என்றார் மார்ட்டீன்.

பதிலேதும், கூறாது அவரையே சில கணங்கள் பார்த்த வண்ணமிருந்தார் பொய்ரெட். ''சரி'' என்றான் கடைசியாய். ''நான் ஏத்துக்கறேன். இதில் ஏதோ ஈர்ப்பினையும் ஈடுபாட்டையும் நான் உணர்றேன்.''

இப்படிச் சொன்ன பொய்ரெட்டின் குரலில் விந்தை மிகு சிறு சந்தேகம் தொனித்து நின்றதை நான் மட்டும் உணர்ந்தேன்.

ப்ரையன் மார்ட்டீனுடன் வாசல் வரை வந்து வழியனுப்பினேன் நான். நிலையருகே வந்ததும் மார்ட்டீன் கேட்டார். ''அந்த மனுஷனோட

வயசுக்கு ஏன் அத்தனை முக்கியத்துவம் தந்து ஹெர்குல் பேசினார்னு உங்களுக்கு ஏதாவது பொறி கிடைச்சுதா? அதாவது.. அவன் முப்பதை ஒட்டித் தான் இருக்க வேண்டும் என்று ஸ்திரப்படுத்துவதில் அப்படி என்ன குதூகலம், அவருக்கு? எனக்குத் துளியும் புரியவில்லை.''

''இங்கும் அப்படியே!'' என ஒப்புக் கொண்டேன்.

''கொஞ்சங்கூட அர்த்தமாகவே இல்லை. ஒரு வேளை நம்முடன் விளையாடிப் பார்த்திருப்பாரோ...?''

''கிடையாது'' என்றேன் நான். ''பொய்ரெட் விளையாட்டுப் போக்கானவன் கிடையாது. அதிராமல், பந்தா காட்டாமல் விசாரணை நிகழ்த்துவதால், அவனை இப்படி எடை போட்டுடாதீங்க. அவன் வாயிலிருந்து ஸ்திரமாய் வந்ததுள்ளதால், அந்தக் குறிப்புக்கு - அதாவது உங்களை நிழலாய் தொடர்ந்துள்ள தங்கப்பல் மனிதனின் வயது குறித்த குறிப்புக்கு - நிச்சயம் முக்கியத்துவம் உள்ளது.''

அவரை வழியனுப்பி விட்டு வந்து துப்பறியும் நண்பனோடு இணைந்துக் கொண்டேன். உடனே கேட்டேன்: ''பொய்ரெட்! தங்கப்பல் மனிதனின் வயது குறித்த தகவலில் உள்ள துப்பு தான் என்ன?''

''உனக்கு விளங்கவில்லை? முட்டாப் பயலே!'' - சிறிதாய் சிரித்து, மறுத்துத் தலையசைத்துக் கொண்ட பொய்ரெட், ''இங்கு நடந்த இந்த உரையாடலின் சாராம்சமாய் நீ உணர்ந்தது என்ன?'' என்றான்.

''முக்கியமாய் ஏதுமில்லை. தங்கப்பல் மனிதன் தவிர வேறொன்றும் அகப்படாத இந்த உரையாடலை வைத்துக் கொண்டு சாராம்சம் சொல்வது கடினம். இன்னும் கொஞ்சம் உதவியாய் தகவல்கள் கிடைத்தால் .....''

என்னை முன்னேற விடாமல் தடுத்தன பொய்ரெட்டின் வார்த்தைகள். ''மேலும் எதுக்குத் தகவல்கள்? இருக்கும் தகவல்களே, தாமாய் முன்வந்து, சில அதிமுக்கிய கருத்துக்களை முன் வைக்கின்றனவே! அவை உனக்குப் புலப்படலே?''

அப்படி ஒன்றும் எனக்குப் புலப்படவே இல்லையே என்று நான் தலை குனிந்து ஒப்புக் கொள்ளும் தர்ம சங்கடமான நிலையிலிருந்து ஒலித்த தொலைபேசி ஒலி, என்னைக் காப்பாற்றியது! நான் தான் செவிக் குழலை எடுத்தேன்.

இறுக்கமான, நடுக்கமற்ற தெளிவான பெண் குரல்.

''சீமான் எட்ஜ்வேரின் காரியதரிசி பேசுகிறேன். நாளை காலை திரு. பொய்ரெட்டுக்குக் கொடுத்துள்ள முன்பதிவினை ரத்து செய்ய

வேண்டிய கட்டாயத்தில் சீமான் இருக்கிறார். இதற்கு மன்னிக்க. எதிர்பாராத காரணங்களுக்காக நாளை பாரீஸ் நகரம் வரை அவர் சென்றாக வேண்டியுள்ளது. உங்களுக்கு வசதியாக இருந்தால், இன்று நண்பகல் பனிரெண்டே காலுக்கு திரு. பொய்ரெட்டைப் பார்க்க சீமான் எட்ஜ்வேர் நேரம் ஒதுக்கித் தருகிறேன் என்கிறார். சில நிமிடங்களுக்கான முன்பதிவு தான் இது!''

சில நொடிகள் பொய்ரெட்டிடம் ஆலோசித்தேன்.

''அதனாலென்ன! இன்று காலையே போய் வருவோம்!''

இதை அப்படியே ரிஸீவரில் சொன்னேன்.

''நன்று'' என்றாள் காரியதரிசி. குழப்பமேயற்ற அலுவலகக் குரலில், ''இன்று காலை, பனிரெண்டே கால் மணிக்கு. திரு. பொய்ரெட்டுடன் சந்திப்பு'' என ஒரு முறை தெளிவுபடுத்தினாள்.

தொலைபேசி பேச்சினை முடித்துக் கொண்டாள்.

அத்தியாயம் - 4

# ஒரு நேர்முகம்

ஆர்வமான எதிர்பார்ப்பு மனமெங்கும் நிறைந்திருக்க, ரீஜெண்ட் பகுதியில் வசிக்கும் பிரபு எட்ஜ்வேரின் மாட மாளிகையைப் பொய்ரெட்டுடன் சேர்ந்து நான் சென்றடைந்தபோது, மப்பும் மந்தாரமும் கூடிய இனிய பகல் பொழுதாய் இருந்தது. பொய்ரெட்டைப் போல உளவியலில் எனக்கு அதீக ஈடுபாடு இல்லாவிட்டாலும், தனது கணவன் பற்றி வில்கின்ஸன் கூறிய குறிப்புகள், எனக்குள் பூச்சி பறக்கும் ஆர்வத்தினை விளைவித்திருந்தன. அவற்றின் அடிப்படையில் சீமான் எட்ஜ்வேர் பற்றி என்னுள் நானாக செய்திருந்த கணிப்புகளை சரிபார்த்துக் கொள்ள, தேடல் மிகுந்த ஆவலோடு இருந்தேன்.

மாட்சிமை பொருந்திய மாளிகையாய் - அழகும் கட்டமைப்பும் ஒரு சேர பொருந்திய கம்பீரத்துடன் திகழ்ந்தது - சீமான் எட்ஜ்வேர் வசிக்கும் ரீஜெண்ட் மாளிகை. ஆயினும் சற்று அதிகமான இருட்டில், அதனால் ஓர் உற்சாகமற்ற சூழலில் இருந்தது, இல்லம். அதிக சன்னல்கள் இல்லை.

மிக மரியாதை காட்டி, நிலைக் கதவு எங்களுக்குத் திறந்து விடப்பட்டது. இதுபோன்ற மாட மாளிகைகளில், தூசு தட்டி பெருக்கி துடைத்து, சுத்தம் காக்க என வாடிக்கையாய் நியமிக்கப்பட்டிருக்கும் தலைமுடி நரைத்த வயதான ஆசாமி வந்து கதவினைத் திறந்து விடவில்லை. மாறாக, நானிதுவரைக் கண்டிராத அளவு இளமையும் ஆண்மையும் வாளிப்பும் மிகுந்த அதியற்புத இளைஞன் வந்து, கதவினைத் திறந்து, பவ்யமாய் வணக்கம் தெரிவித்து நின்றான்.

நல்ல உயரம், சுண்டி விட்டால் ரத்தம் கொதித்தெழும் சிகப்பு. ஆணழகனைச் செதுக்கும் ஒரு சிற்பிக்கு, தன் உடல் அழகினை அவன் மாதிரியாக அளித்து நிற்கலாம் - அப்படிப்பட்ட பிரமிக்கத்தக்க இளமை

- ஆண் இளமை! இத்தனை இருந்தும், அவன் பேசிய குரலில் மிளிர்ந்த அதீதமான பெண்மையும் நளினமும் என்னை அறுவெறுக்க வைத்தன. மேலும், யாரையோ அவன் எனக்கு நினைவூட்டினான். யாரையோ! நிச்சயமாய் - ஆமாம் - கொஞ்ச நாளைக்கு முன்னாடி இப்படிப்பட்ட முகச்சாயல் கொண்டவனை நான் பார்த்திருக்கிறேன். ஆமாம் - நான் பார்த்தே இருக்கிறேன் - ஆனால், *அது யார்?* - யார்? இக்கேள்விக்குத் தான் என் தலையைத் திருகிப் போட்டால் கூட விடை கிடைக்கப் போவதில்லை என, பரக்கப் பரக்கத் தேடினேன்!

சீமான் எட்ஜ்வேரின் இருக்குமிடம் குறித்துக் கேட்டோம்.

''இந்தப் பக்கமாய்...'' என்று அவன் சொன்னதிலும், வளைந்து வழி காட்டியதிலும் தெரிந்த பெண்மை நளினங்கள் என்னை அறைந்தன.

அவன் காட்டிக் கொண்டே நடந்த வழியே இருவரும் நழுவினோம். ராட்சஸனாய் பரந்து விரிந்துக் கிடந்த வரவேற்பறையின் மையப் பகுதியிலிருந்து, வளைந்து சென்ற அகலமான மாடிப் படிகள், மேல் மாடிப் பகுதிகளுக்கு இட்டுச் சென்றன. கீழ்த்தளத்திலேயே, இப்படிகளுக்குப் பின்னாலிருக்கும் வரவேற்பறையின் பகுதிக்கு, தற்போது செல்கிறோம். அங்கு, அந்த எதிர்ப்புற சுவரில், பத்து அடியில் உயரமாகவும், தள்ளுவதற்கு கடினமாக மிக பலம் பொருந்தியதாகவும், இரு பெரும் கதவுகள் மூடிய நிலையிலிருந்தன; இக்கதவுகள், வரவேற்பறையின் அடுத்த பகுதியில் அமைந்திருந்த ஏதோ ஓர் அறைக்கு வழிவிடும், இரட்டைக் கதவுகள். அவற்றைத் திறந்து விட்டு, என்னை வெறுக்க வைத்த அதே பெண்மை குரலில் உள்ளே செல்லுமாறு அறிவித்தான் அவன்.

எங்களுக்கு திறந்து வழி காட்டப்பட்ட அறை, ஒரு நூலகம் போல் இருந்தது. நாற்புறச் சுவர்களிலும், உயர் மரத்தினால் செய்யப்பட்ட புத்தக அலமாரிகள், மேற்கூரை வரை வியாபித்திருந்தன. அவற்றில் பல நூறு புத்தகங்கள் வரிசை வரிசையாய் அடுக்கப்பட்டிருந்தன. அலமாரியின் மரங்கள் மிகக் கருமையாகவும், விசனமாகவும், இருளடைந்த நிறத்திலுமிருந்தன. இதனால், இந்த மாபெரும் அறையில் எங்கெங்கும் நிறைந்திருந்த புத்தக அலமாரி மரங்களின் நிறங்களைப் பார்த்த மாத்திரத்தில், சுறுசுறுப்புக்குப் பதில் வருத்தம் தான் வந்தது - சோக உணர்வை உண்டு பண்ணும் அத்தனை கருமை! அமர இருந்த நாற்காலிகள் விலையுயர்ந்தவை. ஆனால் அசௌகரியமானவை.

நுழைந்த எங்களை எதிர்கொள்ள எழுந்த சீமான் எட்ஜ்வேரின் வயது ஐம்பதை ஒட்டியிருக்கும். நல்ல உயரம். கருகருவென கறுப்பு முடிக் கற்றைகளும், அதனிடையே ஓடிய வெள்ளி நிற மயிர்க் கூட்டமும் அமையப் பெற்றிருந்தார். ஒல்லியான முகமும், அதில் வெறுப்பு கலந்த அலட்சியப் பார்வையும் கொண்டு நெருங்கினார். கடுகடுப்பும் சிடுசிடுப்பும் நிறைந்து, கோபத்தை அடக்கியே வைத்திருக்கும் மனநிலையில் சீமானின் சுபாவம் அமைந்திருப்பது, அவர் முகத்தில் நன்றாய் பிரதிபலித்தது. எங்களை எதிர்கொண்டு இப்பொழுது பார்ப்பதையும், இனி எங்களோடு பேசவிருப்பதையும், மிகக் கசப்பாய் உணர்கிறார் எனப் புரிந்தது. உடனேயே, இப்படித்தான் வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்வையும் மிகப் பொறுமையின்றி சீமான் எதிர்கொள்கிறார் எனவும் என்னுள் மின்னலொன்று வெட்டிக் கேட்டது. சந்தேகத்தை உள்ளடக்கி விழித்திருந்தன அவர் கண்கள். அக்கண்களில், சர்வ நிச்சயமாய், ஓர் எதிர்மறையான அணுகுமுறை இருக்கத்தான் செய்தது.

முதன் முதலாய் சந்திக்கும் எங்களுக்கு, சீமான் எட்ஜ்வேர் என்றால், அதீத இறுக்கமும் சலிப்பும் சம்பிரதாயமும் மிகுந்தவர் என்று மனதில் பதிந்தது.

''திருமிகு பொய்ரெட்? கேப்டன் ஹேஸ்டிங்ஸ்? வாங்க. உட்காருங்க.''

அமர்ந்தோம். அறை அதிகமாய் சில்லிட்டிருந்தது. மேலே தெரிந்த ஒரு சன்னல் வழியாக மட்டும் கொஞ்சம் ஒளி வந்துக் கொண்டிருந்தது. ஆகவே நீடித்திருந்த இருட்டு, குளிர்ச்சியை இன்னும் கூட்டிக் காட்டிற்று.

தனக்கான சிம்மாசனம் போன்ற அகண்ட இருக்கையில் அமர்ந்த சீமான் தன் கையில் ஒரு கடுதாசியை எடுத்துக் கொண்டார். அது, என் நண்பன் பொய்ரெட்டின் கையெழுத்தில் இருப்பதைக் கண்டேன்.

''திருமிகு பொய்ரெட், உங்க பேர் எனக்குப் பிரசித்தமான ஒன்றுதான். யாருக்குத் தான் உங்களைத் தெரியாது?'' என்ற பாராட்டினை, முதுகு வளைத்துக் காட்டி பவ்யமாய் ஏற்றுக் கொண்டான் பொய்ரெட். சீமான் எட்ஜ்வேர் தொடர்ந்தார்: ''ஆனா இவ்விவகாரத்தில் உங்களின் நிலை என்ன என்பதுதான் எனக்கு விளங்கவேயில்லே. உங்கள் கடிதத்துல குறிப்பிட்டிருக்கீங்க, நீங்க என்னைச் சந்திக்கக் காரணம்'' - கொஞ்சம் நிறுத்திக் காட்டி விட்டு, ''என் மனைவி என்று'' என்றார்.

எங்களுக்கு உறைக்க வேண்டும் என்றே, கடைசி வார்த்தைகளுக்கு தனித்துவம் கொடுத்துச் சொன்னார் - என் வாழ்க்கையிலிருந்து அவள் போயாக வேண்டும் என்று உணர்த்தும் தனித்துவம்!

''ஆமாம், அதனால்தான்'' என்று ஆமோதித்தான் என் ஆத்ம நண்பன்.

எனக்குக் கொஞ்சம் நடுக்கம் இருந்துக் கொண்டேயிருந்தது. ஆனால், கடைவீதியில் தேநீர் கடைக்காரனிடம் பேசும் அதே மன நிலையில் பொய்ரெட் பேச ஆரம்பித்ததைப் பார்த்த எனக்குள், அவனின் அபரிமித துப்பறியும் மற்றும் பேச்சுத் திறனின் மீது கிடுகிடுவென மதிப்பும் பிரமிப்பும் கூடிக் கொண்டே போயின.

''எனக்குத் தெரிந்த அளவில், திருமிகு பொய்ரெட், குற்றங்களைத் துப்பறிவதுதானே உங்களின் பணி?''

''சங்கடமான பிரச்சனைகளைத் துப்பறிவதில், பிரபு எட்ஜ்வேர்'' என்று திருத்தினான் பொய்ரெட். ''சங்கடங்கள், கொலை கொள்ளை போன்ற குற்றங்களில் அதிகம் ஆகையால், அந்த வழிகளிலேயே நான் பிரபல்யமடைஞ்சுட்டேன். ஆனா பல சங்கடமான பிரச்னைகள் வாழ்க்கையிலும் உள்ளனவே!''

''உண்மை, உண்மை! ஆனா நீங்க பேச வந்திருக்கும் விவகாரத்துல அப்படி சங்கடமான பிரச்னையும் இருக்கா என்ன?''

சீமான் எட்ஜ்வேரின் கோபத்தை அடக்கியே வைத்திருக்கும் மனோநிலையை, மிகத் தெளிவாய் இக் கேள்வியில் உணர முடிந்தது. கேள்வியின் கேலி எனக்குள் கோப வேள்வியை உண்டுபண்ண, பொய்ரெட்டோ, அதை சட்டையே செய்யாமல் தொடர்ந்தான். இதில்தான் பொய்ரெட் எல்லோரையும் விஞ்சி நிற்கிறான்!

''திருமதி எட்ஜ்வேரின் சார்பாக உங்களைச் சந்திக்கும் மரியாதை எனக்கு அளிக்கப்பட்டுள்ளதில் நான் மகிழ்கிறேன்'' என்றான் பொய்ரெட். ''திருமதி எட்ஜ்வேர் - உங்களுக்கே தெரிந்திருக்கும் பிரபு - விவாகரத்து வேண்டுகிறார்.''

''எனக்கு இது நல்லாவே தெரியும்'' - எட்ஜ்வேர் சர்வ சாதாரணமாய் சொன்னார்.

''நீங்களும் நானும் இதுகுறித்துக் கலந்தாலோசித்து இணக்கமான முடிவுக்கு வர வேண்டும் என்பது திருமதி எட்ஜ்வேரின் வேண்டுகோள்.''

''இதில் கலந்தாலோசிக்க ஒன்னுமே இல்லை.''

''எனில், ரத்து அளிக்க நீங்க மறுக்கிறீங்களா?''

''மறுப்பு? நானா? நானா விவாகரத்துக்கு மறுக்கிறேன்! ஆஹ்ஹா...! நிச்சயமாய் கிடையாது.''

வேறு எதெல்லாம் நடக்கலாம் என எதிர்பார்த்து பொய்ரெட் வந்திருந்தானோ தெரியாது. ஆனால் இதனை எதிர்பார்த்திருக்கவே மாட்டான். தப்பிப்பின்றி பின்வாங்கி ஒடுங்கும் பொய்ரெட்டைப் பார்ப்பது மிக மிக அபூர்வம். ஆனால் இத்தருணத்தில் பார்க்கிறேன். பரிகசிப்புக்கு உள்ளானவனைப் போல வெதும்பிப் போனான். திறந்த வாய் அப்படியே இருந்தது; கைகள் செயலற்றுத் தொங்கிப் போயின; விநோத ஆச்சரியத்தில் உயர்ந்த புருவங்கள் இறங்க மறந்தன; குழந்தைகளுக்கான கதைப் புத்தகத்தில் வரையப்பட்ட கேலிச் சித்திரமாய் போனான், துப்பறியும் நிபுணன்.

''பிரபு..'' ஏறத்தாழ கதறினான் பொய்ரெட். '' என்னது இது? என்ன நடக்குது? நீங்க மறுக்கலே?''

குத்தித் துளைக்கும் நக்கல் தொனியில் சீமான் எட்ஜ்வேர் சொன்னார்: ''உங்களுடைய இந்தப் பிரமிப்பில் பங்கு கொள்ள முடியாத துரதிர்ஷ்டசாலியாக நான் நிற்கிறேன்.''

''நீங்க உங்க மனைவியை விவாகரத்துப் பண்ண ஒத்துக்கறீங் களா?''

''ஆமாம்னு தானே கொஞ்சம் முன்னாடி சொன்னேன்! சர்வ நிச்சயமாய் சம்மதிக்கிறேன். ஏன்... இந்த சம்மதம் குறித்து அவளுக்கே கூட முழுசும் தெரியும். எழுத்து மூலமே தெரிவித்துள்ளேன்.''

''எழுத்து மூலம்? எழுத்து மூலமா, விவாகரத்து குறித்த உங்கள் சம்மதத்தைத் தெரிவிச்சிருக்கீங்க?'' - இரண்டாவது இடி தலையில் இறங்குவதாய் பொலபொலத்துப் போனான் பொய்ரெட்.

''ஆமாம். இது முடிந்து ஆறு மாதத்திற்கும் மேலாகுது.''

''ஆனா.. ஆனா.. எனக்கு விளங்கவேயில்லையே! சுத்தமாய் எனக்கு என்ன நடக்குதுனு விளங்கவேயில்லை, பிரபு!''

எதற்காக பொய்ரெட் இவ்வாறு துடிக்கிறான் என்பது சீமான் எட்ஜ்வேருக்குத் தெரியாததால் அவர் பதிலேதும் பேசாமலிருந்தார். ஆனால் உடனேயே, ''சீமான் எட்ஜ்வேர் அவர்களே..! நீங்க விவாகரத்து என்கிற அமைப்புக்கு எதிரான குறிக்கோள் கொண்டவர் என்றல்லவா நான் அறிவுறுத்தப்பட்டுள்ளேன்!'' என சிறு ஆச்சரியம் தொனிக்க பொய்ரெட் விளக்கியதும், அவர் பதில் பேச ஆரம்பித்தார்.

''நான் எப்படிப்பட்ட குறிக்கோள்களைக் கடைப்பிடித்து வாழ்கிறேன் என்பதை அறிந்துக் கொள்வதெல்லாம் உங்க வேலையில்லைன்னு கருதறேன். திருமிகு பொய்ரெட்! என் முதல் மனைவியை நானா விவாகரத்து செய்யலே என்பதுதான் நிஜம். என் அந்தராத்மா, விவாகரத்தினை ஒரு பாவச் செயல் என உணர்த்தியதால் நான் அதுக்கு இணங்கவேயில்லை. என் இரண்டாவது திருமணம்... வெளிப்படையாகவே ஏற்றுக் கொள்கிறேன்... அது ஒரு 'தவறு'. என் இரண்டாவது மனைவியான வில்கின்ஸன் விவாகரத்து குறித்துப் பேச்சு எழுப்பிய போது, பட்டவர்த்தனமாக மறுத்து விட்டேன். மேற்சொன்ன அதே காரணத்தினால்! பிரிந்துச் சென்றவள், ஆறு மாதங்களுக்கு முன், விவாகரத்து வேண்டி கட்டாயப்படுத்தி கடிதமொன்று எழுதி யிருந்தாள். மறுமணம் செய்துக் கொள்ள அவளுக்குள் ஆசை எழுந்துள்ளதாய் புரிந்துக் கொண்டேன். யாரோ ஒரு சினிமா நடிகனையோ, இல்லை, இது போன்ற துறையிலுள்ள வேறு எவனையோ! அந்த நேரத்தில் வாழ்க்கை குறித்த என் கோணங்களும் மாற்றங்கள் கண்டிருந்தன. எனவே ஒப்புக் கொள்வதாய் ஹாலிவுட்டிலிருந்து அவளுக்கு கடிதம் மூலம் தெரிவித்தேன். இந்நிலையில் போய் உங்களை எதுக்காகப் பேசிப் பார்க்க அவள் அனுப்பனும்னு எனக்குப் பிடிபடவேயில்லை. ஒருவேளை ஜீவனாம்சம் வேண்டி இருக்கலாம்!''

கடைசி வாக்கியத்தைப் பேசும்போது, சீமானின் உதடுகள், அலட்சியம் மிகுந்த வெறுப்பான உணர்வினை வீசின.

''என்ன ஆச்சரியம், என்ன ஆச்சரியம்'' - சொல்லிக் கொண்டேயிருந்தான் பொய்ரெட். ''என்ன ஆச்சரியம்! இந்த நிலையில் - இந்தக் கட்டத்தில் ஏதோ சிக்கி நிக்குது. அது - எனக்கு விளங்கவேயில்லை!''

இதைக் கருத்தில் கொள்ளாது, ''ஜீவனாம்சம், பணம் இதை யெல்லாம் பொருத்தமட்டில்...'' என்று தான் பேசிக் கொண்டிருந்த வசனங்களைத் தொடர்ந்த வண்ணமிருந்தார் சீமான்: ''தன் இஷ்டப்படி என்னை ஒதுக்கித் தள்ளிவிட்டு வெளியேறினாள் அவள். இன்னொருவனை திருமணம் செஞ்சுக்க அவ விரும்பினா, எந்தத் தடையுமின்றி, அதற்கான அனைத்து சட்ட விடுதலைகளையும் நான் தரேன். ஆனா, அவளே வேண்டி பெற்றுக் கொள்ளும் விவாகரத்துக்கு, நான் சல்லிக் காசு கொடுக்க வேண்டியது அனாவசியம்; கொடுக்கவும் இயலாது.''

''ப்ச்'' என்று சலிப்பாய் உணர்த்திய ஹெர்குல் பொய்ரெட், ''இதில் பணம் குறித்த எந்த ஒப்பந்தமும் கிடையாது'' என்றான். அவன் கவலையெல்லாம் என்னவோ நினைத்து வர, இங்கு எதுவோ நடந்துக் கொண்டிருக்கிறதே எனும் நிதர்சனம் கொடுத்த உதையிலேயே இருந்தது.

பொய்ரெட் குறிப்பிட்டதற்கு தன் புருவங்களை நன்றாய் உயர்த்திக் காட்டிய சீமான், ''ஓஹோ...! எனில் அவள் நல்ல பசையுள்ள பணக்காரனின் தலையில் தான் கை வெச்சிருக்கணும்!'' என்றார், குற்றம் கூறும் பாணியில்.

''இந்த கட்டத்தில், எனக்கு விளங்காமல், நம் விவாதம் சிக்கி நிக்குதே..!'' என்று மறுபடியும் ஆழ்ந்த சிந்தனையிலேயே இருந்தான் பொய்ரெட். இதனால், அவன் முகம் சற்று சுருங்கியும், பல முடிச்சுகள் கொண்ட ரேகைகளையும் சுமந்திருந்தது. அமைதியில், சில நிமிடங்கள் நழுவின. பிறகு, சரி, இருக்கட்டும், பிறகு சிந்தித்துக் கொள்ளலாம் எனும் முடிவெடுத்துக் கொண்ட ஹெர்குல், சீமானைக் கேட்டான்: ''வக்கீல்களின் துணை கொண்டு உங்களைப் பலமுறை தொடர்பு கொண்டதாக உங்கள் மனைவி குறிப்பிட்டாங்களே!''

''செய்தாள்'' என்றார் எட்ஜ்வேர், வறட்சியாக. ''ஆங்கில வக்கீல்கள், அமெரிக்க வக்கீல்கள், பணம் பணம் என்றலையும் கீழ்த்தரமான வக்கீல்கள், என எல்லா வகையான வக்கீல்கள் மூலமாகவும் அணுகினாள். அவசரம்! கடைசியாக, நான் சற்று முன் குறிப்பிட்டது போல, எனக்கே கடுதாசி போட்டாள்.''

''ஆக, ஆரம்ப நிலையில் நீங்கள் விவாகரத்துக்கு மறுத்துள்ளீர்கள்.''

''மிகச் சரி.''

''ஆனா அவரிடமிருந்து கடிதம் வந்ததும் உங்கள் எண்ணத்தை மாற்றிக்கிட்டு இருக்கீங்க. எதற்காக உங்கள் எண்ணத்தையும் முடிவையும் மாற்றிக்கிட்டீங்க, பிரபு எட்ஜ்வேர்?''

''அந்தக் கடிதத்திலிருந்த ஏதோ ஒரு சாராம்சத்தினால் அல்ல'' என்று தெளிவாய் உணர்த்திய சீமான், ''என் வாழ்வியல் கோணங்கள் மாற வேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. அதனால்'' என்றார்.

''உங்களுக்குள் நிகழ்ந்துள்ள மாற்றம், மிக திடீரென்று, திடுதிப்பென்று நிகழ்ந்துள்ளதே!''

இதற்கு சீமான் எட்ஜ்வேர் பதிலேதும் தரவில்லை.

பொய்ரெட் கேட்டான்: ''குறிப்பிடும்படியான எந்தச் சூழ்நிலை அல்லது அனுபவம், உங்கள் எண்ணத்திற்குள் இப்படி ஒரு மாற்றத்தைக் கொண்டு வந்து போட்டது, லார்ட் எட்ஜ்வேர்?''

''அது முழுக்க முழுக்க என் அந்தரங்கம், திருமிகு பொய்ரெட். அந்த விவாதத்திற்குள் என்னால் நுழைய முடியாது. ஆனால் ஒண்ணு சொல்லலாம்...! தகுதியற்ற மதிப்பற்ற ஒரு சம்பந்தத்திலிருந்து, கொஞ்சங் கொஞ்சமாக துண்டித்துக் கொள்வதிலிருந்த ஆதாயத்தை, நான் படிப்படியாக உணர ஆரம்பித்தேன். என் இரண்டாவது திருமணம் ஒரு மாபெரும் தவறு, திருமிகு ஹெர்குல்.''

வாழைப்பழத்தில் ஊசியை இறக்கும் பாணியில் ஹெர்குல் சொன்னான்: ''உங்கள் மனைவியும் இதே கதையைத் தான் கூறுகிறார்!''

''அப்படியா?'' - அவர் முகத்தில் சந்தேகம் பொங்கும் சிறு மினுமினுப்பு தோன்றியது. ஆனால் வந்த சுவடு தெரியாமல், யாரும் கவனிக்குமுன் மறைந்தும் போயிற்று.

இத்துடன் போதும் எனும் முடிவில் எழுந்த சீமான் எட்ஜ்வேருக்கு நாங்களிருவரும் நன்றியும் பணிவான வணக்கமும் சொல்லிவிட்டுக் கிளம்ப எத்தனித்த நொடியில், வந்திருந்த எங்களிருவரையும் எதிர் கொண்டு உரையாடியதில் இத்தனை நேரமும் அவரிடம் வியாபித்திருந்த பணிவும் அடக்கமும் வழுவிச் சென்றன.

''நான் அளித்திருந்த முன்பதிவினை மாற்றியமைத்ததுல உங்களுக்கு ஏதேனும் இடையூறு ஏற்பட்டிருந்தா, அதற்காக என்னை மன்னிக்கவும்'' என்றார்.

''அதனாலென்ன! பெரிய வார்த்தைகள் வேண்டாம்! பாதகமே இல்லை!'' என்றான் துப்பறியும் நிபுணன்.

''கலை நுணுக்கம் மிகுந்த பொருட்களின் விற்பனை தான், நம் சந்திப்பில் நான் செய்த மாற்றத்திற்கு காரணம். ஒரு சிறு சிலை - அது எதிரொலிக்கும் உணர்வில் முழுமை பெற்ற சிலை - மிக பயங்கரமான கடுமையான உணர்வு அது - அதை வாங்க என்னுள் வெறி. என் விருப்பங்கள், விநோதமானவை.''

மீண்டும், அதே சந்தேகம் குவிந்த வில்லத்தனமான சிரிப்பு. இவ்விதமாய் பொய்ரெட்டிடம் விடைபெறும் வசனங்களை சீமான் பேசிக் கொண்டிருந்தபோது, என் அருகிலிருந்த புத்தக அலமாரி யிலிருந்த புத்தகங்களை நோட்டம் விட்டேன். போர்க் களம் குறித்த

புத்தகங்கள், சிறைச்சாலை கொடுமைகள் எனும் தலைப்பிலான சில புத்தகங்கள், சிறை சித்திரவதைகள் என்று அடுக்கப்பட்டிருந்த புத்தகங்கள் ஆகியவை சட்சட்டென கண்களில் மாட்டின. அப்போது, நான் கணவனைப் பற்றிக் குறிப்பிட்ட போது சிறு நடுக்கம் மேவ விளக்கிய வில்கின்ஸனின் பயம் படர்ந்த முகம், என் நினைவிலாடியது. அந்த பயம் நடிப்பல்ல. போதுமான அளவு நிஜம். எப்படிப்பட்ட மனுஷன், இந்த சீமான் எட்ஜ்வோர் என்ற அலுப்பு எனக்குள் எழுந்தது.

பவ்யமான மரியாதை காட்டி எங்களிருவருக்கும் விடை தந்தபோது, தன்னருகிலிருந்த மணியினை ஓங்கி ஓர் அடி அடித்தார். கதவினைக் கடந்து வெளியே வந்தபோது ஆணழகனாய் மிளிர்ந்த காவலாளி நின்றுக் கொண்டிருந்தான். நாங்கள் வெளியேறிய நூலகக் கதவினை நான் மூடும் போது, மறுபடியும் உள்ளே கண்களைச் அடுதியில் செலுத்தி, சீமான் எட்ஜ்வேரைக் கவனித்தேன்.

அப்போது நான் பார்த்த எட்ஜ்வேரினால், எனக்கு அடக்க இயலாத ஆச்சரியம் வளர்ந்துக் கொண்டே போயிற்று. பவ்யமாய் மரியாதை காட்டிய அவர் முகத்தின் தோற்றமும் தன்மையும் மாறிப் போயிருந்தன கொடூரமாய். பற்களுக்குப் பின்னால் கீழுதடை மடித்துக் கொண்டு, பல்லைக் காட்டி உறுமும் நாய் போல ஆகியிருந்தார்; கண்கள் வெறியுடன் விரிந்தும், பழி தீர்க்கும் ஆவலாலும் கனன்றுக் கொண்டிருந்தன.

சீமானின் இரு மனையாள்களும் அவரை விட்டு ஓடிப் போனதில் இப்போது எனக்கு சிறிதும் ஆச்சரியம் இல்லாமல் போயிற்று. எனக்கு எது ஆச்சரியம் தந்தது என்றால், இத்தனை நேரம் அவர் கடைப்பிடித்திருந்த சுயக் கட்டுப்பாடுதான்! தன்னால் இயலாத பொறுமையையும், தனக்குத் தெரியாத சாந்தத்தையும், தான் கற்றறியாத மனிதத் தன்மையையும், இத்தனை நேரம் அவர் கடைப் பிடித்து ஒத்துழைத்த நேர்காணல் தான் எனக்கு வியப்பாயிருந்தது.

வெளியேறுவதற்கான பிரதான நுழைவாயிலை அடைந்து ஓரடி எடுத்து வெளியே வைக்கும் முன், வலது புறத்தில் பக்கவாட்டிலிருந்த ஓர் அறையின் கதவு, திறக்கப்படுவதற்கான சிறு ஓசையெழுப்பி திறக்கப்படுவதை இருவரும் கேட்டோம்; நின்றோம். திறந்த கதவின் வாசலில் ஓர் இளவயதுப் பெண் வந்து நின்றாள். எங்களை அங்கு கண்டதும் உடனடியாய் தன்னில் பாதியை அறைக்குள் சுருக்கிக் கொண்டாள்.

ஒல்லியான உடலமைப்புக் கொண்டிருந்த நெட்டையான பெண்ணவள். இருளடைந்தும் விக்கித்தும் போயிருந்த அப் பெண்ணின் பார்வை, கண நேரம் என் கண்களைச் சந்தித்து நின்றது. உடனேயே, தெரிந்துக் கொண்டிருந்த மீதி உடலையும் அறைக்குள் இழுத்துக் கொண்டு தாளிட்டுக் கொண்டாள் அவள்.

சில நொடிகளின் நழுவலில் நாங்கள் வீதியிலிருந்தோம். ஒரு வாடகை டாக்ஸியை அழைத்துக் கொண்டான் பொய்ரெட். இருவரும் ஏறிக் கொண்டதும், சவாய் உணவகம் போகுமாறு ஓட்டுநருக்கு பணித்தான்.

பயணத்தின் போது, ''ஹேஸ்டிங்ஸ்?'' என்று என்னை கண்களில் டாலடிக்க அழைத்த ஹெர்குல் பொய்ரெட், ''இந்த நேர் காணல், நான் எப்படி போகும் என்று என்னுள் கணித்து வைத்திருந்தேனோ, அப்படி நிகழாமல் போயுள்ளது'' என்றான்.

''ஆமாண்டா! என்ன மாதிரியான ஓர் அசாதாரணமான மனிதன், இந்த சீமான் எட்ஜ்வேர்!''

வெளியேறிய பிறகு, அந்த நூலகக் கதவினை அடைத்த சில நொடிகளில் நான் பார்த்த சீமானின் முக பாவத்தைக் குறிப்பிட்டு, பொய்ரெட்டுக்கு விளக்கினேன் நான்! ஒப்புதலாய் தலையசைத்துக் கொண்டும் அப்போதெல்லாம் சிறு சிந்தனையின் ஆதிக்கத்திலும் இருந்தான் அவன்.

''எனக்கென்னவோ, பைத்தியத்துக்கு முதல் கட்டம் வரை அவர் வந்துவிட்டாரோனு தோணுது, ஹேஸ்டிங்ஸ்! சில துன்மார்க்க துர்க்குணங்களை அவர் கையாள்கிறாரோனு கூட தோன்றுகிறது! மிகக் குளிர்ச்சியாய் தண்மையானவர் போல அவர் காட்டிக் கொள்ளும் புறத் தோற்றத்துக்கு அடியில, ஆழமாக வேர் கொண்டு கிளை பரப்பியுள்ள கெட்ட குணம் - சித்திரவதை நாடும் குணாதிசயம் - இம்சை நிறைந்த உள்ளுணர்வு மறைந்துள்ளது. நிச்சயமாய்!''

''இந்த மனோவியாதிக்காரனை உதறி, இரு மனைவிமார்களும் ஓடியே போனதில் வியப்பொன்றுமில்லை தான்!''

''மிகச் சரியாய் சொன்னாய்.''

''பொய்ரெட்! நாம் வெளியேறிக் கொண்டிருந்த போது வெளிவந்து சென்ற ஒரு பெண்ணை நீ கவனிச்சியா? ஒல்லியான... நெட்டையான...''

''கவனிக்காமலா! பயமுறுத்தப்பட்டிருந்த இளைய பெண். சந்தோஷமற்ற அவள் முகம்!'' - அவன் குரல் பரிதாபகரமாய் ஒலித்தது.

''அது யாராயிருக்கும்னு நினைக்கிறே?''

''சீமானின் மகளாயிருக்கலாம். அவருக்கு ஒரு பெண் உண்டு.''

''மிகமாய் பயந்துத் தெரிந்தாள் அவள்'' என நான் மெதுவாய் குறிப்பிட்டேன். ''அந்த மாளிகை, கனவுகள் நிறைந்து வளரும் ஓர் இளம் பெண்ணுக்கு, இருளடைந்த மாளிகையாய்த் தானிருக்க முடியும்.''

''சந்தேகமில்லாமல்! ஆஹ்! சவாய் வந்துவிட்டது நண்பா! ஜான்ஸென்ஸனுக்கு மிக நல்ல சேதியைக் கொண்டு போகப் போகிறோம்!''

ஜானே இருந்தார். தொலைபேசியில் அவரைத் தொடர்பு கொண்ட ஓட்டலைக் காரியதரிசி, அவர் முதல் தளத்திலிருப்பதாய் குறிப்பிட்டு, ஒரு சேவகன் துணையோடு எங்களை முதல் தளத்திற்கு வழியனுப்பி வைத்தார். முதல் தளத்தில் ஜானே இருந்த அறையின் நுழைவாயில் வரை எங்களைக் கொண்டு போய் சேர்ப்பித்த சேவகன், முதுகு வளைத்து சிறு வணக்கம் தெரிவித்து விட்டு நகர்ந்தான்.

இறுக்கி மிக சீராக வாரப்பட்டிருந்த நரைத்த கூந்தலோடு, சிறு மூக்குக் கண்ணாடி அணிந்து மிக சுத்தமாக தன்னை அலங்கரித்திருந்த ஒரு நடுத்தர வயது யுவதி கதவினைத் திறக்க, படுக்கையறையிலிருந்து, ஜானேயின் கவர்ச்சி மிகும் குரல், அவளை அழைத்துக் கேட்டது: ''அது எல்லீஸ், யாரது? திருமிகு பொய்ரெட்டா? ம்? எனில் ஒரு வாடியா உபசரித்து உட்கார வை. இதோ... நைட்டியைப் போட்டுக்கிட்டு நொடிப் பொழுதில் நான் வந்துடுவேன்.''

நைட்டி...! எனக்கு சிரிப்பு வந்தது! உடல் முழுக்க நீளும் நைட்டி தான் அது - ஆனால் எதையெல்லாம் மறைக்க வேண்டுமோ அவை எதையும் மறைக்காமல், இலைமறை காய் மறையாய் காட்டிக் காட்டிக் கிறங்க வைக்கும் நைட்டி!

சொன்னது போலவே சில நொடிகளில் வந்தே விட்டார் ஜானே வில்ஸென்ஸன். ''ம்..? என்ன..? என்ன ஆயிற்று?'' எனும் அவசர கேள்விக் கணைகளோடு!

எழுந்துக் கொண்டு மரியாதை நிமித்தமாக ஜானேக்கு சிறு கை குலுக்கல் தந்த பொய்ரெட், ''ஒரே வார்த்தை தான் விடை, திருமதி ஜானே! எல்லாம் சுபமாய் முடிந்தன!''

''ஆ... ஆ... ஆ...!'' - நம்பவே முடியாமல் பிரமித்தார் ஜானே. ''எப்படி? எப்படி சாத்தியமாயிற்று?''

''சீமான் எட்ஜ்வேர், விவாகரத்துக்கு சம்மதிக்க முழு மனதோடு இருக்கிறார்.''

''என்ன?''

ஒன்று, தன்னிலை இழந்த ஜானேயின் திகைப்பு, எளிதில் காணக் கிடைக்காத மனித உணர்வாயிருக்க வேண்டும். அல்லது, ஜானே, தலைசிறந்த நடிகையாக இருக்க வேண்டும்! இப்படி நினைக்குமாறு உணர்வற்ற பிரமிப்பிலிருந்தார் ஜானே வில்கின்ஸன்.

''திருமிகு பொய்ரெட்! நீங்க சாதிச்சுட்டீங்க! ஒரே அடியில ஒரு மரத்தின் அத்தனை மாங்காய்களையும் அடித்த வெற்றி! நீங்க ஒரு மேதாவியே! எந்த சாமியின் துணை கொண்டு இதனை சாதிச்சீங்க? விவாகரத்து தரக் கூடிய ஜென்மமா அது?''

''நான் சம்பாதிக்காத வெற்றிக்கு பாராட்டினை ஏற்றுக் கொள்ள என் மனம் சம்மதிக்காது, மிஸஸ் ஜானே! ஆறு மாதத்திற்கு முன்னமேயே, விவாகரத்துக்கான தன் எதிர்ப்பினை விலக்கிக் கொண்டு ரத்தளிக்க முழு சம்மதத்தையும் தெரிவித்து உங்களுக்கு கடிதம் எழுதியுள்ளார், சீமான் எட்ஜ்வேர்!''

''என்ன சொல்றீங்க? எனக்கு கடிதம் எழுதியிருந்தாரா? அதுவும் விவாகரத்துக்கு சம்மதித்து? அது எங்கே?''

''அப்போது நீங்க ஹாலிவுட்டில் இருந்ததா சொன்னார்.''

''அப்படியெல்லாம் ஒரு கடிதம் எனக்கு வரவேயில்லையே! முகவரி மாற்றி எங்காவது போயிருக்குமா? அவரா எழுதியிருந்தார்? கடவுளே..! இது தெரியாமல் விவாகரத்தை நினைத்து நினைத்தே திட்டமிட்டும் குழம்பியும் பயந்தும் ஏறத்தாழ பைத்தியமாகவே ஆகிவிட்டேன்.''

''நீங்க ஒரு நடிகரை மணமுடிக்க உத்தேசித்திருப்பதாய் எண்ணிக் கொண்டிருக்கிறார் சீமான் எட்ஜ்வேர்.''

''வேறென்ன அவரால நினைக்க முடியும்? அப்படித் தான் அவர் கிட்டே நான் சொல்லியிருந்தேன்'' - ஜானே சிறு குழந்தை சிரிப்பினை உதிர்த்தார். ஆனால் உடனேயே அவரின் இம்முகபாவம் மாறி, எச்சரிக்கை மிகுந்த பாவத்துக்குள் நுழைந்தது. ''நீங்கள் என்னைப் பற்றியும் நான் மணக்கவுள்ள இளவரசரைப் பற்றியும் அவரிடம் சொல்லவில்லை, இல்லையா?''

''இல்லவே இல்லை. அதனால் பலன் விளையப் போவது ஒன்றுமில்லை. நான் ஜாக்கிரதையா என் பகுத்தறிவை உபயோகித்து அமைதி காத்துட்டேன்.''

''ஒண்ணு தெரிஞ்சுக்குங்க, திருமிகு பொய்ரெட். சந்தேகத்துக் குள்ளேயே வாழும் விசித்திர குணம் படைத்தவர், அவர். மெர்ட்டான் மாகாணத்து இளவரசரை நான் மணந்துக் கொள்வதால் ஏதோ எனக்கு கிடைக்கவுள்ள இளவரசி எனும் பட்டத்துக்கு நாக்கைத் தொங்கப் போட்டுக்கிட்டு நான் ஓடுவதாய் நினைப்பார் அவர். அதுதான் - சீமான் எட்ஜ்வேர்! எனவே என் திட்டத்தை அவர் சந்தேகப்பட்டுத்தான் பார்ப்பார். ஆனால் ஒரு சினிமா நடிகன் எனும் போது, கோணமே மாறி விடும் அல்லவா! அதனால் தான் சினிமா நடிகன் ஒருவன் மீது காதல் வயப்பட்டுக் கிடக்கிறேன்னு, விட்டேன் ஒரு பொய்! எதெப்படியோ... ஆச்சரியமாய் விஷயத்தை முடிச்சுட்டு வந்திருக்கீங்க! ஆச்சரியத்தின் உச்சத்தில் எறியப்பட்டுக் கிடக்கிறேன்! ஆமாம்! என்ன எல்லீஸ்?'' என பேச்சிக்கு பணியாளையும் சேர்த்துக் கொண்டார்.

எங்கள் சம்பாஷணையின் நெடுகிலும், வீசிய காற்றில் வெளியிலிருந்து அடித்து வரப்பட்டு நாற்காலிகளிலும் கீழும் மேலுமாய் விழுந்துக் கிடந்த சருகுகளையும் சிறு குப்பைகளையும் அள்ளி எடுத்து சுத்தம் செய்யும் முனைப்பிலிருந்தாள், வேலைக்காரி எல்லீஸ். நாங்கள் வந்தது முதல் பேசிக் கொண்டிருந்த அத்தனை யையும் எல்லீஸும் கேட்டுக் கொண்டிருந்தாள் என்பது என் கருத்து. எனவே, ஜானேயின் முழு நம்பிக்கைக்கு உகந்தவளாயும் இவள் இருக்கிறாள் என்பது விளங்கிற்று.

''நானும் உங்கள் கருத்தை தான் எண்ணிக் கொண்டிருந்தேன், முதலாளியம்மா'' என்றாள் எல்லீஸ், ஜானே கேட்டதற்குப் பதிலாய்! ''நானறிந்த சீமான் வேறு. அவர் இப்போ அதிகமாய் மாறிப் போயிருக்கிறார்'' என்றும் கருத்து தெரிவித்தாள்.

ஆமோதித்தும், அவள் கருத்தைப் பாராட்டியும் தலையசைத்த ஜானே, ''எப்படியோ போய் தொலையட்டும்'' என்றார்.

''அவருடைய மன மாற்றத்திற்கான காரணம் உங்களுக்குப் புதிராய் உள்ளது... இல்லையா?'' என்றான் பொய்ரெட்.

''ஓஹ்..! புதிராய்த் தானுள்ளது. நாமேன் அதைப் போட்டுக் குழப்பிக் கொள்ளணும்! ஒரு வழியா மனசு மாறி ரத்து செய்ய ஒத்துக் கொண்டது பத்தாதா?''

''உங்களுக்குக் காரியத்தில் கண்... எனவே அவருக்கு நிகழ்ந்துள்ள மன மாற்றத்திற்கான காரணம் முக்கியமாய் படவில்லை. ஆனா எனக்கு விவகாரத்தில் தான் முழுக் கவனமும்... ஆகவே, என்னை, சீமான் எட்ஜ்வேரின் மனமாற்றம் மிகவும் ஈர்க்கின்றது!''

ஜானே, ஹெர்குல்லின் வசனத்திற்கு காது மடுக்கவேயில்லை. ''முடிவு என்னவென்றால், நான் விடுதலையடைந்து விட்டேன் - கடைசியாக!'' என்று ஏதோ கவிதை வரிகளைச் சொல்வது போல சொன்னார்.

''இன்னும் முழுசா விடுதலையடையவில்லை, திருமதி வில்கின்ஸன்'' என்ற ஹெர்குல்லை, பொறுமையிழந்து பார்த்தார் ஜானே. சொன்னார்: ''விடுதலை அடையப் போகிறேன். சரிதானா! இரண்டும் ஒன்றுதானே?''

அப்படி நான் நினைக்கவில்லை என்பது போல ஜாடை காட்டினான் பொய்ரெட்!

''என் மனம் கவர்ந்த இளவரசர் பாரீஸ் சென்றுள்ளார். உடனடியாய் அவருக்குத் தந்தி அனுப்ப வேண்டும்'' என்ற ஜானே, ''ம்...'' என்று கசப்பான நீண்டதொரு பெருமூச்சு விடுத்தார். ''அவரோட வயசான தாயார் இதற்கு கோபப்பட்டு நிராகரிக்காமல் சம்மதிக்க வேண்டும்'' என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்ட ஜானே, ''ஆனா, இதற்கும் உதவி செய்யும்படி உங்களை நான் தொந்தரவு செய்ய மாட்டேன், திருமிகு பொய்ரெட்'' என நல்ல நகைச்சுவையை மொழிந்தார்!

பொய்ரெட் முடிந்து விட்டதாய் உணர்த்தி எழுந்தான். ''நீங்கள் நினைத்து திட்டமிட்டபடியே எல்லாமும் கை கூடியிருப்பதில் நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன், மிஸஸ் வில்கின்ஸன்.''

''நன்றி திருமிகு பொய்ரெட். என் நெஞ்சார்ந்த, மனம் கனிந்த, பல கோடி நன்றி, நன்றி நன்றி!''

''பார்க்கப் போனால், நான் ஏதும் செய்யவில்லை. வெறுமனே சீமான் எட்ஜ்வேருடன் போய் உரையாடி வந்துள்ளேன், அவ்வளவே.''

''என் உயிர் ருசிக்கும்படியான மிக நல்ல சேதியைக் கொண்டு வந்து தந்தது நீங்கதானே திருமிகு பொய்ரெட். அதற்கு நான் எப்போதும் நன்றி விசுவாசியாய் இருப்பேன். என்றும்.''

''இதுதான் ஜானே'' என்றான் பொய்ரெட், நாங்களிருவரும் ஜானேயின் ஜாகையை விட்டு வெளியேறி படியிறங்கிக் கொண்டிருந்த போது. தொடர்ந்தான்: '' 'நான் மட்டும்' - இதுதான் ஜானேயின்

ஒவ்வோர் அணுவும்! அவர் நினைத்தது முடிந்து விட்டது. மிக திருப்தியாகி விட்டார். அந்தக் கடிதம் என்ன ஆகியிருக்கும்... எங்கே தான் போயிருக்கும்... எனும் ஊகமோ, ஆவலோ, சிந்தனையோ, உத்தேசக் கருத்தோ... எதுவுமே அவருக்குக் கிடையாது. ஹேஸ்டிங்ஸ்..! தான் நினைத்ததை அடையும் ஒருவித வியாபார கூர்மை மிகுந்து மிளிரும் ஜானேக்கு, புத்திக் கூர்மை கிடையவே கிடையாது. கடவுள் எல்லாவற்றையும் எல்லோருக்கும் தந்து விடுவதில்லையே!''

''ஆனால், ஹெர்குல் பொய்ரெட் ஒரு விதிவிலக்கு.''

''வா நண்பா! இதோ... சுற்றி விரிந்து வியாபித்துக் கிடக்கும் இந்த நந்தவனத் தோட்டத்தில் காலாற கொஞ்சம் நடப்போம். உன்னிடம் முக்கியமான ஒன்றினை விவாதிக்க வேண்டும்.''

நான், ஹெர்குல்லிடமிருந்து கதிர்வீச்சாய் வெளியேறிக் கொண்டிருந்த முக்கியத்துவத்தையும் பொதிந்த சிந்தனையையும் அறிந்துக் கொண்டேன். எனவே, மூச்சு விடும் சப்தம் கூட ஒலித்து, அவனைத் தொந்தரவு செய்யாதவாறு பார்த்துக் கொண்டேன். கிட்டத்தட்ட ஐந்து நிமிடங்கள் போல் நடந்திருப்போம். துப்பறியும் உலகின் தேவராய் விளங்கும் ஹெர்குல் பொய்ரெட்டிடமிருந்து இவ்வழக்குக் குறித்த சத்தியமான தேவ வாக்குகள் உதிரத் தொடங்கின.

''அந்தக் கடிதம்'' என்று ஆரம்பித்தான். ''அது, சில சதி ஆலோசனைகளை எனக்குள்ளே தோற்றுவிக்குது. நான்கு சதிகார சாத்தியக் கூறுகள் இதில் இருக்கின்றன, அருமை ஹேஸ்டிங்ஸ்!''

''நான்கு?''

''ஆமாம். ஒன்று - அது தபாலில் தவறி விட்டதென்பது. இதுவும் நடக்கத்தான் செய்கின்றது. அடிக்கடி இல்லாவிட்டாலும், எப்பொழுதாவது! ஒருவேளை பெறுநர் முகவரி தவறாக எழுதப்பட்டிருந்தால், தப்பி எங்கும் போகாது, அனுப்புநரான எட்ஜ்வேருக்கு அன்றே திரும்பி வந்து சேர்ந்திருக்கும். தபாலில் தவறியிருக்கலாம் எனும் அரிதான இந்த சாத்தியக் கூறினை ஒதுக்கித் தள்ளும்படி தான் என் மனம் சொல்கிறது ஆனால், உண்மையாகவே கூட தவறியும் இருக்கலாம்!

''இரண்டாவது - நம் அழகு கவர்ச்சிப் புயலான ஜானே வில்கின்ஸன், அக்கடிதம் தன் கைக்கு கிடைக்கவேயில்லைனு பொய் சொல்றாங்க. இது சாத்தியமே, குழந்தைத் தனமான போர்வைக்குள் புகுந்துக்கிட்டு, தான் நினைத்தது நடந்தே தீரவேண்டும் என்ற

இலக்கினை அடைய, எத்தனை பொய் வேண்டுமானாலும் கூசாமல் சொல்லக் கூடியவர் தான் - திருமதி வில்கின்ஸன். ஆனா இந்தப் பொய்யைக் கூறுவதால் அவருக்கு என்ன அனுகூலம் கிடைச்சுடப் போகுது என்பதற்குத் தான் எனக்கு விடையே கிடைக்கவில்லை. கடிதத்தைப் பிரித்துப் படிக்காது மறைத்து வைத்திருக்க மாட்டார் - படித்திருப்பார். எனவே, எட்ஜ்வேர் விவாகரத்துக்கு ஒப்புக் கொண்ட கடித சாராம்சம் அவருக்குத் தெரிந்திருக்குமே! பிறகு ஏன் என்னைத் தூது அனுப்ப வேண்டும்! இந்த இரண்டாவது சாத்தியக் கூறு, எனவே, புத்திசாலித்தனமானதாகப் படலே!

''அடுத்து, *மூன்றாவது!* சீமான் எட்ஜ்வேர் பொய் சொல்கிறார். யாராவது ஒருவர் பொய் சொல்கிறார் என்று நாம் ஊகித்தால், அது, வில்கின்ஸனை விட எட்ஜவேருக்குத்தான் மிகப் பொருந்தும். ஆயினும் அப்படி ஒரு பொய்க்கு என்ன தேவையிருக்குனு எனக்குக் காரணம் எதுவும் தென்படலே. எதுக்காக ஒரு கற்பனை கடிதத்தை ஆறு மாதங்களுக்கு முன் அனுப்பியதாய் இப்போது சிருஷ்டித்து, அதில் விவாகரத்துக்கு நான் சம்மதம் தெரிவித்திருந்தேன் என சீமான் பொய் சொல்ல வேண்டும்? பேசாமல், என் அதே ஆலோசனைக்கு இப்போ ஒப்புக் கொண்டு விடலாமே! ஆகவே, சந்தேகத்துக்கிடமின்றி, சீமான் எட்ஜ்வேர் விவாகரத்துக்கு உடன்படும் கடிதத்தை அனுப்பியுள்ளார் என்றுதான் நினைக்கத் தூண்டுகின்றது. ஆனால், பெண்களை வதைத்தே வாழ்கின்ற குணாதிசயம் கொண்டுள்ள சீமானின் இலக்கு, ஜானேக்கு விவாகரத்து கொடுத்து விடுதலை தரும் அளவுக்கு திடுமென எதனால் மாறியது என்பதைத்தான் என்னால் ஊகிக்கவே முடியவில்லை.

''இனி *நான்காவது* சாத்தியக் கூற்றினைச் சொல்கிறேன். யாரோ, கடிதத்தை அமுக்கியிருக்கிறார்கள். இங்கு நண்பா, நம் தீவிர சிந்தனைக்கு சிறப்பான விருந்து கிடைக்கின்றது. ஏனெனில், அந்தக் கடிதம், எந்த மூலையில் வேண்டுமாயினும் - அமெரிக்காவிலோ அல்லது இங்கிலாந்திலோ - கைப்பற்றப்பட்டிருக்கலாம். அன்பு ஹேஸ்டிங்ஸ்! என்னவோ... என்னவோ நடந்திருக்கு... சத்தியமாய் *என்னவோ நடந்திருக்கு..!''*

தீவிர சிந்தனைக்காக கொஞ்சம் நிறுத்தியவன், சொன்னான்: ''சத்தியமாய்- எனக்குத் துளிக் கூட உளவு கிடைக்காத ஏதோ ஒன்று - ஏவ நிச்சயமாய் நடந்திருக்கு, ஹேஸ்டிங்ஸ்..!''

## அத்தியாயம் - 5

# கொலை

தொடர்ந்த நாள் ஜூன் 30.

மணி, காலை ஒன்பதே கால் ஆகியிருக்கும். கீழே இன்ஸ்பெக்டர் ஜேக்கப் (என்கிற ஜேப்) எங்களிருவரையும் சந்திக்க மிக்க ஆவலோடு காத்திருப்பதாக தெரிய வந்தது.

எந்தவிதமான சிக்கலும் கடுமையும் நிறைந்திருந்தாலும், சாதுர்யமும் புத்திசாலித்தனமும் நிறைந்து செயல்பட்டு, எவ்வித குற்றத்தையும் அல்லது கொலையையும், பைசல் பண்ணி விடும் பலம் பொருந்திய, உலகின் முதல் தர போலீஸ் நிர்வாகமான ஸ்காட்லாண்ட் யார்டு-யின் இன்ஸ்பெக்டர் - வந்திருக்கும் திரு ஜேப். சில வருடங்களாக அவரைப் பற்றிய முகவரியே அறியாமலிருந்தோம் நாங்கள். எனவே, ''ஆஹ்...! ஜேப்! என்ன வேண்டி வந்திருக்கார்? ஆச்சரியமாயிருக்கு!'' என்றான் பொய்ரெட்.

நாக்கை உள் மடக்கி மாடு மேய்ப்பது போல கிண்டலாய் ஒலியெழுப்பிய நான், ''வேறெதுக்கு? உதவிக்காய் இருக்கும்!'' என்றேன். ''ஏதாவது ஒரு வழக்கில், எத்தனை ஆழம் சென்றும் துளியும் துப்பு கிடைக்காது சோர்ந்திருப்பார். இனி பொறுப்பதற்கில்லை எனும் நிலை தோன்றியிருக்கும். அதுதான், உளவு சந்நியாசி நீ இருக்கியே! குறி கேட்க, உன்னை நாடி வந்துட்டார்!''

ஜேப்பிடம் பொய்ரெட் காட்டும் தயையும் கொடுக்கும் இடமும், என்னால் இயலாதவை! என்னைப் பொறுத்தவரை, பொய்ரெட் செய்வது போல் சீராட்டி வரவேற்கும் நிலைக்குத் தகுந்தவரல்ல இந்த ஜேப் என்றே சொல்வேன். தன்னால் இயலாத நிலை வந்ததும் ஓடோடி வந்து என் உயிர் நண்பனை மண்டையைப் பிய்த்துக் கொள்ள வைப்பதினால் மட்டும் எனக்கு ஜேப் மீது ஒவ்வாமை ஏற்பட்டிருக்க

வில்லை. எப்படியோ, தன் மூளைக்கு விமரிசையாய் வேலை தர ஒரு நல்ல வழக்கு அகப்பட்டதே என்று இந்த பொய்ரெட் மகிழ்ச்சிதான் கொள்வான்! வழக்கு முடிந்ததும், கள்ளத்தனமாய், ஒரு பேடி போல, பொய்ரெட் செய்த வானுயர உதவி அனைத்தையும் மறைத்து, ஏதோ தானே தான் கடினமான வழக்கினை முடித்த முடிசூடா மகாராசா என்பதுபோல பாசாங்கு காட்டி நற்பெயரினை ஜேக்கப் தட்டிச் செல்வார் பாருங்கள்... அதுதான் எனக்குள் எரிச்சலை அள்ளிக் கொட்டும். இதற்கு ஹெர்குல்லும் மறுப்பு வெளியிடாமல் தெய்வமே என்று அமைதி காப்பான் பாருங்கள்... அதுதான், எரியும் என் எரிச்சலுக்கு வார்க்கப்படும் நெய்! இதனால் தான் உளவு சந்நியாசி என்று குறிப்பிட்டேன்! எனக்கு இதுபோல மாய்மாலம் செய்யும் நபர்களைக் கண்டால் - அது ஸ்காட்லாண்ட் இலாக்கா இன்ஸ்பெக்டரா யிருந்தாலும் பாதகமில்லை - கிஞ்சித்தும் பிடிக்காது. இந்த என் கருத்தினை, ஜேப் மேலே வந்து சேருவதற்குள் பொய்ரெட்டிடம் கொட்டித் தீர்த்தேன்.

அவன் சிரித்தான். ''அன்பு ஹேஸ்டிங்ஸ்! நீ 'புல் டாக்' எனும் நாய் வகையடா!''

கிண்டலடிக்கிறான் என்பது புரிந்தது. லேசாய் சிரித்து விட்டேன். ஆனால் கிண்டலுக்கான அர்த்தம் தான் விளங்கவில்லை. அதை அறிந்துக் கொள்வதில் சிறு ஆர்வம் கூடியது. ''என்ன ஒப்பீடு இது?'' என்றேன்.

''புல் டாக் நாய் வகைகள் தான், நாய்களிலேயே மிக அவலட்சணமான முகம் கொண்டவை. அதுபோல முகம் பற்றி கவலைப்படாதவன் நீ. ஆனா ஜேக்கப் அப்படியல்ல. நாலு பேருக்கு முன்னால தன்னை புத்திசாலியாகக் காட்டிக் கொள்வதில் ஆசையும் திருப்தியும் அடைபவர். எனவே தான் என் முகமூடியை அணிந்துக் கொள்கிறார். போகட்டுமே!'' என்று கவிதைத் தனம் நிரம்பி விளக்கினான்.

''முட்டாள்தனமான மக்கள் பொய்ரெட். முதலில் இப்படிப் பட்டோருக்கு உதவுவதை நிறுத்தித் தொலை'' என்று நண்பனெனும் உரிமையில் சற்று காட்டமாகவே சொன்னேன்.

பொய்ரெட் ஏற்றுக் கொள்ளவில்லை. ''சமுதாயத்தில் எத்தனையோ பொய்களை சொல்லியாவது தலை நிமிர்ந்து புகழோடு பவனி வர விரும்பும் ;துரும்புகள். தொலையட்டும். விட்டு விடு.

என்னைப் பற்றி உனக்கு இப்போதாவது முழுசுமாய் புரிந்திருக்க வேண்டும். புகழல்ல நான் தேடுவது. குற்றம் என்று ஒன்று என் காதுகளுக்கு எட்டி விட்டால், அதன் உண்மை தான் எனக்கு வேண்டியது. அது தெரியும் வரை உறங்க மாட்டேன்.''

அழகாய் முற்றுப்புள்ளி வைத்து விட்டான். இனி பேசிப் பயனில்லை. அதற்குள் ஜேப்பும் உள்ளே வந்து விட்டிருந்தார். அப்படி என்ன குற்ற வழக்கினை சுமந்துக் கொண்டு ஜேப் வந்திருக்கிறார் எனும் ஆர்வத்தில் என் எண்ணங்கள் திசை திரும்பின.

எங்களிருவரையும் மனதார குசலம் விசாரித்தார் ஜேப். இதில் என்றும் குறைச்சலிருந்ததில்லை!

''அன்பு ஜேக்கப்! விடிஞ்சதும் விடியாததுமா எது உங்களை இவ்வளவு சீக்கிரமா இங்கே இழுத்து வந்திருக்கு?'' என்று பேச்சை ஆரம்பித்தான் பொய்ரெட்.

''சீக்கிரம்? எனக்கு இது சீக்கிரமில்லையப்பா! எழுந்து, இரண்டு மணி நேரமாக முக்கியமான அலுவல்களை செய்துவிட்டு, இப்போ இங்கு வந்திருக்கேன்'' என்றவர், ''என்னை இங்கு இழுத்து வந்ததற்கான காரணத்தைக் கேட்டீர்கள். அதற்கு விடை - ஒரு கொலை!'' என்று முடித்தார்.

''கொலை?''

ஜேப், ஆம் என தலையசைத்தார்.

''சீமான் எட்ஜ்வேர், அவரது ரீஜெண்ட் மாளிகையில், நேற்றிரவு கொல்லப்பட்டிருக்கிறார். கழுத்துப் பகுதியில் வெட்டிக் கொலை செய்யப்பட்டிருக்கிறார். அவர் மனைவியாலேயே!''

''என்ன? அவரது மனைவியாலா?'' - நான் ஏறத்தாழ மயங்கியே விட்டேன்.

நேற்று காலை, ப்ரையன் மார்ட்டீன் சொன்ன வார்த்தைகள் சரேலென ஒரு மின்னல் கீற்றாய் என்னை வெட்டின. அருள் வாக்கு சொல்லும் பூசாரி போல, மறுநாள் என்ன நடக்கப் போகிறது என்ற ஞானம் பெற்றவரா, மார்ட்டீன்? ஜானே கொல்லத்தான் போகிறாள் என்று அடித்தல்லவா அவர் சொன்னார்! மிக லாகவமாக, 'நீங்கள் உதவவில்லையென்றால், நானே நேராக போய் என் கணவரை சுட்டு விடுவேன்' என்றாளே, அந்த நடிகை! 'சரியும் கிடையாது.. அவளுககு தவறும் கிடையாது' என்றாரே மார்ட்டீன். அப்படிப்பட்டவர் தான் ஜானே. 'நான்' எனும் அகந்தையும், புத்திசாலித்தனமற்ற முட்டாளும்

ஆகிய கலவை. ஜானே வில்கின்ஸனை, எத்தனை துல்லியமாய் கணித்து வைத்திருக்கிறார், மார்ட்டீன்!

ஜேப் மேலும் சொல்லிக் கொண்டிருக்கும்போது, இவையத்தனையும் என்னைக் கடந்து சென்றிருந்தன.

''அவர் மனைவி ஒரு நடிகை. புகழ் பெற்ற நடிகை. ஜானே வில்கின்ஸன்! மூன்று வருடங்களுக்கு முன்னால் சீமானை மணந்துள்ளார். திருமண வாழ்வு சுமூகமாய் செல்லவில்லை. அவரை விட்டுப் பிரிந்து விட்டார்.''

விஷயத்தை இப்பொழுது கேள்விப்பட்ட பொய்ரெட், விடை தெரியா புதிரை எதிர்கொண்டவன் போலவும், உண்மையான ஈடுபாடும் பொதிந்துக் காணப்பட்டான். கேட்டான்: ''அவர் மனைவி தான் கொன்றது என்று, எது உங்களை இவ்வளவு நிச்சயமா நம்ப வைக்குது?''

''நம்பிக்கைக்கு வேறென்ன வேண்டும்? அவர் தான் என்பது கண்டுபிடிக்கப்பட்டு விட்டது! மறைக்க ஒன்றுமில்லை. ஒரு வாடகைக் காரினை அமர்த்திக் கொண்டு -''

''வாடகைக் கார் - '' அதே வார்த்தையை ஓர் எதிரொலியாய் நான் மீண்டும் சொன்னேன் - சவாய் உணவகத்தில் அன்றிரவு தான் செய்யக் கூடியதாய் ஜானே சொன்ன சாத்தியக் கூறு!

ஜேப் தொடர்ந்தார்: ''-அமர்த்திக் கொண்டு நேராய் மாளிகைக்குப் போயிருக்கார். அழைப்பு மணியை அடிக்க, காவலாளி வந்திருக்கான். அப்போது மணி இரவு பத்து. சீமான் எட்ஜ்வேரைக் கேட்டிருக்கிறார். அவன் பார்த்து வந்து சொல்வதாய் பதில் தந்திருக்கான். நான் அவர் மனைவி... நீ என்னத்தைப் பார்த்து வந்து சொல்லப் போகிறாய் என எகிறி விட்டு, நேராய் உள் புகுந்திருக்கார். நூலகத்தில் தான் இருக்க வேண்டும் என்று கூறியபடியே, கீழே வரவேற்பறையை ஒட்டியிருக்கும் சீமானின் பிரம்மாண்ட நூலகம் நோக்கி நகர்ந்து, அதனை அடைந்திருக்கார். அதன் கதவைத் திறக்கிறார். நுழைகிறார். படாரென்ற பெரும் ஓசையோடு அதனை மூடவும் செய்கிறார்.''

இதுவரை ஒரு காட்சி என்பது போல விளக்கி விட்டு, சிறு இடைவெளி தந்து, அடுத்த கட்டத்துக்குத் தாவி விளக்கலானார்: ''அவங்க உள்ளே ஓடின வேகத்தைக் கவனிச்ச காவலாளியும் சிறு சந்தேகத்தோடதான் இருந்திருக்கான். ஆனா மேற்கொண்டு எதுவும் அவனால செய்ய முடியலே - சீமானின் மனைவியல்லவா வந்திருப்பது!

எனவே தன் வேலைகளைத் தொடர திரும்பியிருக்கான். பிறகு தொடர்ந்த பத்தாவது நிமிடத்தில் வாயிற் கதவு திறந்து மூடப்படும் ஓசையைக் கேட்டிருக்கான். எப்படியோ... வந்த நடிகை நீண்ட நேரம் தங்கவில்லை எனும் ஆறுதலில், பதினொரு மணி வாக்கில் கதவையெல்லாம் அடைத்து விட்டுப் படுத்திருக்கான். அதற்கு முன் நூலகக் கதவினையும் திறந்து பார்த்திருக்கான் அவன். அது, முழுக்க இருளில் இருக்க, தன் எஜமான் உறங்க ஆரம்பிச்சுட்டார் எனும் எண்ணத்தில திரும்பியிருக்கான். காலையில தான், வேலைக்காரி ஒருத்தி மூலமா விஷயம் தெரிஞ்சிருக்கு. தலைமுடிக்குக் கீழே, உடனடியான கழுத்துப் பகுதியில் சீவினாற் போல் ஆழமாய் வெட்டிக் கொல்லப்பட்டிருக்கிறார்.''

''ஒரு கதறல்? கூச்சல்? எதுவுமா கேட்கவில்லையாம்?''

''இல்லைனு தான் சொல்றாங்க. நூலகம் முழுவதும் தடிமனான சுவர்களும் கதவுகளும் கொண்டு வடிவமைக்கப்பட்டிருப்பதால் நூலகத்து உள்ளே எழும் ஒலிகள் வெளியே கேட்பது அபூர்வம் - கேட்காதுனே கூட சொல்லலாம். சீமான் எட்ஜ்வேருக்கு நடந்திருப்பது போல கொலை செய்யப்பட்டால், முடிவு, ஆச்சரியப்படத்தக்க வேகத்தில், உடனடியாய் நிகழ்ந்து விடும். தலைமுடிக்குக் கீழே, உடனடியான பின் கழுத்தில் மேல் நோக்கிய கோணத்தில் மிகக் கூரிய கத்தியால் ஒரு வெட்டு... இது முகுளத்தைச் சரி பாதியாய் வகுத்து, மூளையை உடலின் அனைத்துப் பகுதிகளிலிருந்தும் தனித்துப் பிரித்து விடுமாம்.... டாக்டர் சொன்னார். இந்த முறையில் துல்லியமாய் இளநீர் சீவுவதைப் போல சீவினால், மரணம், அடுத்த நொடியிலேயே... மிகையில்லை நண்பர்களே... அடுத்த ஒரு சில நொடிகளிலேயே மரணம் சம்பவித்து விடுமாம்.''

''எனில், எங்கு வெட்டினால், எப்படி வெட்டினால், எந்தக் கோணத்தில் வெட்டினால், கணத்தில் மரணம் நிகழும் எனும் அறிவினை இது காட்டுகிறது. மருத்துவ அறிவு!''

''ஆமாம். சரியா சொன்னீங்க. மருத்துவ அறிவு மிகுந்த ஒருவரின் துல்லியமான அறுவை சிகிச்சை போன்ற செய்கை! இப்படிப் பார்த்தால், நம் சந்தேகக் கண்களிலிருந்து ஜானே தப்பிக்கிறார்! ஆனா வேறு கோணத்தில, மருத்துவ அனுபவம் இல்லாதவர் செய்தக் கொலை எனும் கோணத்தில பார்த்தா, ஜானேவை விடுவிக்க இயலாது. வாய்ப்பின் அடிப்படையில் வெற்றி கிட்டலாம் இல்லையா! அதாவது,

எறிகிற கற்களை எறிவோம்... மாங்காய் விழுந்தால் விழட்டும் எனும் அதிர்ஷ்டத்தைத் தான் வாய்ப்பு என்று குறிப்பிடுகிறேன். பத்து முறை எறிந்தால் ஒன்று பலித்து விடுகிறதே, சிலருக்கு அதிர்ஷ்டம் அதிகம், இல்லையா?''

''அதிர்ஷ்டமா? இப்போது அகப்பட்டுக் கொண்டு கயிற்றில் தொங்கும் நிலை ஏற்பட்டு விட்டால், அதில் என்னய்யா அதிர்ஷ்டம் இருக்கிறது?'' என்று, ஜேப்'பின் வர்ணனையை ஓரங்கட்டினான் பொய்ரெட்.

''முட்டா பொண்ணு, இப்படியா ஊரறிய மாளிகைக்குள் வந்து, முழு விளம்பரத்தோடு கொலை செய்துச் செல்வது?'' என்றார் ஜேப்.

எனக்கு மீண்டும் மார்ட்டீன் விவரித்த ஜானே தான் நினைவுக்குள் வந்து சென்றார். முட்டாள் பெண்.

ஜேப் தொடர்ந்தார்: ''ஒருவேளை அடிக்க வேண்டும்... குத்த வேண்டும்... கொலை செய்ய வேண்டும் என்றெல்லாம் திட்டம் போட்டு வந்திருக்க மாட்டார். சண்டை முற்றியிருக்க வேண்டும். கோபத்தின் உச்சம், பையிலிருந்த தற்காப்புக் கத்தியை எடுத்து ஒண்ணு போட்டிருப்பார். அது வாய்ப்பின் அடிப்படையிலான மாங்காய் கதையாய் ஆகி, கொன்றிருக்கும்.''

''கொலை நிகழ்ந்தது, சிறு பாதுகாப்புக் கத்தியாலா?''

''அதுபோல ஏதோ ஒண்ணுனு தான் டாக்டர்ங்க சொல்றாங்க. எதுனு தெளிவா தெரியலே... எதுவோ.. அதைக் கையோடு எடுத்துட்டுப் போயிட்டார் ஜானே வில்கின்ஸன். ஸ்தலத்தில் அது இல்லை.''

திருப்தியற்ற நினைப்பில் தலையை மறுத்து அசைத்த பொய்ரெட், ''இல்லை, இல்லை, இல்லை, அன்பு இன்ஸ்பெக்டர். அப்படி நடந்திருக்காது. எனக்கு ஜானேயை நல்லா தெரியும். சுண்டி விட்டாற் போல் இயங்கி, ஈவிரக்கமற்ற ஒரு கொலையை செய்யவெல்லாம் த்ராணியற்றவர் அவர். உக்கிரமாய் ஆகும் குணமற்றவர் அவர். வெறும் வளவள வகை. பாதுகாப்புக் கத்தியெல்லாம் கொண்டு செல்லும் வகையுமல்ல. சில பெண்கள் வேண்டுமானால் அப்படி எதையாவது வைத்துக் கொண்டிருக்கலாம் - நிச்சயமாய், ஜானே வில்கின்ஸன் அந்த வகையைச் சேர்ந்த பயந்தாங் கொள்ளி அல்ல'' என்றான்.

''என்ன, என்ன! அவரை உங்களுக்குத் தெரியுமா, பொய்ரெட்?''

''ஆமாம். அவரின் அறிமுகம் உண்டு.''

இதற்கு மேல் எதுவும் சொல்வதற்கில்லை என்பதை ஆழமாய் உணர்த்தி நிறுத்திக் கொண்டான் பொய்ரெட். ஜேப், அவனைக் கூர்ந்து

கவனித்துக் கொண்டார். கேட்டார்: ''எனில், இன்னும் பல இடுக்குகள் உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.''

''ஆஹ்!'' என்று சிரித்த பொய்ரெட், ''சொல்லுங்க! எது உங்களை என் அலுவலகம் வரை கொண்டு வந்து நிறுத்தியிருக்கு?'' என்று கேட்டு அப்படியே தளம் மாறினான். ''நிச்சயம், ஒரு பழைய நண்பனோடு காலைப் பொழுதை இனிமையாய் கழிக்கனும்னு நீங்க இங்க வரலே! உங்க கையிலுள்ள இவ்வழக்கோ ஒளிவு மறைவற்ற வழக்கு! இதில் மெனக்கெட ஒன்றுமில்லை! கொலைகாரரும் கையும் களவுமாய் அகப்பட்டு விட்டார். இலக்கு? அது கிடைத்ததா? கொலைக்கான இலக்கு?''

''ஜானே வேறு ஒருவனை மணந்துக் கொள்ள ஸ்திரமான முடிவிலிருக்கார். அதுதான் இலக்கு. இதை வெளிப்படையாகவே அறிவித்துக் கொண்டும் அலைஞ்சிருக்கார். சீமான் இதற்கு இணங்கவில்லையென்றால் பயமுறுத்துவேன். ஒரு வாடகைக் காரினை அமர்த்திக் கொண்டு நேராய் போய் சுட்டு விடுவேன் - போன்ற ரீதியிலெல்லாம் கடந்த ஓரிரு வாரங்களாகப் பேசிக்கிட்டு திரிஞ்சிருக்கார்.''

''ஆஹ்!'' என பேராச்சரியம் காட்டினான் பொய்ரெட். ''மிக நுணுக்கமா தகவல்களை வெச்சிருக்கீங்க. மிக மிகச் சரியாக! யாரோ, உங்களுக்காக, மிக விசுவாசமா இயங்கிக்கிட்டிருக்க வேண்டும்.''

சொன்ன பொய்ரெட் கண்களில் ஆழமான கேள்வி இருந்ததாய் உணர்ந்தேன். இருந்தாலும், ஜேக்கப் அதற்கு மறுமொழி கூறவில்லை. ''எப்படியும் நமக்கு விஷயங்கள் வந்த வண்ணம் உள்ளன'' என்று பொதுப்படையான பதில் மட்டும் சொன்னார்.

பொய்ரெட் ஒப்புதலாய் தலையசைத்தான். எழுந்து அன்றைய செய்தித்தாளை நாடி நகர்ந்தான். அது, ஜேப்பால் திறக்கப்பட்டுக் கிடந்தது. எங்களுக்காகக் காத்திருக்கும்போது, நிச்சயமாய் ஜேப்'பால் தான் அது திறக்கப்பட்டிருக்க வேண்டும். எங்கள் அனுமதி கிடைத்ததும், நேர்த்தி செய்யப்படாமல் அவசர அவசரமாய் வீசி விட்டு உள்ளே ஓடி வந்திருக்கிறார். இயந்திர கதியில் செய்தித்தாளை மீண்டும் அதன் சரியான நிலைக்கு வரிசைப்படுத்தி மடித்தான் பொய்ரெட். இஸ்திரி போடுவது போல் தடவி நேர் செய்தான். இவை செய்யும் போதெல்லாம் பொய்ரெட்டின் கண்கள் செய்தித்தாள் மீதே படிந்திருந்தாலும், சந்தேகத்துக்கிடமின்றி அவனது சிந்தனை மட்டும் ஏதோ ஒரு புதிரான நிகழ்வின் மீது மிக ஆழ்ந்து பதிந்துக் கிடந்தது.

தற்சமயம், ''நீங்க இன்னும் பதிலே தரலே'' என்ற பொய்ரெட், ''எல்லாம் நீருக்குள் விருட்டென நுழைந்து தடையின்றி நீந்தும் மீனின் வசதியோடு இருக்க, என்னைத் தேடி வந்திருக்கக் காரணம்?'' எனக் கேட்டான், மீண்டும்.

''ஏனெனில், நீங்கள் நேற்று காலை ரீஜெண்ட் மாளிகையில் இருந்ததாய் எனக்கு தகவல் கிடைத்துள்ளது'' என்றார் ஜேப்.

''ம்!''

''இதை அறிந்த மறு கணத்தில், 'ஆஹா... இங்கு ஏதோ துப்பு இருக்கின்றது'னு எனக்கு நானே சொல்லிக்கிட்டேன். சீமான், பொய்ரெட்டை வரச் சொல்லி அவசர அவசரமாய் தூது அனுப்பி யிருக்கிறார். ஏன்? அவருக்கு உண்டான சந்தேகம் என்ன? எதை நினைத்து அவர் பயந்திருக்கிறார்? நிச்சயமாய் ஏதேனும் நடவடிக்கை எடுக்குமுன், உங்களிடம் இது குறித்தெல்லாம் பேசி விட வேண்டும்னு தோன்றியது. வந்துவிட்டேன்.''

''நிச்சயமாய் ஏதேனும் நடவடிக்கை...?! இதில் என்ன சொல்ல வருகிறீர்கள்? வில்கின்ஸனின் கைதினையா?''

''வெகு சரியாக.''

''சம்பவத்துக்கு அப்புறம் அவரை நீங்க இதுவரையுமா சந்திக்கிலே?''

''பார்த்தேன், பார்த்தேன்..! சவாய் சென்றது தான் நான் எடுத்த முதல் நடவடிக்கை. அவரைத் தப்பிக்க விட்டுவிடக் கூடாதல்லவா?''

''ஆஹ்!'' என மெலிதான சிரிப்பு சப்தம் கொடுத்த பொய்ரெட், ''ஆகவே, முதல் வேலையாய் சவாய் அடைந்து---''

நிறுத்தினான். இத்தனை நேரம் வரை, செய்திகளைப் படிக்கா விட்டாலும், தன் முன் சரி செய்து வைக்கப்பட்டிருந்த செய்தித்தாளின் மீது சாதாரணமாகப் படிந்துக் கிடந்த பொய்ரெட்டின் கண்கள், இப்போது அதில் எதையோ கண்ணுற்று, அசாதாரணமான உணர்வுகளைப் பிரதிபலித்தன. நொடிகள் சில நழுவின. பேசத் துவங்கிய விஷயத்தைத் தொடர தலையை நிமிர்ந்த பொய்ரெட் கேட்டான்: ''ம்... தொடருங்கள் இன்ஸ்பெக்டர்..! அவரிடம் என்ன சொன்னீங்க? எப்படி நடந்துக்கிட்டீங்க?''

''போலீஸ் கைவரிசையைக் காட்ட வேண்டியதாயிற்று. வாக்குமூலம் தந்தாக வேண்டும் என்று நிர்ப்பந்தித்தேன். காவலர் அவரை நடத்தும் விதம் குறித்தெல்லாம் திடுமென விமர்சிக்க

ஆரம்பித்த அவரிடம், அப்படி எந்த விதமான வார்த்தைகளும் ஆதாரமின்றி பொய்யாக விட வேண்டாம் எனவும் எச்சரித்தேன்.''

''பிறகு?''

''சட்டென வெறி பிடித்தவள் போன்ற நிலையை எடுத்துக்கிட்டார். ஆமாம், திருமிகு பொய்ரெட்...! ஆ ஊ என கதற ஆரம்பிச்சுட்டார். அறையையே மளமளவென சுற்றிச் சுற்றி வந்து கதறினார், கத்தினார் - கைகளை விண் நோக்கி நீட்டி விரித்து முறையிட்டார் - பொசுக்குனு மயங்கி விழுந்துட்டார். ஓ..! ரொம்ப அழகாக செய்து முடித்தார் - அவர் பங்கு நடிப்பினை. இப்படித் தான் சொல்லத் தோணுது, அவர் அடித்த கூத்தினை எண்ணும்போது! சிறப்பான நடிப்பு!''

''அவருக்குள் விளைந்திட்ட திடீர் வெறி, இயற்கையானதல்ல, செயற்கையே என, நீங்களாவே முடிவெடுத்துட்டீங்க, இல்லையா!'' என்றான் பொய்ரெட் நிதானமாய்.

''என்ன சொல்றீங்க?'' என்று காரமானார் ஜேக்கப். ''வித்தைகள் காட்டி வழக்கில் செல்ல வேண்டும் என்பதெல்லாம் என் வழக்கமல்ல! அவர் நெஜமா மயங்கியெல்லாம் விழலே - விழவேயில்லை! முயற்சி செய்து நடிச்சுப் பார்த்தார். அந்தப் பங்களிப்பு சரியாக அமைந்து விட்டதுல அவரே கூட மகிழ்ந்துப் போயிருப்பார்.''

''இருக்கலாம். அவர் ஒரு நடிகை எனும் காரணத்தால், சிறு இரக்க நாடகம் போட்டு தப்பிக்க முயன்றிருக்கலாம்'' என ஜேப்'புக்கு ஆதரவாய் பேசிய பொய்ரெட், இதனை மேற்கொண்டு தொடராமல், ''பிறகு?'' என்று மேலும் விஷயங்களைக் கிரகித்துக் கொள்வதிலேயே தான் ஏனோ குறியாயிருந்தான்.

''ஒத்துழைக்க மறுக்க ஆரம்பித்தார். துக்கத்தை வெளிப்படுத்த அதீதமாய் புலம்பிக் கதற ஆரம்பித்தார். தரையில் புரண்டெல்லாம் வேறு துக்கம் அனுஷ்டித்தார்! வருத்தத்தில் தோய்ந்திருந்த அவரது வேலைக்காரி தான், திருமதி எட்ஜ்வேரின் முகத்தில் தண்ணீரெல்லாம் அடித்து அவரை ஒரு நிலைக்குக் கொண்டு வந்தார். கண் திறந்ததும், தாமதியாது, உடனே, தன் வக்கீல் வரவேண்டும்னு ஆரம்பிச்சுட்டார். தன் வக்கீல் வரும் வரை ஒரு வார்த்தை பேச முடியாது என மௌன விரதம் துவங்கினார். இப்பொழுது சொல்லுங்கள், திருமிகு பொய்ரெட்..! வெறி பிடித்த மனோநிலையில் ஒரு நிமிடம்... உடனேயே வக்கீல் கேட்கும் சிறப்பான மனோநிலையில் மறுநிமிடம்..! இது இயற்கையாகவா இருக்கின்றது?''

தாமதமின்றி, ''இவ்வழக்கில் இது, மிக இயற்கையே என்று தான் சொல்லணும்'' என்றான் பொய்ரெட்.

''தான் கொலைகாரி என்ற விஷயம் வெளிவர ஆரம்பித்து விட்டதால்தான், இப்படி நடந்துக் கொண்டுள்ளார் என்ற கோணத்திலா சொல்ல வரீங்க?''

''சீ.. சீ..! நிறுத்துங்க. கொலைகாரி, கொலைகாரி என கூறுவதை நிறுத்தி திருமதி எட்ஜ்வேர் அல்லது ஜானேனு சொல்லுங்க. நீங்களும் நானும் ஒருவரைக் கொலையாளி என அறிவிக்க அங்கீகாரமற்றவர்கள். நீதிமன்றத்துக்குத் தான் அத்தனை அனுமதியும் உள்ளது'' என்று நிதானமாய், அதேசமயம் சாட்டை சொடுக்காய் பேசிய பொய்ரெட் தொடர்ந்தான்: ''அவர் குணம் அப்படிப்பட்டது! முதலில் - தன் கணவர் அகால மரணமடைந்து விட்டதாய் திடீரென்று அறிய வரும் ஒரு பெண்ணின் நிலையினை உங்களுக்கு வரித்துக் காட்டுகிறார். அழுகை - புலம்பல் - மயக்கம் - இத்யாதி, இத்யாதி! இவ்விதமாய் அவரது கலைக் குணம், வெறி பிடித்தாற் போன்ற பங்களிப்பினை மேடையேற்றி முடித்ததும், ஜானேயின் சுய குணம் விழிக்கின்றது. சிந்திக்கிறார். போலீஸிடம் வாயே திறக்கக் கூடாது - தனக்காக வக்கீல் வந்து பேசிக் கொள்ளட்டும் என உஷாராகிறார். சரியா! எனவே, அவர் கதறிக் கூப்பாடு போட்டதெல்லாம், தன் கொலையைத் தானே மறைக்க என்றெல்லாம், பாவம், தப்புக் கணக்குப் போட்டுக் கொண்டு குழம்பாதீர்கள், நீங்கள்! தன் கணவருக்கென்று இல்லை. வேறு யாருக்காவது இந்நிலை ஏற்பட்டிருந்தாலும், கதற ஆரம்பித்தது முதல் மயங்கி விழுந்தது வரை அத்தனையும் நடந்தேறியிருக்கும்! ஜானே வில்கின்ஸன் ஒரு பிறவி நடிகை என்பதைத் தானே இது காட்டுகின்றது. வேறெதுவும் இல்லை, ஜேக்கப்!''

பிரமித்துப் பார்த்துக் கொண்டிருந்த ஜேப், ''ஆனாலும், ஜானே, எதையோ மறைக்கத்தான் செய்கிறார். இது நிஜம்'' என்றார்.

''ஒரு முடிவா இருக்கீங்க. அதைவிட மனமில்லை'' என்றான் பொய்ரெட், நமுட்டுச் சிரிப்புச் சிரித்தபடி. கேட்டான்: ''எந்த ஒரு வாக்கியத்தையுமா அவர் பேசவில்லை? அப்படித்தான் நீங்க சொல்றீங்க! எந்த ஒரு வாக்குமூலமுமா தரலே?''

''தன் வக்கீல் வராது வார்த்தை உதிர்க்க மாட்டேனு சொல்லிட்டார். அவரது வேலைக்காரி, வக்கீலை தொலைபேசி மூலம் தொடர்புக் கொள்ள முயற்சித்தாள். என் இரண்டு போலீஸ்காரர்களை அங்குக்

காவலுக்கு வைத்துவிட்டு உங்களை நாடி வந்துள்ளேன். எனக்கென்னவோ, மேற்கொண்டு எந்த நடவடிக்கை எடுப்பதற்கு முன்னும், உங்களிடம் இந்த சமாச்சாரங்களையெல்லாம் முன் வைத்து விடுவதே புத்திசாலித்தனமானது எனப்பட்டது, திருமிகு பொய்ரெட்.''

''ம்! இருக்கலாம்! அதற்கு நன்றி! ஆயினும் உங்கள் முடிவில் நீங்கள் நிச்சயமாகத் தானே இருக்கிறீர்கள்?''

''ஆமாமாம்! அதில் எவ்வித மாற்றமுமில்லை! இருந்தாலும் நிரூபிக்க எத்தனை சாட்சிகள் வேண்டுமோ அத்தனை சாட்சிகள் தேடி நிற்கிறேன். இது குறித்து செய்திகள் தெறித்துச் சிதறப் போகின்றன - பத்திரிகைகளில்! எல்லா செய்தித்தாள்களிலும் இதே செய்தி தான் நிரம்பப் போகின்றது. நிருபர்கள் பற்றி நான் சொல்லி நீங்கள் அறிய வேண்டிய தேவையில்லை! நடந்தது பாதி என்றால், இவர்கள் கற்பனையில் வேறு மீதி வளர்ந்து வெளிவரும்!''

''செய்தித்தாள் பற்றிப் பேசும்போது..'' என்று ஆரம்பித்த பொய்ரெட், ''இதுகுறித்து நீங்க என்ன கணிக்கிறீங்க, இன்ஸ்பெக்டர்? இன்றைய காலைப் பத்திரிகையை நீங்க கவனம் கொடுத்துப் படிக்கலேனு நினைக்கிறேன்'' என்று தான் மடித்து வைத்திருந்த செய்தித்தாளின் ஒரு குறிப்பிட்ட பகுதியை சுட்டிக் காட்டி நீட்டினான்.

மேஜையின் குறுக்காய் கை நீட்டி தாளினைப் பெற்றுக் கொண்ட ஜேப், சப்தமாக, பொய்ரெட் விரல் பதித்துக் காட்டிய செய்தியைப் படித்தார்.

> சிஸ்விக் நதி தீரத்தில் அமைந்திருக்கும் தனது இல்லத்தில், விமரிசையான இரவு விருந்தினை அளித்தார், சர். மொன்டாகு கார்னர். இதனை பிரபலஸ்தர்கள் பலர் வந்திருந்து சிறப்பித்தனர். திரு ஜார்ஜ். திரு ஜேம்ஸ் ப்ளண்ட், விமர்சகர் திரு ஆஸ்கர், நடிகை ஜானே வில்கின்ஸன், இன்னும் பலர்.

இதைப் படித்து முடித்த கணத்தில், ஜேப், திணறிப் போய் பின்வாங்கினார். சற்றே சிந்தனையில் ஆழ்ந்தார். பிறகு தன்னிலை அடைந்தவராய், ''இச் செய்திக்கும், நாம் பேசிக் கொண்டிருக்கும் வழக்குக்கும் எந்தத் தொடர்பும் இருப்பதாய் எனக்குத் தோணலே'' என பேச ஆரம்பித்தார். ''இச் செய்தியெல்லாம், செய்தித்தாள்களுக்கு,

முன்னதாகவே நிகழ்ச்சி குறித்த அழைப்பிதழ் அனுப்பப்படும்போது இணைத்து அனுப்பப்பட்டு விடும். அதிலுள்ள பெயர்களை வைத்து இப்பெட்டிச் செய்தியைச் செய்து விடுவார்கள். ஜானே, அங்கு விருந்துக்கு சென்றிருந்தாலும் கூட, ஒரு வேளை, அது முடியும்போது, அதாவது சுமார் பதினொன்றரை மணி வாக்கில் சென்றிருந்தாலும் கூட, அவர் வந்திருந்ததாய் தான் செய்தி தருவார்கள். ஆகவே, நிருபர்கள் தரும் அனைத்துச் செய்திகளையும் வேத வாக்காய் நாம் எடுத்துக் கொள்ள முடியாது, திருமிகு பொய்ரெட். உங்களுக்குப் போய் இதையெல்லாம் நான் எடுத்து விளக்கவும் தேவையில்லை.''

''ரொம்பச் சரி தான். இச் செய்தி எனக்குள் என்னடா இது எனும் சிறு ஆவலைத் தூண்டி விட்டது. அதனால் தான் முன்வைத்தேன்.''

''இதுபோன்ற ஒற்றுமைகள் இடம் பெறத்தான் செய்யும். விடுங்கள். உங்களை ஏன் சீமான் எட்ஜ்வேர் வரச் சொன்னார்? காரணம் எனக்குத் தெரிந்தால் உதவிகரமாயிருக்கும்''

மறுத்துத் தலையசைத்தான் பொய்ரெட். ''சீமான் எட்ஜ்வேர் என்னை வரச் சொல்லி ஆளனுப்பலே. நான் தான் அவரைச் சந்திக்க அவகாசம் கேட்டு தகவல் அனுப்பியவன்.''

''உண்மையாவா? ஆச்சரியம், ஆச்சரியம்..! என்ன காரணத்திற்காக?''

பொய்ரெட் பதிலளிக்க விருப்பமற்றுத் தயங்கினான். பின் ''சொல்கிறேன்'' என்றான் மெதுவாய். ''ஆனா பதிலை என் வழியில் சொல்லத்தான் நான் விரும்பறேன்.''

ஜேப் தலைகுனிந்துக் கொண்டார். அவருக்காக நான் சற்றே பரிதாபப்பட்டேன். சில சமயங்களில் அதிகபட்ச எரிச்சலை உண்டுபண்ண வல்லவன் தான், இந்த பொய்ரெட்.

''ஓர் அனுமதி வேண்டும்'' என்று தொடங்கிய பொய்ரெட், ''ஒரு நபரை இங்கு வரவழைக்க உங்கள் அனுமதி தேவை'' என்றான்.

''யாரவர்?''

''ப்ரையன் மார்ட்டீன்.''

''சினிமா நடிகர்? இந்த வழக்கோடு அவருக்கு என்ன உள்ளது?''

''எனக்கென்னவோ'' என்று ஸ்திரமாய் குறிப்பிட்ட பொய்ரெட், ''அவர் வந்து சொல்லவுள்ள விஷயங்கள் உங்களுக்குத் தேவையானவையாக இருக்கும்னு எனக்கு நிச்சயமா தோணுது - என், உதவிகரமாய் கூட... அவ்வளவுதான், ஹேஸ்டிங்ஸ்..! உதவ முடியுமா?''

நான் தாமதியாது தொலைபேசி எண்கள் எழுதப்பட்டிருந்த பொய்ரெட்டின் சிறு நோட்டுப் புத்தகத்தை எடுத்துப் புரட்டி மார்ட்டீனின் எண்ணைக் குறித்துக் கொண்டு, ரிஸீவரை யெடுத்தேன். சில முறை மணியடித்துக் கொண்டேயிருந்தது. பின், தூக்கக் கலக்கக் குரலில், ''யாரது பேசுவது?'' என்று கேட்டார் மார்ட்டீன்.

இக் கேள்வியைக் கூறி, இதற்கு நான் என்ன பதில் சொல்வது என பொய்ரெட்டைக் கேட்டேன்.

''விஷயத்தைச் சொல்லலாம். சீமான் எட்ஜ்வேர் கொலை செய்யப்பட்டு விட்டதாகவும், என்னை வந்து உடனடியாய் பார்த்தால் அது எனக்குப் பேருதவியாய் போகும் என்றும் சொல்'' என்றார்.

மூடியிருந்த ரிஸீவரிலிருந்து என் கையை எடுத்துவிட்டு, மிக பவ்யமாய், பொய்ரெட் சொன்னவற்றை அப்படியே திருப்பிச் சொன்னேன்.

''ஓ, கடவுளே!'' என்ற மார்ட்டினின் அதிர்ச்சிக் குரலில், இத்தனை நேரம் இருந்த தூக்கக் கலக்கம் விலகிப் போயிற்று. ''ஆஹ், அவள் செய்து விட்டாள்! கொலையை! எதிர்பார்த்தபடியே! இல்லையா! இதோ, மறுநொடியில் அங்கிருப்பேன்.''

''என்ன சொன்னார்?'' என்ற பொய்ரெட்டுக்கு, மார்ட்டீன் சொன்னவற்றை, அவரின் பாவனையிலேயே சொல்லி முடித்தேன்.

''ஆஹ்!'' என்று வியந்தான் பொய்ரெட். சிறு திருப்தியடைந்தவர் போல் பட்டது. ''அவள் செய்து விட்டாள்! இப்படியா சொன்னார்? எனில், அது நான் நினைத்தபடிதான்! அது நான் நினைத்தபடிதான்! நான் நினைத்தபடியேதான்!''

ஜேப், பொய்ரெட்டை, விந்தையும் வியப்பும் கலந்து ஆர்வமாய்ப் பார்த்தார் - என்ன தான் அவர் சொல்கிறார் என விளங்காமல்.

அத்தியாயம் - 6

# தீர்வை

சொன்ன வார்த்தைக்குத் துளியும் களங்கம் ஏற்படாது நடந்துக் கொண்டார் ப்ரையன் மார்ட்டீன் - பத்தே நிமிடங்களில் எங்களுடன் வந்து சேர்ந்திருந்தார். அவர் வரும் வரை நாங்கள் காத்திருந்த காலத்தில், சம்பந்தமேயில்லாத விஷயங்களைப் பற்றித்தான் பொய்ரெட் பேசிக் கொண்டிருந்தானே ஒழிய, பொய்ரெட்டின் எண்ணத்தில் என்னதான் தோன்றியுள்ளது என அறியத் துடித்த ஜேப்'பின் ஆர்வத்தைக் கொஞ்சமும் சாந்தி செய்யவில்லை!

நாங்கள் கூறியிருந்த செய்தி, இளைய கதாநாயகனை நிலைகுலையச் செய்துள்ள விவரம் வெளிப்படையாகவே தெரிந்தது. மார்ட்டீனின் முகம், வெளிறிப் போய் அலறிக் கிடந்தது.

''அடக் கடவுளே..!'' என்றார் மார்ட்டீன், வந்ததும் பொய்ரெட்டைப் பார்த்தவுடன்! ''இது ஒரு கோரமான சம்பவம். நெஞ்சின் ஆழம் வரை உலுக்கப்பட்டு விட்டேன், திருமிகு பொய்ரெட் - ஆனா இச் செய்தியினால ஆச்சரியமடைந்தேன்னு மட்டும் சொல்ல மாட்டேன்! இதுபோல ஏதோ ஒன்று நடந்துத் தொலைக்கத்தான் போகுது எனும் அரை சந்தேகத்தில் தான் நான் இருந்து வந்தேன். நேற்றுக் கூட உங்ககிட்ட இப்படி நான் சொல்லலே! நினைவிருக்கா!''

''ஆமாமாம்'' என்ற பொய்ரெட், ''நேற்று நீங்கள் என்ன சொன்னீர்கள் என்று பூரணமாய் நினைவிலுள்ளது. இது - இன்ஸ்பெக்டர் ஜேக்கப், இவ்வழக்கின் தளபதி'' என்று அறிமுகம் செய்து வைத்தான்.

நிந்தித்து ஒதுக்கும் பார்வையை ஜேப்'பின் மீது செலுத்தினார் மார்ட்டீன். ''இன்ஸ்பெக்டரை வெச்சுக்கிட்டா என்னை வரச் சொன்னீங்க?'' என்று பொய்ரெட்டைப் பார்த்த மார்ட்டீன், ''எனக்கு இவ்வழக்கில் ஒன்றும் தெரியாது'' என்றார், உடனடியாய்.

''இன்ஸ்பெக்டர் இவர் எனும் விஷயத்தை ஆரம்பத்திலேயே என்னிடம் சொல்லியிருக்கலாமில்லையா'' என முணுமுணுத்தார். சற்சமயம், எதுவும் பேசப் போவதில்லை என்பது போல், இறுக்கமாக உதடுகளை மூடிக் கொண்டு அமர்ந்தார் மார்ட்டீன். பின், ''எனக்குப் புரியவே இல்லை'' என அமைதியைக் கலைத்த இளம் கதாநாயகன், ''என்னை எதுக்கு மெனக்கெட்டு தூக்கத்திலிருந்து எழுந்து வரச் சொல்லியிருக்கீங்கன்னு எனக்கு விளங்கவேயில்ல. இந்த வழக்கு விஷயம் எதுவும் என்னை சம்பந்தப்படுத்தாதவை'' என்றார்.

''எனக்கென்னவோ சம்பந்தமிருப்பதாய் தோன்றுகிறதே'' என்றான் பொய்ரெட், அழுத்தந்திருத்தமாய். ''கொலை வழக்குகளில், தனிப்பட்ட விருப்பு வெறுப்பு முரண்பாடுகளையெல்லாம், ஒரு பக்கமாய் மூட்டை கட்டி வைத்துவிட வேண்டும், திரு. மார்ட்டீன். திறந்த மனதுடன் பின்வாங்காது, பயங்கொள்ளாது நடந்துக் கொள்ள வேண்டும்.''

''இதோ பாருங்கள் பொய்ரெட். உங்க தொழில், உளவு பார்ப்பது. எனவே, நீங்கள், திறந்த மனத்துடன், பயங்கொள்ளாது இருந்துக் கொள்ளுங்கள். நான் ஜானேயுடன் நடித்திருக்கிறேன் - அவரை நன்றாய் எனக்குத் தெரியும் - இவற்றிற்கெல்லாம் மேலாக, அவருடைய ஆயிரம் நண்பர்களைப் போல நானும் ஒருவன்... அவர் என் சிறந்த தோழி. அவ்வளவே.''

''இருக்கலாம். ஆனால், அவரின் ஆயிரம் நண்பர்களைப் போல நீங்க கிடையாது. அவருக்கு நீங்களும் உங்களுக்கு அவரும் மிக முக்கியத்துவம் வாய்ந்தவர்கள். சீமான் எட்ஜ்வேர் கொலையுண்ட சமாச்சாரத்தினை அறிந்தக் கணம், அதிர்ச்சியில் இங்கிருந்து வானம் முட்ட குதித்து, ஜானே தான் எட்ஜ்வேரைக் கொன்றது எனும் முடிவுக்கே நீங்க வந்துட்டீங்க! இதை, அவரின் வேறெந்த நண்பரும் செய்திருக்க மாட்டார். அத்தனை நெருக்கம் உங்களிருவருடையது!'' என குறிப்புக் கொடுத்தான் பொய்ரெட்.

அழகன் ப்ரையன் மார்ட்டீனால், விழிக்க மட்டும் தான் இயன்றது.

''அப்படினா - '' என ஆரம்பித்த மார்ட்டீன், பொய்ரெட்டின் வலுவான ஊடுருவும் கண்களை நேருக்கு நேர் எதிர்கொள்ள இயலாமல், அவருக்கு மேல் இருந்த சுவர் பகுதியைப் பார்த்தபடி கேட்டார்: ''அப்படினா, என் ஆலோசனை தவறுனா சொல்ல வரீங்க? ஜானேவுக்கும் சீமானின் மரணத்துக்கும் எந்த சம்பந்தமும் இல்லைனா சொல்ல வரீங்க?''

ஜேப் இப்போது இடைபுகுந்தார். ''இல்லை, இல்லை திரு. மார்ட்டீன். தீர்க்கமாய் ஜானே தான் இக்குற்றத்தைச் செய்திருக்கிறார்.''

நாற்காலியில் இன்னும் வசதியாய் அமர்ந்துக் கொண்ட இளம் நடிகன், ''ஜானே..'' என்று வருத்தம் தோய குறிப்பிட்டார்.

''இதுபோன்ற சந்தர்ப்பங்களில் நட்புறவு நம்மை வென்று விட இடம் தந்துவிடக் கூடாது, திரு மார்ட்டீன்'' என்று திட்டவட்டமாக சொன்னான் பொய்ரெட்.

''அது சரி, ஆனா -''

''திரு மார்ட்டீன்'' என்று அவரைப் பேசவிடாது இடைமறித்த ஹெர்குல் பொய்ரெட், ''கொலை செய்து விட்டு அலைந்துக் கொண்டிருக்கும் ஒரு பெண்ணின் கட்சியிலா நீங்கள் சாய்ந்து இருக்க விரும்புகிறீர்கள்? கொலை - மனித குற்றங்களிலேயே மிகையான குற்றமாகக் கருதப்படும் தர்மத் தடுமாற்றம்'' என்று சுட்டிக் காட்டினான்.

ப்ரையன் மார்ட்டீன், புரிந்துக் கொள்ள மாட்டேன் என்கின்றீர்களே என்ற தொனியில் பெருமூச்செறிந்தார். ஜானே குறித்த தன் வருத்தத்திற்கான காரணமே வேறு என்று, அதை முன்வைத்தார். ''உங்க ரெண்டு பேருக்கும் புரியவேயில்லை. ஜானே ஒரு கொலைகாரி அல்ல. இதைப் புரிஞ்சுக்கோங்க. எது தவறு, எது தவறல்ல என்ற பிரித்தறிதலே தெரியாதவர் அவர். திரு. பொய்ரெட்! இதைத்தான் உங்களிடம் நான் விவரித்துச் சொன்னேனே! அதை ஏன் இன்ஸ்பெக்டருக்கு நீங்க விளக்கியிருக்கக் கூடாது?! எனவே, நடந்துள்ள குற்றத்திற்கு, தர்ம வழியில் அவர் பொறுப்பே கிடையாது.''

''இது, நீதிமன்றம் பதில் சொல்ல வேண்டிய கேள்வி, திரு மார்ட்டீன்'' - ஜேப்.

''மார்ட்டீன்'' என்று கருணையாய் அழைத்த பொய்ரெட், ''அவர் தான் கொலையாளினு உங்களிடமிருந்தே வார்த்தை வாங்க நடக்கும் விசாரணை அல்ல இது. ஏற்கனவே ஜானே தான் கொலையை செய்தது என குற்றஞ்சாட்டப்பட்டாயிற்று. உங்களுக்குத் தெரிந்துள்ள ஜானே பற்றிய விஷயங்களை அறிய விரும்புகிறோம். அவ்வளவே. தவறான கோணத்தில் தயவு செய்து பார்த்து அஞ்சாதீர்கள். சொல்ல மாட்டேன் என வாயைக் கட்டிக் கொண்டு இருந்து விடவும் முடியாது. பொது நல சேவையாய் துப்பறிவோரிடம் உண்மையைச் சொல்ல வேண்டியது உங்கள் கடமை, யங் ஹீரோ!'' என்றான்.

நொடிகள் சில நழுவின. ''நீங்க சொல்வதுதான் சரி'' என்று ஆசுவாசமானார் மார்ட்டீன். ''என்னிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறீர்கள்?''

பொய்ரெட் நிமிர்ந்து ஜேப்'பைப் பார்த்தான்.

தொண்டையை செருமிக் கொண்டே ஜேப், ''திருமதி எட்ஜ்வேர்... இனி தான் திருமதி கிடையாதே. எனவே, ஜான் வில்கின்ஸன் என்றே குறிப்பிடுகிறேன்...! ஜானே, தன் கணவருக்கு எதிராக, விரோதமாக, ஒரு பிரகடனம்போல் அறிவித்த வார்த்தைகளை நீங்கள் கேட்டதுண்டா?'' என்று தன் முதல் கேள்வியை முன்வைத்தார்.

''ஆமாம். பல முறை!''

''என்ன சொன்னார்?''

''அவளுடைய விடுதலையை சீமான் எட்ஜ்வேர் அளிக்க மறுக்கும் பட்சத்தில், வெட்டி சாய்த்து விடுவேன் என்று சொல்வார்.''

''அது விளையாட்டுக்கு அல்ல, இல்லையா?''

''விளையாட்டுக்கு அல்ல. நிஜமாத்தான் சொன்னார் என்பது என் கணிப்பு. வாடகை டாக்ஸியை அமர்த்திக் கொண்டு நேராக சீமான் அரண்மனைக்குச் சென்று கொன்றே விடுவேன் என்று கூட அவர் ஒருமுறை சொல்லியதுண்டு. அப்போ நீங்களும் தானே இருந்தீங்க, திரு பொய்ரெட்!''

என் உயிர் நண்பனை, உதவி வேண்டி பார்க்கும் பரிதாபப் பார்வையைப் பார்த்தார், மார்ட்டீன்.

பொய்ரெட் சம்மதமாய் தலையசைத்து, நம்பிக்கையூட்டினான்.

ஜேப் தன் கேள்விகளோடு முன்னேறிக் கொண்டிருந்தார்: ''வேறு ஓர் ஆண் மகனை மணந்துக் கொள்வதற்காகத் தான், ஜானே விவாகரத்து வேண்டியதாய், இப்ப எங்களுக்குத் தெரிய வந்திருக்கு. அந்த ஆடவன் யார்னு உங்களுக்குத் தெரியுமா?''

மார்ட்டீன் தெரியும் என தலையசைத்துக் காட்டினார்.

''யாரது?''

''மெர்ட்டான் மாகாணத்து இளைய பிரபு.''

''மெர்ட்டான் மாகாணத்து இளைய பிரபு? ஊஹ்..!'' இன்ஸ்பெக்டர் ஆச்சரிய விசிலடித்தார். ''எத்தனை பெரிய விளையாட்டெல்லாம், இந்த நடிகை ஆடுது! இங்கிலாந்தின் மாபெரும் பணக்காரப் புள்ளிகளில் முதலிடம் வகிப்பவரன்றோ, இவர்!''

இன்ஸ்பெக்டரின் கருத்துக்கு ஆம் என, உற்சாகமற்ற நிலையின் உச்சியிலிருந்து தலையசைத்தார் மார்ட்டீன்.

இப்பொழுது பொய்ரெட்டை கவனித்தேன். அவனின் குணாதிசயத்துள் என்ன புகுந்துக் கொண்டு இருக்கின்றது என என்னால் அறிந்துக் கொள்ள முடியவில்லை. நாற்காலியில் படுத்தாற் போல் வக்கணையாய் சாய்ந்துக் கொண்டு, இணைந்திருந்த அவனின் இரு உள்ளங்கைகளிலும் விரல்கள் லயத்தோடு சிறு தாளமிட்டுக் கொண்டே இருப்பதைப் பார்க்கும்போது, தனக்கு மிக இஷ்டமான பாடகரின் இசைத்தட்டினை சுழல விட்டு அதிலிருந்து வெளியாகும் பாடலின் பரிபூரண இசையை அங்கீகரிக்கும் ஒரு ரசிகனின் திருப்தி தான் அவனிடமிருந்து வெளிப்பட்டது.

ஜேப் தொடர்ந்துக் கொண்டிருந்தார்!

''ஜானேயின் கணவர் அவரை விவாகரத்து செய்ய மாட்டாரா என்ன?''

''மாட்டார். திட்டவட்டமாக மறுத்து விட்டார்.''

''அது நிஜம் தானா?''

''ஆமாம்.''

''இப்பொழுது'' என்று திடீரென உரையாடலின் வளர்ச்சியில் நுழைந்துக் கொண்ட பொய்ரெட், ''இங்கு நான் நுழைத்துக் கொள்ள விரும்பறேன், அன்பு ஜேப்! எட்ஜ்வேரைப் போய் சந்தித்து எப்படியாவது அவரை விவாகரத்துக்கு சம்மதிக்க வைக்க வேண்டும் என, நான், ஜானே வில்கின்ஸனால் கேட்டுக் கொள்ளப்பட்டேன். இதற்காக சீமானைச் சந்திக்க இன்று காலை எனக்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறது'' என்றான்.

இதைக் கேட்ட மார்ட்டீன் மறுத்துத் தலையசைத்து ''போய் பார்த்திருந்தாலும் ஒரு பிரயோஜனமும் கிடைத்திருக்கப் போவதில்லை!'' என நிச்சயமாய் சொன்னார். ''எட்ஜ்வேர் ஒப்புக் கொண்டிருக்கவே மாட்டார்.''

''அப்படியா நினைக்கிறீங்க?'' - என்று இனிமையாய் பார்த்தான் பொய்ரெட்.

''இதில் இரண்டாவது கருத்துக்கு இடமே கிடையாது. ஜானேவுக்கும் இது உறுதியா தெரியும். உங்களிடம் இப்படிப் பணித்திருந்தாலும், உங்களாலும் வெற்றி பெற முடியாது என்று தான் அவள் நினைத்திருப்பாள். இருந்தாலும், உங்க பேச்சு வன்மையின் மீதுள்ள அபரிமித நம்பிக்கையால் சிறு முயற்சி செய்திருக்கலாம். - அவ்வளவே! விவாகரத்துக்கு சீமான் எட்ஜ்வேர் ஒப்புதல் தருவார் என்ற

நம்பிக்கையை முழுவதுமாய் இழந்து விட்டவள், ஜானே. விவாகரத்து தராது, சித்திரவதை செய்ய வேண்டும் எனும் வகையைச் சேர்ந்தவர் எட்ஜ்வேர்.''

பொய்ரெட் இதழ் விரியாது சிரித்தான். அவன் கண்கள் திடீரென பிரகாசம் கண்டன. ''உங்கள் கணிப்பு பூராவும் தவறு, என் இனிய ஹீரோ! நான் நேற்று சீமான் எட்ஜ்வேரைப் போய்ப் பார்த்துப் பேசியிருந்தேன். அவர் விவாகரத்துக்கு சம்மதித்தார்.''

இச் செய்தியைக் கேட்ட மார்ட்டீன், செயலற்று குழப்பமடைந்துப் போனார் என்பதில் துளியும் சந்தேகம் இல்லை. முகத்திலிருந்து கண்கள் பிதுங்கி வெளியே வந்துவிடும் என்பது போல, பொய்ரெட்டை அப்படி விழித்துப் பார்த்துக் கொண்டே போனார் மார்ட்டீன்!

''என்ன.. என்ன! நீங்கள்... நீங்கள்... நேற்று எட்ஜ்வேரைப் போய்ப் பார்த்தீர்களா?'' - வாயிலிருந்து துமிகள் சிதறும்படியான கட்டுப்பாடற்ற பரபரப்பு மிகுந்து கதறினார் மார்ட்டீன்!

''பனிரெண்டே கால் மணிக்கு'' என்று இயந்திர கதியில் சொன்னான் பொய்ரெட்.

''அப்போது விவாகரத்துக்கா அவர் ஒப்புக் கொண்டார்?''

''அப்போது விவாகரத்துக்கே அவர் ஒப்புக் கொண்டார்!''

''எனில் அதை உடனே நீங்கள் ஜானேயிடம் சொல்லியிருக்க வேண்டும்'' என கட்டளையாய் எகிறினார் மார்ட்டீன்.

''சொன்னேன், திரு மார்ட்டீன்.''

''சொன்னீங்களா?'' என மார்ட்டீன் வாயைப் பிளக்க, ''சொல்லிட்டீங்களா!'' என ஜேப்'பும் தன் பங்குக்கு வாயைப் பிளந்தார்.

பொய்ரெட் இன்னும் தன் புன்னகை மாறாது காணப்பட்டான். ''இதனால், நான் கூறும் இத்தகவலால், ஜானேயிடம் நாம் கண்ட கொலைக்கான இலக்கு, சிதைந்துப் போகிறது, இல்லையா?'' என சன்னமாய் பேசி உணர்த்தினான் துப்பறியும் நிபுணன். ''இப்பொழுது, திரு மார்ட்டீன் இதைக் கொஞ்சம் கவனியுங்க'' என்றபடி, இன்ஸ்பெக்டரிடம் காட்டிய அதே செய்தித்தாளின் பத்தியை, மார்ட்டீனிடம் காட்டினான் பொய்ரெட்.

ரொம்பவெல்லாம் ஈடுபாடு தராது அதனைப் படித்தார் மார்ட்டீன். படித்தவர், ''இதனாலென்ன'' என்று குறிப்பிட்டு விட்டு, ''நேற்று மாலையில் தானே சீமான் எட்ஜ்வேர் சுடப்பட்டார்?'' என்று கேட்டார்.

''அவர் குத்திக் கொல்லப்பட்டுள்ளார். சுட்டு அல்ல'' என திருத்தினான் பொய்ரெட்.

மார்ட்டீன் மெதுவாய் தாளினை மேஜையில் வைத்துவிட்டு, ''இச் செய்தியினால் பலனேதுமில்லை'' என்றார். ''ஜானே, அந்த விருந்துக்குப் போகலை.''

''அதெப்படி உங்களுக்குத் தெரியும்?''

''யாரோ சொன்னாங்க.''

''இது கதை'' என்றான் பொய்ரெட் சிறு சிந்தனையோடு.

இப்படிக் குறிப்பிட்ட பொய்ரெட்டை சிறு ஆவல் பொங்கப் பார்த்தார் ஜேப், ''இவ்வழக்கில் உங்களின் நிலைப்பாடு எனக்கு புதிராகவே உள்ளது, திருமிகு பொய்ரெட்! அந்த நடிகை குற்றவாளியாக இருந்துவிடக் கூடாதுனே நீங்க மிகவும் வேண்டுவதாய் தோணுது.''

''சே, சே, இன்ஸ்பெக்டர்! நான், நீங்க நினைப்பது போல, உண்மையை மறைக்கும் ஒரு தடுப்புச் சுவரல்ல. வெளிப்படையாய் சொல்ல வேண்டுமென்றால், நீங்கள் விவரித்த கோணத்தில் பார்த்தா, இவ்வழக்கு, மூளையை அப்படி குழப்புது.''

''என்ன அப்படி குழப்புது? எனக்கு எந்தக் குழப்பமும் இல்லையே!''

இதற்கு, பொய்ரெட்டின் உதடு வரை வார்த்தைகள் வந்து துடிப்பதை என்னால் கிரகிக்க முடிந்தது. மற்றவர் கவனித்து விடாதபடி அந்நடுக்கத்தை மறைத்துக் கொண்டான் அவன். தொடர்ந்தான்: ''ஓர் இளம் பெண் தன் கணவரிடமிருந்து சட்ட ரீதியாய் விலகி வாழ விரும்புவதாய் நீங்க சொல்றீங்க. இக்கருத்தினை நானும் ஆட்சேபிக்கலே. என்னிடமும் இதையேதான், ஜானே, விலாவாரியாக சொன்னார். இதை எப்படி அவர் அடையப் போகிறார்? பல சாட்சிகளுக்கு முன்னால், நல்ல தீர்க்கமான உயர் குரலில், தன் கணவனைக் கொன்றாவது தான் வேண்டும் விலக்கினை அவரிட மிருந்து அடைந்துவிடப் போவதாய், பற்பல முறை முழங்கி யிருக்கிறார். அப்படியே அவர் செஞ்சுட்டதாகவும் முடிவாயிருக்கீங்க. உங்க கூற்றுப்படி, அவர் அரண்மனைக்குப் போறார் - வந்திருப்பது ஜானே என்று வேறு, பலரறிய அறிவிக்கிறார் - எட்ஜ்வேரைக் குத்தி விட்டு வெளியேறுகிறார். இதையெல்லாம் என்னனு சொல்ல வரீங்க, இன்ஸ்பெக்டர்? இதில் கொஞ்சமேனும் பகுத்தறிவு உள்ளதா?''

''முட்டாள்தனமான செயல் தான்.''

''முட்டாள்தனம்? இல்லை. இது, அதையும் விட தரந்தாழ்ந்த சித்த சுவாதீனமோ, மன திடமோ அற்ற செயல்!''

''சரி'' என்றார் ஜேப், எழுந்துக் கொண்டபடி. சட்டென கிளம்பினார். ''நான் சவாய்க்கு திரும்ப வேண்டிய தருணம் இது.''

''நானும் உங்களுடன் வருவதற்கு அனுமதி கிடைக்குமா?''

ஜேக்கப் மறுப்பேதும் சொல்லவில்லை. நாங்களிருவரும் அவருடன் புறப்பட்டோம். இவ்வழக்கு எப்படியெல்லாம் போகப் போகின்றதோ என்ற குழப்பத்தால், எங்களது துணையைப் பிரிய மனமில்லாது பிரிந்தார், மார்ட்டீன். மிக அதீதமான நரம்பதிர்விலும் குழப்பக் கிளர்ச்சியிலும் அவரிருப்பது தெரிந்தது. இவ்வழக்கு சம்பந்தமாய் ஏற்படும் அனைத்து முன்னேற்றங்களும் அல்லது பின்னடைவுகளும், அவருக்குத் தெரியப்படுத்த வேண்டும் என கெஞ்சாத குறையாய் கேட்டுக் கொண்டார்.

நாங்கள் வெளியேறிக் கொண்டிருந்தபோது, ''ஏன் இப்படி நடுநடுங்கிப் போகிறான், இவன்'' என்று சொன்னார் இன்ஸ்பெக்டர் ஜேப்.

பொய்ரெட் பதிலளிக்காது ஏற்றுக் கொண்டான்.

சவாயில், மிகச் சரியான வக்கீல் உடையில் அப்போதுதான் வந்து இறங்கியிருந்த ஒருவரை நுழைவாயிலின் வரவேற்பு மேஜையருகே பார்த்த நாங்கள், வேறெங்கும் நேரத்தை வீணடிக்காது, நேராக ஜானேயின் பிரத்யேக அறையை நோக்கி விரைந்தோம்.

ஜேப் அங்கிருந்த அவரது போலீஸ்காரன் ஒருவனிடம், ''ஏதாவது?'' என்று கேட்டார், ரகசிய அதிகாரக் குரலில்.

''தொலைபேசியை உபயோகிக்க வேண்டும்னு கேட்டார்.''

''யாருக்கு போன் செஞ்சார்?'' - ஆர்வமாய்க் கேட்டார் ஜேப்.

''துக்கம் அனுஷ்டிக்க ஏற்பாடு செய்யும் ஓர் அலுவலகத்துக்கு.''

இதுதான் பாக்கி என்பது போல் கண்களை உருட்டிக் கொண்டார் ஜேப். அறையின் உள்ளே நுழைந்தோம்.

விதவைக் கோலத்துள் புகுந்திருந்த சீமான் எட்ஜ்வேரின் மனைவி ஜானே வில்கின்ஸன், தலையில் அணிந்திருந்த தொப்பியை, எதிரேயிருந்த கண்ணாடியைப் பார்த்து சரி செய்துக் கொண்டிருந்தார். துக்கம் அனுஷ்டிக்க வாடிக்கையாக உடுத்தப்படும் கறுப்பு உடையிலிருந்தார். எங்களைக் கண்டதும் பளீர் சிரிப்பளித்து வரவேற்றார்.

''திருமிகு பொய்ரெட், எத்தனை இனிமையானவர் நீங்கள் - ஆனா இவரோட வந்திருக்கீங்களே! ஓ, திரு மாக்ஸன்..! (தனது வக்கீலை நோக்கி) நீங்க இத்தனை துரிதமா வந்துவிட்டதற்கு ரொம்ப சந்தோஷம். வாங்க, வந்து எனக்கு அருகிலேயே உட்கார்ந்துக்குங்க. எந்தக் கேள்விகளுக்கெல்லாம் நான் பதில் தரணும்னு அறிவுறுத்துங்க! இதோ, இந்த மனுஷன் இருக்கிறாரே..'' என்று ஜேக்கப்பைச் சுட்டிக் காட்டி, ''நான் தான் இங்கிருந்து இன்று காலை படையெடுத்துப் போய், பிரபு எட்ஜ்வேரைக் குத்தி சாய்த்து வந்ததாய் விளம்பரப்படுத்திக் கிட்டிருக்கார்'' என்றார்.

''அது நேற்று இரவு, திருமதி ஜானே'' என்றார் ஜேப்.

''இன்று காலைனீங்க.. பத்து மணினும் சொன்னீங்க?''

''பத்து மணி PM என்றேன்.''

''ஒழுங்கா சொல்லித் தொலையக் கூடாதா? காலை பத்தோ, இரவு பத்தோ... எதுவோ.. அது நான் சம்பந்தப்படாதது.''

''இப்பொழுதுதான் மணி பத்தாகப் போகுது திருமதி ஜானே. எனில், எப்படி நான் காலை பத்துனு சொல்லியிருக்க முடியும்?''

ஜானேயின் கண்கள் மிக விரிவாக திறந்தன. ''காலை பத்து? இப்பதான் ஆகுதா? என் இறைவா! இத்தனை சீக்கிரத்தில் நான் படுக்கையிலிருந்து எழுந்ததே கிடையாது.''

இப்பொழுது, ''இன்ஸ்பெக்டர்'' என அலுவலகக் குரல் ஒலிக்க அழைத்த வக்கீல் மாக்ஸன், ''மிக அதிர்ச்சியான, வருந்தத்தக்க சீமானின் மரணம் நிகழ்ந்த தருணத்தை எனக்குச் சொல்ல முடியுமா?'' எனக் கேட்டார்.

''நேற்றிரவு சுமார் பத்து மணியை ஒட்டி.''

''அப்பொழுது நான் ஒரு விருந்திலிருந்தேன்'' என்று இடைபுகுந்த ஜானே, ''ஆஹ்..'' என லேசாய் தன் தலையிலடித்துக் கொண்டு, வாயை சட்டென தனது வலது உள்ளங்கையால் மூடிக் கொண்டார். ''உங்களனுமதியின்றி நான் பேசியிருக்கவே கூடாது'' என்றார் வக்கீலைப் பார்த்து. ஜானேயின் கண்கள் பரிதாபமாய் மன்னிப்பு வேண்டின.

''நேற்றிரவு பத்து மணிக்கு நீங்கள் ஒரு விருந்தில் இருந்திருக்கும் பட்சத்தில், அந்த முக்கியமான தகவலை இன்ஸ்பெக்டரிடம் தெரிவிக்க எந்தவிதமான ஆட்சேபணையும் இல்லை, திருமதி ஜானே!''

''யெஸ்'' என்றார் ஜேப். ''நேற்று மாலையிலிருந்து நீங்கள் எங்கெல்லாம் சென்று வந்தீர்கள் எனும் ஓர் அட்டவணையைத்தான் உங்களிடமிருந்து நான் எதிர்பார்க்கிறேன்.''

''அப்படிக் கேட்கவேயில்லை. நீங்கள் மாற்றிப் பேசாதீர்கள். இத்தனை விளக்கமாகவா பேசினீர்கள்? PM என நீங்கள் சொன்னது கூட கேட்காதவாறு பேசிவிட்டு...! எப்படியாப்பட்ட அதிர்ச்சியை எனக்குத் தந்தீர்கள்! மரணித்து விட்டது போல மயங்கி விழுந்து விட்டேன், திரு. மாக்ஸன்!''

ஜேப் தொடர்ந்தார்: ''அந்த விருந்து குறித்து திருமதி ஜானே?''

''திரு மொன்டாகு அளித்த விருந்து. சிஸ்விக்' கில் நடந்தது.''

''எத்தனை மணிக்கு நீங்க அங்கே போனீங்க?''

''எட்டரை மணிக்கு விருந்து என ஏற்பாடாகியிருந்தது.''

''இங்கிருந்து நீங்க புறப்பட்டபோது, மணி?''

''எட்டு வாக்கில் கிளம்பினேன். போகும் வழியில் 'பிக்காடில்லி' வளாகத்திற்குச் சென்று அமெரிக்கா கிளம்பும் என் அமெரிக்க நண்பரான திருமதி வேன் டுஸன் என்பவருக்கு நல்வாழ்த்து சொல்ல சில நொடிகள் எடுத்துக்கிட்டேன். எட்டே முக்காலிருக்கும் - அப்போதுதான் சிஸ்விக் சென்றடைந்தேன்.''

''எத்தனை மணிக்கு அங்கிருந்து கிளம்பினீர்கள்?''

''பதினொன்றரை வாக்கில்.''

''கிளம்பியதும் நேரடியாக இங்கு வந்துட்டீங்களா?''

''ஆமாம்.''

''வாடகைக் காரிலா?''

''இல்லை. என் சொந்தக் காரில். டைம்லர் எனும் அலுவலகத்திடமிருந்து வாடகைக்கு எடுத்திருந்தேன்.''

''விருந்தில் கலந்துக் கொண்டிருந்தபோது, இடையே, வேறெங்கும் நீங்கள் சென்று வரவில்லை, இல்லையா?''

''ம்..'' என சிந்தித்த ஜானே, ''அதாவது..'' என்று இன்னும் சற்று தீவிரமாய் மூழ்க, ''ஆக, நீங்கள் விருந்தின் இடையே நகர்ந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டார் ஜேப்.

வேட்டை நாய் ஒன்று துணிச்சலாய் எலியொன்றின் மீது பாய்ந்த கேள்வி.

''நீங்கள் கேட்பதன் அர்த்தம் எனக்கு விளங்கலே. விருந்திலிருந்த போது தொலைபேசி வந்திருப்பதாய் அழைக்கப்பட்டேன்.''

''தொலைபேசியில் பேசியது?''

''ஏமாற்று அழைப்புனு நினைக்கிறேன். மோசடி. எட்ஜ்வேரின் மனைவியா என்றது ஒரு குரல். ஆமாம், சரி தான் என்றேன் நான். சில சிரிப்பொலிகள் கேட்டன. இணைப்புத் துண்டிக்கப்பட்டது.''

''தொலைபேசியில் பேச, விருந்து இடம் பெற்ற வீட்டை விட்டு வெளியே வந்தீங்களா?''

ஜானேயின் கண்கள் ஆச்சரியத்தில் விரிந்து, ''நிச்சயமாய் இல்லை'' என்று உணர்த்தின.

''சாப்பாட்டுக் கூட்டத்திலிருந்து எவ்வளவு நேரம் நீங்கள் விலகிப் போயிருந்தீங்க?''

''ஓரிரு நிமிடங்கள்.''

ஜேப், இதற்கு பிறகு சிதறிப் போனார். இத்தனை நேரம் ஜானே சொன்ன வார்த்தைகளில் ஒன்றே ஒன்றைக் கூட நம்புவதற்கு இன்ஸ்பெக்டர் தயாரில்லை என்பதை ஐயமற அறிய முடிந்தது. ஆனாலும், ஜானே சொன்ன கதை, முழுதையும் கேட்ட பிறகு கூட, அது மெய்யென்றோ அல்லது பொய்யென்றோ ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளும் வரை, ஜேப்'பால் ஒன்றும் செய்ய இயலாது.

நன்றி தெரிவித்துக் கொண்டு அடங்கினார் ஜேப். எழுந்துக் கொண்டார்.

நாங்களெல்லோரும் கூட கிளம்ப எத்தனித்தோம். ஆனால், ஜானே பொய்ரெட்டை மட்டும் இருக்கச் சொன்னார்.

''திருமிகு பொய்ரெட்... ஓர் உதவி செய்ய முடியுமா?''

''நிச்சயமாய், திருமதி ஜானே!''

''என் சார்பாக, பாரீஸிலிருக்கும் மெக்கான் மாகாணத்து சிற்றரசருக்கு ஒரு கடிதம் அனுப்பிடுங்களேன். நடந்துள்ள சம்பவம் அவருக்கும் தெரிந்தாகணும். நானே அனுப்ப எனக்கு மனமொப்பவில்லை. உடைந்துப் போன விதவைக் கோலத்தில் இன்னும் ஓரிரு வாரங்கள் அலைய வேண்டும் போலுள்ளதே.''

''கடிதமெல்லாம் அனுப்ப வேண்டியது அனாவசியம் திருமதி ஜானே! அங்கிருக்கும் செய்தித்தாள்களில் கூட இச் செய்தி வெளியாகியிருக்கும்.''

''அதுவும் சரிதான். நீங்க புத்திசாலி. செய்தித்தாள்கள்தான், இருப்பதையும் இல்லாததையும் வரிந்துக் கட்டிக் கொண்டு எழுதித் தள்ளியிருக்குமே! கடிதமெல்லாம் அனுப்பாமலிருப்பதே சரி. எல்லாம் நினைச்சபடியே முடிஞ்சிருந்தாலும், இந்த பாழாய்ப் போன

சமுதாயத்திற்காக, நான் சற்று அடக்கி வாசிக்க வேண்டியதாயுள்ளது. நான், தன் கணவனின் மரணத்தில் நொறுங்கிப் போயிருக்கும் ஒரு விதவை போல நடிக்க வேண்டும் - அதுவும் மதிப்புக் குன்றாமல், இல்லையா! என்னத்தை செய்வது? மலர் வளையங்கள் அனுப்பலாம்னு பார்த்தேன். ஆனா இன்னமும் அனுப்பவில்லை. இறுதிச் சடங்குகளுக்குப் போய்த் தானே ஆக வேண்டும்? என்ன நினைக்கிறீங்க?''

''முதலில், விசாரணைக்கு நீங்க போக வேண்டியிருக்கும், திருமதி ஜானே.''

''இப்பொழுது உடனே இருக்குமா?''

''ஆமாம். எந்த நொடியில் வேண்டுமானாலும் ஆரம்பிக்கலாம்.''

''சரி'' என்று பொய்ரெட் சொன்ன கருத்தை ஆழ்ந்து ஏற்றுக் கொண்டார் ஜானே. ''அந்த ஸ்காட்லாண்ட் அலுவலக இன்ஸ் பெக்டரைக் கண்டாலே எனக்குப் பிடிக்கவில்லை. என்னைக் கொன்று போட்டிருப்பார், தெரியுமா திருமிகு பொய்ரெட்?''

''அப்படியா?''

''நல்ல வேளையாக மனதை மாற்றிக் கொண்டு நேராக விருந்துக்குச் சென்றது என் அதிர்ஷ்டம். அதனால் தான் இப்பொழுது நான் தப்பிக்கிறேன். இல்லையேல் என்னைத் தூக்கிலேயே ஏற்றியிருப்பார், இந்த இன்ஸ்பெக்டர்.''

வெளியேறிக் கொண்டிருந்த பொய்ரெட்டின் கால்கள் தன் முதுகுக்குப் பின்னால் ஒலித்த ஜானேயின் இவ்வார்த்தைகளால் நின்றன. அப்படியே ஒரு சுற்றுச் சுற்றித் திரும்பிய பொய்ரெட், ''என்ன சொன்னீர்கள் திருமதி ஜானே? மனதை மாற்றிக் கொண்டு விருந்துக்குச் சென்றீர்களா?'' என்று கேட்டான்.

''ஆமாம். போக வேண்டாம்னு தான் நினைச்சிருந்தேன். நேற்று மதியம், தலையையே உடைத்துத் தூக்கி எறிந்து விடுவது போல, அப்படி ஓர் உயிர் போகும் தலைவலியோடு துடிச்சிக்கிட்டிருந்தேன்.''

உமிழ் நீரை சில முறை விழுங்கிக் கொண்டான் பொய்ரெட். என்ன பேசுவதென்றே தெரியாத கஷ்டத்துக்கு பொய்ரெட் தள்ளப்பட்டான்.

''இதனை... இதனை... வேறு யாரிடமாவது சொன்னீங்களா?'' - கேட்டான்.

''ஆமாம். சொன்னேன். என் வாயா நிற்கும்! விருந்துக்கு நுழைந்ததும் உயர் ரக தேநீர் உபசரிப்பு அளிக்கப்பட்டது. ஏத்துக்கிட்டேன். பிறகு எல்லோரும் என்னை மதுபான விருந்துக்குக் கூப்பிட்டாங்க. மறுத்தே

விட்டேன். தலையை இரண்டு பாகமாய் உடைத்துப் போடுவதைப் போல, தலைவலி பிராணனை வாங்குகிறது என்றும், எனவே, மதுபான விருந்துக்கு மட்டுமல்ல, இரவு உணவினையும் நான் ஒதுக்கி விடப் போவதாய் சொன்னேன். நேராய் வீட்டுக்குக் கிளம்ப உள்ளதாயும் சொன்னேன்.''

''எது உங்க மனசினை மாற்றி விருந்துக்குப் போகச் செய்தது, மிஸஸ் ஜானே?''

''எல்லீஸ் தான் வற்புறுத்தினா. முழுக்கப் போகாமலிருப்பது தவறு என்றும் போய் தலையைக் காட்டிட்டு வந்து விடும்படியும் அவ தான் வற்புறுத்தினா. இந்த வயதான தாத்தா திரு மொன்ட்டாரு இருக்கிறது பாருங்கள்... போகலைனா தவறாகவும் கோபமாகவும் எடுத்துக்கும். கொழுத்த பணக்காரர் - எனவே விரோதத்தினை சம்பாதித்துக் கொள்ளவும் முடியாது. மெர்ட்டான் இளைய பிரபுவை மணமுடித்த பிறகு இந்த சங்கடங்கள் எல்லாவற்றிலிருந்தும் அமைதி கிடைத்து விடும்.''

''எல்லீஸை நீங்க ரொம்பவும் சார்ந்தே வாழறீங்க!'' என்றான் பொய்ரெட், மிக முக்கியத்துவம் தந்து.

''ஆமாம்'' என்று ஆமோதித்த ஜானே, ''இன்ஸ்பெக்டர், இதுவரை பேசிய அத்தனை உரையாடலையும் பதிந்து வைத்திருப்பார், இல்லையா?'' என்று கேட்டார்.

''பதிவது - பதியாதது... எல்லாம் ஒன்றுதான். ஆனா ஒண்ணு நிச்சயம்; இதுவரை நடந்துள்ள அத்தனையும், ஒருவனைத் தீவிரமா யோசிக்க வைக்கும். யெஸ்... ஆழமா யோசிக்க வைக்கும்.''

''எல்லீஸ்'' - அழைத்தார் ஜானே. அழைக்கப்பட்ட வேலைக்காரி, அடுத்த அறையிலிருந்து வந்தாள்.

''நேற்றிரவு நீ என்னை எழுப்பி விரட்டி விருந்துக்கு அனுப்பியது, என் அதிர்ஷ்டம் என்கிறார், திருமிகு பொய்ரெட்.''

பொய்ரெட்டுக்கும், ஜானே பேசிய பாராட்டுரைக்கும் துளியும் முக்கியத்துவம் தராது, ''முக்கியமானவர்கள் தரும் விருந்தினை யெல்லாம் ஒதுக்குவது மிகத் தவறு, முதலாளியம்மா'' என்றாள் எல்லீஸ். ''ஆனா நீங்க முக்கியமானவர்கள் தரும் விருந்துகளைத் தள்ளி வைத்தே வாழறீங்க. இதை அவனுங்க சுலபத்துல மறக்க மாட்டானுங்க... மன்னிக்கவும் மாட்டாங்க. சமயம் பார்த்து கழுத்தறுத்து விடுவானுங்க.''

நாங்கள் உள்ளே நுழையும் போது தலையில் போட்டுப் பழகிக் கொண்டிருந்த தொப்பியினை இப்பொழுது கையிலெடுத்துக் கொண்டார் ஜானே. மறுபடியும் தலையில் பதித்து நிறுத்த முயன்றார்.

''கறுப்பு நிறமே எனக்குப் பிடிப்பதில்லை'' என்றார் வெறுப்பாய். ''நான் கறுப்பே உடுத்துவது கிடையாது. ஆனால், உண்மையாய் வருந்தும் ஒரு விதவையாய் காட்டிக் கொள்ள வேண்டுமாயின், வேறு வழியில்லை... கறுப்பினைப் போட்டுத் தான் தீர வேண்டும். இதுதானே நம் ஆங்கிலேய பழக்கம்! துக்கம் என்றால் கறுப்பு - எனக்குத் துளிக்கூட பிடிக்காத கறுப்பு! இருக்கும் அத்தனை தொப்பிகளும் எனக்கே பயமாக இருக்கின்றன. வேறு ஏதாவது தொப்பிக் கடைக்கு தொலைபேசி செய், எல்லீஸ்! தொப்பி அணிந்துக் கொண்டால், நான் சிக்கென்று தெரிய வேண்டும்! அப்படி ஒரு தொப்பியைப் பிடிக்க வேண்டும்!''

நானும் பொய்ரெட்டும் அமைதியாக அறையை விட்டு நழுவினோம்.

அத்தியாயம் - 7

# காரியதரிசி

சற்று நேரமாய் ஜேப் எங்கு சென்றுள்ளார் என இருவருக்கும் தெரியவில்லை. ஒரு மணிநேரம் போல கழிந்த பிறகு மறுபடியும் வந்தார் அவர். அணிந்திருந்த தனது போலீஸ் தொப்பியை மேஜையின் மீது பறக்கும் தட்டாய் வீசியெறிந்து விட்டு, தன்னை சின்னாபின்னமாக்குகிறார்கள் என ஓர் அலறலாகச் சொன்னார் அவர்.

''என்ன... மரண விசாரணைக்குப் போயிட்டு வர்றீங்களா?'' - கனிவாய்க் கேட்டான் ஹெர்குல் பொய்ரெட்.

இருளடைந்து ஒப்புக் கொண்டார் இன்ஸ்பெக்டர் ஜேப். தொடர்ந்தார்: ''துளியும் குழப்பமில்லாமல், மிகத் தெளிவாக, வேறு யாரும் சீமான் எட்ஜ்வேரைக் கொன்றிருக்க முடியாது - முடியவே முடியாது திருமிகு பொய்ரெட். ஜானே... இவர் மட்டும்தான்... இவர் ஒருவர் மட்டும்தான், தெள்ளத் தெளிவாக, கொலை இலக்கு செறிந்து இருப்பவர்.''

''இப்படி ஒரு முடிவோடு வழக்கினைத் துப்புத் துலக்கக் கூடாது, இனிய ஜேக்கப்!''

''நேற்றிரவு விருந்தில் கூடியிருந்த அத்தனை பேரும் பெரும் புள்ளிகள் - தனித்தனியே! அங்கிருந்த ஒருவர் கூட ஜானேக்கு மிக நெருக்கமானவர் கிடையாது. ஒருவருக்கொருவர் அறிமுகமே அற்ற புதுமுகங்கள் கூட அங்கிருந்துள்ளனர். அவங்க அனைவரது நடத்தை பற்றியும், சமுதாயத்தில் அவங்களுக்கு இருக்கும் பேர் பற்றிய விவரங்களும் நம்பகத் தன்மை மிகுந்தே உள்ளன. இதனிடையில், ஒரு வேளை, விருந்தின் இடையே, ஓர் அரை மணி நேரமோ அல்லது ஒரு மணி நேரமோ, இந்த ஜானே சந்தடியின்றி எங்காவது நழுவிச் சென்றிருப்பாரா என அறிய விழைந்தேன். முகத்திற்கு பவுடர் அடிக்க, உதடுச் சாயம் போட என ஏதாவது ஒப்பேறாத சாக்கினைச் சொல்லி

நழுவியிருக்க வாய்ப்புகள் உள்ளன! ஆனால் அப்படி ஏதும் நடக்கலே. நம்மிடம் சொன்னது போலவே, விருந்து மேஜையை விட்டு அவர் ஒரு முறைதான் அகன்றிருக்கிறார் - அது, அவருக்கு வந்ததாய் கூறப்பட்ட தொலைபேசி அழைப்பினைக் காது கொடுத்துக் கேட்க! அப்போது ஜானேவுடனேயே தானிருந்திருக்கிறான், தொலைபேசி அழைப்பு பற்றி அவரிடம் சொன்ன சமையற்காரன். ஜானே வில்கின்ஸன் என்ன பேசினார் என்பதை இவன் கேட்டிருக்கிறான். 'சரிதான்... நான் எட்ஜ்வேரின் மனைவிதான்' என்று மட்டுமே ஜானே பேசியிருக்கிறார். அதற்குள் மறுமுனை துண்டிக்கப்பட்டுள்ளது. இந்த சங்கதி நம் வழக்கு விசாரணைக்கு அப்படியே ஒன்றும் உதவப் போவதில்லை, எனினும், கூப்பிட்டது யார் எனும் சிறு ஆவலைத் தூண்டத்தான் செய்கின்றது.''

''இருக்கலாம் - ஈர்க்கத்தான் செய்கின்றது. அழைத்தது, ஆணா, பெண்ணா?''

''பெண் என சொன்னதாய்த் தான் ஞாபகம்.''

''ஆச்சரியம்'' என்றான் பொய்ரெட் சிறு யோசனையுடன்.

பொறுமையிழந்து, ''அதை விட்டுத் தள்ளுங்க'' என்றார் ஜேப். ''நமது முக்கியப் பிரச்சனையைக் கவனிப்போம். ஜானே எப்படிச் சொன்னாரோ, அப்படித்தான் நேற்றைய மாலையும் இரவும் கழிந்தன. எட்டே முக்காலுக்குத் தான் விருந்து நடைபெறுமிடத்திற்கு போயிருக்கார். பதினொன்றரைக்கு அங்கிருந்துக் கிளம்பி, பதினொன்றே முக்காலுக்கு இங்கு வந்து சேர்ந்துள்ளார். ஜானேயின் காரை ஓட்டி வந்த டைம்லர் அலுவலக டிரைவரை விசாரித்துத் தெரிந்துக் கொண்டேன் - ஜானே சொன்னவை சரிதான். சவாயிலுள்ள சிப்பந்திகளும் ஜானே திரும்பி வந்ததையும் அப்போது என்ன நேரமென்பதையும் ஊர்ஜிதப்படுத்தினர்.''

''அப்போ எல்லாம் குழப்பமற்று தெளிவாயிருக்கே! ஜானே, சீமான் எட்ஜ்வேரின் மாளிகைக்கு நேற்றிரவு போகலே என்பது முடிவாகுதே!''

''அப்படி கிடையாது திருமிகு பொய்ரெட்! விளையாடறீங்களா..? ரீஜெண்ட் மாளிகையில் சர்வ நிச்சயமாய் ஜானே வந்ததைப் பார்த்ததாய் இரண்டு பேர் அடித்துச் சொல்லிக்கிட்டிருக்காங்களே..! அவங்க வாக்குமூலத்தை எதுல கொண்டு போய் சேர்ப்பது! அங்குள்ள பணியாள் மட்டுமல்ல.. சீமான் எட்ஜ்வேரின் காரியதரிசியும், ஜானே நேற்றிரவு மாளிகைக்கு வந்து சென்றதை கவனிச்சிருக்கா. அவர்களிருவரும், லோகத்தில் நடந்துக் கொண்டிருக்கும் அத்தனை தெய்வங்களையும்

சாட்சிக்கு நிற்க வைத்து, 'திருமதி ஜானே வில்கின்ஸன் நேற்றிரவு பத்து மணிக்கு இங்கு வந்து சென்றதை எங்களது இரு கண்களாலும் பார்த்தோம், பார்த்தோம்' என்று தம்பட்டமடிக்கிறாங்களே..! இதை அப்படியே விட்டுடச் சொல்றீங்களா!''

''அங்கு எத்தனை காலமாக, அந்தப் பணியாள் வேலையில் இருக்கிறான்?''

''ஆறு மாத காலமாக. அதிரூப சுந்தரன்.''

''ஆமாமாம். பார்த்திருக்கிறேன். அற்புத அழகன் தான், இனிய ஜேப்! அந்தப் பணியாள் ஆறு மாத காலமாத்தான் அங்கு பணியிலிருக்கிறானென்றால், அவனால் நிச்சயம் வந்தது ஜானே தானா என்று அடையாளம் காண முடியாது. அவன் ஜானேயை அங்கு பார்த்திருக்கவே வாய்ப்பில்லையே!''

''ஜானே யார் என்பது அப்படி ஒன்றும் பரம ரகசியமில்லையே திரு பொய்ரெட். அவர் பிரபலமான நடிகையாயிற்றே. விளம்பரங்களில் பார்த்து வைத்திருப்பானில்லையா! சரி, இது போகட்டும்! ஆனால் காரியதரிசிக்கு ஜானேயை நன்றாய் அடையாளம் தெரியுமே! சீமான் எட்ஜ்வேரின் காரியதரிசியாக கடந்த ஆறேழு வருடங்களாக பணியிலுள்ளாள் அவள். அவள் மட்டும் தான், அங்கு 'நடப்பது நடந்தே தீரும்' என்ற ரீதியினாலான நேர்மறை சிந்தனை உள்ள ஒரே ஜீவன்!''

''ஓ..'' என வியந்த பொய்ரெட், ''அப்படினா நான் அந்தக் காரியதரிசியைச் சந்திக்க விரும்புகிறேன்'' என்றான்.

''இப்போ அவளைப் பார்க்கத்தான் போய்க்கிட்டிருக்கேன், இயன்றால் நீங்களும் வரலாம்.''

''நன்றி, நன்றி, திரு ஜேப். மிக்க சந்தோஷமாயுள்ளது. எனக்களித்த அனுமதி நண்பன் ஹேஸ்டிங்குக்கும் பொருந்தும்னு நினைக்கிறேன்.''

''பின்னே! எஜமானன் எங்கு செல்கிறானோ, அங்கெல்லாம் அவரின் நாயும் சென்றுத்தானே தீர வேண்டும்'' என்றார் ஜேப். சொன்ன தொனி நகைச்சுவையாய் அமையாது, சுவை குன்றியிருந்தது. ஆனாலும் நாங்களிருவரும் அதைக் கண்டு கொள்ளவில்லை.

''இந்த வழக்கு எனக்கு எலிஸபெத் வழக்கினை நினைவுக்குக் கொண்டு வருது'' என்றார் ஜேப். ''ஞாபகமிருக்கிறதில்லையா? அந்த நாடோடிப் பெண்ணை இங்கிலாந்தின் இரு வேறு பகுதிகளில் ஒரே நேரத்துல பார்த்ததாய்த் தத்தம் இரு தரப்பு சாட்சிகளும் தலையிலடிச்சுக்கிட்டு சத்தியம் செய்தன! நம்பகத் தன்மை மிக்க சாட்சிகள் தான். நாடோடிப் பெண்ணின் அந்த விகாரமான முக

அழகிற்கு இன்னொரு பிரதி வேறு ரொம்ப அவசியம்! அவளைப் போன்ற இருவர் இருந்திருக்கும் வாய்ப்பெல்லாம் கிடையவே கிடையாது. அந்த வழக்கு பைசலாகாமலே மறைஞ்சுப் போச்சு. அதேபோன்ற பாதையில், ஜானேயின் இந்த வழக்கும்! இங்கும் இருவேறு கூட்டங்கள், ஜானே இருவேறு இடங்களில் இருந்ததாய் கதறுகின்றன! எது சொல்வது நிஜம்?''

''கண்டறிய முயற்சி செய்வோம். முடிச்சுகளை அவிழ்ப்பது அப்படி ஒன்றும் கஷ்டமாய் எனக்குத் தோணலே.''

''காரியதரிசிப் பெண்ணான கரோலுக்கு திருமதி ஜானேயை ஸ்பஷ்டமாய் தெரியும். ஒவ்வொரு நாளும் ஜானேயுடனேயே வாழ்ந்தவர் கரோல். அடையாளம் கூறுவதில் இவர் தவறிழைக்கும் வாய்ப்புகள் ரொம்பக் கம்மி.''

''இதோ, தெரிந்து விடப் போகின்றது.''

''இப்போது சீமான் எட்ஜ்வேரின் உடைமைகளுக்கு சொந்தம் கொண்டாடுவது யார்?'' - நான் கேட்டேன்.

''எட்ஜ்வேரின் சகோதரன் மகன். பெயர் ரொனால்ட் மார்ஷ். ஊதாரி.''

''மரணம் சம்பவித்த நேரம் பற்றி மருத்துவர்களின் கணிப்பு என்ன?'' - கேட்டான் பொய்ரெட்.

''துல்லியமான பரிசோதனை முடிவுகளுக்காக நாம் காத்திருக்க வேண்டியிருக்கு பொய்ரெட்! ஆனாலும், இரவு பத்து மணி என்பது தவறின்றி பொருந்துகின்றது. ஒன்பது மணியை ஒட்டி டின்னர் முடித்து விட்டுக் கிளம்பிய போதுதான் சீமான் எட்ஜ்வேர், கடைசியாய் உயிருடன் காணப்பட்டுள்ளார். தொடர்ந்து விஸ்கி மற்றும் சோடா ஆகியவற்றை எடுத்துக் கொண்டு, பணியாள், சீமானின் நிரந்தர ஜாகையான நூலகத்துக்குப் போயிருக்கான். மீண்டும் பதினொரு மணிக்கு வேலையாள் நூலகம் சென்று கதவு திறந்துப் பார்க்கிறான். விசாலமான அந்த அறை, முழு இருட்டிலிருந்திருக்கிறது. அப்போது சீமான் இறந்திருக்க வேண்டும். இருட்டுக்குள் அவர் உட்கார்ந்து இருக்க வேண்டிய அவசியமில்லை அல்லவா!''

பொய்ரெட் சிந்தனையூடே ஒப்புதலாய் தலையசைத்துக் காட்டினான்.

பிறகு மூவரும் ரீஜெண்ட் மாளிகை நோக்கிப் பயணமானோம்.

அழகனாய் மிளிர்ந்துக் கொண்டிருந்த வேலையாளால் கதவு திறந்து விடப்பட்டது. ஜேப் முதலில் நுழைந்து முன்னேறினார். பொய்ரெட்டும், பிறகு நானும் தொடர்ந்தோம். கதவு இடப்புறமாய் திறந்து விடப்பட்டது. எனவே, அப்பக்கத்து சுவரினை மறைத்தபடி வேலையாள் நின்றுக் கொண்டிருக்கும்படி ஆயிற்று. பொய்ரெட் எனக்கு வலப்பக்கமாய் இருந்தான். என்னை விட உயரத்தில் குள்ளமாய் அவன் இருக்கிறபடியால், என் உயரத்துக்குள் மறைந்திருந்தான் அவன்! அறைக்குள் நுழைந்து நாங்கள் நடக்க ஆரம்பித்தபோதுதான், பொய்ரெட்டையே வேலையாள் கவனித்தான். வேலையாளின் அருகாமையில் நான் அமைந்திருந்தபடியால், திடுமென பொய்ரெட்டைப் பார்த்த மாத்திரத்தில் அவனுள் விளைந்த நடுக்கமான மாற்றத்தை என்னால் கிரகிக்க முடிந்தது. சட்டென்று அறையிலிருந்த காற்றையெல்லாம் வாரி இழுத்துக் கொள்ளும் போக்கில் மூச்சிரைத்தான். முகம் முழுக்க தெரியும் பய அதிர்வோடு, பொய்ரெட்டையே முறைத்த வண்ணமிருந்தான்.

வரவேற்பறையின் வலப்புறம் அமைந்திருந்த சமையற்கட்டுக்குள் விரைந்துக் கொண்டிருந்த ஜேப், அதனுள்ளே நுழைந்ததும், பணியாளை அழைத்தான்.

''இதோ பாருங்க, ஆல்டன் (பணியாளனின் பெயர்)...! நடந்த அனைத்தையும் மிக எச்சரிக்கையாக இன்னொரு முறை மீட்டிப் பார்க்க விரும்பறேன். ஜானே உள்ளே நுழைந்தபோது மணி இரவு பத்து.''

''சரி.''

இடை புகுந்த பொய்ரெட், ''அது ஜானே தான்னு நீ எப்படி அடையாளம் கண்டுபிடிச்சே?'' என்றான்.

''தன் பெயரை அவர் என்னிடம் சொன்னார். இதுமட்டுமல்ல, அவர் புகைப்படங்கள் பலவற்றை சஞ்சிகைகள்ல பார்த்திருக்கேன். அவர் படங்களையும் பார்த்திருக்கேன்.''

பொய்ரெட் கவனித்துக் கொண்டான்.

''அவர் எப்படி உடை அலங்காரம் செய்திருந்தார்?'' - இது ஜேப்.

''கறுப்பு நிறத்தில், ஸார்! சிறு கறுப்பு தொப்பியும் அணிந்திருந்தார். முத்து மாலை ஒன்று. மற்றும் சாம்பல் நிறத்து கை உறைகள்.''

இப்போது கேள்விக்குறியாய் ஜேப்'பைப் பொய்ரெட் பார்த்துக் கொண்டான். பணியாள் தொடர்ந்துக் கொண்டேயிருந்தான். அவை

அத்தனையும் ஜேப் எங்களுக்கு ஏற்கனவே சொல்லியிருந்த தகவல்களோடு ஒத்துப் போய் நின்றன.

''சம்பவம் நடந்த சாயங்காலம், வேற யாராவது வந்து உன் முதலாளியைப் பார்த்துச் சென்றனரா?'' என்று கேட்டான் ஹெர்குல்.

''இல்லை, ஸார்.''

''வாசற் கதவினை எப்படிப் பூட்டுவீங்க?''

''அதற்கு ஒரு பெரிய பூட்டு இருக்கு ஸார் - கதவை வெளியிலிருந்து பூட்ட. ஒவ்வொரு நாள் இரவும் உறங்கப் போகும்போது, அக்கதவின் அத்தனை உள் தாழ்ப்பாள்களையும் போட்டுட்டுத் தான் போவேன். இது இரவு பதினொரு மணிக்கு இடம்பெறும் வாடிக்கையான வேலை. ஆனால் நேற்றிரவு எஜமானின் பெண்ணான மிஸ் கெரால்ட் நடனப் பயிற்சிக்கு சென்று நேரந் தாழ்த்தி வந்ததால் தாழ்ப்பாள்கள் மட்டும் போடாமல் விட்டிருந்தேன்.''

''அவள் வெளிப்புறத்திலிருந்து பூட்டி சாவியை எடுத்துப் போயிருந்தாள். நீ உள்ளே தாழ்ப்பாள்களையெல்லாம் விலக்கி, அவள் பூட்டைத் திறந்ததும் உள்ளே வரும்படி விட்டிருந்தாய், இல்லையா?''

''ஆமாம்.''

''இன்னிக்குக் காலையில எந்த மாதிரியான நிலையில் கதவு சாத்தப்பட்டிருந்தது?''

''தாளிடப்பட்டிருந்தது, ஸார். கெரால்ட் வந்த பிறகு தாளிட்டிருக்க வேண்டும்.''

''அவ எப்போ வந்தா? உனக்குத் தெரியுமா?''

''பதினொன்றே முக்கால்னு நினைக்கிறேன்.''

''எனில், நேற்று மாலையிலிருந்து எடுத்துக் கொண்டோமே யானால், இரவு பதினொன்றே முக்கால் வரை, கதவினை சாவி யில்லாமல் வெளியிலிருந்து திறந்திருக்கவே முடியாது. அப்படித் தானே? உள் பக்கத்திலிருந்து பார்த்தால்... வெறுமனே சாற்றியிருந்தது. சரிதானே.''

''ஆமாம், ஸார்.''

''எத்தனை சாவிகள் அந்தப் பூட்டுக்கு இருக்கு?''

''முதலாளி ஐயாவிடம் ஒண்ணு இருக்கு. வரவேற்பறையின் மைய மேஜையினுடைய அலமாரியில் மேல் தட்டில் ஒன்றிருக்கும். அதைத் தான் நேற்றிரவு மிஸ் கெரால்ட் எடுத்துச் சென்றிருக்க வேண்டும். இவற்றிற்கு மேலும் சாவிகள் இருக்கானு எனக்குத் தெரியாது, ஸார்.''

''வீட்டுல வேற யாராவது அப்பூட்டின் நகல் சாவியினை வெச்சிருக்காங்களா?''

''இல்லை, ஸார். காரியதரிசி கரோல், எப்போ வந்தாலும் அழைப்பு மணியைத் தான் அடிப்பார்.''

இவ்வளவு தான், நான் கேட்க விரும்பியவை என அறிவித்தான் பொய்ரெட். எழுந்துக் கொண்ட நாங்கள் காரியதரிசியைத் தேடிச் சென்றோம்.

வரவேற்பறையின் மாபெரும் மேஜையில் ஒரு கடிதாசியைக் கவனமாக எழுதிக் கொண்டிருக்கும் நிலையில் காரியதரிசியைக் கண்டுபிடித்தோம்.

இனிமையானவராகவும் திறமையானவராகவும் பார்த்த முதல் பார்வையிலேயே நெஞ்சில் பதிந்த மிஸ் கரோலுக்கு வயது நாற்பத்தைந்தை ஒட்டி இருக்கும். அவரது அலை அலையான கூந்தலில் வெள்ளை கற்றைகள் அதிகமாய் வளரத் துவங்கியிருந்தன. சிறு மூக்குக் கண்ணாடி அணிந்திருந்தார் - அதன் வழியே அவரின் நீல நிற திருகும் கண்கள், எங்களை அம்பாய் துளைத்து நோட்டமிட்டன. பயமும் தடுமாற்றமும் அற்ற நெஞ்சுரம் மிக்கவர் என்பது, தெளிவான அந்தப் பார்வையில் தெளிவாயிற்று. அவர் இப்பொழுது பேச ஆரம்பித்த போது, குழப்பமேயற்ற அலுவலகக் குரலில் அன்று என்னுடன் தொலைபேசியில் உரையாடிய அந்த கணீர்க் குரலை என்னால் இனம் பிரித்து அறிய முடியாது.

''ஓ! திருமிகு ஹெர்குல் பொய்ரெட்!'' என்றார், இன்ஸ்பெக்டர் ஜேக்கப் என்கிற ஜேப் குறித்த அறிமுகத்தை உள்வாங்கியபடி! ''நேற்று காலை சீமானை சந்திக்க உங்களுக்கு நான் முன்பதிவு அளித் திருந்தேன்.''

''மிகச் சரியாக, மேடம்!''

காரியதரிசியின் மீது அனுகூலமான பதிப்பும் மதிப்பும் ஹெர்குல்லுக்குள் விளைந்து வளர்வதாய் நான் உணர்ந்தேன். செல்வி கரோலும், மிக சுத்தமாகவும், மிகுந்த குணாதிசயத்தால் ஆக்கப்பட்ட வராகவும் இருந்தார்.

''சொல்லுங்க மிஸ்டர் ஜேப்'' என்று நேரடியாய் விஷயத்துக்குள் அவர் நுழைந்ததில், அவர் மீதான மேற்சொன்ன மதிப்பீடுகள் இன்னும் உயர்ந்தன. கேட்டார்: ''மேலும் என்ன விதமாக நான் உங்களுக்கு உதவ வேண்டும்?''

''ஒரு தகவல் மட்டும் போதும். இதோ... இதுதான் அது! மிஸ் கரோல்..! நன்றாக நினைவில் கொண்டு வந்து சொல்லுங்கள்! நேற்றிரவு இங்கு வந்தது, திருமதி ஜானே வில்கின்ஸன் எட்ஜ்வேர் தான் என்பதுல, உங்களுக்கு அணுவளவு கூட சந்தேகமில்லையே! மிகச் சரிதானே!''

''இதையே என்னிடம் மூன்றாவது முறையா இப்ப கேட்கிறீங்க! நிச்சயம்... நிச்சயம்..! நான் ஜானேவைப் பார்த்தேன்.''

''அவர்களை எங்கே பார்த்தீங்க, மிஸ்? அதாவது, எந்த இடத்துல?''

''வரவேற்பறையில, வேலையாளிடம் ஒரு நிமிடம் போல பேசிவிட்டு, அறை வழி நடந்து சென்று, நூலகக் கதவைத் திறந்து அதனுள்ளே நுழைந்து கொண்டார்.''

''இதை நீங்க எங்கிருந்தபடி பார்த்தீங்க?''

''முதல் தளத்திலிருந்து - கீழே நடப்பவற்றைப் பார்த்தபடி.''

''நீங்க கவனிச்ச விஷயங்கள்ல தவறு நேர்ந்திருக்காது என்பதுல உறுதியாத்தான் இருக்கீங்களா?''

''படு நிச்சயமா! இன்னும் வேறெப்படி ஸ்திரப்படுத்துவதுனு எனக்குத் தெரியலே! அவர் முகத்தை ஸ்பஷ்டமா நான் பார்த்தேன்.''

''வில்கின்ஸனைப் போன்ற தோற்றமளிக்கும் ஒருவரைப் பார்த்துட்டு, அதைத் தவறா புரிஞ்சுக்கிட்டு ஏமாந்திருக்கும் சாத்தியக் கூறுகள் ஏதாவது?''

''வாய்ப்பே இல்லை. ஜானே வில்கின்ஸனின் முகச் சாயல் விசேஷ அம்சம் பொருந்தியது. தனித்துவம் மிக்கது. வந்தது, அவர்தான்!''

கேட்டுக் கொண்டிருந்த ஜேப், பொய்ரெட் பக்கம் திரும்பிப் பார்த்தார், ''நீங்க ஏதாவது கேட்க வேண்டுமா?'' எனும் தொனியில்.

விவாதம் நடைபெற்றுக் கொண்டிருந்த தளத்தினை அப்படியே விட்டுவிட்டு திடுமென யாவரும் அதிரும்படி பொய்ரெட் கேட்டான்: ''சீமான் எட்ஜ்வேருக்கு விரோதிகள் உண்டா?''

''அர்த்தமற்ற கேள்வி!''

''எவ்வகையில் அர்த்தமற்ற கேள்வி இது, மிஸ்?''

''விரோதிகள்! விரோதிகளை வளர்த்துக் கொள்ளும் அளவுக்கு அவருக்குப் பகையெல்லாம் இருந்தது கிடையாது.''

''அப்படியேயானாலும், எதுக்காக சீமான் எட்ஜ்வேர் கொலை செய்யப்படணும்?''

''செய்தது அவர் மனைவி, எந்த விரோதியும் அல்ல. இந்த உண்மை உள்ளங்கை நெல்லிக் கனி போல தெளிவா தெரியுது. வழக்கே முடிந்தது

மாதிரிதான். இந்நிலையில் போய் விரோதி, பகை என்றெல்லாம் தேவையற்றுக் கிளறும்போது, அது அர்த்தமற்றதாய் தானே போகின்றது!''

''ம்..!'' - கரோலின் விளக்கத்தைக் கேட்டு மெலிதாய் சிரித்த பொய்ரெட், ''மனைவி - விரோதியாக மாட்டாள், இல்லையா?'' என்றான்.

''நடக்கக் கூடாத அபாண்டம் ஒண்ணு இங்கு நடந்து முடிஞ்சிருக்கு. இதில் மனைவி விரோதியா, வாளா மாட்டாளா என்றெல்லாம் ஆராய்ச்சி செய்து நேர விரயம் செய்யாதீங்க! இதுபோன்ற மேன்மை பொருந்திய குடியில் இப்படியெல்லாம் கொடூரம் - அதாவது மனைவியே கணவனைக் கொல்லும் கொடுமையைக் குறிப்பிடு கிறேன் - நிகழ்ந்து நான் கேள்விப்பட்டதேயில்லை.''

குடித்து விட்டுத் தெருவில் கூச்சலிடும் கீழான பேர்தான், கொலை வரை செல்லத் துணிபவர்கள் எனும் மேம்போக்கான கரோலின் எண்ணத்தினால் விளையும் கருத்து இது என்பது புரிந்தது.

பொய்ரெட் கேட்டான்: ''வாசற் கதவுக்கு எத்தனை சாவிகள் இருக்கு?''

''இரண்டு'' என சிரத்தையாய் பதில் தந்தார் கரோல். ''சீமான் எட்ஜ்வேர் எப்பொழுதும் ஒரு சாவியை எடுத்துக் கொண்டு தான் வெளியே செல்வார். இன்னொன்று வரவேற்பறை மேஜையிலிருக்கும். இரவு நேரங் கழித்து வரப் போவதாய் உணரும் யார் வேணும்னாலும் அந்தச் சாவியை எடுத்துச் செல்லலாம். மூன்றாவது சாவியுமிருந்தது - ஆனா அதனை ரொனால்ட் மார்ஷ் தொலைச்சுட்டார். சோம்பேறி - முக்கியத்துவம் அறியாத பதர்!''

''மார்ஷ் அடிக்கடி இங்கு வந்து செல்கிறவரா?''

''மூன்று வருடங்களுக்கு முன்பு வரை அவர் இங்குதான் வசித்து வந்தார்.''

''எதற்காக வெளியேறிப் போனார்?'' - விருட்டென புகுந்துக் கொண்டார் ஜேப்,

''எனக்குத் தெரியாது. மார்ஷின் பெரியப்பாவான சீமான் எட்ஜ்வரோடு அவருக்கு கருத்து வேறுபாடு இருந்தது.''

''எனக்கென்னவோ, இதையும் மீறி அவங்க ரெண்டு பேரோட உறவு குறித்து உங்களுக்கு மேலும் விவரம் தெரிந்துள்ளதாய் தோணுது, அருமை மிஸ் கரோல்!'' என்றான் பொய்ரெட் புன்னகை குறையாது.

பொய்ரெட் மீது அம்பாய் ஒரு பார்வையை வீசினார் காரியதரிசி. ''எனக்குக் கிசுகிசுக்கள் பிடிக்காது, திருமிகு பொய்ரெட்.''

''இருக்கலாம். கிசுகிசுக்களில் பங்கு கொள்ளாமல் இருப்பது நல்ல குணம்தான்! ஆனா, சீமான் எட்ஜ்வேருக்கும் அவரது சகோதரன் மகனான ரொனால்ட் மார்ஷுக்கும் இடையே நிலவி வந்த கடுமையான கருத்து வேறுபாட்டின் மீதான புரளிப் பேச்சில், எத்தனை தூரம் உண்மை உள்ளது என்பதை நீங்க எங்களுக்குச் சொல்லலாமே!''

''நீங்க அடைமொழி கொடுத்துக் கொள்வது போல, அவர்களுக்குள் நிலவிய கருத்து வேறுபாடு ஒன்றும் 'கடுமையான தெல்லாம்' அல்ல! பழகுவதற்கும் உடன் சேர்ந்து வாழ்வதற்கும், உகந்த மனிதரல்ல, சீமான் எட்ஜ்வேர்!''

''ஓ! நீங்களும் அப்படியே தான் உணர்ந்துள்ளீர்களா?''

''நான் என்னையோ எனக்கு நேர்ந்த அனுபவத்தையோ வெச்சு இப்படிக் குறிப்பிடலே. என் ஆறு வருடத்துக்கும் மேலான பணியில், அவருடன் ஒருமுறை கூட கருத்து வேறுபாடோ, மனக் கசப்போ, இருப்புக் கொள்ளாமையோ விளைந்ததே கிடையாது. என்னை நம்பிக்கைக்கு உகந்தவராகத்தான் அவர் பாவித்து வந்தார்.''

''ஆனா ரொனால்ட் மார்ஷுடன் நீடித்த உறவினை எடுத்துக் கொண்டால் -'' பொய்ரெட் அப்படியே விட்டு விட்டுக் காத்திருந்தான். இதனை விடுவதாயில்லை. எப்படியாவது துருவித் துருவி கரோலிட மிருந்து இன்னும் விஷயங்களைக் கறக்க அவன் முனைந்தான்.

பாதியில் விட்ட பொய்ரெட்டின் மேற்கூறிய கேள்விக்கு, தெரியாது எனும் தன் இரு தோள் குலுக்கலைப் பதிலாக்கினார் கரோல். ''மார்ஷ், வீண் செலவுகள் பல செய்து கட்டுப்பாடின்றி உலவும் உல்லாசி. இதனால் நாளடைவில் கடனாளி ஆனார். இன்னும் பல சங்கடங்களும் முளைத்து தலை காட்டின - ஆனால் அவை பற்றி விவரமாக எனக்கு எதுவுமே தெரியாது. வாக்குவாதம் மூண்டது. சண்டையிட்டுக் கொண்டனர். சீமான் எட்ஜ்வேர், மார்ஷை வீட்டை விட்டு வெளியேற்றினார். இதுதான் முழுக் கதை.''

இப்படிச் சொல்லிவிட்டு, காரியதரிசியின் இதழ்கள் இரண்டும் இறுக்கமாயின. இனி இதுகுறித்து பேச ஒன்றுமில்லை என்பதை வெளிப்படையாகவே உணர்த்தினார் அவர்.

இதுவரை நாங்கள் காரியதரிசி செல்வி கரோலோடு பேசிக் கொண்டிருந்த அறை, முதல் தளத்திலிருந்தது. அங்கிருந்து விடை

பெற்று நாங்கள் கிளம்பும் போது, என்னைக் கையோடு தனியாக இழுத்துச் சென்றான் பொய்ரெட்.

''சில நிமிடங்கள் நீ இங்கேயே இரு ஹேஸ்டிங்ஸ். நான் ஜேப்'போடு கீழிறங்கிப் போறேன். நாங்க நூலகத்துக்குள் நுழையும் வரை பொறுத்திரு. உள்ளே நாங்கள் நுழைந்து, உன் கண் பார்வையிலிருந்து மறைந்த பிறகு, கிளம்பி வந்து நீயும் எங்களோடு அங்கு சேர்ந்துவிடு. தயவு கூர்ந்து நண்பா!''

ரொம்ப நாட்களுக்கு முன்னதாகவே, 'ஏன்' என ஆரம்பிக்கும் எந்தக் கேள்வியையும் நான் பொய்ரெட்டிடம் கேட்பதை நிறுத்திக் கொண்டு விட்டேன்! பொய்ரெட்டோடு என் நிலை என்னவென்றால், 'ஒன்று செய்.. அல்லது செத்து மடி' என்பதேயாகும்! அதிர்ஷ்டவசமாக, இதுவரை செத்து மடியும்படி எதுவும் நேர்ந்துவிடவில்லை! எனவே ஏன் என நான் கேட்கவேயில்லை! ஆயினும், இப்படி விசித்திரமாக பொய்ரெட் கட்டளையிடக் காரணம் பணியாள் தான் என என் சிற்றறிவுக்குத் தோன்றியது. பணியாள் எங்களைப் பின்தொடர்ந்து வருகிறானா... வேவு பார்க்கிறானா என அறிந்துக் கொள்ள பொய்ரெட் முயல்வதாய்ப் பட்டது.

எனக்கிடப்பட்ட கடமையை ஆற்றத் துவங்கினேன். பொய்ரெட்டும், ஜேப்'பும் முதலில் நாங்களிருந்த அறைக் கதவருகே சென்றனர். பின் மறைந்தனர். சில நொடிகள் நழுவின. மறுபடியும், கீழே, வரவேற்பறையில் மெதுவாக நடந்து சென்றுக் கொண்டிருந்த இருவரும் தெரிந்தனர். அவர்கள் நூலகத்துக்குள் சென்று மறையும் வரை, அவர்களது முதுகையே என் கண்களால் நான் பின்தொடர்ந்துக் கொண்டிருந்தேன். பிறகு ஓரிரு நிமிடங்கள் ஓசையேதும் எழுப்பாமல் நின்றுக் கொண்டேயிருந்தேன். ஒருவேளை, பணியாள் வந்து எங்களைத் தேடுகிறானா என்பதை கவனிக்க! ஆனால், அப்படியேதும் நிகழவில்லை. நான் படியிறங்கிப் போய், நூலகத்தில் அவர்களுடன் இணைந்துக் கொண்டேன்.

சீமான் எட்ஜ்வேரின் உடல் எடுத்துச் செல்லப்பட்டிருந்தது. திரைச் சீலைகள் இழுத்து விடப்பட்டு காற்றோட்டம் ஏற்படுத்தப்பட்டிருந்தது. விளக்குகள் எரிந்துக் கொண்டிருந்தன. தங்களைச் சுற்றி இருக்கும் அனைத்தையும் உள்வாங்கிக் கொண்டபடி, நூலகத்தின் மையப் பகுதியில், துப்பறியும் நிபுணரும் இன்ஸ்பெக்டரும், ஆழ்ந்த கவனத்தோடு நின்றுக் கொண்டிருந்தனர்.

''முக்கியமாய் இங்கு ஒண்ணும் கிடைக்கப் போவதில்லை'' என ஆரம்பித்தார் ஜேப்.

இதற்கு சிறு புன்னகையுடன் பதில் தந்தான் பொய்ரெட்: ''ஆமாமாம். சிகரெட் சாம்பலோ - ஏதேனும் காலடித் தடமோ - கையுறையோ - சுழன்றடிக்கும் வாசனைத் திரவியத்தின் வாசமோ - இல்லைதான். கதைகளில் வந்து ஆச்சரியப்படுத்தும் இதுபோன்ற எந்த துப்பும் இப்போது இங்கு இல்லைதான்!''

''கிண்டலா? இந்த துப்பறியும் கதைகளில், போலீஸ்காரர்களை வெளவால் போல குருடர்களாகத்தான் வர்ணிக்கிறார்கள். ஏதோ வழக்குகள் எல்லாமே இந்த துப்பறியும் நிபுணர்கள் மூலமாகத்தான் கண்டுபிடிக்கப்படுவது போல!'' என புகைந்தார் ஜேக்கப் என்கிற ஜேப்!

இருவருக்குள்ளும் ஏற்பட்ட சிறு உராய்வினை ரசித்தபடி, ''விடு பொய்ரெட் பாவம், ஜேப்!'' என்ற நான், ''நீ சொன்னபடி மேலே நின்று கவனித்து விட்டுத் தான் வந்தேன். யாரும் உன்னைப் பின்தொடர்வ தாய் எனக்குப் படவில்லை'' என்றேன்.

''என் ஆத்ம நண்பனுடைய கண் பார்வையின் பலம் இது'' என இப்பொழுது என்னைக் கிண்டலடித்தான் பொய்ரெட். நான் சற்றே விளங்காது விழித்தேன். ''அருமை நண்பா! என்னோட ரெண்டு உதடு களுக்கிடையேயும் ஒரு ரோஜா மலரைச் சுமந்துக் கொண்டிருந்தேனே..! அதை நீ கவனிக்கவில்லையா?''

''உன் இதழ்களுக்கிடையில் ரோஜா மலரா?'' - நான் தாளாத திகைப்பில் கேட்டேன். ஜேப் பட்டென்ற ஓசையோடு சிரித்தே விட்டார். இருவரும் சேர்ந்து நடத்தும் நாடகமா! இவர்களிருவரும் தான் பைத்தியமாகிறார்களா - இல்லை நானா என்று குழம்பியே போனேன். ''என்னை முட்டாளாக்கப் பார்க்கிறியா, நீ, பொய்ரெட்! இது எனக்கு பிடிக்கலே, ஆமாம்! சொல்லிட்டேன்.''

ஆயினும் துளியும் சிதையாது, ''என் இதழ்களுக்கிடையிலிருந்த ரோஜா மலரை நீ கவனிக்கவேயில்லை...! அப்படித்தானே ஹேஸ்டிங்க்ஸ்..!'' என்று விஷயத்தை விடாது தொடர்ந்தான் பொய்ரெட்.

''கவனிக்கவில்லை'' என்று ஏற்றுக் கொண்ட நான், ''அந்த உயரத்திலிருந்து உன் முகத்தை என்னால் தெளிவாகப் பார்க்க முடியலே'' என்றேன்.

''விட்டுடு'' என்று இருவரும் நிறுத்திக் கொண்டனர்.

என்னை வைத்துக் கொண்டு இருவரும் பொழுது போக விளையாடுகிறார்களா? பற்றிக் கொண்டு வந்தது எனக்கு. புது இடம் கருதிப் பொறுத்துக் கொண்டேன்.

''சரி..'' என தளம் மாற தயாரான ஜேப், ''இனி இங்கு வேலை ஏதுமில்லை. முடிஞ்சா, சீமான் எட்ஜ்வேரின் பெண்ணை ஒரு முறை பார்க்க விரும்பறேன். மிகவும் உடைந்துப் போய் காணப்படுகிறார். அதனால் எந்த விஷயத்தையும் அவரிடமிருந்து வாங்க முடியவில்லை.''

இப்படிச் சொல்லிவிட்டு, வேலையாளை அழைக்க மணியடித்தார் இன்ஸ்பெக்டர்.

''சீமான் எட்ஜ்வேரின் பெண்ணைப் பார்த்து சில நிமிடங்கள் பேச முடியுமா என்று கேட்டு வா.''

அவன் வெளியேறினான். சில நிமிடங்கள் கழித்து காரியதரிசி தான் வந்தாள். ''கெரால்ட் ஆழ்ந்த தூக்கத்திலிருக்கா'' என்றாள். ''சின்னப் பொண்ணு. தாங்க முடியாத அதிர்ச்சிக்குள்ளாகி இருக்கா. என்னை விசாரித்துவிட்டு நீங்கள் வெளியேறியதும், தூங்காமலே தவிக்கும் அவள் தூங்க, தூக்க மாத்திரை கொடுத்தேன். உடனேயே தூங்கிட்டா. எழுந்திருக்க இன்னும் ரெண்டு மணி நேரங்களுக்கு மேலாகும். அவசரமா? எழுப்பணுமா?''

ஜேப் நிலைமையைப் புரிந்து ஏற்றுக் கொண்டார்.

''என்னால் சொல்ல முடியாத எதையும் அவள் உங்களுக்குச் சொல்லி உதவி விடப் போவதில்லை'' என்றார் காரியதரிசி, இறுக்கமாய்.

இப்பொழுது, ''அந்தப் பணியாளைப் பற்றிய உங்கள் அபிப்பிராயம் என்ன?'' என்று கேட்டான் பொய்ரெட்.

''அவனை எனக்கு அதிகம் பிடிக்கவில்லை என்பதுதான் உண்மை!'' என பதிலளித்தார் கரோல். ''இதற்கு என்ன காரணம்னு என்னால நிச்சயப்படுத்தி சொல்ல முடியலே. பட், ஐ டோண்ட் லைக் ஹிம்.''

நாங்கள் கிளம்ப தயாராகி நிலை வாசல் வந்தடைந்தோம். எல்லோர் கவனமும்தன் பக்கம் திரும்பும் விதமாய் சில நொடிகள் வெறுமனே அமைதியாய் நின்றான் பொய்ரெட். பிறகு காரியதரிசியின் பக்கம் திரும்பி ''அதோ மாடியின் அந்த இடத்தில் தானே நீங்க, நேத்து ராத்திரி

நின்னுக்கிட்டு இதோ... இங்கு நின்றுக் கொண்டிருந்த ஜானேயைக் கவனித்ததா சொல்றீங்க..?'' என்று கேட்டான் பொய்ரெட் சற்றுக் கடுமையாய், மாடியில் தான் குறிப்பிட்ட பகுதியை நோக்கி சுட்டு விரலை நீட்டியபடி.

''ஆமாம்... ஏன்?''

''ஜானே வில்கின்ஸன் இங்கிருந்து நடந்து பின்புறமுள்ள நூலகத்துக்குள் நுழைந்ததையும் நீங்க பார்த்தீங்க? இல்லையா?''

''ஆமாம்.''

''ஜானே வில்கின்ஸனின் முகத்தை மிகத் தெளிவாய்ப் பார்த்தீங்க, ஆங்?''

''ஆமாமாம்.''

''இல்லை, மிஸ்! உங்களால் அவர் முகத்தை, நீங்கள் குறிப்பிடுவது போல ஸ்படிக சுத்தமாய் பார்த்திருக்கவே முடியாது. மாடியில் நீங்க நின்றுக் கொண்டிருந்ததாய்ச் சொல்கிறீர்களே... அவ்விடத்திலிருந்து, ஜானேயின் முதுகுப் புறங்களைத் தான் பார்க்க முடியும். இது மட்டும் தான் சாத்தியம்.''

பொய்ரெட்டின் கருத்தினைக் கோபத்தின் உச்சியில் நின்று பெருக்கித் தள்ளினார் கரோல். சிலஅடிகள் பின்னுக்குத் தள்ளப் பட்டதாய் வெகுண்டார்.

''முதுகுப்புறமாய் இருந்திருந்தால் தான் என்ன! முதுகுப்புறம், அவர் குரல், அவர் நடை! எல்லாம் நான் பல வருடங்களாகப் பார்த்தவை தான்! தவறு நிகழும் சாத்தியமே இல்லாத கருத்து! அது ஜானே வில்கின்ஸன் தான் என உங்களுக்கு மறுபடியும் நான் நிச்சயப் படுத்துகிறேன். உலகத்திலுள்ள, ஒரே ஒரு முழுக்க முழுக்க செல்லுபடியாகாத இழிவான பெண் அந்த ஜானே வில்கின்ஸனே தான், நேற்றிரவு இங்கு வந்திருந்தது.''

திரும்பி, கோபத்துடன் மாடி நோக்கி நகர்ந்தார் காரியதரிசி கரோல்.

அத்தியாயம் -8

# சாத்தியக் கூறுகள்

ஜேப் கிளம்ப வேண்டிய அவசியம் ஏற்பட்டது. நானும் பொய்ரெட்டும் கிளம்பி அருகிலிருந்த வண்ண வண்ண பூக்கள் நிறைந்த ரம்யமான பூங்கா ஒன்றுக்கு வந்து, மிக அமைதியான பகுதியொன்றைத் தெரிந்தெடுத்து அமர்ந்துக் கொண்டோம்.

''உன் உதடுகளுக்கிடையே ரோஜா மலரை நீ வெச்சுக்கிட்டதன் உள்ளர்த்தம் இப்ப எனக்குப் புரியுது'' என்றேன் நான் மெலிதாய் சிரித்தபடி. ''ஆனா அந்த நேரத்துல என்ன ஒரு பைத்தியக்காரத்தனம்னு தான் நெனச்சேன்.''

சிரிப்பற்ற முகத்துடன் ஏற்றுக் கொண்டான் பொய்ரெட். ஆழ்ந்த சிந்தனை. ''கவனிச்சியா ஹேஸ்டிங்ஸ்..! சீமானின் காரியதரிசி மிக ஆபத்தானவ! அதாவது தப்புத் தப்பான சாட்சிகளை சாட்சாத் என்பது போல முன்வைப்பவள் எனும் கோணத்தில் இப்படி வர்ணிக்கிறேன்! சம்பவ இரவில் வீட்டுக்கு வந்த பார்வையாளரின் முகத்தினை சர்வ நிச்சயமாய் பார்த்தேன் என்றார். இதைக் கவனிச்சியா? அப்பவே அவர் சொல்வது நடக்க இயலாத ஒண்ணுனு நான் முடிவு கட்டிட்டேன். நூலகத்திலிருந்து வருபவரின் முகம் வேண்டுமாயின் தெரியலாம் - ஆனால் நூலகம் நோக்கிச் செல்பவரின் முகம், நிச்சயமா தெரியவே தெரியாது. வரவேற்பறையின் மையப்பகுதியில் மாடிப்படிகள் அமைந்துள்ளன- அவற்றின் எதிரிலன்றோ நூலகப்பகுதி உள்ளது. ஆகவே, முதல் தளத்திலிருந்து பார்த்தா, செல்பவரின் முதுகுப் பகுதி மட்டும்தான் தெரியும். இதனால்தான் ரோஜா மலர் கொண்ட சிறு பரீட்சையை செயல்படுத்திப் பார்த்தேன். முடிவு நான் எதிர்பார்த்தது தான். என் முகம் உனக்குக் கொஞ்சமும் தெரியலே! ஊர்ஜிதப்படுத்திக் கொண்டதும், பொறியை அவர் பக்கம் திருப்பிப் பார்த்தேன்... ம்ம்...

உடனே என்னமாய் தளம் மாற்றிப் பேச ஆரம்பித்து விட்டார். பிடிவாதம் வேறு!''

''தான் சொல்வது தான் சரி என அசைக்க முடியாத நம்பிக்கை வேறு'' என நானும் நிலைமையை உணர்ந்து பேசினேன். ''ஆனாலும் பொய்ரெட்... எனக்கொரு சந்தேகம்! ஒரு சிறு தூரத்திலிருந்து, நடக்கும் நடை மற்றும் பேசும் குரலை வெச்சுக்கிட்டு, வந்திருப்பது இன்னார்தான் என பிழையின்றி சொல்வது ஒன்றும் சிரமமில்லையே!''

''அப்படிச் சொல்லிவிட முடியாது, ஹேஸ்டிங்ஸ்.''

''அதுதான் ஏன்கிறேன். குரலும், நடை - உடை பாவனையும், ஒவ்வொரு மனிதனுக்கும் மாறுபடுவதால், இவற்றை வைத்துக் கொண்டு ஒருவரை அடையாளம் காண்பது சாத்தியமே, பொய்ரெட்!''

''நானும் இதை ஏத்துக்கிறேன். அதனால்தான், அவை, போலியாய் நடித்து ஏமாற்றுவதற்கு விமரிசையாக பயன்படுத்தப்படுகின்றன!''

''என்ன சொல்ல வரே?''

''உன் நினைவுகளை ஒரு சில நாட்களுக்குப் பின்னால் கொண்டு போ. நினைவிருக்கா? ஒரு மாலை நேரத்துல, கலாரங்கம் ஒன்றில் நாமிருவரும் அமர்ந்திருந்த பொழுது - - - ''

''கர்லோட்டா ஆடம்ஸ்? அவரின் விகடகவி பங்களிப்பு? ஓ...! அவர் இத்துறைக்கென்றே பிறந்துள்ள மகா திறமைசாலி பொய்ரெட்! எல்லோரும் ஆடம்ஸாகி விட முடியுமா?''

''ஆனால், அன்று அரண்மனைக்கு வந்தது, கர்லோட்டா ஆடம்ஸாகலாம் இல்லையா!''

என் மூச்சு, கண நேரம் நின்றுப் போனது. அதை பொருட்படுத்தாது துப்பறியும் நிபுணன் தொடர்ந்துக் கொண்டிருந்தான்: ''மிகப் பிரபலமான ஒருவரை நகல்படுத்திக் காட்டுவது, அப்படி பிரபலமாகாதவரை நகல்படுத்திக் காட்டுவதை விட, வெகு சுலபமான விஷயம். அருமை நண்பா! ஒப்புக் கொள்கிறேன் - கர்லோட்டா ஆடம்ஸ் ஒப்புயர்வற்ற விகடகவி என்று! இறை வரம் அது! ஆனால் ஹேஸ்டிங்ஸ்! விகடகவி நடந்த மேடை எங்கே? நாம் அமர்ந்திருந்த இருக்கைகள் எங்கே..! அத்தனை தொலைவிலிருந்தும் கூட, மேடையிலிருப்பது ஜானே வில்கின்ஸன்தான் அப்படினு தானே நீயும், எல்லோரும்... ஏன், வில்கின்ஸனே கூட வியந்துப் போனது...! உண்டா இல்லையா!''

''ஏய், பொய்ரெட்..!'' என அலறினேன் நான். ''எ.. எ.. என்ன சொல்ல வரே..! விகடகவி நிகழ்ச்சியும், சீமான் எட்ஜ்வேரின் அரண்மனைக்கு மாற்றாக ஒருவர் வந்திருக்கலாம் எனும் உன் ஆலோசனையும், இவ்விரண்டும், எதேச்சையாக மட்டுமே ஒத்துச் செல்பவை!''

''அது பார்ப்பவரின் கோணத்தைப் பொறுத்தது, ஹேஸ்டிங்ஸ்! கோணத்தை மாற்றி சிந்தித்தால், எதேச்சையாக பொருத்தமெல்லாம் தோணாது.''

''ஆனா, சீமான் எட்ஜ்வேரைக் கொல்ல வேண்டும் என கர்லோட்டா ஆடம்ஸ் ஏன் முயற்சிக்கணும்? அவர் யாரென்று கூட ஆடம்ஸுக்குத் தெரியாதே!''

''உனக்கெப்படி தெரியும், சீமான் எட்ஜ்வேருக்கும் கர்லோட்டா ஆடம்ஸுக்கும் அறிமுகமில்லைனு! நீயாக கற்பனையாய் நினைச்சுக்காதே ஹேஸ்டிங்ஸ்! உனக்கு இந்தக் குணம் நிறைய இருக்கு! நமக்கு அட்சரம் கூட தெரியாத ஏதோ ஒரு விஷயத்தில் இருவருக்கும் ஆழமான தொடர்பு இருந்திருக்கலாம்! இல்லையென்றால், வேறெப்படியாவது கூட இருவருக்குள்ளும் ஓர் இணைப்பு இருந்திருக்கலாம்.''

''எனில்...? ஆடம்ஸுக்கும்?''

''ஆமாம், ஆமாம்! இக்கொலையில் கர்லோட்டா ஆடம்ஸ் உட்பட்டிருக்க வேணும் எனும் சாத்தியக் கூறு, வழக்கின் ஆரம்ப நொடி முதலே எனக்குள் பொறி தட்டிக்கிட்டேயிருக்கு!''

''ஆனால்.. பொய்ரெட்...''

''பேசாதே... பொறு, ஹேஸ்டிங்ஸ்! சில உண்மைகளை உனக்காக நான் கோர்த்துத் தரேன் கேள்... மௌனம் என்பதே அறியாத வளவள பிரிவைச் சேர்ந்த திருமதி ஜானே வில்கின்ஸன் எட்ஜ்வேர், தனக்கும் தன் கணவனுக்கும் இடையேயான சுமூகமற்ற உறவு முறையை, பலர் முன்னிலையில் விவாதிக்கிறார் - தன் கணவனைக் கொன்றாவது விடுதலை அடைவேன் எனும் அளவுக்கு! நீயும் நானும் மட்டும் இதனைக் கேட்கவில்லை. காவலாளி கேட்கிறான் - ஜானேயின் வேலைக்காரி, ஜானே வாயாலேயே பல முறை சொல்லக் கேட்டிருப்பாள் - ப்ரையன் மார்ட்டீன் கேட்டிருக்கிறார் - அன்று தன்னுடைய ஜாகைக்கு ஆடம்ஸை அழைத்து விருந்தளித்த போது, நிச்சயமாய் அவரிடமும் ஜானே சொல்லியிருப்பார்! அன்று மாலையில்

தான், ஜானே வில்கின்ஸனை அங்குலம் அங்குலமாக நகலெடுத்துக் கொடுக்கும் ஒரே திறமைசாலி என அரங்கம் முழுதும் கரகோஷமெழுப்பி பாராட்டும் அளவுக்கு விளம்பரமாகிறார், கர்லோட்டா ஆடம்ஸ்! இப்பொழுது உனக்கொரு கேள்வி ஹேஸ்டிங்ஸ்! இவர்கள் அனைவரையும் பொறுத்தவரை, யாருக்கு சீமானைக் கொன்று போட வேண்டும் எனும் இலக்கு நிறைந்துள்ளது?''

உடனடியாக ''விவாகரத்து வேண்டும் எனும் அவசரத்தால், அந்த இலக்கு, ஜானேயிடம் தான் நிறைந்துள்ளது'' என்றேன் நான்.

பொய்ரெட் தொடர்ந்தான். ''இப்போ, வேறு யாரோ ஒருவன், சீமான் எட்ஜ்வேரின் உயிரைக் குடிக்கக் காத்திருக்கிறான் என வைத்துக் கொள்வோம். அவன் கைகளுக்கு வசதியாக, இங்கு பலி கடா தயார்! மண்டையைப் பிளக்கும் தலைவலி காரணமாக, தான் விருந்துக்குப் போகப் போவதில்லை என்றும், அமைதியான மாலைப் பொழுதில் ஓய்வெடுக்கப் போகிறேன் என்றும் வளவள ஜானே வில்கின்ஸன் ஊர் முழுக்கக் கேட்க அறிவிக்கும் போது, அவன் திட்டம் செயலாக்கப் படுகின்றது. ரீஜெண்ட் அரண்மனையில் நுழைவதாக ஜானே வில்கின்ஸன் 'காணப்பட' வேண்டும் - அப்படியே 'காணப்பட்டார்'. அந்த போலி ஜானே வில்கின்ஸன், அரண்மனைக்கு வந்திருப்பது ஜானே வில்கின்ஸன் தான் என்று வேறு தவறாது அங்கே சொல்கிறார். அப்பொழுதுதானே, சந்தேகம், நிஜ ஜானே வில்கின்ஸன் மீது திரும்பி நிற்கும்! இதில், கவனமா குறித்துக் கொள்ள வேண்டிய இன்னொரு குறிப்பும் - நமக்கு உதவவுள்ள துப்பும் இருக்கு. ஜானே வில்கின்ஸனா அரண்மனைக்குச் சென்ற பெண்மணி, முழு கறுப்பு உடையில் இருந்திருக்கிறாள். ஜானே வில்கின்ஸன் கறுப்பு உடைகளை அணிவதே இல்லை. இது அவர் வாயாலேயே நாம் கேட்ட அவரின் பிரத்யேக குணம்! இப்போ, ஒரு பேச்சுக்கு, சம்பவ இரவில் அரண்மனைக்குச் சென்றது, நிஜ ஜானே வில்கின்ஸன் இல்லை என்றே முடிவெடுத்துக் கொள்ளும் பட்சத்தில், சென்றிருப்பது, நிச்சயமாய் நிஜ ஜானே வில்கின்ஸனை இம்மிப் பிசகாது நகலெடுத்துக் காட்ட வல்லவராய் தானிருக்க வேண்டும்! அந்தப் பெண் தான், சீமான் எட்ஜ்வேரைக் கொன்றதா?''

பேசிக் கொண்டிருந்த பொய்ரெட், நான், அவன் சொல்பவற்றைக் கிரகித்துக் கொண்டிருக்கிறேனா என என் முகம் பார்த்துப் பரிசோதித்தான். கிரகித்துக் கொண்டிருக்கிறேன் என தோன்றியபோது,

என்னவோ! தொடர்ந்தான்: ''இல்லை, மூன்றாவது ஓர் ஆள் உள்ளே நுழைந்து சீமான் எட்ஜ்வேரைக் கொன்றிருக்கலாமோ? எனில், அந்த மூன்றாவது ஆள், போலியாய் சென்ற ஜானே நுழைவதற்கு முன்னால், வந்திருப்பானா, அல்லது போலி ஜானே சென்ற பிறகு வந்திருப்பானா? பிறகு வந்திருப்பான் என எடுத்துக் கொள்ளும் பட்சத்தில், உள்ளே சென்ற போலி ஜானே, சீமான் எட்ஜ்வேரிடம் என்னதான் பேசியிருப்பான்?! தான் எதற்காக வந்துள்ளதாய் அவள் சீமானிடம் சொல்லியிருப்பாள்? முன்பின் அறிமுகமில்லாத காரணத்தால், வேலையாளை அந்தப் போலி ஜானே ஏமாற்றியிருக்கலாம் - மிக அருகிலிருந்து பார்க்காத காரணத்தால் காரியதரிசியையும் அவள் ஏமாற்றியிருக்கலாம். ஆனால், சீமானை அல்ல! அல்லது அவள் நுழைந்தபோது வெறும் பிணமாய்த் தான் சீமான் எட்ஜ்வேர் கிடந்திருப்பாரா? சீமான் எட்ஜ்வேர், ஜானே போன்றவள் நுழைவதற்கு முன்னமேயே கொல்லப்பட்டிருப்பாரா - இரவு ஒன்பதுக்கும் பத்துக்கும் இடைப்பட்ட நேரத்தில்?!''

''நிறுத்து பொய்ரெட்'' என்று சொல்லியே விட்டேன் நான். ''நீ என் தலையை 360 டிகிரி சுழல வைக்கிறே!''

''இல்லை, இல்லை, என் இனியவனே! என்னவெல்லாம் சாத்தியக் கூறுகள் உள்ளன என்பதைப் பட்டியலிடுகிறோம் - துணி வாங்கப் போகும் கடையில் முயற்சி செய்து பார்ப்பது போல! இது பொருந்துமா! இல்லை. இதில் தோள் கொஞ்சம் இறுக்கம் ஜாஸ்தி! அந்த சட்டை... ம்ம்! படு இறுக்கம்! இப்படி, மாற்றி மாற்றிப் போட்டுப் பார்க்கிறோம், கடைசியாக, மிக மிகச் சரியாகப் பொருந்தும் துணி வகை கிட்டும் வரை. அதுதான் - அந்த சரியாகப் பொருந்தும் துணிதான் - உண்மை!''

வைத்த கண் எடுக்காமல், பொய்ரெட் விளக்கி என்னை மடக்கிப் போடும் லாவகத்தை ரசித்தேன் நான். கேட்டேன்: ''இந்த ஈவிரக்கமற்ற கொலைக்களனை யார் அமைத்திருப்பார்கள்னு நீ சந்தேகிக்கிறே?''

''ஆஹ்..! இது துப்பறிதலின் ஆரம்ப காலம் - இப்பொழுதே சொல்லிட முடியாது. சீமான் எட்ஜ்வேர் மடிந்தே தீர வேண்டும் எனும் எண்ணம் பொதிந்து வாழ்ந்தது யார் எனும் கேள்விக்குள் ஆழப் போய் துளாவும் போது தான் விடையும் திசையும் தெரியும். அப்படி இலக்குக் கொண்டு அலைந்தவனாய், சீமானுடைய சகோதரன் மகன், உடனடியாய் நம் முன் விரிகிறான். இப்படித் தோன்றுவது தவிர்க்கவியலாதது. விரோதிகளெல்லாம் கிடையவே கிடையாது என்ற கரோலின் அழுத்தமான பதில் முன்னே இருந்தாலும், சீமானின்

விரோதிகள் எனும் கேள்வி, இன்னும் தெளிவான பதில் காணாமல் தான் இருக்கு. வெகு சுலபமாக தனக்கு விரோதிகளை உருவாக்கிக் கொள்ளக் கூடியவராய் தான் சிமோன் எட்ஜ்வேர் என்னுள் பதிஞ்சிருக்கார்.''

''ஆமாம்'' - நானும் ஏற்றுக் கொண்டேன். ''அப்படிப்பட்டவர் தான் அவர்.''

''கொன்றது யாரோ... தன்னை வெகு ஜாக்கிரதையாக்கிக் கொண்டு தான் களத்தில் இறங்கியிருக்கிறான். கடைசி நிமிடத்தில் மட்டும் அந்த விருந்துக்குச் செல்ல ஜானே வில்கின்ஸன் முடிவெடுக்காமல் போயிருந்தால், அவ்வளவுதான் ஹேஸ்டிங்ஸ்! அவர் சவாயில் அவரது ஜாகையிலேயே கூட இருந்திருந்தாலும், அதனை நிரூபிப்பது இயலவே இயலாத ஒன்றாய் தான் போயிருக்கும். கைது செய்யப்பட்டிருப்பார்; மரண விசாரணைகள் முடிந்திருக்கும்; தூக்கில் கூட போட்டிருக்கலாம்.''

நான் நடுநடுங்கினேன்.

''ஆனா ஒரு விஷயம் மட்டும் எனக்கு விளங்கா புதிராயுள்ளது'' என தொடர்ந்தான் பொய்ரெட்: ''கொலைப்பழி முழுவதையும் ஜானே வில்கின்ஸன் மீதே திசை திருப்பி நிலைநாட்ட வேண்டும் எனும் கொலைகாரனின் தாகம் ஐயமற தெளிவாகின்றது. எனில், அந்த தொலைபேசி அழைப்பு உணர்த்துவது எதை? சிஸ்விக்'கில் விருந்தில் இருந்த ஜானே வில்கின்ஸனை தொலைபேசியில் அழைத்து, ஜானே விருந்துக்குத் தான் சென்றிருக்கிறார் என்பது ஊர்ஜிதமானதும், இணைப்பைத் துண்டித்துள்ளார்களே... ஏன்? தங்களது திட்டத்தை செயல்படுத்தத் துவங்குமுன், ஜானே, விருந்தில் கலந்துக் கொண்டு தான் இருக்கிறார் என சரி பார்த்துக் கொண்டுள்ளதாய் தோன்றவில்லை? நீ என்ன நினைக்கிறே ஹேஸ்டிங்ஸ்! இது நிகழ்ந்தது ஒன்பதரைக்கு - நிச்சயமாய் கொலை நிகழும் முன்! கொலை செய்தவனே தொலைபேசி செய்திருக்க மாட்டான். ஜானேவைக் குற்றத்தில் சிக்க வைக்கத் தேவையான அத்தனை திட்டத்தையும் கொலைகாரன் தீட்டியிருப்பான் - செயல்படுத்தியிருப்பான். பிறகு, தொலைபேசியில் அழைத்தது யார்? இப்பொழுது, நம் முன், இருவேறு, முழுக்க முழுக்க வித்தியாசமான நிலைப்பாடுகள் இருப்பதாய் எனக்குத் தோணுறது.''

எனக்கு சுத்தமாய் எதுவும் தோன்றவில்லை என மறுத்துத் தலையசைத்துக் காட்டினேன் நான். ''எதேச்சையாய் வந்த

தொலைபேசி அழைப்பாயிருக்கலாம்'' என்ற என் பதில், சொன்ன பிறகு தான் எத்தனை உப்பு சப்பற்று இருக்கிறது என்பது எனக்கு விளங்கியது!

''எல்லாமே எதேச்சையாய் நிகழ்ந்து விடுமா, ஹேஸ்டிங்ஸ்! என்ன பேசறே நீ! ஆறு மாதங்களுக்கு முன் ஒரு கடிதம் அனுப்பப்பட்டிருக்கின்றது. ஏன்? இவ்வழக்கில் பற்பல விஷயங்கள் விளக்கப்படாமல் - விளக்கயியலாமல் உள்ளன. இவை எல்லாவற்றையும் இணைக்கும் ஒரு சங்கிலி இருக்கத்தான் வேண்டும்.''

பெருமூச்சு விட்டான். சற்றே யோசித்துக் கொண்டிருந்தான். தற்சமயம் தொடர்ந்தான்: ''ப்ரையன் மார்ட்டீன் நம் இருப்பிடம் வந்து சொன்ன தங்கப் பல் காரன் கதையில் - - - ''

''போதும் பொய்ரெட்! நம்மிடம் பேசிய அனைவரது உரையாடலையும் சீமான் எட்ஜ்வேரின் மரணத்தோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டுமா? நிச்சயமாய் மார்ட்டீன் சொன்னதுக்கும் இந்தக் கொலைக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது பொய்ரெட்.''

''நீ குருடன், ஹேஸ்டிங்ஸ், குருடன் - மேலும், வேண்டுமென்றே கழுத்தறுக்கும் செவிடன்! ஜானே மற்றும் சீமான் எட்ஜ்வேரோடு தொடர்புடைய அனைத்து மர்ம முடிச்சுக்களையும் சேர்த்து வைத்துப் பார்க்கும் போது ஒரு வகையான வேலைப்பாடு, ஒரு வகையான அலங்கார அமைப்பு, உனக்குத் தெரிய வரலே? குழப்பும் அலங்கார வேலைப்பாடுதான், ஆனாலும் ஆழ்ந்து பார்த்து அங்குமிங்கும் மாற்றி மாற்றி பொருத்திப் பார்த்தால் பிரகாசமாய் விளங்கக் கூடிய வேலைப்பாடாய் - - -''

தொடர்ந்து பொய்ரெட் பேசியதை நான் காது கொடுத்து கேட்கவில்லை - செவிடனானேன், அவன் சொன்னது போலவே! இவ்வழக்கு நிச்சயம் முடிந்தே தீரும் என ஏகமாய் அவன் எதிர்பார்ப்பதில் எனக்கு உடன்பாடில்லை. ஜானே இல்லாத பட்சத்தில் யார் கொலைகாரன் என்பது தெரிய வராமலே போய் விடும் என்பது தான் என் தீர்மானம். இதற்காக, ஜானேயை விகடகவி செய்ததால் கர்லோட்டா ஆடம்ஸையும், யாரோ ஒருவனைப் பார்த்து பயந்துபோன மார்ட்டீன் சொன்னதால் அந்த தங்கப்பல்காரனையும், சண்டை போட்டதால் மார்ஷையும், சீமான் எட்ஜ்வேரின் மரணத்தோடு சம்பந்தப்படுத்தி புளகாங்கிதமடைவதை, நான் பைத்தியக்காரத்தனம் என்று தான் சொல்வேன். என் மூளை அதிவேக சக்கரமாய் சுழன்று சுற்றிக் கொண்டிருப்பது இவனுக்கு எங்கே தெரியப் போகின்றது!

''பிரயோஜனமில்லாமல் பேச வேண்டாம்'' என்றேன் திடுமென்று. ஒப்புயர்வற்ற துப்பறியும் நிபுணனை இப்படிப் பழித்திருக்கக் கூடாதுதான் - வேறு வழியில்லாமல் போயிற்று. ''கர்லோட்டா ஆடம்ஸ் என்று என்னால் கற்பனை கூட செய்து பார்க்க முடியாது. அத்தனை... அத்தனை அற்புதமான பெண்ணாய் தான் அவர் தோன்றுகிறார்.''

இப்படி ஆடம்ஸை நான் வர்ணித்த கணத்தில், அவரைப் பற்றி பொய்ரெட் வர்ணித்தது என் மண்டைக்குள் வெட்டி நின்றது. அன்று கர்லோட்டா ஆடம்ஸை, ஹெர்குல் எப்படி வர்ணித்தான் - பணத்தாசை பிடித்தவள் என்றுதானே! *பணத்தாசை!* என் மூச்சை நிறுத்தும் பிரகாச ஒளி ஒன்று என் மூளைக்குள் தோன்றியது. பணத்தாசை - இதுதான் இக் கொலை எனும் வேரில் மறைந்துக் கிடக்கும் இலக்கா? தான் எனும் அகந்தையால் ஜானே ஆபத்திலிருப்பதாயும், பணத்தாசை எனும் பேராசை பிடியாமல் தவறான பாதையில் ஆடம்ஸ் விழுந்து விடலாம் என்றும், எத்தனை நுணுக்கமாய் அன்று பொய்ரெட் புரிந்துக் கொண்டு ஆரூடம் சொன்னான்?

நான் திடீரென்று கத்தியதற்கு பொய்ரெட்டிடம் உடனடியாய் மன்னிப்பு வேண்டினேன்.

''கர்லோட்டா ஆடம்ஸ் கொலை செய்திருப்பார்னு நான் சொல்ல வரலே, ஹேஸ்டிங்ஸ். நான் உணர்த்த வருவதே வேறு! இந்த மாதிரியான இக்கட்டிலெல்லாம் சிக்கிக் கொள்ளும் முட்டாளல்ல, அவர்! ஒரு கொலையை செய்யப் போறோம்னு கூட அவருக்குத் தெரியப்படுத்தியிருக்க மாட்டாங்க. ஓகே?! அவருக்கு விஷயம் தெரியவராம இருட்டுல வெச்சே அவரை உபயோகப்படுத்தி யிருப்பாங்க. அப்படியானால் - - - ''

முகம் கடுமையாக சட்டென உடைந்துப் போனான் பொய்ரெட்.

''கொலைக்காக தான் பயன்படுத்தப்பட்டுள்ளதாய் அவருக்குக் கட்டாயமாய் தெரிஞ்சிருக்காது. ஆயினும், தெரிந்தோ தெரியாமலோ, நடந்துள்ள பயங்கரக் குற்றத்துக்கு அவரும் ஒரு கருவியாய் தான் இருந்திருக்கார். இது, இன்று வெளியாகும் சீமான் பற்றிய கொலை செய்திகளின் மூலம் அவருக்கு தெரிய வரும். அப்போதுதான் அவருக்கே உண்மை வெளியாகும் - - - ''

பொய்ரெட்டின் குரல் ஓசை கம்மிக் கொண்டு அடங்கியது. பேச முடியவில்லை. ஏதோ அதிர்ச்சியை, ஆபத்தை உணர்ந்தவனாய் பேச்சற்றுப் போனான். அடுத்த நொடியிலேயே சுதாரித்துக் கொண்டு,

''சீக்கிரம் ஹேஸ்டிங்ஸ் சீக்கிரம்'' என்று புருவங்கள் முடிச்சிட ஏறத்தாழ அழும் தொனியில் கத்தினான் - கதறினான்.

''சீக்கிரம், ஹேஸ்டிங்ஸ்! நீயில்லை ஹேஸ்டிங்ஸ் - நான்... நான்... நான் தான் குருடனாயிருந்துட்டேன்! புத்தி மழுங்கிய ஜடமா யிருந்துட்டேன்! ஒரு டாக்ஸி! ம்! பிடி! மரமாய் நிற்காதே ஓடு! துரிதம்! அவசரமடா!''

நான் அவனை முறைத்து செயலற்று நின்றுக் கொண்டேயிருந்தேன். என்ன ஓர் அவசரம்... எத்தனை தீவிர வேகம்... மலைத்தே விட்டேன்.

நான் சுய நினைவுக்குள் நுழையும் போது, அவ்வழியே கடந்துக் கொண்டிருந்த ஒரு டாக்சியை மடக்கியிருந்தான் பொய்ரெட்.

இருவரும் குதித்து அதனுள் நுழைந்தோம்.

''முகவரி உனக்குத் தெரியுமா?''

''கர்லோட்டா ஆடம்ஸையா சொல்றே?''

''ஆமாமாம்'' என்பதிலும், நொடியைக் கூட நழுவ விட்டு விடக் கூடாது என்ற அவசரம் தெறித்தது துப்பறியும் நிபுணரிடம். ''விரைவாக ஹேஸ்டிங்ஸ், ரொம்ப விரைவா. இப்போ, ஒவ்வொரு கணமும், அந்தக் கணங்களின் பின்ன அளவுகளும் மதிப்பு வாய்ந்தவை. என் அவசரம் உனக்கு விளங்கலே?''

''இல்லை'' என்றேன் நான். அல்லாடும் பொய்ரெட்டைப் பார்க்க எனக்குப் பரிதாபமாக இருந்தது. ''எனக்கு ஒன்றுமே விளங்கலையே, பொய்ரெட்!''

''தொலைபேசி புத்தகத்தில்? அதிலிருக்காது. ஆடம்ஸ், ஓர் அமெரிக்கர். அவர் முகவரி, இங்கே இங்கிலாந்து புத்தகத்தில் எங்கே இருக்கப் போகின்றது? சரி..! நேராய் கலாரங்கத்துக்கு சென்று விடுவோம்.''

டாக்சி சீறிப் பாய்ந்து கலாரங்கத்தை அடைந்தது. அங்கு, கர்லோட்டா ஆடம்ஸின் முகவரியைத் தரவே மாட்டேன் என்று அடம் பிடித்தனர். பிறகு, பொய்ரெட் தன் பார்வையாளர் அட்டையைக் காண்பித்ததும் மறுபேச்சின்றி முகவரியைத் தந்தனர். பல அடுக்கு மாடி குடியிருப்புகள் அடங்கிய ஸ்லோன் சதுக்கம் எனும் பகுதியில் ஓர் அடுக்கு மாடிக் குடியிருப்பில் ஆடம்ஸ் தங்கியிருப்பதாய் முகவரி சொன்னது.

டாக்சியை விரட்டினோம்.

வழி நெடுக இருப்புக் கொள்ளாமல் பொறுமையற்றுத் துடிதுடித்துக் கொண்டிருந்தான் பொய்ரெட்.

''நான் காலந்தாழ்த்தி இருக்கக் கூடாது, ஹேஸ்டிங்ஸ். நான் நேரத்தை வீணடித்திருக்கக் கூடாது, ஹேஸ்டிங்ஸ்!'' அழாத குறையாய், ஹெர்குல்.

''எதுக்கு இத்தனை அவசரம்? எனக்குப் புரியவே இல்லை. இதுக்கெல்லாம் என்ன அர்த்தம்டா?''

''அர்த்தம்?'' என்று காற்றில் கேட்டுக் கொண்டு மிக விரக்தியாய் ஒரு வறண்ட சிரிப்பினை உதிர்த்தான். ''நான் அடிமட்ட சோம்பேறியாய் இருந்து விட்டேன் என்பதுதான் அர்த்தம். என்ன நடக்கப் போகிறது என்பதை கணிப்பதில், மிக மிக மெதுவாக இயங்கி விட்ட துரதிர்ஷ்டசாலி! ஆஹ்...! கடவுளே...! காலந்தாழ்ந்து விட்டதே! சரியான நேரத்திற்குள் நாம் அங்கு சென்று சேரா விட்டால்...''

டாக்சி சீறிக் கொண்டு பாய்ந்தது.

அத்தியாயம் - 9

# இரண்டாவது மரணம்

போய்ரெட்டிடம் விளைந்திருக்கும் அபரிமிதமான சமாதான மின்மைக்கான காரணத்தை நான் அறியாவிடினும், இத்தனை தூரம் உணர்ச்சி பூர்வமாக அவன் அல்லாடுவதற்கு நிச்சயம் ஒரு நியாயமான காரணம் கொண்டிருப்பான் என்பது மட்டும் திண்ணமாய் எனக்குத் தெரியும்.

கர்லோட்டா ஆடம்ஸ் குடியிருக்கும் அடுக்குமாடிப் பகுதியை அடைந்து வாடகைக் கார் நின்றதும், துள்ளிக் குதித்து வெளியேறினான் பொய்ரெட். டிரைவருக்கு உரிய பணத்தைத் திணித்து விட்டு, கட்டிடத் துக்குள் பாய்ந்தான். கீழ்த்தளத்தில் இருந்த முகவரி பலகையில், ஆடம்ஸின் பகுதி முதல் மாடியில் இருப்பதாய் எழுதப்பட்டிருந்தது.

மூன்று நான்கு படிகளாகத் தாவித் தாவி ஏறினான். லிஃப்டுக்காக காத்திருக்கவில்லை - அது எங்கோ ஒரு மேல் தளத்திலிருந்தது - அதற்கு சமிக்ஞை அனுப்பிக் காத்திருப்பதில் கூட நேரம் வீணாகி விடும் என விரைந்தோடிக் கொண்டிருந்தான் பொய்ரெட்.

கர்லோட்டா ஆடம்ஸ் வீட்டின் கதவினை அவசரமாய்த் தட்டினான். அழைப்பு மணியையும் அடித்தான். கதவு திறக்கப்பட சற்று நேரமானது - அதற்குள் துடிதுடித்துப் போனான்.

சிறு தாமதத்திற்குப் பிறகு நடுத்தர வயது பெண்மணி ஒருவரால் கதவு திறக்கப்பட்டது. மிகச் சுத்தமாக இருந்தார் அவர். கூந்தலை இழுத்து இறுக்கிப் பின்னுக்குத் தள்ளி வாரியிருந்தார். அவர் கண் இமைகளும், சிவந்தக் கன்னங்களும், மூக்கின் நுனியும், மொத்தத்தில் முழு முகமும், மிக வருந்தி அழுதிருப்பதற்கு சான்றுக் கூறும் படி சிவந்து வீங்கி இருந்தன.

''செல்வி ஆடம்ஸ்?'' - இப்பொழுதே தேவை எனும் அதிகாரம் ஓங்க, ஆவலாய் கேட்டான் பொய்ரெட்.

அந்தப் பெண்மணி, பொய்ரெட்டை ஆழப் பார்த்தார், கேட்டார்: ''கேள்விப்படவில்லை?''

''கேள்விப்படவில்லையா? எதை?''

இவ்வாறு கேட்ட பொய்ரெட்டின் முகம் உணர்ச்சியற்ற பிரேதத்தின் களை கண்டது. வெளிறிப் போனான். இதோ, இதைத் தான் - அது எதுவோ எனக்குத் தெரியாது - ஆனால், இதோ, இதை எதிர்பார்த்துத் தான் அவன் பயந்து அலறி ஓடோடி வந்துள்ளான் என்பது, எனக்குப் புரிந்தது.

கதவைத் திறந்து விட்ட அந்தப் பெண்மணி, மிக வருத்தமாக தன் தலையை இடவலமாக ஆட்டி, இப்படி நடந்திருக்கவே கூடாது என துடித்தார். தன் சோகத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு, உடைந்துப் போன குரலில் சொன்னார்: ''அவர், இறந்துட்டார். தூக்கத்திலேயே மரணம் நிகழ்ந்து விட்டது. கொடுமை - மிகக் கொடுமை.''

அப்படியே கதவில் சாய்ந்து தள்ளாடிப் போனான் பொய்ரெட். ''தாமதமாகி விடக் கூடாதுனு பறந்தேன் - ஆனால் காலம் தாழ்ந்துதான் விட்டது'' - காற்றில் முணுமுணுத்துக் கொண்டான்.

பொய்ரெட்டின் பரிதவிப்பை வெளிப்படையாகவே அறிய முடிந்ததால், அந்தப் பெண்மணி மிக முக்கியத்துவம் கொடுத்து துப்பறியும் நிபுணரைப் பார்த்தாள். ''மன்னிக்கணும் ஸார், நீங்கள் ஆடம்ஸின் நண்பரா? இதற்கு முன்னால நீங்க இங்கு வந்து பார்த்ததாய் எனக்கு நினைவில்லையே'' எனக் கேட்டார்.

இதற்கு நேரடியாக பொய்ரெட் மறுபதில் தரவில்லை. மாறாக, ''ஒரு டாக்டர் வந்து பார்த்து தான் ஆடம்ஸின் மரணத்தை அறிவிச்சிருக்கணும், இல்லையா? என்ன சொன்னார் அவர்?'' என்று கேட்டான்.

''தூக்க மருந்து அடங்கிய திரவத்தை அளவுக்கதிகமாக உட்கொண்டு விட்டதால் மரணம் சம்பவித்து விட்டதாக அறிவித்தார். ஓஹ்! பரிதாபமான முடிவு! எத்தனை அருமையான பெண்! கொடூரமான மருந்துகள்! எங்கு வாங்கினாளோ, எவன் கொடுத்துத் தொலைத்தானோ! அந்த மருந்தின் பெயர் வெரோனல் என்றார்.''

பொய்ரெட் சட்டென்று விறைப்பாய் நிமிர்ந்து செங்குத்தாய் நின்றுக் கொண்டான். தான் துக்கம் அனுஷ்டிக்கத் தகுந்த நேரமில்லை இது என்பதை உணர்ந்தவனாய், அவனுடைய நடவடிக்கை, புது அதிகாரம் கொண்டு எழுந்தது.

''நான் உள்ளே நுழைய வேண்டும்'' என்று கட்டளையாய் உணர்ந்தான்.

பெண்மணியோ, அப்பட்டமான சந்தேகத்துடனும் அவநம்பிக் கையுடனும் பார்த்தார்.

''எதுக்காக இத்தனை அதிகாரத்தோடு, நீங்க உள்ளே நுழையணும்னு - - -''

பெண்மணியின் வார்த்தைக்கெல்லாம் மதிப்பளிப்பவனாய் பொய்ரெட் தெரியவில்லை. தன் வழியை ஏற்படுத்திக் கொள்வதில் விரைவாய் செயல்பட்டான். பெண்மணியின் அவநம்பிக்கையிலிருந்து விடுபட்டு அவளைத் தனது கட்டுக்குள் கொண்டு வர உள்ள ஒரே ஒரு வழியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான் ஹெர்குல் பொய்ரெட்.

''நீங்க என்னை உள்ளே விட்டுத்தான் தீர வேண்டும்'' என்றான். ''நான் ஒரு துப்பறியும் நிபுணன். பொய்ரெட் என் பெயர். உங்கள் முதலாளியான ஆடம்ஸின் கொலை குறித்த சந்தர்ப்பங்களுக்குள் தாமதியாது உடனடியாக நான் விசாரணைக்குள் இறங்க வேண்டும்.''

அந்தப் பெண்மணியின் மூச்சு அப்படியே நின்றுப் போய், பின் மீண்டது. ஓரங்கட்டி நின்றுக் கொண்டார். நாங்கள் குடியிருப்புக்குள் நுழைந்தோம்.

இந்தத் தருணத்திலிருந்து, பொய்ரெட், நிலைமையை, அப்படியே தன் முழு அதிகாரக் கட்டுக்குள் கொண்டு வந்தான். ''நான் இப்போ என்னைப் பற்றி கூறிய அடையாளம்'' என ஓர் ஆணையாய் அந்தப் பெண்மணிக்குக் கட்டளையிட்டான்: ''அது, மிக மிக ரகசியமானது. எந்தத் தருணத்திலும் அது உங்களால் உடைக்கப்பட்டு விடக் கூடாது. செல்வி ஆடம்ஸின் அகால மரணம், ஒரு நேர்ந்திருக்கக் கூடாத விபத்துனு தான் இந்த சமுதாயம் பார்க்கும் - அப்படியே பார்க்கட்டும். ஆடம்ஸை வந்து பரீட்சித்துப் பார்த்து மரணத்தை ஊர்ஜிதம் செய்த டாக்டரின் பெயர் மற்றும் முகவரியைத் தாங்க.''

''டாக்டர் ஹீத், 17, ஹார்லி தெரு.''

''உங்க பெயர்?''

''பென்னட் - அலைஸ் பென்னட்.''

''நீங்க, மிஸ் ஆடம்ஸுடன் மிக நெருக்கமாக அன்பு வைத் திருந்தது புரிகிறது, செல்வி பென்னட்.''

இந்த வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் ''ஓஹ்! ஆமாம்'' என்று அழ ஆரம்பித்து விட்டார் பென்னட். ''மிக இதமான இளம் பெண், நடிகைகளுக்கும் புகழ் பெற்ற கலைஞர்களுக்கும் மிகுந்துக்

கிடக்கும் பந்தா துளியும் இல்லாத அன்பு ஜீவன். அவரைப் போல நிஜமான மனிதத்தை நான் பார்த்ததேயில்லை. மதுரமானவர், பூமியில் கிடக்கும் அத்தனையையும் விரும்பி அன்பு செலுத்திய ருசியானவர்.''

கவனமும் இரக்கமும் கலந்து கூர்மையாய் உள்வாங்கிக் கொண்டிருந்தான் பொய்ரெட். இவ்வளவு நேரம் அவனிடமிருந்த பொறுமையின்மையும் அவசரமும் இப்போது இல்லை. தனக்கு வேண்டிய அத்தனை தகவல்களையும் பெறுவதற்கு, பொறுமையற்ற வேகத்தை விட, அமைதியாய் அன்பாய் முன்னேறும் விவேகமே சாலச் சிறந்தது என்பதனை பொய்ரெட் கையாள்கிறான் எனப் பிரித்துணர்ந்தேன் நான்.

''ஆடம்ஸின் மரணம் உங்களுக்குப் பேரதிர்ச்சியாய் இருக்க வேண்டும்'' - மிருதுவாய் கேட்டான் ஹெர்குல்.

''ஓஹ்! பேரதிர்ச்சியே தான் ஸார்! ஒன்பதரை மணி வாக்கில், வழக்கம் போல் அவருக்கு டீ எடுத்துக்கிட்டுப் போனேன். அதோ... அங்கே தான் அவர் படுத்திருந்தார். ஆழ்ந்த தூக்கத்திலிருப்பதாய் நினைத்தேன். தேநீர் தட்டினை வைத்து விட்டு, திரைச்சீலைகளை விலக்க ஆரம்பித்தேன். அப்போ திரைச்சீலை வளையமொன்று ஏடாகூடமாக மாட்டிக் கொண்டது. நேர் செய்யவே முடியவில்லை - அதைக் குலுக்கிக் குலுக்கி விலக்க வேண்டிய நிர்ப்பந்தம் நேர்ந்தது. குலுக்கும் போது, திரைச்சீலை மாட்டியிருந்த கம்பியில் மோதி, அத்தனை வளையங்களும் கலகலவென பேரோசை எழுப்பின. அந்த ஓசைக்குத் துளியும் அசைந்துக் கொடுக்காது ஆடம்ஸ் படுத்தே இருப்பதைத் திரும்பிப் பார்த்த எனக்கு ஆச்சர்யமாய் போனது. மறுபடியும் குலுக்கி என் முயற்சியைத் தொடர்ந்தேன். மாட்டிக் கொண்ட வளையம் விலகுவதாய் தோன்றவில்லை. அதே ஓசை. திரும்பிப் பார்த்தேன். ஓரங்குலம் கூட ஆடம்ஸிடம் அசைவில்லை. அப்போது திடுமென ஏதோ ஒரு திகில் என்னை ஆட்கொள்வதை என்னால் உணர முடிந்தது. அவர் படுத்துக் கிடந்த விதத்தில் வாடிக்கையான இயற்கையான நிலை இல்லாததை மெல்ல மெல்ல அறிந்தேன் - மரமாய் கிடப்பது போல தோணிச்சு. திரைச்சீலையை விட்டுட்டு, அவர் படுக்கைக்கு அருகில் சென்று, போட்டது போல் கிடந்த அவர் கையினைத் தயங்கித் தயங்கித் தொட்டேன் - - - ''

இப்படிச் சொல்லி நிறுத்திய பென்னட்டின் கண்கள் விரிந்துக் கொண்டே போக திகிலானார். நிலைகுத்திய பார்வையைப் பார்த்தபடி

''ஐஸ் கட்டியைப் போல் இறுகி சில்லிட்டிருந்தது ஸார், அவர் கை. வீரென்றுக் கதறிட்டேன்'' என்றார்.

விக்கித்துப் போனார். எதிரிலிருப்பது என்னவென்று தெரியாத ஒரு குருடனின் பார்வை, அவர் கண்களில்! பிறகு சுய நிலைக்கு வந்து, பொலபொலவென அழ ஆரம்பித்து விட்டார். விசும்பினார்.

''புரியுது, புரியுது'' என்று அனுதாபம் மிகுந்து ஏற்றுக் கொண்டான் பொய்ரெட். ''நிச்சயம் அந்தக் கணம், உங்களுக்கு மிகக் கொடூரமான தாய் தானிருந்திருக்க வேண்டும். தான் தூங்குவதற்கு அடிக்கடி தூக்க மாத்திரை சாப்பிடும் வழக்கம் மிஸ் ஆடம்ஸுக்கு உண்டா?''

''அவருக்கு ஏற்படும் தலைவலியைத் தணிக்க, அவ்வப்போது சில தலைவலி மாத்திரைகளை மட்டும் சாப்பிடுவார், ஸார். சிறு குப்பியிலிருக்கும் சிறு சிறு மாத்திரைகள் அவை - ஆனா அவர் நேற்று உட்கொண்டிருப்பது வேறு ஏதோ! டாக்டர் தான் சொன்னார் - தூக்கம் உண்டு பண்ணவல்ல திரவமாம்.''

''நேற்றிரவு அவரைக் காண யாராவது வந்தாங்களா? யாராவது பார்வையாளர்?''

''இல்லை ஸார் - நேற்று சாயங்காலம் அவர் தான் வெளியே போயிருந்தார்.''

''எங்கே போறேன்னு அவர் உங்ககிட்டே சொல்லிட்டுப் போனாரா?''

''இல்லை ஸார். ஏழு மணி வாக்கில் கிளம்பி வெளியே போனார்.''

''ஆஹ்..! எந்த மாதிரியான உடையலங்காரம் செய்திருந்தார்?''

''கறுப்பு உடையணிந்திருந்தார் ஸார். முழுக்கவும் கறுப்பு உடை மற்றும் ஒரு கறுப்புத் தொப்பி.''

பொய்ரெட் திரும்பி என்னைப் பார்த்தான். கணநேரப் பார்வை தான். ஆனால் அதில் தான் எத்தனை அர்த்தம்!

''ஏதாவது நகையணிந்திருந்தாரா?''

''அவர் எப்பொழுதும் அணியும் முத்து மணி மாலை மட்டும் தான் அணிந்திருந்தார், ஸார்.''

''கையுறைகள்? சாம்பல் நிற கையுறைகள்?''

''ஆமாம் ஸார்... வெகு சரி... அவர் அணிந்து சென்ற கையுறை களின் நிறம் சாம்பல் தான்.''

மீண்டும் என் பக்கமாய் கண நேரப் பார்வை!

''ஆஹ்! இப்போ, கவனியுங்க செல்வி பென்னட்..! முடிஞ்சா, அவர் என்ன மனோநிலையில் இருந்தார் என உங்களால நினைவுபடுத்திச் சொல்ல முடியுமா? உல்லாச மனநிலை? அல்லது கிளர்ச்சியாய்? வருத்தமாய்? அதிர்வாய்? என்ன மனோநிலையில் ஆடம்ஸ் இருந்தார்?''

யோசிக்காமல், ''எப்பொழுதும் நான் கண்டிராத மனோநிலையில், புதிதாய் தெரிந்தார் அவர்'' என சட்டென்று பதில் தந்தார் பென்னட். ''கார்லோட்டா ஆடம்ஸ் - எது குறித்தோ முழு மன திருப்தி அடைந்து விட்டவராய் எனக்குத் தோன்றினார், ஸார். அவருக்கு எதிரே அடக்க முடியாத சிரிப்பை உண்டு பண்ணவல்ல நகைச்சுவை ஏதோ நடந்துக் கொண்டிருப்பதுபோல, தனக்குத் தானே சிறு சிரிப்பில் இருந்தார், ஸார்.''

''எத்தனை மணிக்கு அவர் திரும்பினார்?''

''நள்ளிரவு பன்னிரெண்டு மணி கடந்து சிறிது நேரத்தில் திரும்பினார், ஸார்.''

''அப்போ அவரிருந்த மனோநிலை என்ன மாதிரி இருந்தது? கிளம்புவதற்கு முன்னிருந்த அதே மனோநிலையிலா இருந்தார்?''

''மிகக் களைத்து, தளர்வாய் இருந்தார், ஸார்.''

''மனக் கிலேசம் அடைந்தவராய் அல்லது வருத்தப்படுபவராய் அல்லது நிலைமையே தலைகீழாய் கவிழ்க்கப்பட்டவராய் தோன்றினாரா?''

''கிடையாது, ஸார். அவர் வருத்தத்தில் இல்லை. முடிக்க முடியாத ஒரு விஷயத்தை அப்போதுதான் முடித்த ஒருவர் அடையத்தக்க சந்தோஷத்தில், மன திருப்தியில் தான் அவர் தெரிந்தார். யாருக்கோ தொலைபேசி செய்ய ஆரம்பித்தார். அப்போது, அது குறித்தெல்லாம் தனக்கு கவலையில்லை என்று எது குறித்தோ சொன்னார், ஸார்! அதையெல்லாம் காலையில் முடித்துக் கொள்ளலாம் என்றும் பதிலளித்தார்.''

''ஆஹ்ஹா'' என்று பொய்ரெட்டின் கண்கள் உத்வேக எழுச்சியில் மின்னின. அப்படியே முன் வளைந்து ரகசியக் குரலில் கேட்டான்: ''அவர் தொலைபேசி செய்த நபரின் பேரை நீங்க கேட்டீங்களா?''

''இல்லை, ஸார். ஏதோ ஓர் எண்ணிற்கு இணைப்புக் கேட்டுக் காத்திருக்க வேண்டும். தொலைபேசி எக்ஸ்சேஞ்சிலிருந்து வழக்கம் போல் சொல்லும் மந்திரமான 'முயற்சி செய்துக் கொண்டிருக்கிறோம்' எனும் மறு பதில் வந்திருக்க வேண்டும். ஏன்னா, 'பரவாயில்லை' என்று

ஆடம்ஸ் சொன்னார். அதை வெச்சு சொல்றேன்! சிறிது நேரம் போனது. அப்போது அவர் கொட்டாவி விட்டுக் கொண்டிருந்தபோது, இணைப்புக் கிடைத்து மறுமுனையில் ஏதேனும் பேசியிருக்க வேண்டும். 'ஓஹ்! எனக்கு அது குறித்தெல்லாம் கவலையில்லை. நான் மிகக் களைத்துப் போய் வந்திருக்கிறேன்' என்று சொல்லிவிட்டு, மறுமுனையின் பதிலுக்குக் காத்திராது ரிஸீவரை வைத்து விட்டு, உடைகளைக் களைய ஆரம்பித்தார்.''

''அவர் இணைப்பகத்தில் இணைப்புக் கேட்ட அந்த தொலைபேசி எண்? ஞாபகப்படுத்த முடிகிறதா? முடியும், யோசியுங்க... மிக முக்கியமானதுப்பாய் அது அமையலாம்.''

''எனக்கு நினைவு வரலே, மன்னிச்சுடுங்க ஸார்! எந்த எண்ணை ஆடம்ஸ் அழைத்தால், எனக்கென்ன ஸார்! அதனால், அதற்கு நான் முக்கியத்துவம் தரலே. ஆனா, அந்த எண், விக்டோரியா பிரதேசத்து எண் என்பது மட்டும் விளங்கிற்று. எண்ணின் அமைப்பை வைத்துச் சொல்றேன்.''

''அவர் படுக்கைக்குத் தூங்கச் செல்வதற்கு முன்னால், சாப்பிடவோ அல்லது குடிக்கவோ ஏதேனும் எடுத்துக் கொண்டாரா?''

''எப்பொழுதும் போல், ஒரு கோப்பை சூடான பால் அருந்தினார்.''

''அதை யார் தயார் செய்தது?''

''நான்தான், ஸார்.''

''அந்த மாலைப் பொழுதில் வேறு ஒருவரும் உங்கள் குடியிருப்புக்குள் வரவில்லை, இல்லையா?''

''யாரும் வரலே, ஸார்.''

''சரி. மாலைக்கு முன்..? மதியம் அல்லது பகல் பொழுதில்?''

''ஒருத்தர் கூட எங்கள் குடியிருப்புக்கு வரவில்லை என்பது நிச்சயம். செல்வி ஆடம்ஸ் மதிய உணவுக்கும் மேலும் மாலை சிற்றுண்டிக்கும் வெளியே போய் வந்தார். மாலை ஆறு மணிக்குத்தான் திரும்பி வந்தார்.''

''பால் எப்பொழுது வந்தது? அதாவது, நேற்று இரவு ஆடம்ஸ் குடித்த பால்?''

''அவருக்கு கொடுத்தது புதுப் பால்தான் ஸார். மதிய நேரத்துப் பால். மாலை நான்கு மணிக்கு வந்து பால்காரன் வெளியே வைத்துச் செல்வான். ஓஹ்! ஸார், பாலில் சந்தேகம் வேண்டாம். பாலில் எந்தத் தவறும் இல்லை என்பது சர்வ நிஜம். இன்று காலைல நான் குடித்த ம

கூட அதில் செய்யப்பட்டதுதான். டாக்டரும், ஆடம்ஸ் குடித்த தூக்க மாத்திரையால் தான் மரணம் சம்பவித்துள்ளது என்பதில் வெகு ஸ்திரமாய் இருக்கிறார்.''

''நான் பாலில் ஏதாவது தவறு இருக்கலாம் என நினைப்பது தப்பாய் கூட இருக்கலாம். டாக்டரைப் பார்த்து இதை நான் விவாதிச்சுக் கிறேன்'' என்ற பொய்ரெட், ''ஆடம்ஸுக்கு விரோதிகள் இருந்திருக்க வேண்டும்!'' என்று பென்னட்'டிடம் சொன்னான். ''இங்கிலாந்தி னைப் போல பத்திரமான நாடல்ல, அமெரிக்கா. அது மிக ஆபத்தான நாடு.''

''கேள்விப்பட்டிருக்கிறேன் ஸார். சிக்காகோ நகரில் துப்பாக்கி யோடு தான் எல்லாரும் வளைய வருவார்கள் என்றெல்லாம் படித்திருக் கிறேன், ஸார். துஷ்ட நாடு. அங்கெல்லாம் போலீஸ் என்ன செய்துக் கொண்டிருக்குமோ தெரியலே! நம் போலீஸ் போல பாதுகாப்பு தராது போல.''

அப்பொழுது, பொய்ரெட்டின் கண்கள், அங்கிருந்த நாற்காலியில் மீசினாற் போலிருந்த சிறு கைப் பெட்டி மீது பதிந்தன.

''நேற்றிரவில், மிஸ் ஆடம்ஸ் கிளம்பி வெளியேறிய போது, இந்த சிறு கைப்பெட்டியையும் உடன் தூக்கிச் சென்றிருந்தாரா என்ன?''

''காலையில் வெளியே சென்ற போது எடுத்துப் போனார், ஸார். மாலை சிற்றுண்டியெல்லாம் முடித்து திரும்பியபோது, அவர் மட்டும் தான் வந்திருந்தார். அப்போது இந்த கைப்பெட்டியை அவர் கொண்டு வரவில்லை. ஆனால் இரவு மொத்தமாய் திரும்பி வந்த போது இப்பெட்டி அவரிடம் இருந்தது.''

''ஆஹ்! சரி.. அதைத் திறக்க உங்கள் அனுமதி தேவை.''

அலைஸ் பென்னட் எதையும் அனுமதித்திருப்பார். சந்தேகமும் அவநம்பிக்கையும், தீர்க்கப்பட்டதும் கைப்பாவைகளாகி விடும் எல்லா சந்தேகப் பெண்களைப் போலவும் தான் பென்னட்டும் நடந்துக் கொண்டார். பொய்ரெட் ஆலோசிக்கும் எதற்கும் சம்மதப்படுகிற பேர்வழியாகி நின்றார், பென்னட்.

சிறு கைப்பெட்டி. அது பூட்டியிருக்கவில்லை. பொய்ரெட் திறந்தான். நானும் முன் வந்து அவன் தோள் வழி குனிந்து அதனுள்ளே பார்த்தேன்.

''பார், ஹேஸ்டிங்ஸ் பார்..! அன்று என்னைப் பழித்தாயே..! இப்போது பார்..!'' என எக்காளமிடாத குறையாய் பரவசமானான்

பொய்ரெட் - அவன் கணிப்பு கிஞ்சித்தும் மாறாமல் உண்மையாகி யிருப்பதைப் பார்த்து!

யாரும் விளக்கத் தேவையில்லாதபடி, கைப்பெட்டிக்குள் இருந்த சாமான்கள், தாங்களாகவே விளக்கம் தந்தன.

ஒப்பனை செய்வதற்குத் தேவையான அரிதாரப் பொருட்கள் அடங்கிய சிறு ஒப்பனைப் பெட்டி இருந்தது. சிறு கரண்டி போன்ற இரு உபகரணங்கள் இருந்தன. பார்த்தவுடனேயே அவை என்ன என எனக்குப் புரிந்தது. காலணிகளில் பாதப் பகுதியில் அடைக்கப் பயன்படும் தூக்கிகள். உயரத்தை சில அங்குலங்கள் உயர்த்திக் காட்டப் பயன்படும் பொருள்! சாம்பல் நிற கையுறைகள், மடிக்கப்பட்ட தாளினால் ஆன கைக்குட்டைகள், பிரத்யேகமாய் செய்யச் சொல்லி தயாராகியிருந்த தங்க நிறத்தாலான செயற்கை கூந்தல் - அப்படியே ஜானேயின் கூந்தலில் காணப்படும் தங்க நிறம் மிளிரும் பொய்க் கூந்தல். நிறம் மட்டுமல்ல, நடு வகிடு எடுத்து வாரி, சுருள சுருள பின்னங்கழுத்தில் ஜானே விட்டுக் கொள்ளும் கூந்தல் போலவே வடிவமைக்கப்பட்டிருந்த நேர்த்தி.

''இப்பொழுதாவது சந்தேகம் எழுகிறதா, ஹேஸ்டிங்ஸ்?''

பெட்டியைத் திறப்பதற்கு முன் வரை ஆடம்ஸை நான் நம்பித்தானிருந்தேன். ஆனால் இப்பொழுதுதான் எல்லாம் விளங்கி விட்டனவே!

பொய்ரெட் கைப்பெட்டியை மூடி விட்டு வேலைக்காரி பக்கம் திரும்பினான்.

''மிஸ் ஆடம்ஸ், நேத்து ராத்திரி யாருடன் உணவருந்தியிருப்பார்னு உங்களுக்குத் தெரியாதா?''

''நோ, ஸார்.''

''யாருடன் அவர் மதிய உணவும் மாலை டிபனும் எடுத்துக் கொண்டிருப்பார் என்றாவது ஏதேனும் குறிப்பு தெரியுமா?''

''டிபன் பற்றி எனக்கு கருத்து இல்லை, ஸார். மதிய உணவினை செல்வி ட்ரைவருடன் எடுத்துக் கொண்டிருக்கலாம் என்பது என் ஊகம்.''

''மிஸ் ட்ரைவர்?''

''ஆமாம், ஸார். மேடம் கர்லோட்டா ஆடம்ஸின் மிக நெருக்கமான தோழி. பாண்ட் தெருவருகே பெரிய அளவினாலான ஒரு தொப்பிக் கடை வைத்து நடத்தி வருகிறாள் அவள். ஜெனிவைன் என்பது அக்கடையின் பெயர்.''

அதன் முழு முகவரியையும், தன் குறிப்பேட்டில் டாக்டரின் முகவரிக்குக் கீழே வருமாறு குறித்துக் கொண்டான், பொய்ரெட்.

''இன்னுமொரு விஷயம் மட்டும் கேட்க வேண்டியுள்ளது மிஸ் பென்னட்! ஆறு மணிக்கு மேடம் ஆடம்ஸ் வீட்டுக்கு வந்தபோது, சராசரிக்கு மாறாக அல்லது குறிப்பிட்டு வித்தியாசம் காணும்படியாக, எதையோ சொன்னது மாதிரியோ அல்லது செய்தது மாதிரியோ, அது ஏதாவது மிகச் சின்னதாய் இருந்தாலும் பரவாயில்லை... ஆனால் அவரின் வழக்கத்துக்கு மாறாக நடந்துக் கொண்டது மாதிரி, ஏதாவது ஞாபகத்தில் எட்டிப் பார்க்கின்றதா?''

பணிப்பெண் பென்னட் சில நொடிகள் ஆழ்ந்து சிந்தித்தார். பிறகு, ''அப்படி ஏதும் என் நினைவில் இருப்பதுபோல தெரியலே'' என மிக உண்மையாய் சொன்னார். ''தேநீர் சூடாய்த் தரட்டுமா என்றேன். அதற்கு, வெளியிலேயே குடித்து விட்டு வந்து விட்டதாய் சொன்னார்.''

''ஓஹ்! குடித்து விட்டு வந்து விட்டதாய் சொன்னார்; இல்லையா?'' - குறுக்கிட்டு ஊர்ஜிதப்படுத்திக் கொண்டான் பொய்ரெட்.

ஆமாம் என்று பென்னட் மீண்டும் ஒப்புக் கொண்டார். ''பிறகு கிளம்பி வெளியே போகும் வரை கடிதம் எழுதிக் கொண்டிருந்தார்.''

''கடிதங்கள்? அட! யாருக்குன்னு உங்களுக்குத் தெரியாதா?''

''தெரியும் ஸார். ஒரே ஒரு கடிதம் தான் எழுதினார் - வாஷிங்டனில் வசிக்கும் அவரது சகோதரிக்கு. வாரமிரு முறை தவறாது தன் சகோதரிக்கு கடிதம் எழுதி விடுவது மிஸ் கர்லோட்டா ஆடம்ஸின் வழக்கம். கடைசி பட்டுவாடாவுக்கு முன் கடிதத்தைச் சேர்ப்பித்து விட வேண்டும் என கையிலேயே கொண்டு போனார். ஏதோ முக்கியமான கடிதம்னு சொல்லிக் கொண்டார். ஆனால், தபாலில் சேர்ப்பிக்க மறந்துட்டார்.''

''எனில், அது இன்னும் இங்கு தான் இருக்கா?''

''இல்லை, ஸார்! நான் தபால்ல சேர்ப்பித்துட்டேன். தபால்ல போடலியேனு நேற்றுப் படுக்கைக்குப் போகும்போது தான் அவருக்கு ஞாபகம் வந்தது. முக்கியமான கடிதம்னு அவர் சொல்லியிருந்த படியால், நான் வேணும்னா நேரம் கழித்து சேர்ப்பதற்குண்டான கூடுதல் அஞ்சல் தலையை ஒட்டி தபால்ல சேர்ப்பித்து விடுவதாய் சொல்லி எடுத்துச் சென்றேன். *சேர்ப்பித்தேன்!*''

''ஓஹ்! தபால் அலுவலகம் வெகு தொலைவிலா இருக்கு?''

''இல்லை ஸார், படியிறங்கினா தபால் அலுவலகம் தான். அதனால தான் அந்த இரவிலும் சென்று சேர்ப்பித்தேன்.''

''போகும் போது வாசல் கதவினைப் பூட்டிட்டுப் போனீங்களா?''

பென்னட் திகைத்தார் - விழித்தார்.

''இல்லை, ஸார்... திறந்தபடியிருக்கத் தான் போய் வந்தேன். தபாலில் கடிதம் போடப்போகும் போதெல்லாம் பூட்டுவதில்லை, ஸார்.''

ஏதோ பேச வாயெடுத்தான் பொய்ரெட் - ஆனால் நிதானித்து விட்டான்.

''நீங்கள் அம்மாவைப் பார்க்கணுமா, ஸார்?'' கண்களில் நீர்ப்பூக்கள் உதிரக் கேட்டார் பணிப்பெண் பென்னட். ''மலர்ந்தப் பூவாய் தான் இன்னும் இருக்கிறார்'' எனச் சொல்லிவிட்டு வாயைப் பொத்திக் கொண்டு ஓசையெழாமல் அழுதார்.

அவரைப் பின்தொடர்ந்து படுக்கை அறைக்குச் சென்றோம்.

கர்லோட்டா ஆடம்ஸ் இறை அமைதியில் இருந்தார். சவாயில் பார்த்ததை விட மிக சின்னப் பெண்ணாய் காணப்பட்டார். களைத்து ஒய்ந்து போன சிறு குழந்தை உறங்குவது போலத்தான் இருந்தது, அவர் கிடந்த நிலை. இதை உணரும் போது நெஞ்சில் சிறு வலி எழுந்தது.

ஆடம்ஸைக் குனிந்துப் பார்த்துக் கொண்டிருந்த பொய்ரெட்டின் முகத்தில் விசித்திரமான உணர்வு பிரதிபலித்தது. சிலுவையின் குறியினை ஆடம்ஸின் உடல் நெடுகிலும் ஒரு முறை வரைவது போல் காட்டினான்.

படியிறங்கி வெளியேறிக் கொண்டிருக்கும்போது ''பரிதாபகரமான மரணம். பல மரணங்களைப் பார்த்துள்ள என்னாலேயே ஜீரணிக்க முடியாது சிறு தள்ளாட்டம் ஏற்படுது. இருந்தாலும் ஒரு நிம்மதி என் நெஞ்சுக்குக் கிடைத்துள்ளது ஹேஸ்டிங்ஸ். கர்லோட்டா ஆடம்ஸை என்னால காப்பாற்றியிருக்க முடியாது. சீமான் எட்ஜ்வேர் இறந்த சேதியை நான் கேட்கும் போது, அதுக்கு முன்னாடியே இறந்தவளாக ஆகிவிட்டார் செல்வி கர்லோட்டா ஆடம்ஸ். எனவே நான் தாமதிக்காமல் வந்திருந்தாலும் இவரைக் காப்பாற்றியிருக்க முடியாது. இது என்னை லகுவாக்குகின்றது, ஆமாம், இது என்னை ரொம்பவும் ஆசுவாசப்படுத்துகின்றது.''

அத்தியாயம் - 10

# ஜென்னி மெரைவர்

பணிப்பெண் பென்னட் கொடுத்திருந்த முகவரியின் துணை கொண்டு, டாக்டரைப் போய் சந்திப்பது நான், எங்களது அடுத்த முன்னேற்றமாக அமைந்தது.

வீண் தடபுடல் செய்து மிகைப்படுத்தி சந்தடி ஏற்படுத்தும், ஒரு வகை தெளிவற்ற முதியவராய் தோன்றினார், டாக்டர் ஹீத். பொய்ரெட், ஒரு பெயர் பெற்ற துப்பறியும் அதிகாரி என ஏற்கனவே அவர் அறிந்திருந்தபடியால், பொய்ரெட்டை நகமும் சதையுமாய் நேரில் சந்திப்பதில், உயிரோட்டமான மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார் அவர்.

மகிழ்ச்சியினை விமரிசையான வரவேற்பில் காட்டி முடிந்ததும், ''திருமிகு பொய்ரெட்..! என்கிட்டேயிருந்து என்ன வகையான உதவியை எதிர்பார்த்து வந்திருக்கீங்க?'' என்று கேட்டார்.

''இன்று காலை, மிஸ் கர்லோட்டா ஆடம்ஸைப் பரிசோதனை செய்ய அவர் வீடு வரை சென்று வந்திருக்கீங்க, இல்லையா?''

''ஆஹ்..! ஆமாம். பரிதாபகரமான பெண். அவர், எத்தனை திறமையான விகடகவி நடிகை தெரியுமா! அவரோட விகடகவி நிகழ்ச்சிக்கு நான் ரெண்டு முறை போயிருக்கேன். இரு நிகழ்ச்சிகளும், வயிறு வலிக்கச் சிரிக்கச் செய்த, பிரமாதமான ஹாஸ்ய நிகழ்ச்சிகள்! இப்படி ஒரு முடிவு அவருக்கு நேர்ந்துள்ளதை எண்ணும்போது, நெஞ்சு கனக்க விசனப்படுகிறேன். திறமையும் பெயரும் புகழும் மிகும் ஆடம்ஸ் போன்ற நடிகைகள், கண்றாவி இந்தப் போதைப் பழக்கத்துக்கு ஏன் தான் பழக்கமாகித் தொலைக்கிறார்களோ?''

''எனில், அவர் போதைப் பழக்கத்துக்கு அடிமையாகி இருந்திருக்கிறார்னா சொல்றீங்க?''

''ஒரு டாக்டராய், திருமிகு பொய்ரெட், அப்படி நான் சொல்வதற்கில்லை. ஆடம்ஸின் தோள் பகுதிகளிலோ, தொடையிலோ, புறங்கை பகுதிகளிலோ அல்லது நரம்பு புடைத்துத் தெரியும் வேறெந்த பகுதிகளிலோ, ஊசி குத்தப்பட்டதற்கான ஒரே ஒரு தடம் கூட காணப்படலே. எனவே வெளிப்புற உபயோகமாய் அவர் போதை மருந்துகளை எடுத்துக் கொண்டதாய் சொல்ல முடியாது. ஆனா, வாய் வழியா உட்கொண்டிருப்பது வெளிப்படையாகவே எனக்குத் தெரிய வந்துள்ளது. அங்கிருந்த பணிப்பெண், இரவு ஆடம்ஸ் மிக நன்றாகத் தூங்கியதாக சொல்றா - ஆனா, இவர் தூங்கினாரா அல்லது மரித்துக் கிடந்தாரா என்றெல்லாம் பணிப்பெண்களுக்குத் தெரிந்து விடாது. உறங்குவதற்காக வெரோனல் குடித்திருக்கலாம் எனும் ஊகத்தில் அவள் இப்படிச் சொல்லலாம். எனக்கென்னவோ, வெரோனல் எனும் போதை மருந்தினை தினந்தோறும் ஆடம்ஸ் உட்கொண்டுள்ளதாய் தோணலே - ஆயினும், சமீப காலமாக உட்கொண்டு வந்திருக்கிறார் என்று மட்டும் சாட்சிபூர்வமாக நாம் நிரூபிக்க முடியும்.''

''சாட்சிபூர்வமாக? எதை அடிப்படையாய் வைத்து இப்படி நினைக்கிறீங்க?''

''இதை'' என்று அவருடைய விசாலமான அலுவலக மேஜையில் அவரருகே வைத்திருந்த சிறு கைப் பெட்டி ஒன்றை சுட்டிக் காட்டி, தன் பக்கம் அதை இழுத்துக் கொண்டார். வலுவாய் செய்யப்பட்டிருந்த சிறு கறுப்பு கைப்பெட்டி அது. ''எப்படியும் மரண விசாரணை வரும். ஆடம்ஸைப் பரிசோதித்த மருத்துவர் என்ற முறையில் என்னை நாடி வருவீர்கள். எனவே, முக்கியமான சாட்சி அடங்கிய இந்தப் பெட்டியினை, பணிப்பெண் பார்த்து ஏதாவது குழப்பத்தை ஏற்படுத்துவதை விட, நான் எடுத்து வந்து ஒப்படைப்பதே சிறந்தது என முடிவெடுத்து அங்கிருந்து தூக்கி வந்துட்டேன்.''

அந்தக் கைப்பெட்டியைத் திறந்து, அதனுள்ளிருந்து சிறு தங்க நிறப் பையினை எடுத்தார் ஹீத். அதன் மேல், சிவப்பு நிறக் கற்களால், அச்சு எழுத்துக்களில், கர்லோட்டா ஆடம்ஸ் எனும் பெயரின் சுருக்கமான CA என பொறிக்கப்பட்டிருந்தது. அதனை ஹீத் திறந்தார். அது முழுவதும் வெள்ளை நிறப் பொடி நிறைந்திருந்தது. ''வெரோனல் பொடி'' என்றார் சுருக்கமாய். ''இதோ.. இப்பையின் மூடியின் உள் பக்கத்தில் எழுதியிருப்பதைப் பாருங்கள்'' என்று காட்டினார்.

CA வுக்கு, Dயிடமிருந்து.
பாரீஸ்.
நவம்பர் 10
இனிய கனவுகள்.

*''நவம்பர் 10'' ஆழ்ந்து சொல்லிப் பதிந்துக் கொண்டான் பொய்ரெட்.*

*''ஆமாம். நவம்பர் 10. நாம் இப்பொழுது ஜூனில் இருக்கிறோம். குறைந்தபட்சம் ஆறு மாத காலமாக வெரோனல் பொடியை திரவமாக்கி உட்கொள்ளும் போதைப் பழக்கத்தில் ஆடம்ஸ் இருந்திருக்கிறார் என்பதனை இது காட்டுது. வருடம் குறிப்பிடப்படவில்லை. எனவே 18 மாதமாகவோ இரண்டரை வருட காலமாகவோ, இல்லை, அதற்கும் மேலாகவோ கூட இப்பழக்கத்துக்கு அடிமையாகி ஆடம்ஸ் வாழ்ந்திருக்கலாம்.''*

*கடுமையான முகத்தோடு ''பாரீஸ்'' என்றும் ''D'' என்றும் முணுமுணுத்தான் பொய்ரெட்.*

*''இவை எதையேனும் உங்களுக்கு உணர்த்துதா, திரு பொய்ரெட்? எனினும், திருமிகு பொய்ரெட்! இவ்வழக்கினைக் கையிலெடுத்துக் கொள்ள உங்களை எது ஈர்த்துள்ளது என நான் கேட்கவேயில்லை! உதவக் கூடிய அடிப்படை ஆதாரங்கள் அநேகமாக உங்களுக்குக் கிடைத்திருக்க வேண்டும்னு நினைக்கிறேன் - அதனால் தானே இத்தனை ஆர்வம் உங்களுக்கு? ஆடம்ஸின் மரணம் தற்கொலை தானானு நீங்க அறிய விழைவதாய் நினைக்கிறேன். அதை நிச்சயப்படுத்தி என்னால சொல்ல இயலாது. என்னால் மட்டுமல்ல, யாராலும்! பணிப்பெண்ணின் வர்ணனையின்படி, கர்லோட்டா ஆடம்ஸ் நேற்று ரொம்ப மகிழ்ச்சியுடன் சந்தோஷமாகவும் தான் இருந்திருக்கிறார். எனவே, நிகழ்ந்துள்ள அகால மரணம் ஒரு விபத்துப் போலத் தான் தோன்றுகிறது. என் தனிப்பட்ட கருத்தின்படியும், இது, ஒரு விபத்துதான். வெரோனல், ஒரு நிச்சயமற்ற போதை மருந்து. கோப்பைக் கோப்பையாகக் குடிக்கலாம்... ஒண்ணும் செய்யாது - ஒரு தூக்கம் போட்டு எழுந்தால் மருந்தின் அத்தனை வீர்யமும் காணாமற் போய்விடும். ஆனால் ஒரு சிறு கரண்டி தான் குடித்திருப்போம். உயிர் பறித்து விடும். இக்காரணத்திற்காக, இது மிக ஆபத்தான மருந்து. எனவே மரண விசாரணையின் போது, விபத்தாய் நிகழ்ந்து விட்ட ஒரு துர்மரணம் என்றே இவ்வழக்கை மூடுவார்கள். என்னாலும் இதற்கு மேல் எந்த உதவியும் செய்வதற்கில்லை.''*

''மிஸ் ஆடம்ஸின் அந்த சிறு பெட்டியை நான் பரிசோதிக்கலாமா?''

''நிச்சயமாக, நிச்சயமாக.''

பொய்ரெட், தலை கீழாய் கவிழ்த்து உள்ளிருந்த அத்தனையையும் மேஜை மீது கொட்டினான். ஒரு மூலையில் CMA என நூல் வேலை செய்யப்பட்டிருந்த கைக்குட்டை, தாளினாலான சில கைக்குட்டைகள், முகத்தில் பவுடர் பூச உதவும் ஒரு பஞ்சு, உதட்டுச் சாயக் குழல், கொஞ்சம் பணம், மற்றும் ஒரு ஜோடி மூக்குக் கண்ணாடி.

இந்தக் கடைசி பொருளை ஈடுபாட்டோடு பார்த்தான் பொய்ரெட்! அவை, தங்க முலாம் பூசப்பட்ட, சக்தி வாய்ந்த மூக்குக் கண்ணாடிகள். ''ஆச்சரியம்'' என்று சொல்லிக் கொண்டே பொய்ரெட், ''மிஸ் ஆடம்ஸ் கண்ணாடி அணிவார் என்பது எனக்குத் தெரியாத ஒரு விஷயம். ஒருவேளை படிக்கும் போது மட்டும் அணிந்துக் கொள்ளும் வகையாக இருக்கலாம்'' என்றான்.

அவற்றை எடுத்துப் பரீட்சிக்கும் பார்வையில் பார்த்தார் ஹீத். ''இல்லை'' என பொய்ரெட்டின் கருத்தை மறுத்தார். ''கண் பார்வைக்காக அணியப்படும் கண்ணாடிகள் தான் இவை'' என்று சான்றிதழ் அளித்தார். ''இவை, அதிக சக்தி வாய்ந்த மூக்குக் கண்ணாடிகள். இவற்றை அணியும் மனிதன் நிச்சயமாய் மிகவும் கிட்டப் பார்வை கொண்டவராகத் தானிருக்க வேண்டும்.''

''மிஸ் ஆடம்ஸ் மூக்குக் கண்ணாடிகள் அணிபவரா என, ஒரு டாக்டராய் உங்களுக்குத் தெரியாதா?''

''மருத்துவத் தேவையாய் இதற்கு முன் நாங்க இருவரும் சந்தித்துக் கொண்டதில்லை. சமையலின் போது அறுபட்டு விட்ட பணிப் பெண்ணின் விரலுக்கு அவசர சிகிச்சை அளிக்க ஒரு முறை அழைக்கப் பட்டிருக்கிறேன். அவ்வளவே. இதுதவிர, அவரது குடியிருப்புக்கு நான் சென்றதே கிடையாது. அப்போ நான் போன போது கூட, மருத்துவத்தின் போது முழுவதும் என்னுடனிருந்த மிஸ் ஆடம்ஸ், மூக்குக் கண்ணாடியின் துணையின்றி தான் செயல்பட்டார்.''

பொய்ரெட் மருத்துவர் ஹீத்துக்கு மிக்க நன்றியைப் பணிவோடு தெரிவித்துக் கொள்ள, இருவரும் கிளம்பினோம். வழியில், பொய்ரெட், புதிரான முக பாவத்திலேயே காணப்பட்டான். திடுமென ''நான் தவறாக கணித்திருக்கலாம்'' என்றான்.

''எதில்? ஆடம்ஸ் ஜானேவாக, ரீஜெண்ட் மாளிகைக்கு சென்ற முடிவிலா?''

''சே சே! அதுதான் நிரூபிக்கப்பட்டு விட்டதே. ஆடம்ஸின் மரணம் குறித்த என் கணிப்பைக் குறிப்பிடுகிறேன். கைக்கு மெய்யாக வெரோனல் போதை மருந்தினைத் தன்னிடம் வைத்திருக்கிறார் ஆடம்ஸ். மிக மிக களைத்தும் சலித்தும் அதிகபட்சப் பணியில் கட்டுண்டும் இருந்தபடியால், ஆழ்ந்த தொந்தரவற்ற தூக்கத்தை அனுபவிக்க அவர் தீர்க்கமாய் முடிவெடுத்திருக்கலாம்.''

இப்படிச் சொல்லிக் கொண்டே சென்றவன், நடைபாதையில் நடந்து செல்வோரெல்லாம் விந்தையாய் பார்த்து சிறு பயம் கலந்து விலகிப் போகும்படி, மூச்சு நின்றவன் போல சிலையானான்! பிறகு, ஓர் உள்ளங்கைக்குள் மறு கையில் முட்டியை அழுத்தமாய் குத்திக் குத்தி விக்கித்துப் போனான்.

''இல்லை, இல்லை. கிடையாது, கிடையாது'' என்று அழுத்த மாயும் சத்தமாயும், ஏதோ தான் மட்டும் தான் நடைபாதையில் இருப்பதைப் போல, லஜ்ஜையின்றி கதறினான் பொய்ரெட். ''ஆடம்ஸின் மரணமெனும் அந்த விபத்து, ஏன் அத்தனை வசதியாக, லகுவாக நிகழ வேண்டும்? இல்லை, இல்லை, *இல்லை!* கிடையாது! ஆடம்ஸின் மரணம் விபத்து கிடையாது! அது தற்கொலையும் கிடையாது! கிடையாது! அது... அது... அது..!'' கண்ணைகல வெறித்தபடி சில நொடிகள் நிறுத்தி விட்டுத் தொடர்ந்தான் பொய்ரெட்: ''நிஜ வாழ்க்கையில் அவருக்கு அளிக்கப்பட்ட ஏதோ ஒரு பாத்திரத்தினை ஏற்றுக் கொண்டு மிகச் சரியாக செய்து முடித்துள்ளார் செல்வி ஆடம்ஸ்! ஆனால், பாவம், அந்தப் பாத்திரத்தை ஏற்றுக் கொள்ளும்போது, தன் மரணத்துக்கும் சேர்த்துஅவர் கையெழுத்திட்டு விட்டார்! வெரோனல் போதை மருந்தினை, ஆடம்ஸ், அவ்வப்போது எடுத்துக் கொள்ளும் விஷயமும், அம்மருந்து அடங்கிய பெட்டி, அவரிடமே மறைத்து வைக்கப்பட்டுள்ள விஷயமும், ஆடம்ஸின் கொலைக்கு ஆடு காய்களாக உபயோகப்படுத்தப்பட்டுள்ளன. இதுதான் எனில்.. எனில்... அந்தக் கொலைகாரன் நிச்சயம் ஆடம்ஸைத் துல்லியமாக அறிந்த ஒருவனாகத் தானிருக்க வேண்டும். யாரந்த D, ஹேஸ்டிங்ஸ்...! எதை வேண்டுமானாலும் சாசனம் எழுதித் தர நான் அஞ்ச மாட்டேன் - யாரந்த D என்பதை நானறிந்தே தீர வேண்டும்.''

''பொய்ரெட்'' - தன் சிந்தனையின் பிடியில் தன்னை மொத்தமாய் இழந்திருந்தவனை அதிகாரமாய் அழைத்தேன் நான். ''முன்னேறி நடக்கலாமா? மானம் போகிறது, பொய்ரெட்! எல்லோரும் நம்மையே வெறித்து வெறித்துப் பார்த்துக் கொண்டு கடக்கிறார்கள்.''

''ஓ, ஓ! மக்கள் விழித்துப் பார்ப்பதெல்லாம் எனக்கு அசௌகரிய மாய் தோன்றவில்லை, ஹேஸ்டிங்ஸ். எனினும், மன்னித்து விடு! இதெல்லாம், ரயில் வண்டியின் பெட்டிகளாய் அடுக்கிக் கொண்டே போகும் என் சிந்தனையை என்றும் தொடாது.''

''மக்கள் வாய் விட்டே சிரிக்க ஆரம்பித்து விட்டார்கள் - இல்லை, கிடையாது என நூறு முறை நீ கூவிக் கத்தியதைக் கேட்டு.''

''எனக்கு அவை முக்கியமற்றவை. அவை என்னைக் கட்டுப்படுத்தாது.''

சற்றே உஷ்ணமானான். என் மறு பதிலுக்குக் காத்திராது, ''ஒரு வாடகைக் காரினைப் பிடிப்போம்'' என்றபடி, தன் கையிலிருந்த சிறு கழியினை அசைத்து, ஜாடை காட்டி, அந்தப் பக்கமாய் போய்க் கொண்டிருந்த வாடகைக் காரினைப் பிடித்தான். ஏறிக் கொண்டோம், ''பாண்ட் தெரு. ஜெனிவேவ் எனும் கடைக்கு'' என ஓட்டுநருக்கு செல்ல வேண்டிய இடம் குறித்துச் சொன்னான்.

ஜெனிவேவ், பல வருடங்களாக ஸ்தாபிக்கப்பட்டுள்ள காரியாலய மாக தென்பட்டது. இரு தளங்கள் கொண்டு அமைந்திருந்த ஜெனிவேவ்வின் கீழ்தளத்தில், கண்ணாடி கதவுகளுக்குப் பின்னால், பல வித தொப்பிகளும் பலரக கழுத்துக்குட்டைகளும் வியாபாரத் திற்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. மேல்தளத்தில் இவை யெல்லாம் தயார் செய்யப்பட்டன - இத்தளத்தினை, மடிச வாடை அடிக்கும் மரப் படிக்கட்டுகளில் ஏறி பயணித்தால் அடையலாம்.

படிக்கட்டுகளைக் கடந்து முதல் தளத்திற்கு ஏறியதும், ''ஜெனிவேவ் - உங்களை அன்புடன் வரவேற்கிறது. உள்ளே வரவும்'' என்ற பலகை தாங்கிய கதவு எதிர்ப்பட்டது. இந்தக் கட்டளைக்கு பணிந்து கதவைத் திறந்தோம். அது பல நூறு தொப்பிகளும், நகல் கூந்தல்களும், கழுத்துக் குட்டைகளும் சிதறிக் கிடந்த, சற்றே பெரிய அறை. எங்களைக் கண்டதும், சிறு நத்தை போல இருந்த ஒரு ஐந்து எனக் குறிப்பிடவல்ல மிகக் குட்டையான பெண்ணொருத்தி பொய்ரெட்டின் மீது விசாலமான சந்தேகப் பார்வையை செலுத்தி நெருங்கினாள்.

அவளைப் பார்த்து ''செல்வி ட்ரைவர்?'' என கேட்டான் பொய்ரெட்.

''உங்களை இப்போ முதலாளியம்மாவால சந்திக்க முடியுமா என்பது கேள்விக்குறியே'' என அரட்டையாய் பதில் தந்த அந்த ஐந்து,

''என்ன வேலையாய் வந்துள்ளீர்கள்? ம்?'' என விட்டேற்றித்தனமாய் கேட்டது!

''உங்க முதலாளியம்மாவிடம் போய், மிஸ் ஆடம்ஸின் நண்பரொருவர் அவரைச் சந்திக்க விரும்புவதாய் சொல்லு.''

இந்த செய்தியைச் சுமந்து சென்று ட்ரைவரிடம் சொல்ல வேண்டிய தேவை, ஜந்துவுக்கு ஏற்படாமல் போயிற்று. அருகிலிருந்த ஓர் அறையிலிருந்து, அதன் நுழைவாயிலிலிருந்த கறுப்பு வெல்வெட்டி னாலான திரையை சர்ரக்கென்று ஒரே தள்ளாய் தள்ளியபடி, மிக குண்டாயும், குள்ளமாயும் அதே சமயத்தில் அதிக உல்லாசமாயும் சந்தோஷமாயும் விளங்கும் ஒரு குதூகலப் பெண், சிகப்பு நிறத்தில் எழுந்து எழுந்து குதித்த அவளது கூந்தலை விரல்களால் கோதிப் பின்னுக்குத் தள்ளியபடி எங்களை நெருங்கி வந்து நின்றாள்.

''என்ன நடக்குது இங்கே?'' என்று ஓர் ஆணையாய், ஆனால் வலிக்காத ஆணையாய் கேட்டாள் அந்தப் பெண்.

''நீங்கள்தான், மேடம் ட்ரைவரா?''

''ஆமாம்.. கர்லோட்டா பெயர் அடிபட்டதே, அவளுக்கு என்ன?''

''நீங்க இன்னும் ஆடம்ஸின் சோகச் செய்தியை அறிய வில்லையா?''

''என்ன சோகச் செய்தி?''

''செல்வி ஆடம்ஸ் தூக்கத்திலேயே நேற்றிரவு இறந்துப் போய் விட்டார். வெரோனல் எனும் மருந்தினை அதிகம் உட்கொண்டு.''

ட்ரைவரின் கண்கள் விரிந்து விரிந்துப் பெரிதாயின. அக்குண்டுப் பெண்ணின் முகத்திலிருந்த சுறுசுறுப்பு கண நேரம் மறைந்துப் போனது.

''என்ன கொடூரமிது!'' என தனக்குத்தானே வர்ணித்துக் கொண் டாள். ''முட்டாள் பெண், என்னால் கொஞ்சமும் நம்ப முடியவில்லை. ஊக்கமும் சுவாரசியமும் நிறைந்து எத்தனை உயிரோட்டத்துடன் நேற்று இருந்தாள், அவள்!''

''இன்று இல்லை. இதுதான் உண்மை'' என்றான் பொய்ரெட். ''மேடம் ட்ரைவர்! பாருங்க - மணி இப்போ மதியம் ஒன்று. என்னுடனும் என் நண்பனுடனும்நீங்க வெளியேறி, மதிய உணவினை எங்களுடன் நல்ல ஓர் உணவகத்தில் எடுத்துக் கொண்டு, என்னைக் கௌரவிக்க வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறேன். நான் உங்களிடம் ஏராளமான கேள்விகள் கேட்க வேண்டியுள்ளது, மேடம்!''

ட்ரைவர், பொய்ரெட்டை மேலும் கீழுமாய் நாடகத்தனமாய்ப் பார்த்தாள். ''என்னது?'' என மல்யுத்தத்துக்குத் தயார் என்பது போல தன் குண்டு உடம்பினை ஓர் உலுக்கு உலுக்கி விட்டுக் கேட்டாள்! ''யாரய்யா நீர்?'' என கபடமற்றுக் கேட்ட ட்ரைவர், துணிச்சலாய் மேலே பாய்ந்துக் குதறவல்ல உயர் வகை நாய் இனமான நரியாய் எனக்குத் தெரிந்தாள்!

''என் பெயர் ஹெர்குல் பொய்ரெட். இது என் நண்பன் - கேப்டன் ஹேஸ்டிங்ஸ்.''

நான் முதுகு வளைத்து மரியாதை காட்டினேன்.

எங்களிருவரையும் மாற்றி மாற்றிப் பார்த்துக் கொண்ட ட்ரைவர், ''உங்களைப் பற்றி நான் நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்றார், சட்டென்று. ''நீங்கள் துப்பறியும் அதிகாரி தானே?''

''ஆமாம்.''

''நான் வரேன்'' - உடனடி முடிவு!

உடனே சற்றுமுன் வந்த ஜந்துவைக் கூப்பிட்டு, பழைய சுறுசுறுப்புக் கரை புரள, ''அடியே பெண்ணே! நான் இப்படி போனதும், நீ தொப்பிக் கூட்டத்திற்குள் புதைந்துத் தூங்கி கீங்கி வைக்காதே! சரியா! பிறகு உன் குள்ள உயரத்துக்கு, நீ எந்த தொப்பிக்குள் தூங்கிக் கொண்டிருக்கிறாய் என்பதைத் துப்பறிவது, இதோ இந்த துப்பறியும் நிபுணர் திருமிகு ஹெர்குல்லின் பிழைப்பாய் போய் விடும்.''

இதைக் கேட்ட பொய்ரெட் கலகலவென சிரித்து விட்டான். எனக்கும், சிரிப்பு வரும் தொனியில் நல்ல ஏற்ற இறக்கத்தோடு பேசிய ட்ரைவரின் ஹாஸ்யத்தை அடக்க முடியவில்லை. ''சிறப்பான நகைச்சுவை உணர்வு பொதிந்த பெண்ணாயிருக்கிறீர்கள், நீங்கள்'' என்ற பொய்ரெட்டுக்கு, ''நான் சொன்னதையே கூட அதிகாரமாய் காரமாய் சொல்ல எவ்வளவு நேரம் ஆகப் போகுது, திருமிகு பொய்ரெட்! ஆனா அதனால என்ன லாபம்? இப்படி நான் சிரிக்கச் சிரிக்க உல்லாசியாயிருப்பதால் தான், பாருங்கள்'' என தன் உடல் பருமனைச் சுட்டிக் காட்டிய ட்ரைவர் ''நான் இளைப்பதே இல்லை'' என்றாள். தொடர்ந்தாள்: ''அடியே! சிகப்பு ரோஜா அலங்காரங்கள் நிறைந்த பத்து தொப்பிகளை, மாலை நாடகத்துக்காக நேற்று வந்த நாடகக் கூட்டம் கேட்டுள்ளது. செய்து முடித்து விட்டேன். காய்ந்துக் கொண்டிருக்கின்றன. ஒரு மணி நேரத்திற்கு பிறகு அவற்றை எடுத்து பெட்டிக்குள் போட்டு கட்டி விடு. ஒரு மணி நேரத்திற்கு மேல் நான் சாப்பிட மாட்டேன்னு நினைக்கிறேன்.''

சிரிப்பு மாறாது, அங்கிருந்த கறுப்புத் தொப்பி ஒன்றினை எடுத்து முகத்தின் ஒரு பக்கம் மறையும்படி மாட்டிக் கொண்டு, முகப் பவுடரை அள்ளி அப்படியே பூசிக் கொண்டு, பொய்ரெட்டைப் பார்த்தாள். சட்டென்று சொன்னாள்: ''நான் தயார்.''

ஐந்தே நிமிடத்தில் அதே தெருவிலிருந்த ஓர் உணவகத்தில் நாங்கள் மூவரும் அமர்ந்திருந்தோம். பரிமாறுபவனுக்கு சாப்பிடப் போகும் உணவுப் பட்டியலை பொய்ரெட் கொடுத்திருக்க, அவையும் தாமதமின்றி எங்கள் முன் கொண்டு வந்து வைக்கப்பட்டிருந்தன.

''ம்'' என்று சொன்ன ஜென்னி ட்ரைவர், ''எனக்கு தெளிவாக விளக்கப்படணும். என்னாயிற்று இந்த கர்லோட்டா ஆடம்ஸுக்கு? எதில் போய் தானாக அவள் மாட்டிக் கொண்டிருப்பாள்?'' என கேட்கலானாள்.

''புலப்படவில்லை, மேடம்! எதிலோ... எதிலோ... நிச்சயமாய் ஏதோ ஒரு திட்டத்தின் பகுதியாக கர்லோட்டா ஆடம்ஸ் போய் சிக்கிக் கொண்டு விட்டார் என்பது நிச்சயம். அது எது?''

''நானொரு கேள்வி கேட்டால் நீங்க ஒரு கேள்வியை வீசறீங்க'' என லகுவான போக்கில் சொன்ன ட்ரைவர், ''யார் இங்கு கேள்வி கேட்கப் போவது?'' என்றாள்.

''நான்தான் கேட்க வேண்டும் எனும் நினைப்பில் வந்துள்ளேன்'' புன்னகைத்தபடி ஆரம்பித்தான் பொய்ரெட். ''நீங்களும் ஆடம்ஸும் மிக நெருக்கமான தோழிகள் என நான் அறியப் பெற்றேன்.''

''மிகச் சரி.''

''எனில், எல்லாம் வல்ல இறைவன் சாட்சியின் மீது துவங்குகிறேன். மிஸ் ட்ரைவர்! நமக்குள் இனி இடம் பெறவுள்ள சம்பாஷணைகள் முழுவதும் உங்களின் இறந்துப் போன நண்பர் கருதித் தான் இடம் பெறவுள்ளன. இதை நான் உங்களுக்கு சத்தியம் செய்துத் தருகிறேன்.''

இதனை ட்ரைவர் உள்வாங்கிக் கொள்ளும் போது அமைதியாயிருந்தார். இறுதியாக சம்மதமாய் தலையசைத்துத் துவங்கலாம் என பச்சைக் கொடி காட்டினார். ''நான் உங்களை நம்பறேன். குற்றங்களில் உண்மையைத் தேடிப் பயணிப்பவர் என்றும் கேள்விப்பட்டிருக்கிறேன். ம்! உங்களுக்கு என்ன தெரிய வேண்டும்?''

''நேற்று உங்கள் உயிர்த் தோழி உங்களுடன் சேர்ந்து மதிய உணவு எடுத்துக் கொண்டதாய் அறிகிறேன்.''

''எடுத்துக் கொண்டோம்.''

''அப்போது, நேற்று இரவு தான் என்ன செய்யவுள்ளதாக திட்டமிட்டிருப்பாய் உங்ககிட்டே ஏதேனும் அவர் சொன்னாரா?''

''குறிப்பிட்டு, இன்றைய இரவுப் பொழுதிற்கு இதைத்தான் செய்யப் போகிறேன் என்றெல்லாம் அவ ஒண்ணும் சொல்லலே.''

''ஆனால் எதையோ சொன்னாள், இல்லையா?''

''அவ எதையாவது சொல்லியிருப்பா - ஆனா அது என்ன என்றறியத்தான் நீங்க அவசரப்படறீங்க, இல்லையா? நான் யாரிடமும் அதைச் சொல்ல மாட்டேன் எனும் ரகசிய நம்பிக்கையால் அவள் சொன்னது அது, திருமிகு பொய்ரெட்!''

''புரிகிறது.''

''சரி, இனி என்ன ரகசியம் உள்ளது? சொல்கிறேன். ஆனால் விஷயங்களை என் வழியில் விளக்குவதே சிறந்தது என நினைக்கிறேன்.''

''அதற்கு தடையில்லை, மேடம்!''

''கர்லோட்டா கிளர்ச்சியிலிருந்தாள். அது, உத்வேகமும் குழப்பமும் இணைந்து இயக்கிய கிளர்ச்சி. இப்படியெல்லாம் அவள் ஆகவே மாட்ட ாள். அமைதியானவள் அவள். எதற்கும் கிளர்ந்தெழாதவள். என்னனு கேட்டேன். *திருப்பித் திருப்பி!* விஷயத்தை வெளியில் சொல்ல மாட்டேன் என சத்தியம் செய்திருப்பதாய் சொல்லியவள், மறுபடியும் அதே நரம்பதிர்வு நிறைந்தக் கிளர்ச்சிக்குள் விழுந்துக் கொணடாள். ஏதோ அவளின் சிந்தனையை ஆக்கிரமித்திருந்தது என்பது உண்மை. ராட்ஸஸத் தனமான மோசடி ஏமாற்று போல ஏதோ ஒன்று என நான் கிரகித்தேன்.''

''மோசடி? ஏமாற்று வேலை? பெரிய அளவிலான மோசடி?''

''அப்படித்தான் அவள் பட்டும் படாமல் உணர்த்தினாள். அது எப்படி அல்லது எப்பொழுது அல்லது எங்கு நிகழப் போகிறது என்றெல்லாம் ஒரு வார்த்தைக் கூட குறிப்புத் தரலே. வாழ்க்கையின் எந்த உணர்வுகளையும் ரசிக்காத பிறவி அவள். நகைச்சுவையும் ஒன்றுதான்... பாவ காரியமான மோசடியும் அவளுக்கு ஒன்றுதான்! எனக்கென்னவோ, யாரோ வலிய வந்து அவளை அணுகி, பேசியே மயக்கி, அந்த வலைக்குள் அவளைப் புகுத்தி விட்டதாய் தோன்றுகிறது. மேலும், அவளும் அந்த திட்டத்திற்கு மறுப்பு சொல்லியிருக்க வாய்ப்பில்லை. இதையும் கவனித்துக் கொள்ளுங்கள்!''

''எப்படிச் சொல்றீங்க? ஏன் மறுப்புத் தெரிவித்திருக்கக் கூடாது? எதனால் ஒப்புக் கொண்டிருப்பான்னு நீங்க நினைச்சீங்க?''

''நிச்சயமாய் நினைத்தேன் - ஏதோ ஒரு வகையில் பணம் சம்பந்தப் பட்டிருப்பதாய், சர்வ நிச்சயமாய் கருதினேன். பணத்தைத் தவிர வேறு எதுவும் அவளைக் கிளர்ந்தெழ வைத்து நான் பார்த்ததில்லை. அவள் ஒரு *பணப் பேய்* - இப்படிச் சொல்வதற்கு மன்னிக்க.''

இப்போது, தன் கணிப்பு எத்தனை துல்லியமாய் போயுள்ளது பார் என ஒரு முறை என்னைப் பார்த்து உணர்த்தினான் பொய்ரெட். ட்ரைவர் தொடர்ந்து கொண்டிருந்தார்: ''பணம் பணம் என்றே செய்யப்பட்டவள் அவள். தன் தொழிலை வைத்துக் கொண்டு எப்படியாயினும் பணம் பண்ணி விடும் ஆடம்ஸைப் போல வேறொருத்தியை நான் கண்டதேயில்லை. நேற்று அவள் அடைந்ததைப் போல அத்தனைக் கிளர்ச்சியும் திருப்தியும், பணம் சம்பந்தப்பட்டிருப்பதால் தான், அதுவும் மிக அதிகமான தொகை சம்பந்தப்பட்டிருப்பதால்தான் என்பது சந்தேகத்துக்கிடமின்றி நிச்சயம்! யாரிடமோ மிக அதிகத் தொகைக்கான சவால் விட்டு, அதில் சர்வ நிச்சயமாய் நாம் வெற்றி பெறுவோம் எனும் நிலை இருந்தால், பொங்குமே ஓர் ஆனந்தக் களிப்பு - அப்படிப்பட்ட கிளுகிளுப்பில் ஆடம்ஸ் இருந்தாள் என்பதே என் எண்ணமாயிருந்தது. ஆனாலும் என் இக்கருத்தை முழுக்க அப்படியே எடுத்துக் கொள்ளவும் முடியாது. ஏனெனில் கர்லோட்டா பந்தயம் கட்டும் வகையல்ல! அவளின் கலகலப்பற்ற குணாதிசயத்துக்குப் பணயமும் பந்தயமும் வைத்து நான் பார்த்ததேயில்லை. எதெப்படியோ... ஏதோ ஒரு வகையில், பணம் தான் அவளை ஈர்த்திருந்தது என்பதில் நான் ஸ்திரமாயுள்ளேன்.''

''ஆடம்ஸ் இவ்வாறு உறுதியாய் சொல்லவில்லையா?''

''*இல்ல்லை!* இல்லவே இல்லை. என்னால் சிரமமேயின்றி செய்து முடித்துவிட முடியும்னு மட்டும் பொதுவாய், ஒருவித கிளர்ச்சி பொங்க, சொன்னாள். அவ சகோதரியை அமெரிக்காவிலிருந்து பாரீஸ் வரவைத்து சந்திப்பதாய் ஏற்பாடாயிருந்தது. அவளுடைய சகோதரி - இளைய சகோதரி - அவள் மீது, பைத்தியம் இவளுக்கு! அவள் - உயர்ந்த பண்புகள் பொதிந்து, குற்றங் குறை கூறுவோரைக் கண்டு அஞ்சாமல் எதிர்த்து நிற்கும் தைரியசாலி என்பது என் கணிப்பு. திருமிகு பொய்ரெட் நானறிந்தவை இவ்வளவே. இவை தான் நீங்கள் எதிர்பார்த்தவையா?''

''ஆமாம். என் ஊகங்களை ஊர்ஜிதப்படுத்திய உரையாடல். ஆனாலும் இன்னும் அதிகத் தகவல்கள் கிடைக்கும் என நம்பிக்கை வைத்திருந்தேன் என்பதே உண்மை. மிஸ் ஆடம்ஸ் மிக ரகசியமானவர் என எதிர்பார்த்திருந்தேன். எனினும், ஆடம்ஸ் ஒரு பெண் ஆகையால், அவருடைய மிக நெருங்கிய ஆத்ம தோழியிடம் ரகசியங்களை மறைக்காது வெளிப்படுத்த யோசித்திருக்க மாட்டார் என்றும் எண்ணியிருந்தேன்.''

''அவளை இந்த அளவு சுண்டி விட்டிருப்பது என்ன என்று சொல்ல வைக்க எவ்வளவோ முயற்சித்தேன்'' - ஒப்புக் கொண்டாள் ட்ரைவர். ''பதிலாய் வெறுமனே சிரிக்க மட்டும் தான் செய்தாள். நேரம் வரும் போது ஒரு நாள் நிச்சயம் சொல்வேன் என்றாள்.''

பொய்ரெட் சில கணங்கள் அமைதியானான். பின் கேட்டான்: ''சீமான் எட்ஜ்வேர் எனும் பெயரினைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?''

''யார்? கொலை செய்யப்பட்ட சீமானா? கொஞ்ச நேரத்துக்கு முன்னால் வெளியானதே செய்தி.. அவரா?''

''அவரே! ஆடம்ஸுக்கு, சீமான் எட்ஜ்வேரிடம் அறிமுகம் இருந்ததாய் ஏதேனும் தெரியுமா?''

யோசித்தாள். ''அப்படி ஏதும் தோன்றவில்லை. அவரைப் போய் பார்த்து அறிமுகம் செய்துக் கொண்டதாயெல்லாம் அவள் என்றுமே பேசியதில்லை. நிச்சயமாய் அவளுக்கு எட்ஜ்வேரின் நட்பு இருந்திருக்க வாய்ப்பில்லை.''

''சீமான் எட்ஜ்வேர் குறித்து உரையாடல்கள் நடந்ததுண்டா?''

மீண்டும் யோசித்தாள். ''இல்லை'' என்றவர், சில நொடிகள் சிந்தனைக்குள் எதையோ தேடிப் பிடிக்கும் நினைப்பில் புருவங்கள் முடிச்சிட இருந்தவள், ''ஒரு நிமிஷம், ஒரு நிமிஷம்! எப்போது சொன்னாள் அவள்? சீமான் எட்ஜ்வேர் பற்றி என்னிடம் பேசியிருக் கிறாளே!'' என அவசரமானாள். நாங்களிருவரும் பரவசமானோம். ''அவரைக் குறித்த சம்பாஷணை எங்களுக்குள் நடந்துள்ளது, திருமிகு பொய்ரெட். கசப்பான அனுபவமாய் பேசினாள்.''

''கசப்பான அனுபவம்?''

''ஆமாமாம். சொன்னாளே..! என்ன சொன்னாள்? ஞாபகத்துக்கு வர மறுக்கிறது! ஆங்.. இதோ இப்படிச் சொன்னாள்: 'புரிந்துக் கொள்ளும் தன்மையற்ற அவரைப் போன்ற கொடுங்கோலன்களை, மற்றவர்களின் வாழ்க்கையோடு விளையாடிப் பாழாக்குமளவுக்கு

விட்டு வைக்கவே கூடாது' என்றாள். ஆமாம் இந்த ரீதியில் தான் எட்ஜ்வேர் பற்றிய எங்கள் உரையாடல் சென்றது. இன்னொன்றும் சொன்னாளே! 'ஒருவர் மரணித்தால் பலருக்கு நிம்மதி வரும் என்பார்களே... அந்த வகையைச் சார்ந்தவன், அந்த எட்ஜ்வேர்! அவன் இறந்தால், பலர் விடுதலையடைவர்' என்றாள். ஏனிப்படிச் சொன்னாள்? இன்னும் இந்த ரீதியில் கசந்துப் போய் பேசிக் கொண்டிருந்தாள்.''

''எப்பொழுது இந்த உரையாடல் உங்களுக்குள் இடம் பெற்றது, மேடம்?''

''இருக்கலாம் - ஒரு மாதத்துக்கு முன்னாடி!''

''எட்ஜ்வேர் பற்றிய பேச்சு எப்படி திடுமென எழுந்தது?''

தன் மூளையை, முக்கியத்துவம் கொடுத்துப் பிசைந்துப் பார்த்த ட்ரைவர், இறுதியாய், மறுத்துத் தலையசைத்துக் கொண்டாள்.

''நினைவில்லை'' - ஒப்புக் கொண்டாள். ''அவர் பெயர் திடீரென்று தோன்றியிருக்க வேண்டும். செய்தித்தாள் செய்தியின் அடிப்படையில் கூட பேசியிருக்கலாம். எட்ஜ்வேர் யாரென்று கூட அறிமுகமாயிராத நிலையில் அவரைப் பற்றி எதற்கு அத்தனை கடுமையாகவும், உக்கிரமாகவும் கர்லோட்டா விமர்சிக்க வேண்டும் என்று தான் நான் அப்போ நினைச்சுக்கிட்டேன்.''

''வெகு சரியாய் சொன்னீர்கள். வினோதமாயும் விந்தையாயும் தானுள்ளது'' - பொதிந்த சிந்தனையோடு சொன்னான் பொய்ரெட். கேட்டான்: ''மிஸ் ஆடம்ஸுக்கு, வெரோனல் என்று சொல்லப்படும் போதை மருந்தினை எடுத்துக் கொள்ளும் வழக்கம் இருந்ததாய் தெரியுமா?''

''ம்ம்.. அதனை உட்கொண்டு பார்த்தில்லை - உட்கொள்வதாய் சொல்லியும் கேட்டதில்லை.''

''அவருடைய கைப்பையில், தங்க நிறத்திலான சிறு பெட்டி - அதில் சிகப்புக் கற்களால் C A என பொறிக்கப்பட்டிருக்கும் - அதனைப் பார்த்திருக்கிறீர்களா?''

''தங்க நிறப் பெட்டி? நிச்சயமாய் நான் பார்த்ததில்லை.''

''உங்களுக்கு, சென்ற நவம்பரில் செல்வி ஆடம்ஸ் எங்கிருந்தார் எனும் தகவல் தெரிந்திருக்க வாய்ப்பு இருக்கிறதா?''

''ம்..'' - யோசித்தாள். ''அமெரிக்கா திரும்பி சென்றிருந்ததாய் ஞாபகம் - அந்த மாத இறுதியில். அதற்கு முன் பாரீஸிலிருந்தாள்.''

''தனியாகவா?''

''தனியாகவே! 'அதை' மனசுல வெச்சுக்கிட்டு நீங்க கேட்பதாய் எனக்குத் தோணலே!'' லேசாய் கண்ணடித்தாள் குண்டு ட்ரைவர்! ஆழ்ந்த விசாரணையில், ட்ரைவரின் சட்டென்ற நகைச்சுவை ஆறுதலா யிருந்தது! ''பாரீஸில் எத்தனையோ சிறப்பான பொக்கிஷங்கள் இருக்க, பாரீஸ் என்றாலே ஏன் தான் எல்லோரும் வெறும் உல்லாசத்தை மட்டும் நினைக்கிறார்களோ!'' என்று குறைப்பட்டுக் கொண்ட ட்ரைவர், தொடங்கிய பதிலைத் தொடர்ந்தார்: ''வார இறுதி நாட்களில் ஆள் சேர்த்துக் கொண்டு கொம்மாளம் அடிக்கும் கிராக்கியல்ல, கர்லோட்டா. அவ்வகையில், அவள், *நல்முத்து!*''

''இப்பொழுது, மேடம் ட்ரைவர்! மிக முக்கியமான கேள்வி ஒன்றினைக் கேட்கப் போகிறேன். மறைக்காமல் பதில் தேவை. மறுபடியும் நினைவூட்டுகிறேன், இறந்துப் போய் விட்டாலும், என் மெனக்கெடுதல் முழுக்க, ஆடம்ஸின் நற்பெயர் கருதியே'' என்ற பொய்ரெட் கேட்டான்: ''மிஸ் ஆடம்ஸ் மிக ஈடுபாடு பொதிந்து கருதிய ஆண் மகன் யாராவது உண்டா?''

''ப்ர்ர்'' என்று உதடுகளை அதிர்ந்துக் காட்டி ஒலியெழுப்பிய ட்ரைவர், ''இதில் என்ன முக்கியத்துவம் கிடக்கு?'' என்று ஒரு போடு போட்டு விட்டுச் சொன்னார்: ''இதற்குப் பதில், ஒரு பெரிய '**கிடையாது**'. நான் பழகத் துவங்கிய காலத்திலிருந்து கவனிச்சிருக்கேன். கர்லோட்டா ஆடம்ஸ் அறிந்ததெல்லாம், ரெண்டே ரெண்டுதான். ஒண்ணு தொழில், இன்னொன்று அவளுடைய பண்பான இளைய சகோதரி. என் குடும்பமே என்னை நம்பித்தான் வாழுது எனும் மனோபாவம் மிகுந்து உழைத்த வகை அவள்! எனவே, பதில் ஒரு பெரிய கிடையாது! காலப் போக்குல ஆண் என்றாலே கவர்ச்சியற்ற, ஈடுபாடற்ற ஒரு நிலைக்கு ஆடம்ஸ் போயிடுவாளோனு கூட நான் வியந்ததுண்டு - இப்படி நினைக்குமளவுக்கு ஒரு முறை கூட ஆண் வர்க்கம் குறித்து என்னிடம் பேசாமல் தான் பழகினா, அவ.''

''ஆஹ்..!''

''இது முழுக்க என் ஊகம்தான், திருமிகு பொய்ரெட்! என்னுடன் அவள் பழகிய விதத்தை வைத்துக் கூறுகிறேன்! அப்புறம் அவளுக்கு ஒரு ஆண் மகனோடு தொடர்பு இருந்ததைப் போல ஏதாவது கண்டு பிடித்தீர்களென்றால், என்னை வந்து துரத்தக் கூடாது - இந்த உடம்பைத் தூக்கிக் கொண்டு என்னால் ஓட முடியாது'' என சிரித்துக் கொண்டே

சொல்லி எங்களையும் புன்முறுவ வைத்த ட்ரைவர், ''அவள் வித்தியாச மானவள்'' எனத் தொடர்ந்தார்: ''கனவில் வாழ்பவளல்ல. போதும் இது என வாழ்பவள். இந்த மனோபாவத்தை விளக்கத் தெரியவில்லை. ஒரு பெண்ணின் மனம் - பெண்ணுக்குத்தான் தெரியும்! அவளுக்குப் போதவே போதாதது ஒன்றுதான் - அது - *பணம்*.''

பொய்ரெட் ஒப்புதலாய் தலையசைத்துக் காட்டினான்.

''நன்றி, மேடம்! ஒரு கேள்வி மட்டும்! D எனும் அட்சரம் கொண்டு ஆரம்பிக்கும் படியான நண்பர்கள் யாராவது ஆடம்ஸுக்கு உண்டா?''

''D?'' எனக் கேட்டுக் கொண்டார் ட்ரைவர், பொதிந்த சிந்தனையோடு. சில நொடிகள் யோசித்தார். பிறகு விடையாய், ''கிடையாது! அப்படி ஒருவர் அவளுக்கு நண்பராய் இருந்ததா தோன்றவில்லை'' என்றார்.

## அத்தியாயம் - 11

# அகம்பாவம்

இதைத் தான் பதிலாய் பொய்ரெட் எதிர்பார்த்திருப்பான் என்றே நான் நினைத்தேன். ஆயினும், துப்புக் கிடைக்கவில்லையே என சோகமாய் தலையைத் தொங்கப் போட்டுக் கொள்ளத்தான் செய்தான்! சிந்தனைக்குள் நழுவி வானத்தைப் பார்த்தபடியே சற்று நேரமிருந்தான். கை முட்டிகளைத் தாங்கலாய் மேஜையில் பதித்தபடி, சாய்ந்து அமர்ந்துக் கொண்டிருந்த செல்வி ஜென்னி ட்ரைவர், முன்னுக்கு வளைந்து வந்தாள்.

''இப்பொழுது'' என பொய்ரெட்டின் சிந்தனைக்குள் புகுந்தவள், ''என்னிடம் ஏதாவது சொல்லப் போறீங்களா?'' என்று கேட்டாள்.

''மிஸ்..'' என்று ஆரம்பித்தான் பொய்ரெட். ''முதல்ல உங்களுக்கு என் வாழ்த்துக்களைத் தெரிவிச்சுக்கறேன். என் கேள்விகளுக்கான உங்கள் பதில்கள், தனித்துவம் மிகுந்த புத்திசாலித்தனத்திற்கான சான்றுகள். எந்த இடத்துல எப்படி பேசணும் எனும் பக்குவம் நிறைந்த அறிவு பெற்றவர் நீங்க, மிஸ்! நான் ஏதேனும் உங்களிடம் சொல்ல வேண்டியுள்ளதானு கேட்டீங்க. நிறைய இல்லை! சில உண்மைகளை அப்படியே உங்கள் முன் வைக்கப் போகிறேன், மிஸ் ட்ரைவர்!''

சிறு இடைவெளி தந்து, அமைதியாய் சொல்ல ஆரம்பித்தான்: ''நேற்றிரவு, சீமான் எட்ஜ்வேர், அவரது நூலகத்தில் வைத்துக் கொலை செய்யப்பட்டிருக்கார். நேற்று இரவு பத்து மணிக்கு, ஒரு பெண் - அது, உங்க ஃப்ரண்டு ஆடம்ஸ்னு நான் ஊகிக்கிறேன் - சீமானின் இல்லத்திற்கு சென்றிருக்கார். சீமான் எட்ஜ்வேரைப் பார்க்க வேண்டும்னு சொல்லியிருக்கார். அப்போ, தான் தான் சீமானின் மனைவினு வேற அறிவிச்சிருக்கார். சீமானின் நிஜ மனைவி - அது, பிரபல நடிகையான ஜேன் வில்கின்ஸன்'னு உங்களுக்கே கூடத்

தெரிஞ்சிருக்கும் - அவரின் இயற்கையான, பின்னங்கழுத்து வரை புரளும் அடர்த்தியான சிகப்பு நிறக் கூந்தல் போன்ற டோப்பா அணிந்து, அவரைப் போலவே தோற்றத்தை உண்டுபண்ணிக் கொண்டு நுழைஞ்சிருக்கார், அந்தப் பெண். செல்வி ஆடம்ஸ் - அவரே தான்'னு நான் நினைக்கிறேன் - அங்கு வெறும் சில நிமிடங்கள் மட்டும் தான் இருந்திருக்கார். மணி பத்து பத்துக்கு அந்த மாளிகையை விட்டுக் கிளம்பி விட்ட மிஸ் ஆடம்ஸ், நள்ளிரவு கடந்து தான் தன்னுடைய குடியிருப்பை அடைஞ்சிருக்கார். பிறகு அதிக அளவிலான வெரோனல் திரவத்தை அருந்தி விட்டு, தூங்கப் படுக்கையறை போயிடறார். இப்போ, டியர் மேடம்! நான் உங்களை சற்று முன் கேட்ட கேள்விகளின் வலுவான பின்னணி, உங்களுக்கு மெல்ல மெல்ல புரியலாம்.''

ட்ரைவர் அதிகக் காற்றினை உள்ளிக்கிழுத்துக் கொண்டார்! அந்தத் நிறைவோடு ''புரியுது'' என்றார். ''நன்றாக! உங்களின் ஊகம் சரியென்றே எனக்கும் தோணுது, திருமிகு பொய்ரெட்! அதாவது, அது கார்லோட்டானு நீங்க சொல்வதை மட்டும் குறிப்பிடறேன்! ஒண்ணு தெரியுமா! நேற்று என்னிடமிருந்து ஒரு புதுத் தொப்பி வாங்கிச் சென்றாள், அவள்.''

''ஒரு புதுத் தொப்பியா?''

''ஆமா, அவளின் இடப்புறத்து முகத்தை முழுவதுமாய் மறைக்கும் படியான தொப்பி ஒண்ணு வேணும்னு அழுத்தமாய்க் கூறி, அப்படி ஒரு தொப்பியை தேர்ந்தெடுத்து வாங்கிப் போனா.''

இப்பொழுது, எனக்குள் தோன்றும் சிறு ஒப்பீட்டினை, நேயர்களுக்குச் சொல்லிவிட வேண்டும். என் வயதில், பல விதமான தொப்பி வகைகளை நான் பார்த்திருக்கிறேன். லண்டன் - தொப்பிகளின் நகரமல்லவா! முகம் முழுவதையும் மறைத்து கூடை கவிழ்ந்தது போன்ற தொப்பிகள் - நண்பர்களிடம், உள்ளே மறைந்திருப்பது யார் என்று கண்டுபிடிக்கச் சொல்லி போட்டி வைத்து விளையாட வல்ல தொப்பிகள் இவை! முன்பக்கம் வளைந்து, நெற்றிப் பகுதிகளை மட்டும் மறைக்கும் கௌபாய் தொப்பிகள்! வட்ட வடிவத் தொப்பிகளின் நுனி முழுவதும் முகம் மறைக்காது மெலிதான துணி ஒட்டப்பட்டு, அது காற்றில் சன்னமாய் ஆடிக் கொண்டே இருப்பது போல வடிவமைக்கப்படும் கலியாணத் தொப்பிகள்! வெயில் முகத்தில் படாமலிருக்க, முன்னால் மட்டும் பிறை நிலா போல தடுப்பு வைக்கப்பட்டிருக்கும், இரண்டு சக்கர வாகன ஓட்டிகளுக்கான

பிரத்யேக தொப்பிகள்! இன்னும் பலப்பல! இந்த ஜுன் மாதத்தில், இப்பொழுது சம்பாஷணையில் இடம் பெற்றுக் கொண்டிருக்கும் தொப்பியாகப்பட்டது, அரிதாக வேண்டப்படும் ஒரு வகை. தலை கவிழ்த்து வைக்கப்பட்ட சிறு குழம்புப் பாத்திரம் போன்ற அமைப்பு கொண்ட தொப்பியானது இது, ஒரு பக்கக் காதோடு ஒட்டப்பட்டு விட்டதைப் போல, வலது புறமோ, அல்லது இடது புறமோ அணியப்படுவது வாடிக்கை; இத்தொப்பிப் பொருத்தப்பட்ட முகத்தின் மறுபுறமும், அப்புறத்து கூந்தலும், பார்வையாளரின் பார்வைக்கு விமரிசையாய் தெரியும்.

''வழக்கமா முகத்தின் வலது புறத்தை மறைக்கத்தானே இவ் வகைத் தொப்பிகள் அணியப்படுகின்றன?'' கேட்டான் பொய்ரெட்.

ஒப்புதலாய் தலையசைத்த ட்ரைவர், ''ஆனா இடப்பக்கத்தை மறைக்க என்றும் வேண்டிக்கிட்டு வாடிக்கையாளர்கள் வருவார்கள் - கர்லோட்டா ஆடம்ஸ் போல. அவங்களுக்குனு தனியா வெட்டித் தைப்போம்'' என்று விளக்கினாள். ''திருமிகு பொய்ரெட்! தனது இடப்புற முகத்தினை மறைப்பதற்காக ஆடம்ஸ் தொப்பி செய்து சென்றதற்கு ஏதாவது முக்கிய காரணமிருக்குமா?''

ரீஜெண்ட் மாளிகையில், வாசல் நிலைக் கதவு, இடப்புறம் நோக்கித் திறந்துக் கொண்டது எனக்கு இப்போது நினைவுக்கு வந்தது. இதனால் உள்ளே நுழையும் எவருக்கும், கதவைத் திறந்து விட்டு இடப்புறத்தில் நிற்கும் வேலையாள் முழுவதுமாகத் தெரிவான். மேற்கூறிய கேள்வியை ட்ரைவர் கேட்டதால் எனக்கு இன்னொரு பிரமிப்பான விஷயமும் நினைவுக்கு வந்தது. விகடகவி நிகழ்ச்சி இடம் பெற்ற இரவில், அருகிலிருந்த ஜானே வில்கின்ஸனைக் கூர்ந்து கவனித்தே னல்லவா... அப்பொழுது பார்த்தேன். ஜானேயின் இடது கண் விளிம்பில், நன்றாகத் தெரியுமளவுக்கு, அவரின் பிரத்யேக சொத்தாக, அழகு மச்சமொன்று இருந்தது.

இவ்விரண்டையும் கிளர்ந்தெழ பொய்ரெட்டிடம் சொன்னேன். பொய்ரெட், மளமளவென தலையை ஆட்டி, அவசர அவசரமாக ஒப்புக் கொண்டான்!

''புரியுது, புரியுது! ஹேஸ்டிங்ஸ்! இவை, தொப்பி வாங்கியதற்கான காரணத்தை நிரூபிக்குது.''

''திருமிகு பொய்ரெட்?'' - ட்ரைவர் திடுமென விறைப்பாக நிமிர்ந்து அமர்ந்துக் கொண்டார். ''உங்களுக்குத் தோணலே... ஒரு கணம், ஒரே ஒரு கணம், உங்களுக்குத் தோணலே... இதை கர்லோட்டா

செய்திருக்கலாமென்று..? கொலையை சொல்றேன்! உங்களால இப்படி நெனச்சுப் பார்க்க முடியலியா? அவ சீமான் எட்ஜ்வேரைப் பற்றி, நாமறியாத ஏதோ ஒரு காரணத்திற்காக, மிக காரமா பேசியிருக்காளே..!''

''எனக்கு அப்படி தோணலே''என மறுத்துப் பேசினான் பொய்ரெட். ''ஆயினும், அத்தனை கோபமா ஆடம்ஸ் ஏன் பேசினார் என்பது விந்தையாத்தானிருக்கு. எனக்கு அதற்கான காரணம் தெரிஞ்சாகணும். விடப் போவதில்லை. மிஸ் ஆடம்ஸ், சீமான் எட்ஜ்வேர் செத்துத் தொலைக்கலாம் என வாய் விட்டுச் சொல்லு மளவுக்கு அவர் என்னதான் செய்திருப்பார்? இந்தக் கோணத்தில் பேசும்படி, அவரைப் பற்றி மிஸ் ஆடம்ஸ் தெரிந்துக் கொண்டதுதான் எதை?''

காற்றில் பொய்ரெட் வீசிய இக்கேள்விகள், தன்னை நோக்கித்தான் கேட்கப் பட்டதோ என நினைத்த ட்ரைவர், ''எனக்குத் தெரியலியே'' என்றாள், குழந்தை போல், பரிதாபமாய்! ''ஆனா திரு பொய்ரெட்.... .அவ எட்ஜ்வேரைக் கொல்லலே. அவ... அவ.. ஓஹ்! அவ, மனதாலும் புத்தியாலும் மிக முதிர்ந்தவ, பொய்ரெட்.''

அதுவேதான் என் எண்ணமும் என்பது போல முக ஜாடை காண்பித்தான் பொய்ரெட். ''மிகச் சரி'' என்றான். ''அழகாய் விளக்கினீர்கள். மனம் புண்பட்டவர் தான் எட்ஜ்வேரைக் கொல்ல முனைந்திருக்க வேண்டும் - ஏற்றுக் கொள்கிறேன். ஆனா, இக் கொலை, மிக அறிவியல் பூர்வமாக நிகழ்த்தப்பட்டுள்ள கொலை - இதையும் நாம கவனிக்கணும்.''

''அறிவியல் பூர்வமாக என்றால்?''

''கொலைகாரனுக்கு பின்னங்கழுத்தில் எந்த நரம்புப் பகுதியை அறுத்து விட்டால், மண்டை ஓட்டில் முகுளத்திற்கு செல்லும் அத்தனை ரத்த ஓட்டங்களும் வெட்டுப்பட்டுப் போகும் என்ற அறிவு மிக தீர்க்கமாக இருந்திருக்கு.''

''ஒரு மருத்துவரைப் போல'' என்றாள் ட்ரைவர், சிறு சிந்தனை பொதிந்து.

உடனே பொய்ரெட் கேட்டான்: ''மிக அன்னியோன்யமாக பழகும் அளவுக்கு, மிஸ் ஆடம்ஸுக்கு யாராவது டாக்டர்களைத் தெரியுமா?''

ட்ரைவர் மறுத்துத் தலையசைத்தாள். ''அப்படி யாரையும் நான் கேள்விப்பட்டதில்லை. குறைந்தபட்சம், இங்கு நிச்சயமாய் அவளுக்கு அப்படி ஒரு நட்பு கிடையாது.''

''இன்னொரு விளக்கம் தேவை. மிஸ் ஆடம்ஸ் மூக்குக் கண்ணாடி அணிபவரா?''

''கிடையவே கிடையாது.''

பொய்ரெட் சற்றே எரிச்சலானான். அவன், ஆடம்ஸ் கண்ணாடி அணிபவர் என்ற முடிவுக்கு வந்திருந்தான்.

அபத்தமாய், தொடர்பேதுமற்ற, சோடாபுட்டி என்று வர்ணிக்கத்தக்க சக்தி மிகு மூக்குக் கண்ணாடியை அணிந்த ஒரு டாக்டர் என் கருத்துக்குள் தோன்றி மறைந்தார்!

''நடிகர் ப்ரையன் மார்ட்டீனை, மிஸ் ஆடம்ஸ் அறிந்திருக்கும் வாய்ப்பு ஏதேனும் உண்டா?''

''உண்டே! சிறு பிள்ளையாயிருக்கும் போது இருவருக்கும் பழக்கமிருந்ததா அவ சொல்லியிருக்கா. அப்புறமா அவரை அடிக்கடி இவ சந்திச்சதா தெரியலே. எப்பவாவதும் தான் சந்திச்சுக்கிட்டிருக் காங்க. வளர்ந்ததும் தலைகனம் பிடித்தவனாய் மாறிட்டான் அவன்னு இவ வர்ணிச்சதுண்டு.''

தற்சமயம் திடீரென்று தன் கைக்கடிகாரத்தைக் கவனித்த ட்ரைவர், ''ஆ'' என அலறினாள் ஒருவித ஆச்சரியத்தோடு! ''கடவுளே! நான் பறந்தாக வேண்டும்! என்னால் ஏதேனும் பிரயோஜனம் இருந்ததா, திரு. பொய்ரெட்?''

''இருந்தது, மிஸ் ட்ரைவர். மேலும் தகவல்கள் தேவைப்படின் வந்து சந்திக்கிறேன்.''

''எனக்கும் உங்களால் பிரயோஜனமிருந்தது'' என்று இருவருக்கும் புதிர் போட்ட ட்ரைவர், ''செம மதிய உணவு'' என்று சிரித்தார். ''காசு கொடுத்துடுங்க!''

இருவருக்கும் அவசர அவசரமாக கைகுலுக்கல்கள் கொடுத்து விட்டு, அழகழகாயிருந்த அவரது வெள்ளைப் பற்கள் பளீரிட விகல்பமில்லாமல் சிரித்த ட்ரைவர், ''எப்போ வேணும்னாலும் என் உதவி உங்களுக்கு உண்டு, மிஸ்டர் பொய்ரெட். யாரோ ஒருவன், முகவரி இல்லாது, இப்பாதகச் செயலை செய்திருக்கிறான். அவன் யார்னு கண்டறியாது நாம் ஓயக் கூடாது'' என்றபடி, தன் குண்டு உடம்பின் பாகங்கள் இப்படிக் குலுங்கித் தொலைக்கின்றனவே எனும் லஜ்ஜையேயின்றி, படு வேகமாய் ஓடலானாள்!

காசு கொடுத்து விட்டுக் கிளம்பும்போது, ''பழகுவோரை மிக ஈர்க்கும் பெண்'' என்றான் பொய்ரெட்.

''பல நாள் பழகியது போலாகி விட்டேன்'' என்றேன் நான்.

''மளமளனு தளம் விட்டுத் தளம் தாவும் வெகுளியான மூளைகளோடு பழகுவது, சுகானுபவம். அதனால தான் குழந்தைகள், அனைவரையும் ஈர்க்கின்றன.''

''இருந்தாலும் கொஞ்சம் கல் நெஞ்சுக்காரி போல தெரியுது'' என்று பிரதிபலித்தேன் நான். ''ஆத்ம தோழியின் மரணம் குறித்த அதிர்ச்சி இவரை சுக்கு நூறாக உடைத்துப் போட்டிருக்கும் என்று நான் நினைத்திருந்தபடி எதுவுமே நடக்கலையே!''

''ஆமாமாம். அதனால் கல் நெஞ்சுக்காரினு முடிவு கட்டிட முடியாதுடா. சிலர், இழப்புகளுக்கு, ஓ'னு அழுது ஒப்பாரியிடுவதில்லை. எதிர்கொண்டு விடுகிறார்கள்'' என வறட்சியாய் விளக்கினான் பொய்ரெட்.

கேட்டேன்: ''உரையாடலில், மிஸ் ட்ரைவரிடமிருந்து என்னவெல்லாம் பிடுங்க வேண்டும்னு நினைச்சிருந்தியோ, அத்தனையையும் எடுத்துட்டியா?''

மறுப்பாய் தலையசைத்தான். ''D என்பது யார் என்பதற்கான குறிப்பினை, நான் மிக எதிர்பார்த்து - மிக மிக எதிர்பார்த்திருந்தேன். D - மிஸ் ஆடம்ஸுக்கு சிறிய தங்க நிறப் பெட்டியினை அளித்தவர். துரதிர்ஷ்டவசமாக, கர்லோட்டா ஆடம்ஸ், அதிகம் பேசிப் பழகாத ஒரு வகை. எனவே, தன் நண்பர்கள் பற்றியோ, தனது காதல் தொடர்புகள் பற்றியோ, யாரிடமும் கிசுகிசுத்திருக்க மாட்டார். இன்னொன்று நண்பா...! மிஸ் ஆடம்ஸிடம், தந்திரமான ஆள் மாறாட்ட ஏமாற்று வேலையைச் சொன்னவன், அவளது நண்பனாயிருக்க வேண்டும் என்கிற அவசியம் கிடையாது. அறிமுகமாகி சிறிதளவே சிநேகம் கொண்ட ஒருவன், விளையாட்டாய் கூட முன்மொழிந்திருக்கலாம் - பணத்தினைக் காரணம் காட்டி! சாத்தியமுண்டு! தங்க நிறப் பெட்டியை அடிக்கடி ஆடம்ஸிடம் பார்த்திருக்கும் அந்த சிநேகிதன், அதற்குள் அப்படி என்னதானிருக்கிறது எனும் ஓர் உந்தலில், அதனை சோதனைப் போட நினைத்திருக்கலாம்.''

''எனில் எப்படி ஆடம்ஸிடமிருந்து அந்தப் பெட்டியைக் கடத்தியிருக்க முடியும்? எப்போ?''

''குடியிருப்பின் கதவு அனாதையாய் திறந்துக் கிடந்தபோது இதற்கான அவகாசம் கிடைத்திருக்கும் - கடிதத்தைத் தபாலில் சேர்க்க வேலைக்காரிப் பெண் போனாளே, அப்போ! எனக்கே நான் இப்படி

ஆலோசிப்பதில் திருப்தி கிடையாது நண்பா! வாய்ப்பின் அடிப்படையில் மட்டுமே நடந்து முடிந்திருக்க வல்ல ஆலோசனை இது! இதை விடு! இப்பொழுது நாம் வேலையைத் தொடங்க இரு வேறு சாத்தியமான குறிப்புகள் நமக்கு முன் உள்ளன.''

''எவை அவை?''

''விக்டோரியா பகுதிக்கு செய்யப்பட்ட தொலைபேசி அழைப்பு. தான் வெற்றிகரமாக சாதித்து முடித்து விட்டதை, வீட்டுக்கு வந்ததும் முதல் வேலையா போன் செஞ்சு தெரியப்படுத்த, மிஸ் கர்லோட்டா ஆடம்ஸ் விரும்பியிருப்பார் என்பது எனக்குள் சாத்தியமாய் படும் ஓர் எண்ணம். இதில் இன்னொரு கேள்வியும் இடைச் செருகலாய் வருது. இரவு மணி பத்து பத்துக்கும் நள்ளிரவுக்கும் இடைப்பட்ட நேரத்தில் கர்லோட்டா ஆடம்ஸ் எங்கிருந்தார்? ஏமாற்று வேலையை செய்து முடிக்க ஆடம்ஸைப் பகடைக்காயாக உபயோகப்படுத்தியவனை நேரில் போய் பார்த்து வந்திருப்பாரா? அப்படித்தான் என்றால், அவர் விக்டோரியா பகுதிக்கு செய்த தொலைபேசி, யாராவது அவரது நண்பருக்காயிருக்கும் என்று ஆகின்றது! ஆனாலும், நள்ளிரவுக் கடந்து தொலைபேசி செய்து பேசும் அவசரம் எதுவும் தென்படவில்லையே!''

''இரண்டாவது குறிப்புத்தான் என்ன?''

''ஆஹ்! இது எனக்குக் கொஞ்சம் நம்பிக்கை தரும் ஒரு குறிப்பு. அந்தக் கடிதம் ஹேஸ்டிங்ஸ்! அவரது சகோதரிக்கு எழுதப்பட்ட கடிதம்! அதில் சீமான் எட்ஜ்வேர் இல்லத்திற்கு மாறுவேடத்தில் ஜானே வில்கின்ஸனாய் போய் வந்ததன் முழு காரணமும், யாரால் - யாருக்காக நடத்திக் காட்டினார் போன்ற அனைத்து விவரங்களையும் - அதில் அவர் எழுதியிருக்க சாத்தியமுண்டு என்பது என் எதிர்பார்ப்பு!''

''ஓ!''

''இருக்கலாம் - சாத்தியமுண்டு, அவ்ளோ தான். இதைப் போட்டு நாம ரொம்பக் குழப்பிக் கொள்ளத் தேவையில்லை. இந்த முனையில் ரொம்பவே உழைத்திருக்கிறோம், ஹேஸ்டிங்ஸ்! நிறைய கிரகித்துமிருக்கிறோம்! அவை அப்படியே இருக்கட்டும்! இனி அடுத்த - மறு முனையிலிருந்து நாம உழைக்க ஆரம்பிக்கணும்.''

''மறுமுனை? எதை மறுமுனைங்கறே?''

''சீமான் எட்ஜ்வேரின் மரணத்தால், சிறிதளவாய் இருந்தாலும் பரவாயில்லை... யாரெல்லாம் லாபமடைகிறார்கள் என்பது குறித்த நுணுக்கமான பட்டியல்!''

நான் என் தோள்களை இதென்ன பெரிய காரியம் என்பது போல உலுக்கிக் காட்டி ''அவரது மனைவி மற்றும் சகோதரன் மகன் தவிர வேறு யார்?'' என்றேன்.

''மேலும் ஒருவர், ஜானே மணந்துக் கொள்ள விரும்பிய ஆண் மகன்'' எனக் கூட்டினான் பொய்ரெட்.

''இளைய பிரபு? விளையாடாதே பொய்ரெட். அவர் பாரீஸில் இருக்கார்.''

''இருக்கலாம் - உண்மையே. ஆனா அவருக்கும் சீமானின் இடையூறு தொலைந்தால் போதும் என்றோர் எண்ணம் இருந்திருக் காதுனு நீ சொல்ல முடியாதில்லையா? இவர் தவிர, மாளிகையில் இருந்த அநேகமான நபர்கள் - வேலையாள் - சேவகர்கள்..! யாருக்கு என்ன மாதிரி பழி மனதுக்குள் இருந்திருக்கும் என நீயும் நானும் சொல்ல முடியாது, ஹேஸ்டிங்ஸ்! இந்த நிலையில், உடனடியாய் நாமெடுக்க வேண்டிய அதிரடி நடவடிக்கை... ஜானே வில்கின்ஸனுடன் மேற்கொண்டு விசாரணை! அவர் புத்திசாலி. அவர் ஏதேனும் உருப்படியாய் ஆலோசிக்கலாம் என்பது என் எண்ணம்.''

பொய்ரெட்டின் கட்டளையின் பேரில், இருவரும் கிளம்பி மறுபடியும் சவாய் வரை சென்றோம். ஜானே பல பெட்டிகள் மட்டும் காகிதக் கைக்குட்டைகள் சூழ்ந்திருக்க அமர்ந்திருந்தார். அறையை நோட்டம் விட்டபோதுதான் இத்தனை பெட்டிகளுக்குமான காரணம் விளங்கிற்று. அத்தனை நாற்காலிகளின் சாய்வுப் பகுதிகளிலும், கறுப்புநிற உறைகள் போடப்பட்டிருந்தன! திரைச் சீலைகளெல்லாமும் கூட கறுப்பாய் மாற்றப்பட்டிருந்தன! அறைதான் புதுக் கறுப்புத் துணி மூட்டைகளால் துக்கமாயிருந்தனவே ஒழிய, ஜானே என்னவோ, அதீத பரவசத்திலும் உற்சாகத்திலும் தானிருந்தார். தன் தலைக்கு உகந்தபடி யிருக்கிறதா என இப்பொழுது கூட ஒரு கறுப்புத் தொப்பியைப் போட்டு சரி பார்த்துக் கொண்டிருந்தார்.

''என்ன திரு பொய்ரெட்'' என்று கேட்ட ஜானேயின் அகம்பாவமான வரவேற்பில் எனக்கு திருப்தி இல்லை. ''உட்காருங்க - அதாவது உட்கார்ந்துப் பேசும் அளவிற்கு விஷயமிருந்தால்! எல்லீஸ். இரு நாற்காலிகளைக் காலி செய்ய முடியுமா, பாரேன்.''

''ஜானே! நீங்க புது மலராய் வசீகரிக்கிறீர்கள்.''

முக்கியத்துவம் மிகுந்த பார்வையை வீசினார், ஜானே. ''நான் மாய்மாலமோ, பாசாங்கோ பண்ணலை, திரு பொய்ரெட். ஆனால்,

கணவர் இறந்தக் காரணத்திற்காக, அவன் மனைவியானவள் எப்படி இருக்க வேண்டுமோ அப்படித் தோன்ற வேண்டியுள்ளதே! அதுவும் கணவன் கொலை செய்யப்பட்ட நிலையில் மனைவி மினுக்கிக் கொண்டா ஊர்வலம் வர முடியும்? ஆஹ்! இளைய பிரபுவிடமிருந்து, மிக இனிமையான தந்தி வந்திருக்கு.''

''பாரீஸிலிருந்தா?''

''ஆமா, பாரீஸிலிருந்து தான். அனுதாபக் கடிதம் போலத்தான் பிறருக்குத் தெரியும். ஆனா, அது வடிவமைக்கப்பட்டுள்ள விதத்தில், வரிகளுக்கு இடையே மறைந்துக் கிடக்கும் சுவையான அர்த்தங்கள் எனக்கு மட்டுமே அர்த்தமாகும்.''

''என் வாழ்த்துக்கள், ஜானே வில்கின்ஸன்.''

''திருமிகு பொய்ரெட்'' - தன் இரு கைகளையும் மடக்கி மார்புக்குக் குறுக்கே பவ்யமாய் நிறுத்திக் கொண்டவர், தனது கவர்ச்சிக் குரலின் வீச்சினைக் குன்றச் செய்தார். தேவதை ஒன்று, வாய் திறந்து புனித வார்த்தைகளை இன்பம் பொங்க வரமாகச் சொல்லப் போவது போல இயங்க ஆரம்பித்தார். ''நான் நினைத்து நினைத்து பிரமிக்கிறேன், திருமிகு பொய்ரெட். நடந்துள்ள எல்லாமும் தேவாதீன சம்பவமாய் - அத்தனை அற்புதமாய் இருக்கின்றன. என் எல்லா இடையூறுகளும் களையப்பட்டு நான் நின்றுக் கொண்டிருக்கிறேன் - ஆஹ், எத்தனை மகிழ்ச்சி! உயிரை உலுக்கிப் போடும் நீதிமன்ற நடவடிக்கையை அனுபவிக்காது, வேண்டிய வரமாய் கை மேல் கனிந்து விழுந்து விட்டது, *விவாகரத்து!* அலைகளில்லாத கடலில் அலைக்கழிக்காது பிரயாணித்தது போல இருக்கு, திருமிகு பொய்ரெட் - என் அத்தனை கஷ்டங்களுக்கும் விடிவு ஏற்பட்டுள்ளதை எண்ணும்போது! ஒரு மன உளைச்சலில்லாமல் தப்பிச்சுட்டேன் - துரதிர்ஷ்ட திருமணத்திலிருந்து! எத்தனை கருணை மிகுந்தவன் இறைவன்னு எண்ணத் தோணுது!''

நான் என் மூச்சை நிறுத்தி வைத்து ஜானேயைப் பார்த்துக் கொண்டிருந்தேன். பொய்ரெட், தன்தலையை ஒரு பக்கமாக சாய்த்து, மிகக் கவனமாய் ஜானேயைப் படித்துக் கொண்டிருந்தான். ஜானே, மிக பொதிந்துக் காணப்பட்டார்.

''நடந்துள்ள சம்பவங்களால், இப்படியெல்லாமா உங்களுக்குத் தோணுது, ஜானே வில்கின்ஸன்?''

''எனக்கு எது தேவையோ, அவை மட்டுமே நடக்கின்றன'' என்று வரம் கிடைக்கப் பெற்றவரைப் போல உணர்ந்துப் பேசினார்

வில்கின்ஸன். ''நான் நினைச்சேன் - சீமானிடமிருந்து விடுதலைப் பெறுவதற்கான எல்லா முயற்சிகளும் தோல்வி அடைந்து விட்ட பிறகு, ரொம்பக் காலந்தாழ்த்தி, கடைசியா நினைச்சேன் - என் வாழ்க்கையை இருளடித்து விட்ட எட்ஜ்வேர் செத்துத் தொலையக் கூடாதா, என்று! *செத்து விட்டார்!* இது, இறைவனை வேண்டிப் பிரார்த்தனை செய்ததற்கு உடனடியாய் கிடைத்திட்ட வரமாய் தெரியலே? ஆமா.. *வரமேதான்!''*

பொய்ரெட் தன் தொண்டையைச் செருமிக் கொண்டு, ''எனக்கு, உங்களின் கோணத்தில், நடந்துள்ள சங்கதிகளை எதிர்கொள்ள முடியலே, ஜானே!'' என்றான். ''கணவன் போய்த் தொலையட்டும் என மனைவி வேண்டிக் கொண்டால், ரொம்பச் சரி என வரம் தருபவனும் இறைவனா!''

பொய்ரெட்டின் இந்த வர்ணிப்பு, ஜானேவுக்குள் ஆணவத்தைத் தூண்டிவிட்டது - நான் கவனித்தேன். ஆனால், தான் ஏன் அப்படி சொன்னேன் என்பதை விளக்கி விடும் விதமாக ''யாரோ உங்கள் கணவரைக் கொன்றிருக்கிறார்கள்'' என்றான் பொய்ரெட்.

இவ்விளக்கத்தால் கொஞ்சமாய் குளிர்ந்த ஜானே, தனக்கும் அது தெரியும் என்று தலையசைத்து, ''ஆனா ஏன்?'' என்றார்.

''ஏன் என்பது இருக்கட்டும். அது யாராயிருக்கும்னு தேடும் அவசரமும் உந்துதலும் உங்களுக்கு ஏற்படலே?''

பொய்ரெட்டை நேராய் பார்த்தார் ஜானே. ''எனக்கு ரொம்ப அது முக்கியமா? இந்தக் கேள்வி ஏன் ஏற்படணும்? ஏற்பட்டாலும் அதை வெச்சுக்கிட்டு நான் என்ன செய்ய? நானும் இளைய பிரபுவும் இன்னும் ஓரிரு மாதத்துக்குள் மணந்துக் கொள்ளப் போகிறோம். அந்த இன்பக் கனவுகளில் - - - ''

சற்றுப் பிரயத்தனப்பட்டுத் தான் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான் பொய்ரெட். ''அது நடக்கத்தானே போகுது. விடுங்க. ஆனா, அதையும் மீறி, உங்களுக்குள்ளேயே, யார் என் கணவனைக் கொன்றது எனும் கேள்வியை, ஒரு முறை கூடவா ஆழமாய் கேட்டுக்கத் தோணலே?''

''இல்லை'' - பொய்ரெட் சொல்வது தனக்கு ஆச்சரியமாய் இருப்பது என்பது போல பார்த்தார் ஜானே!

''இந்தக் கேள்விக்கான விடையை அறிய உங்களுக்கு ஓர் ஈடுபாடே இல்லையா?''

''இல்லையே'' ஏற்றுக் கொண்டார் அவர். ''போலீஸ் கண்டு பிடித்துக் கொள்ளட்டும்! அவர்களின் அதி புத்திசாலித்தனத்துக்கு முன்னால், நான் எம்மாத்திரம், திருமிகு பொய்ரெட்!''

''சரி, நீங்க சொன்ன உங்க கருத்தை அப்படியே ஏத்துக்கறேன். ஆனா, உங்களைக் கேட்டேனே கேள்வி - *யார் உங்கள் கணவனைக் கொன்றது என்று* - அந்தக் கேள்விக்கான பதிலைத் தேட, இதோ நான் புறப்பட்டு விட்டேன்.''

''நீங்க, என்ன கோமாளியா?''

கண்ணகல ஆன பொய்ரெட், ''இதில் கோமாளித்தனம் என்ன இருக்கு?'' என்றான் பரிதாபமாய்.

''எப்படியோ போய்த் தொலைங்க'' - அவர் கண்கள், குவிந்துக் கிடந்தத் துணிகளின் மீது நகர்ந்தன. பட்டுப் போல் வழுவழுவான துணி வகையால் செய்யப்பட்டிருந்த மேலங்கி ஒன்றை எடுத்து உடுத்திக் கொண்டவர், அது எப்படித் தனக்குப் பொருந்தியுள்ளது என ஆராய, நிலைக் கண்ணாடி முன் இப்படியப்படி அசைந்துப் பரீட்சித்துக் கொண்டார்.

''சொல்லுங்க, ஜானே வில்கின்ஸன்! உங்களுக்கொன்றும் ஆட்சேபணையில்லையே!''

''எனக்கேன் ஆட்சேபணை! ஆஹ்ஹா...! கிடையவே கிடையாது. நான் உங்களின் சமயோஜித புத்திக்கூர்மையையும், அதை நீங்கள் குற்றங்களைக் கண்டறிய மிக சாதுர்யமாய் உபயோகிப்பதையும் மிக நேசிக்கிறவள். இதிலும் புத்திசாலியாய் நீங்கள் மிளிர வாழ்த்துகிறேன், வெற்றி கிட்டட்டும்.''

''ஜானே! வாழ்த்திருக்கட்டும்! வாழ்த்தினை விட இவ்விஷயத்தில் நான் அதிகம் வேண்டி நிற்பது, உங்கள் கருத்தினை!''

''கருத்து?'' தன் தோள் பகுதி மீது மேலங்கி சரியாகப் பொருந்தி யிருக்கின்றதா என்பதை சரிபார்ப்பதிலேயே முழு கவனத்தையும் பதித்தபடி, இப்படிக் கேட்டார் ஜானே வில்கின்ஸன்: ''எது குறித்து?''

''உங்க கருத்துப்படி, யார் சீமான் எட்ஜ்வேரைக் கொன்றிருக்க வாய்ப்பு அதிகம் என்பது குறித்து?''

ஜானே மறுத்துத் தலையசைத்தார். ''இவ்விஷயத்தில் எனக்கு இம்மியும் அபிப்பிராயம் கிடையாது'' - சொல்லி விட்டு, தனது பிரயாணத்துக்கான மூக்குக் கண்ணாடிகளை எடுத்துக் கொண்டு திரும்பினார் - கிளம்பலாமா எனும் தொனியில்.

சற்றே குரலை உயர்த்தி, சொற்களில் அழுத்தம் கொடுத்து, ''திருமதி ஜானே வில்கின்ஸன்'' என்று அழைத்த பொய்ரெட், அதிகாரப் போக்கில், கவனமாய்க் கேட்டான்: ''யார் உங்கள் கணவரைக் கொன்றிருக்கலாம் என எண்ணுகிறீர்கள்?''

இந்த முறை பொய்ரெட்டின் கேள்வி ஜானே வில்கின்ஸனுக்குள் இறங்கிற்று. பிரகாசமாய் பொய்ரெட்டைப் பார்த்தார். ''கெரால்ட்-இது என் எதிர்பார்ப்பு.''

''யார் கெரால்ட்?''

அதற்குள் ஜானேயின் கவனம் பூராவும் திசை மாறிப் போயிற்று.

''எல்லீஸ்... வலப்புறத்துல இந்த மேலங்கி சரியா பதிய மறுக்குது. கொஞ்சம் வந்து சரி செய்து விடேன்'' என பணிப் பெண்ணை அழைத்தவர், சலிப்பாய் பொய்ரெட்டுக்கு, ''என்ன திருமிகு பொய்ரெட்? கெரால்ட், அவர் பெண்'' என்று பதில் தந்தார். ''அட அட! நீ இன்னும் மோசமாக்குகிறாயடீ! ஆங், ஆங்..! அது சரி. அப்படியே விட்டுடு, நன்றியடி'' என்று எல்லீஸை அனுப்பி விட்டு, ''ஓ! கிளம்பலாமா, திருமிகு பொய்ரெட்! எனக்கு நீங்க செய்த உதவிகளுக்காக நான் மிகக் கடன்பட்டிருக்கிறேன். விவாகரத்துக்காக உதவி கேட்டவுடன், சிறிதும் தாமதியாது களத்தில் நீங்கள் இறங்கியதற்காக நான் கடமைப்பட்டிருக்கிறேன். நீங்க - பெரியவர்!'' - இத்தோடு விட்டு விடலாமா என்பது போல முடித்தார் ஜானே வில்கின்ஸன்!

தன் பணிகள் எங்களின் இருப்பால் தடங்கலாவதாய் அவர் உணர்த்துவதாய்த் தோன்றியது எனக்கு.

ஜானே வில்கின்ஸனை நான் சந்தித்திருப்பது இருமுறை. ஒன்று கலாரங்கத்தில். இன்னொன்று அன்றிரவு விருந்தில். அப்பொழுதும் சரி இப்பொழுதும் சரி... அவரைப் பற்றி எனக்குள் பின்வரும் அபிப்பிராயங்கள் தான் இருக்கின்றன. துணிமணிகள் ஒப்பனைகளின் மீது அதீத ஈடுபாடு. பொய்ரெட்டைத் தனக்கு வேண்டிய காரியத்தை சாதித்துக் கொள்ளத் தூண்டும்படி மயக்க, மானாவாரியாக புகழ்ந்துப் பேசித் தள்ளுவது. தன்னை பற்றி மட்டும் சிந்தித்தபடி, ஸ்திரமாயும் அழகாயும் நிலை கொண்டு விட்ட அவர் குணாதிசயம்.

அத்தியாயம் - 12

# மகள்

*நாங்களிருவரும் எங்கள் ஜாகைக்குத் திரும்பியபோது, கையினால் எழுதப்பட்டிருந்த ஒரு சிறு குறிப்படங்கிய கடுதாசி, மேஜையில் கிடந்தது. கையிலதை எடுத்த பொய்ரெட், அவனுக்கே உரிய நிதான அழகோடு கடுதாசியை இதமாய் பிரித்துப் படித்து, சிரித்துக் கொண்டான்.*

*''இதை என்னென்பது? சாத்தான் வேதம் ஓதுகிறது என்பதா! இதைப் பார் ஹேஸ்டிங்ஸ்!''*

*அந்தக் குறிப்பினை பொய்ரெட்டிடமிருந்து பெற்றுக் கொண்டேன். ரீஜெண்ட் மாளிகையிலிருந்து வந்திருந்த கடுதாசி. மிக நேர்த்தியான, நடுக்கமற்ற கையெழுத்தில் நாலே வரிகள்தான் எழுதப்பட்டிருந்தன. படிப்பதற்கு லகுவான அச்சு கோர்த்த பாங்கில் முத்து முத்தாயிருந்தது அக் கையெழுத்து.*

மதிப்பிற்குரிய பொய்ரெட்...

இன்ஸ்பெக்டரும் நீங்களும் இன்று காலையில் எங்கள் வீட்டிற்கு வந்திருந்ததாய் அறியப் பெற்றேன். அப்போது உங்களுடன் பேசுவதற்கான வாய்ப்புக் கிட்டாமல் போய் விட்டதற்காக நான் மிக வருந்துகிறேன். உங்களுக்கு முக்கியமான அலுவல் ஏதுமில்லாமல் நேரத்தைப் பகிர்ந்துக் கொள்ளுமளவுக்கு அவகாசம் இருந்தால், இன்று மதியம் சில நிமிடங்கள் என்னை வந்துப் பார்த்து செல்லுமாறு மிகத் தாழ்மையுடன்

கேட்டுக் கொள்கிறேன். இதற்கு மிக நன்றிக் கடன்பட்டவளாய் நானிருப்பேன்.

தங்கள் உண்மையான.
கெரால்ட் மார்ஷ்.

''அதிசயமாயுள்ளது'' என்றேன் நான். ''உன்னை எதுக்காக சந்திக்க விரும்பறானு வியப்பாயிருக்கு.''

''ஒரு கன்னிப் பெண் என்னை சந்திக்க ஆவல் கொண்டிருப்பது உனக்கு வியப்பாயும் அதிசயமாயுமுள்ளதா, ஹேஸ்டிங்ஸ்! இது பொறாமையடா!''

''நான் உன் வழியில வரலைடா, வரலை! நல்ல ராஜாங்க இடம்! ம்... கொண்டாடு!''

என் தோளினைச் சிரித்தபடித் தட்டிக் கொடுத்த பொய்ரெட், ''இப்பொழுதே கிளம்புவோம், நண்பா!'' என்றான். தனது தொப்பியில் ஏதோ தூசு இருப்பது போல நினைத்து அதனைக் கற்பனையால் தட்டி விடுவது போல பகட்டாய் காட்டி, மிக ஈடுபாட்டோடுக் கிளம்பினான் துப்பறியும் நிபுணன்.

''சீமானின் மகள் இத்தனை துரிதமாய் என்னைச் சந்திக்க வேண்டும்னு ஏன் விரும்பறா?''

''உன் பெயர் புகழின் மீது எழும் இயற்கையான ஓர் ஈர்ப்பாயிருக்கலாம்! வீடு வரை வந்தவரைப் பார்க்காமல் விட்டு விட்டோமே எனும் தாக்கமாயிருக்கலாம்!''

''நான் ஏற்படுத்திய தாக்கத்தை விட, நண்பா, அன்று, நீ தான் அதிக தாக்கத்தை அவள்கிட்டே உண்டு பண்ணினே. உங்க ரெண்டு பேரோட கண்களும் தான், விலக்கவே முடியாமல் அப்படி சந்தித்து நின்றன!'' என்று கிண்டலாய் சொன்னபடி, மாளிகையின் அழைப்பு மணியை அடித்தான் பொய்ரெட்.

அன்று, கதவு திறந்து வெளியேறும் போது, தன் அறையின் வாசலில் திகைத்தப் பார்வையைப் பார்த்தபடி நின்றுக் கொண்டிருந்த சீமான் மகளின் முகம் நினைவுக்குள் வந்து நின்றது. வெள்ளையான அம்முகத்தில் கனன்றுக் கொண்டிருந்த கரும் கண்களை இப்போதும் என்னால் நினைவில் கொண்டுவர முடிந்தது. க்ஷண நேரக் காட்சி தான்... ஆனால் ஏனோ என்னுள் பதிவை ஏற்படுத்திவிட்ட பார்வைகளின் பரிமாற்றம் அது!

மாடியிலிருந்த பெரிய அளவிலான வரவேற்பறைக்கு வழி காண்பிக்கப்பட்டது. அங்கு காத்திருந்தோம். சில நொடிகள் கழித்து, கெரால்ட் மார்ஷ் எங்களைச் சந்திக்க வந்து சேர்ந்தார்.

அவர் முகத்தில் நான் அன்று கண்டிருந்த ஆழ்ந்த கடுமையின் வீரியம், இந்தத் தருணத்தில் மேலும் உயர்ந்திருந்தது.

மனத்தைப் பிசைந்துக் கொண்டிருக்கும் உணர்வுகளால் பேயறைந்தாற் போல் உலவும் இந்த உயரமான ஒல்லிப் பெண், பார்ப்போரை அலறலாய் அறையும் ஓர் உருவம்!

''காலந்தாழ்த்தாது உடனடியாய் வந்திருப்பது, உங்களின் நற்குணத்தைக் காட்டுது, திருமிகு பொய்ரெ'! அன்னிக்கு உங்களை சந்திக்காமல் விட்டு விட்டதற்கு வருந்தறேன்.''

''கீழே ஓய்வெடுத்துக்கிட்டிருந்தீர்களோ?''

''ஆமாம், அப்பாவின் காரியதரிசி கரோல் தான் என்னைக் கீழேயிருந்து விடும்படி அறிவுறுத்தினார். அன்று என்னை மிகக் கனிவாய் நடத்தினார், அவர்.''

இப்படிச் சொல்வது கூட அதிருப்தியோடு மனமின்றி சொல்லப் படுவதாய் அமைந்திருந்தது, ஏன் என்று விளங்காப் புதிராய் எனக்குத் தோன்றியது.

''எந்த வகையில் என் உதவியை நாடி என்னைக் கூப்பிட்டிருக்கீங்க, செல்வி மார்ஷ்?'' - ஆரம்பித்தான் பொய்ரெட்.

''மரியாதை தந்தெல்லாம் என்னை அழைக்க வேண்டாம், திருமிகு பொய்ரெட். நான் உங்களை விட மிக இளையவள் - வயதிலும், அனுபவத்திலும்!'' என்ற சீமான் மகள், ''என் அப்பா கொலை செய்யப்பட்டதற்கு முன்தினம் நீங்கள் அவரைப் பார்க்க இங்கு வந்திருக்கீங்க?'' என்று முதல் கேள்வியைக் கேட்டார்.

''ஆமாம்.''

''ஏன்?'' - கேள்வி, சற்று தீவிரமாய் மாறிப் போயிருந்த குரலோடு, கெரால்ட் மார்ஷிடமிருந்து வந்து விழுந்தது. ''ஏன்? உங்களை வரச் சொல்லியிருந்தாரா?''

இதற்கு உடனடியாய் பொய்ரெட் பதில் தரவில்லை. காரணம் - கெரால்டின் திடீர் அவசரம்! துப்பறியும் நிபுணன் வேண்டுமென்றே நிதானிப்பதாய் தோன்றியது. நுட்பமாய் கணக்கிட்டு பொய்ரெட் நிகழ்த்தும் நகர்த்தல்! கெரால்டை மேலும் மேலும் பேசத் தூண்டும் ஊக்கப் பொருளாய், தான் மேற்கொள்ளும் இந்த அமைதியைப் பயன்படுத்தினான் பொய்ரெட். சீமானின் மகளைப் பொறுமையற்ற

வகை என பொய்ரெட் கணக்கிட்டிருந்தது - விஷயங்கள் உடனுக்குடன் வந்து தன் முன் விழுந்தே ஆக வேண்டும் எனும் கெரால்டின் அவசர குணம் - ஆகியவை, இப்போது நிரூபணமாயின.

''அவர் எது குறித்தாவது பயந்திருந்ததாய் சொன்னாரா?''

''... ... ...''

''சொல்லுங்க, சொல்லுங்க.''

''... ... ...''

''எனக்குத் தெரிஞ்சாகணும்.''

''... ... ...''

''ஏன் பயந்திருந்தார்?''

''... ... ...''

''உங்களிடம் என்ன சொன்னார்? என்ன பேசினார்?''

''... ... ...''

''ஓஹ்..! வாயைத் திறந்துத் தொலையுங்களேன்..! பேச மாட்டீங்களா?''

இந்நிலையிலும், கெரால்ட் காட்டும் செயற்கையான மன அமைதி, இயற்கையாய் எனக்குத் தோன்றவில்லை. அவரின் சுயம் வேறு. அந்த சுயம் - அது வெளிவர வேண்டும் என அமைதி காத்து அமர்ந்திருந்த பொய்ரெட்டின் முன் - இப்பொழுது தானாக உடைந்தெழுந்தது. அமர்ந்திருந்த நாற்காலியின் நுனிக்கே வந்துவிட்டார். கைகளைத் தந்தம் தொடைகளில் பதித்துக் கொண்டு, தொடைகளை மாவு பிசைவது போல பலம் கொண்டு பிசைந்தார். படு அவசரம்! விட்டால், பொய்ரெட்டின் மீது பாய்ந்து விடுவார் எனப் பட்டது!

''எனக்கும் சீமான் எட்ஜ்வேருக்கும் இடையே பரிமாறிக் கொள்ளப்பட்ட சம்பாஷணை, மிக ரகசியமானது'' என்று மெதுவாய் வாய் திறந்தான் பொய்ரெட். இவ்வாறு குறிவைத்துப் பேசியதுப்பறியும் நிபுணனின் கண்கள் கெரால்டின் முகத்திலிருந்து ஓரங்குலம் கூட நகரவில்லை.

''எனில் அது... அந்த சம்பாஷணை... நிச்சயமாய் குடும்பத்தைப் பற்றியே ஏதோ ஒன்றாய் தானிருந்திருக்க வேண்டும். சொல்லுங்க, என்ன அது? ஓஹ்..! வாய் திறவாது உட்கார்ந்துக்கிட்டு என்னை வதைக்கிறீர்கள்! இனி என்னால் பொறுக்கலாகாது!'' மிகப் பட படப்பானார் சீமானின் மகள். ''ஏன் என்னிடம் சொல்லக் கூடாது?'' என இப்பொழுது அதிகாரமாய்க் கேட்கலானார். ''நான் தெரிந்துக் கொள்ள வேண்டியது மிக அவசியம். அவசியம், அவசியம். குறித்துக் கொள்ளுங்கள்!''

மறுபடியும், தலையை மிக மிக மெதுவாக, மறுத்து மறுத்து அசைத்துக் காட்டினான் பொய்ரெட் - தன் எதிரே அமர்ந்திருக்கும் இரையை தேவையான அளவுக்குக் குழப்பி விடும் எதிர்பார்ப்பில்!

''திருமிகு பொய்ரெட்'' மீண்டும் அதிகார அழைப்பு. தன்னால் பொய்ரெட்டை வளைக்க முடியவில்லையே எனும் கையாலாகாத் தனம், அவருக்குள் நெருப்பாய் வளர்வது எனக்குப் புரிந்தது. சற்றே பயமாயும் இருந்தது. ''நான் சீமானின் மகள். தனது வாழ்க்கை குறித்து.. தனது உயிர் குறித்து... தன் மரணத்திற்கு முந்தைய நாள் அவர் அடைந்த அச்சம் தான் என்ன என அறிந்துக் கொள்வது - என் உரிமை - சட்டப்பூர்வமான உரிமை. அது என்னனு சொல்லாமல் என்னை இருட்டிலேயே நிற்க வைத்து விடுவது உங்களுக்கு அழகல்ல'' என்ற கெரால்ட், ''என்னிடம் சொல்லாமல் நம்பிக்கையற்று விட்டு விட்டது - அவருக்கும் அழகல்ல'' என வன்மமாய் குறிப்பிட்டார்.

பொய்ரெட் நிதானமாய்க் கேட்டான்: ''எனில், உங்க தகப்பனாரின் மீது நீ மிகுந்த பாசம் கொண்டவளா, மிஸ் கெரால்ட் மார்ஷ்?''

நின்றுக் கொண்டிருந்த கெரால்ட் தேளினால் கொட்டப்பட்டதைப் போல, பட்டென நாற்காலியில் அப்படியே விழுந்து விட்டார்!

''பாசம்? பிரியம்?'' - தாழ்ந்தக் குரலில் தனக்குத் தானே கேள்விகளாய் சொல்லிக் கொண்டார். வித்தியாசமான கோணங்களில் அவர் முகம் அபிநயங்கள் கொண்டது.

இந்நிலையில், திடுதிப்பென்று, கெரால்டின் சுயக் கட்டுப்பாடு முறிந்துப் போயிற்று. கணீர் கணீரென ஒலிக்கும் மணியோசை போல், அவரிடமிருந்து சிரிப்போசை வெடிக்கலாயிற்று. அடிவயிற்றிலிருந்து சிரித்தார். ஓசையற்ற அவ்வறையில் கதிகலங்கிய அச்சிரிப்பொலி எதிரொலித்தது. இங்குமங்குமாய் ஓடிற்று. தன் இருக்கையில் வாட்டமாய் கால் விரித்து சாய்ந்துக் கொண்டு, மேற் கூரையைப் பார்த்து இடியாய்ச் சிரித்தார், சிரித்தார், சிரித்தார்.

''கோமாளி'' என இடையில் பொய்ரெட்டை வர்ணித்தார். ''இப்படி ஒரு கேள்வியைக் கேட்ட நீ ஒரு கோமாளி'' - தன் கட்டுப்பாடற்று ஒருமையில் கதறினார். ''கோமாளி... கோமாளி..'' சிரிப்புத் தொடர்ந்துக் கொண்டே, வளர்ந்துக் கொண்டே போனது.

வெறி பிடித்தாற் போன்று நீண்ட பைத்தியச் சிரிப்பு, இந்த அறையைக் கடந்தும் கேட்கும்படி பரவிற்று. கதவு திறந்து கரோல் உள்ளே வந்தார். உறுதியும், உள்ளே இப்போது வந்த காரியத்தை வல்லமையோடு முடிக்கும் திறனும் மிருந்துத் தோன்றினார்.

''டியர், கெரால்ட்! இப்போ... இப்போ இது கூடாது! அதுவும் புது மனிதர்களின் முன், கொலை பற்றித் துப்புத் துலக்குவோரின் முன், ஹாஸ்யம் செய்து உன் மீது தவறான அபிப்பிராயத்தை ஏற்படுத்திடாதே! ப்ளீஸ்! அமைதி, அமைதி! நான் வற்புறுத்தி வேண்டிக்கிறேன், அம்மா! நிறுத்து! நான் சொல்றேன்! இந்தக் கணத்தில் நிறுத்து! இனி இனி ஓசை உன்னிடமிருந்து வரக் கூடாது! இந்த நொடியே நிறுத்து!''

தொடர்ச்சியாய் செய்த முயற்சி, அதன் பலனை அளித்தது. கெரால்டின் சிரிப்பு ஒலி குன்றி நின்றது. சிரித்ததில் வழிந்திருந்த கண்ணீரைத் துடைத்தெறிந்து, தன் இருக்கையில் நிமிர்ந்து அமர்ந்துக் கொண்டார் கெரால்ட்.

''என்னை மன்னிச்சுடுங்க'' என குன்றிய குரலில் சொன்னார். ''இதுபோல என்னிக்குமே நான் நடந்துக்கிட்டது கிடையாது.''

கரோல், இன்னும் படபடப்போடு கெரால்டைக் கவனித்த வண்ணம் நின்றுக் கொண்டிருந்தார்.

''பயந்துட்டீங்க நீங்க! நான் இப்போ சரியாகிட்டேன், கரோல்! ரொம்ப முட்டாள்தனமாய் இயங்கிட்டேன்.'' சொல்லிவிட்டு சட்டென ஈறுகள் விரிய மெலிதாய் சிரித்தடங்கினார். கசப்பு நிறைந்த விரக்திச் சிரிப்பு. இன்னும் நெட்டைக் குத்தலாக தன் இருக்கையில் தன்னை நிலைப்படுத்திக் கொண்ட சீமானின் மகள், எங்கள் யாரையும் பார்க்காது நிலத்தை வெறித்தபடி அமர்ந்திருந்தார். அப்படிப் பார்த்தபடியே, ''திருமிகு பொய்ரெட் என்ன கேட்டார் தெரியுமா, மிஸ் கரோல்?'' என காரியதரிசிக்குக் கேள்வியைக் காற்றில் வீசி விட்டு, ''என் அப்பா மீது அபரிமித அன்பும் பக்தியும் கொண்டு வாழ்ந்தேனா என்று கேட்டார்?'' என்றார்.

நாக்கிலிருந்து மாடு மேய்க்கும் ஒலியெழுப்பிப் பரிகாசம் காட்டினார் கரோல். இக்கேள்விக்கு பதில் கூறுவதில் காரியதரிசிக்கு இருந்த தயக்கம் அந்தப் பரிகாசத்தில் பிரதிபலித்தது. சட்டென்று உயர்த்திய பயமுறுத்தும் குரலில், கெரால்ட் தொடர ஆரம்பித்தார்:

''எனக்கு உண்மையைச் சொல்வது நல்லதா இல்லை பொய் சொல்லி விடுவதா என்று விளங்கலே. உண்மை... அதுதான் சரி..! உண்மை தான் சொல்லணும்! நான் என் தந்தை மீது பாசம் வைத்திருக்கவில்லை. வெறுத்தேன். முழுவதுமாய் வெறுத்தேன். தூ... என உமிழ்ந்து வெறுத்தேன்.''

''கஸ்ஸ்ஸ்... கெரால்ட்!''

''தடுக்காதீங்க, கரோல்! எதுக்கு மறைச்சு நடிக்கணும்? நீங்க அவரை வெறுக்கலே... ஏன்னா அவரால உங்க வட்டத்துக்குள்ளே வர முடியலே. நீங்க அவரை உங்களின் முதலாளியாக, வருடா வருடம் ஏகமாய் பணம் கொட்டித் தரும் நிர்வாக முதல்வராக மட்டுமே பார்த்தீங்க. அவருடைய மூர்க்கங்களும், கொந்தளிப்புகளும், குரோதங்களும், சந்தேகம் கொண்டு நடத்தும் கொடூரங்களும், உங்களைப் பாதிக்கலே. அப்படி ஏதேனும் அவ்வப்போது நேர்ந்திருந் தாலும் நீங்க அவற்றை உதறித் தள்ளியிருப்பீங்க. அதுதான் நீங்க, வாழ்க்கையில் எதிர் நீச்சல் போட்டே ஆகவேண்டும்னு சித்தாந்தம் பேசும் வகை நீங்க. இப்படியே நீங்க! ஆக்கப்பட்டிருப்பதால தான், எப்போதும் சுறுசுறுப்புக் குன்றாமல், ஈடுபாடு குறையாமல், என் அப்பா போன்றோரின் குணாதிசயங்களால் அதிராமல் வாழ்ந்துடறீங்க. நீங்க மிக உறுதியானவர், கரோல். *மனிதத் தன்மை தாண்டிய உறுதி!* மீறி உங்களிடமும் அவர் தன் சுய முகத்தைக் காட்டியிருந்தா, போய்யானு அடுத்த நிமிடமே, நீங்க நடையைக் கட்டியிருக்கலாம். ஆனா அது என்னால முடியாதே. நான் அவருடன் பந்தப்பட்டுட்டேனே! மகள்! சீமானின் மகள்!''

''டியர் கெரால்ட்! இந்த விஷயங்களிலெல்லாம் நுழைய வேண்டிய அவசியமிருப்பதாய் எனக்குத் தோணலே. அப்பாக்களும் மகள்களும் பல வீடுகளில் ஒத்துப் போவதில்லை - ஏதோ உனக்கு மட்டும் தான் நடப்பது போல, நீ அதைப் பெரிசா எடுத்துக்கறே! விட்டு ஒழிம்மா! அதிகம் பேசாமலிருப்பது தான் வாழ்க்கையில் நல்லது. இது என் அனுபவம்.''

கெரால்ட் தன் முதுகு பக்கத்தைக் காரியதரிசிக்குக் காட்டியபடி திரும்பிக் கொண்டார். தன்னை சிறப்பாக பொய்ரெட்டுக்குக் காட்டியபடி அமர்ந்துக் கொண்டார்.

''திருமிகு பொய்ரெட்..! நான் என் தந்தையை வெறுத்தேன்! அவர் இறந்து விட்டார் என்பதுல எனக்கு வெகு சந்தோஷம்! திருப்தி! இதில், எனக்கு முழு விடுதலை கிடைத்து விட்டதென்று அர்த்தம் - விடுதலை, சுதந்திரம்! அவரை யார் கொன்றது என்பதைப் போய் தோண்டித் துருவி அறிந்துக் கொள்வதில் எனக்கு மிக மிகச் சிறிய அளவில் கூட ஆர்வம் கிடையாது. சில நல்ல விஷயங்கள் நடக்கும்போது அதில் பங்கு கொண்டு அனுபவிக்க வேண்டும் - அது எப்படி நிறைவேறியதுனு அப்போ ஆராய்வது, முட்டாள்தனம்! சீமான் எட்டுவரைக் கொன்றவன் நிச்சயமாய் காரணங்கள் - பற்பல காரணங்கள் -

நியாயமென நிரூபிக்கத்தக்க பற்பல காரணங்கள் கொண்டு தான் வெட்டி சாய்த்திருப்பான்.''

ஆழமாய் அப்பெண்ணைப் பார்த்தபடியிருந்தான் பொய்ரெட். ''தவறம்மா. நீ கொண்டிருப்பதைப் போன்ற அபிப்ராயம் மிக ஆபத்தானது, மிஸ்.''

''சரி, கொன்றவனைக் கண்டுபிடித்துத் தொங்க விடுவதால மட்டும் ஒழிந்த என் தந்தை திரும்பி வந்துடவா போறார்?''

''கிடையாதுதான்'' என்றான் பொய்ரெட், வறட்சியாய். ''ஆனா, கொலைகாரனைக் கண்டுபிடித்து விடுவதால், இன்னபிற தவறிழைக் காத வெகுளிப் பிரஜைகள், அநியாயமாகக் கொலையாவதிலிருந்து காக்கப்படுவார்கள், இல்லையா?''

''எனக்குப் புரியலே.''

''மதிப்புக்குரிய மிஸ் கெரால்ட்! ஒரு முறை கொலை செய்து விட்ட மனிதன், கொஞ்ச இடைவெளி விட்டு, நிச்சயமாய் இன்னொரு முறையும் கொல்கிறான். பிறகு உடனடியாய் மற்றொரு கொலை செய்கிறான். பிறகு வாடிக்கையாய் செய்து கொண்டே போகிறான்.''

''இதை நான் ஒப்புக்க முடியாது. வெறுப்பின் உச்சத்தில், வேறு வழியேயின்றி, மிருகமாய் நடந்துக் கொண்ட ஒருவனைக் கொன்றுப் போடும் சரியான மனிதனுக்கு, நீங்க சொல்வது எப்படிப் பொருந்தும்?''

''தனது மனதுடன்.. மனச்சாட்சியுடன் - கடும் போர் புரிந்து, அதனை வெற்றி கொண்டு, பிறகு தான் கொலை நடக்குது - அதாவது முதல் கொலை நடக்கிறது! பிறகு, கொலை செய்வதற்கென்று மனச்சாட்சியுடன் மன்றாடும் படலம் ஏதும் தேவையற்றுப் போயிடுது - அதுதான் ஒரு முறை மனச்சாட்சியை அடக்கியாயிற்றே! எனவே மற்றொரு முறை அபாயம் ஏதேனும் நேரும்போது, தர்ம ரீதியாக ஏதும் தடையில்லாமல் ஆகி விட, அந்த அபாயத்திலிருந்து தப்பிக்க கொலையே வழியாகின்றது! இரு கொலைகள்! நல்ல அனுபவம்! அப்புறம், சிறு அபாயத்திற்கும் சந்தேகத்திற்கும் கூட, கொலையே வடிகாலாயிடுது. கொஞ்ச கொஞ்சமா, 'இத்தனை கொலை செய்கிறோம்... ஆனால் நம்மைக் கண்டுபிடிப்பார் தான் ஒருவரு மில்லை..' எனும் ஒரு கலைஞனுக்கே உரிய செருக்கு ஏற்பட்டு அப்படியே நிலை பெற்றிடும். பிறகு, கொலை, ஒரு பொழுதுபோக்காய் நிகழும் நிகழ்வாகிப் போகும். இதுதான் ஒரு கொலையாளியின் உளவியல்!''

சீமானின் மகள் கைகளால் தன் முகத்தினை இறுக்கமாய் மூடிக் கொண்டார். ''பயங்கரம், பயங்கரம்'' - மூடியக் கைகளுக்குள்ளிருந்து அச்சமடைந்தக் குரல் அமுங்கி வந்து விழுந்தது. ''பயங்கரம். கொடூரம். நீங்க சொல்வது பொய்.''

''இல்லை மிஸ் கெரால்ட். எந்தக் கொலையாளியாயினும், இதுதான் அவன் உளவியல்.''

மூடியக் கைகளை எடுத்துவிட்டு, அப்படியா என்பதுபோல பொய்ரெட்டைப் பார்த்தார் கெரால்ட். முடிக் கற்றைகள் அவர் முகமெங்கும் அலங்கோலமாய் சிதறிக் கிடந்தன.

''ஆமாம். ஒருவேளை, உன் தகப்பனாரைக் கொன்றவனுக்கு இது இரண்டாவது கொலையாயிருந்தால்...? என்ன சொல்ல வரேன்னா, உன் தந்தையால் ஏதோ சிறு இடையூறு அவனுக்கு ஏற்பட, கொலையோடு கை கோர்த்து ஏற்கனவே பழகி விட்ட அவன், தீர்வாய் உன் தந்தையை தனது இரண்டாவது கொலையாய் செய்திருந்தால்..?''

''நிறுத்தித் தொலையுங்க, மிஸ்டர் பொய்ரெட். என்னப் பேசறீங்க?'' கதறினார் காரியதரிசி. ''ஏற்கனவே நொந்துப் போயிருக்கும் சிறு பெண்ணிடம் இரண்டாவது கொலை மூன்றாவது கொலைனு... சே... உங்களை வீட்டுக்குள் விட்டதே... ... ...'' - பொறுமையைக் கடைப்பிடித்து நிறுத்திக் கொண்டார்.

''சிறு உதாரணமாய் தான் பேசினேன், மிஸ் கரோல். புண்படுத்தியிருந்தேனென்றால், மன்னிச்சுடுங்க.''

''நல்லாயிருக்கு - உங்கள் உதாரணமும் நீங்களும். அதையெல்லாம் என்னிடம் பேசித் தொலைக்க வேண்டியதுதானே! இந்தப் பிஞ்சிடமா விவாதிக்க வேண்டும்? கெரால்ட். போதும் - எழுந்திரு. கெட்டதையே பேசும் முட்டாள்தனமான உரையாடல் இனி உனக்கு ஆகாது.''

கெரால்ட் எழுந்துக் கொண்டார். முகம் முழுவதும் விழுந்துக் கிடந்த கூந்தல் கற்றைகளைச் சீராக்கிக் கொண்டார். ''என்னை மன்னித்துவிடுங்கள்'' என்றார் பொய்ரெட்டிடம். ''மிக முட்டாளாக நான் நடந்துக் கொண்டு விட்டேன்'' என்றபடி விடை பெற நகர்ந்தவர், ''கடைசி வரை, அப்பா ஏன் உங்களை வரச் சொல்லியிருந்தார்னு நீங்க சொல்லவேயில்லை'' எனக் கேட்டார்.

''சீமான் எங்கே இவரை வரச் சொன்னார்?'' என கரோல் நம்ப முடியாமல் கேட்க, பொய்ரெட் வேறு வழியில்லாமல், ''தவறாகப் புரிஞ்சுக்கிட்டிருக்கீங்க, மிஸ் கெரால்ட். நான் சொல்ல தாமதித்தேன் - தவிர்க்கவில்லை'' என்றான். ''எங்களிருவருக்குள்ளும் நிகழ்ந்த

உரையாடலில் எத்தனை ரகசிய வசனங்கள் இடம் பெற்றன என்று சின்னதாய் ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தேன். அவ்வளவே. உங்கள் தந்தை என்னை வரச் சொல்லலை. என் கட்சிக்காரர் ஒருவர் சார்பாக நான் தான் நேராய் பார்க்க நேரம் கேட்டு வந்தேன். அந்த கட்சிக்காரர் - திருமதி ஜானே வில்கின்ஸன் எட்ஜ்வேர்.''

''ஓஓ! அப்படியா!''

அசாதாரணமான ஓர் உணர்ச்சிக் கோடு அப்பெண்ணின் முகத்தில் படர்ந்தது. அந்தக் கோடு, 'அடடா... நாம் என்னவோ என்றோ நினைத்திருந்தோம்...' என்ற ஏமாற்றமாய்த் தான் முதலில் நான் நினைத்தேன். பிறகு தான் அது ஒரு தெளிவின் பிரதிபலிப்பு என்று விளங்கிற்று.

''நான் பெரிய முட்டாளாயிருந்துட்டேன்'' என்றார் மெதுவாக. ''என் அப்பா ஏதோ ஓர் ஆபத்தில் சிக்கி பயந்திருப்பதாய் நானாக கற்பனை செய்துக் கொண்டிருந்து விட்டேன். முட்டாள்.''

''கொஞ்ச நேரத்திற்கு முன்னால என்னை அப்படியே ஒரு திருப்புத் திருப்பிப் போட்டுட்டீங்க, திரு பொய்ரெட்'' என இப்போது இடை புகுந்துக் கொண்ட காரியதரிசி, தான் இப்படிச் சொல்வதற்கான காரணமாக, ''அந்த நடிகை இரண்டாவது கொலை செய்திருக்கலாம் என்ற ரீதியில் பேசினீர்களே.. அதைச் சொல்கிறேன்'' என்றார்.

தன்னை அப்படியெல்லாம் பேசாதே என்று அடக்கி விட்டு இப்பொழுது இவளே பேசுகிறாள் என பொய்ரெட் எண்ணியிருக்க வேண்டும். எனவே காரியதரிசியிடம் பொய்ரெட் பதில் பேசவில்லை. ஆனால், அவரின் இந்த வசனங்கள் ஹெர்குல் பொய்ரெட்டுள் என்ன தூண்டினவோ... சீமானின் மகளிடம் பின்வருமாறு கேட்டார்: ''சீமானின் மனைவி ஜானே இக் கொலையைச் செய்திருக்கக் கூடும்னு நீ நம்புறியா?''

மறுத்துத் தலையசைத்தார் கெரால்ட். ''இல்லை, நான் அப்படி நினைக்கவேயில்லை. அப்படி ஒரு குற்றத்தைத் துணிந்து செய்பவராய் அவர் எனக்குத் தோணலை. அவர் மிக செயற்கையானவர் - இயற்கையானவரல்ல! அதாவது.. அதாவது... செயற்கை.. செயற்கை... அதாவது, நடிகை. அவ்வளவே.''

''வேறு யார் தான் கொல்லத் துணிந்திருப்பார் என்று எனக்கும் பிடிபடவில்லை'' என்றார் கரோல்.

''ம்ம்... ஜானேவாயிருக்கவே முடியாது'' - பிடிவாதமாய் தொடர்ந்தார் கெரால்ட். ''அவர் இங்கே வந்திருக்கலாம் - அப்பாவுடன்

உரையாடியுமிருக்கலாம் - பின் சென்றிருக்கலாம். உண்மையான கொலைகாரன் - கிரகணம் போல் மறைவிலிருக்கும் நாமறியாத கொலைகாரன் - பிறகு வந்து முடித்திருக்கலாம்.''

இப்படி கெரால்ட் சொன்னதும், கிரகணத்திலிருந்து வெளிவரும் சூரியன் போல, கதவினைத் திறந்து கொண்டு உள்ளே வந்தான் ஒரு மனிதன். பிறகு தவறுதலாய் நுழைந்து விட்டோமோ எனும் லஜ்ஜையில் அப்படியே நின்றுப் போனான்.

''மன்னிக்கவும்'' என்றான். ''இங்கு உள்ளே யாரும் இல்லைனு நினைச்சு நுழைஞ்சுட்டேன்.''

கெரால்ட், ''ஒன்றும் அதனால் பாதகமேயில்லை. தாராளமாய் வாங்க'' என்று சிறு சிரிப்போடு வந்தவனிடம் சொல்லிவிட்டு, எங்கள் பக்கம் திரும்பி பின்வரும் குண்டினைப் போட்டாள்: ''இது தான் எங்கள் பரம்பரையின் புது சீமான். சீமான் ரொனால்ட் மார்ஷ். சீமான் எட்ஜ்வேரின் சகோதரன் மகன்.''

இந்த முகம்... இந்த முகம்.. எனக்கு மிகப் பிரசித்தம். எங்கோ பார்த்திருக்கிறேனே..! எங்கே..! எங்கே..! ஊதாரி என வீட்டை விட்டுத் துரத்தப்பட்டவனா இப்போதைய சீமான் எனும் அர்த்தமுள்ள கேள்வியில் புதைந்துப் போன என் மூளையை, நான் மிகப் பிரயத்தனப்பட்டுத் திருப்பிக் கொண்டிருந்தேன் - யாரிவன்... மன்னிக்க, மன்னிக்க... யாரிவர் என அறிய...! இந்த வட்ட வடிவ முகம்... ஜீவனற்ற முகம்... கண்களுக்கு அடியில், தொங்கும் பைகள் வாங்கிய முகம்... விசாலமான இப்படிப்பட்ட முகத்தின் நடுவில் சிறு தீவாய் சுத்தரிக்கப்பட்ட மீசை கொண்ட முகம்... பார்த்திருக் கிறேனே...! மிக அருகில் சந்தித்திருக்கிறேனே...! எங்கே...! எப்போது...!

சட்டென நினைவுக்குள் வந்தே விட்டது.

கண்டுபிடித்து விட்டேன்.

ரொனால்ட் மார்ஷ் - எட்ஜ்வேர் பரம்பரையின் தற்போதைய சீமான்!

இவர், அன்றிரவு ஜானே அளித்திட்ட இரு கலைஞர்களுடனான விருந்தின்போது கர்லோட்டா ஆடம்ஸின் பாதுகாவலனாக வந்த, அதே ஆள்!

அத்தியாயம் - 13

# மருமான்

புது சீமானின் கண்கள் துரிதமாக இயங்கின. எனக்குள் நிகழ்ந்துக் கொண்டிருந்த தேடலைக் கிரகித்து விட்டார். எனவே, ''ஆஹ்..! நீங்க கண்டுபிடிச்சுட்டீங்க!'' என்று நேசமுடன் சொன்னார். ''பெரியம்மா ஜானே அளித்த இரவு விருந்து. அந்த விருந்துல வந்தவனின் முகச் சாயலை என்னிடம் கண்டு பிடிச்சுட்டீங்க..! திருமிகு பொய்ரெட்டுக்கு ஏற்ற மூடி தான் நீங்க! அந்த விருந்துல என்னை யாரும் ஆழமா கவனிச்சிருக்க மாட்டாங்கனு நான் நினைச்சிருந்தேன்.''

பொய்ரெட், காரியதரிசி கரோலுக்கும் சீமான் எட்ஜ்வேரின் மகள் கெரால்டுக்கும் வணக்கம் கூறி விடைபெற்றுக் கொண்டிருந்தான். கிளம்பினோம்.

''வாசல் வரை உங்களோட நானும் வரேன்'' என்றபடி உற்சாகமாய் எங்களுடன் வந்தார் புதுச் சீமான் மார்ஷ்.

எங்களுக்கு முன், வழிகாட்டியபடி மாடிப் படிகளில் இறங்கிக் கொண்டிருந்த மார்ஷ், பேசியபடி இருந்தார்: ''விசித்திரமான மாற்றங்கள் கொண்டது - வாழ்க்கை! வீட்டை விட்டுத் துரத்தியடிக்கப் பட்டது ஒருநாள் - ஆனால் எட்ஜ்வேர் எனும் ஆல விருட்ச பரம்பரையின் முதல் தலைமகனாய் - சீமானாய், மறுநாள்! என் வாழ்க்கையில் தான் எத்தனை அசாதாரண மாற்றம்! என் பெரியப்பா, கொஞ்சமும் வருத்தப்படாம, இந்த அரண்மனையை விட்டு என்னை உதைத்தே துரத்தினார். எப்பொழுது தெரியுமா... மூன்று வருடங்களுக்கு முன்னால்..! இந்தக் கதை பற்றியெல்லாம் நீங்களும் அறிந்திருப் பீர்கள்னு எதிர்பார்க்கிறேன்...!''

''நீங்க கூறிய உண்மைகளைக் கேள்விப்பட்டேன்'' என்றான் பொய்ரெட்.

''நிச்சயம் கேள்விப்பட்டிருப்பீங்க. பெரிய இடத்து சமாச்சாரம். கொலையானவரால் விரட்டியடிக்கப்பட்டவன் என்ற பட்டத்தோடு, முந்திரிக் கொட்டையாய் இப்போது எல்லோர் முன்னும் நான்! மோப்பம் தேடி அலையும் ஓர் உண்மையான துப்பறியும் அதிகாரி, இந்த துப்பினை விட்டு விடுவாரா என்ன!'' - அசட்டுச் சிரிப்புச் சிரித்தார்.

இப்பொழுது அடுக்களை அருகே வந்திருந்தோம். அதன் கதவினை ஓங்கித் தள்ளித் திறந்தார். ''கிளம்புமுன் ஏதாவது குடிச்சுட்டுப் போலாமே.''

பொய்ரெட் மறுத்து விட்டான். நானும். ஆனால் இளைய மார்ஷ் கொஞ்சம் மதுவையும் சோடாவையும் கலந்து, மளமளவென நிறுத்தாமல் குடித்துத் தீர்த்துவிட்டு, தொடர்ந்து குதூகலமாய் பேசலானார். ''ஒரு கொலையால், கடன் கொடுத்தவர்களின் சிம்ம சொப்பனமாயிருந்த நான், தொழிலதிபர்களின் நம்பிக்கை நட்சத்திர மாய் மாறி விட்டேன்! நேற்று, வாழ்வே வீழ்ந்து விடும் போல அழிவு என்னைப் பார்த்து முறைத்துக் கொண்டு நெருங்கியது. இன்று - தாராளமாய், ஏராளமாய், அபரிமிதமாய் ஆகி விட்டேன் - பணத்தைப் பொறுத்தவரை! மனதார சொல்கிறேன் திரு பொய்ரெட் - வாழ்க பெரியம்மா ஜானே!''

இன்னொரு முழுக் கோப்பை முழுக்கக் குடித்து விட்டு, சிறு தள்ளாட்ட நிலையோடு, பேசலானார்: ''தெரியாம தான் கேட்கிறேன், திரு பொய்ரெட்! இங்கு நீங்க என்ன செஞ்சுக்கிட்டிருக்கீங்க? நாலைந்து நாட்களுக்கு முன்பு, பெரியம்மா ஜானே, அகந்தையும் ஆணவமும் கொண்டு அவரை அவமானப்படுத்தி வாழும் கொடுங்கோலன் எட்ஜ்வேரிடமிருந்து, அவரை விடுவித்துத் தூக்கிச் செல்லும் ராஜகுமாரன் தான் யார் - அப்படினு உணர்ச்சிப் பெருக்கில் உங்களிடம் உரக்கக் கத்தினார். உடனே, மறுநாளே, விடுவிக்கப்பட்டு விட்டார்! உங்க ஆட்கள் யாராலும் அவருக்கு விடுதலை அளிக்கப்படலேனு நம்பறேன்..! துப்பறியும் நிபுணர் - திருமிகு ஹெர்குல் பொய்ரெட்டின் - படு சுத்தமான திட்டமிடப்பட்ட குற்றம் - சீமான் எட்ஜ்வேரின் கொலை...! என்ன... இப்படி ஒண்ணும் இல்லையே..! பெரியம்மா ஜானேவைக் குளிர்விக்க, ஒரு வேளை நீங்களே கூட...!'' - வெறித்தனமாய் சிரித்தார் மார்ஷ். போதை கூடக் கூட, அவர் மன ஆழத்து எண்ணங்கள் தளந்தொடுகின்றன!

பொய்ரெட் மெலிதாய் சிரித்தான். ''என்னை வரும்படி பணித்திருந்த மிஸ் கெரால்டின் ஆணைக்குக் கட்டுப்பட்டு இங்கு வந்தேன்.''

''ஆஹ்...! ஜாக்கிரதையான பதில்...! நீங்கள் இங்கு உண்மையா என்ன செஞ்சுக்கிட்டிருக்கீங்க? எனக்குத் தேவை இது தான்! ஏதோ காரணத்துக்காக, நீங்களாகவே உங்களை, சீமான் எட்ஜ்வேரின் கொலை வழக்கில் ஈடுபாடாகப் புகுத்திக் கொண்டிருக்கீங்க! என்ன காரணம் அது?''

''எனக்குக் கொலை என்று ஒரு மரணத்தின் மீது சந்தேகம் எழுந்து விட்டால், அதன் உண்மை புலப்பட்டாக வேண்டும், சீமான் மார்ஷ்..!''

''மறுபடியும் மேம்போக்கான பதில், மிக எச்சரிக்கையாய் பேசறீங்க - அப்படி நீங்கள் எச்சரிக்கையாய் இருப்பது வெளிப்படாமலே..! இந்த எச்சரிக்கையை பெரியம்மா ஜானேவுக்கும் நீங்க சொல்லிக் கொடுத்திருக்கலாம். ஏன் இப்படிச் சொல்றேன் தெரியுமா? அன்றிரவு விருந்தில் நானும் வந்திருந்தபோது, வந்திருக்கும் இந்தப் புதியவன் யார் என்ற எச்சரிக்கையே இல்லாம எப்படி வெறுமையாய் இருந்தார் அவர்...! அதைக் கவனிச்சீங்களா...! ஆச்சரியமாகிப் போனேன்...! பனி மூட்டம் போன்ற சிறு குழப்பம் கூட ஏற்படாமலிருந்து விட்டாரே..!''

''உங்கள முன்னமேயே அவர் அடையாளம் கண்டுபிடிச்சிருக் கலாம்...!''

''ம்ம். அவர் கலியாணமாகி எட்ஜ்வேருடன் குடித்தனம் நடத்த வருவதற்கு மூன்று மாதங்களுக்கு முன்னமேயே, நான் இங்கிருந்து வெளியேற்றப்பட்டு விட்டேன்.''

அவரின் முகம் முழுவதும் வியாபித்திருந்த குதூகலம் சற்றே வற்றியது. மெலிதாய் தொடரலானார்: ''மிக அழகிய பெண்ணவள். வைத்துக் குடும்பம் நடத்தத் தெரியலே இந்த எட்ஜ்வேருக்கு...! கவர்ச்சிப் புயல். ஆயினும் நுட்பமில்லை. சாதுர்யமில்லை... நுணுக்கமான சூட்சுமமில்லை...! நினைத்ததை நிறைவேற்றியேத் தீர வேண்டும் எனும் வெறி மட்டுமே...!''

பொய்ரெட், சிறு சிரிப்புக் கலந்து ஆமோதித்தான்.

மார்ஷ், சிறு ஆர்வம் பொங்கக் கேட்டார்: ''எனக்கென்னவோ பெரியம்மா ஜானே இக்கொலையைச் செய்திருக்க மாட்டார்னு நீங்க நினைப்பதாய் தோணுது. உங்களையும் வளைத்துப் போட்டு விட்டாரா என்ன...! பசையுள்ளவர்களை வளைத்துப் போடுவதே அவர் கலை...!''

''அழகின் மீது நான் அபரிமித சிலாகிப்பு மிகுந்தவன் நான்! ஆனா, இதையும் விஞ்சி ஒன்று நிற்கும், அது - அது எது தெரியுமா? குற்றம் என்று ஒன்று தெரிந்து விட்டால், அது துலங்க, சாட்சிகளை நான் தேடும் தர்மம்...!''

கடைசியாய் தான் சொன்ன வார்த்தைகளை, பதிய வேண்டும் எனும் இலக்கோடு, மிக மெதுவாய் அதே சமயம் அழுத்தமாய் உரைத்தான் பொய்ரெட்.

''சாட்சி?'' - கூராய்க் கேட்டார் சீமான் மார்ஷ்.

''தண்ணீல மிதக்க மட்டுமே தெரிஞ்சுள்ள உங்களுக்கு, நடந்துள்ள உண்மை தெரிந்திருக்க வாய்ப்பில்லே, சீமான் மார்ஷ்...! நேற்று இங்கு மிஸஸ் ஜானே காணப்பட்டதா சொல்லப்படும் இரவுப் பொழுதுல, அவர், சிஸ்விக்'கில் ஓர் இரவு விருந்துல இருந்திருக்கார்.''

தானும் இதனை அறிந்திருப்பதாய் சொன்னார் மார்ஷ். தொடர்ந்தார்: ''கடைசியாய் கிளம்பிப் போயிருக்கார்! நிலையான மனம் கொண்டிராத பெண் ஜென்மம்! ஆறு மணிக்கு தன் உடல் முழுவதை யும் மெத்தையில் தூக்கிப் போட்டுப் படுத்துக் கொள்கிறார். யார் வந்து சொன்னாலும் கேட்கப் போவதில்லைன்னு ஓய்வெடுக்க ஆரம்பிக் கிறார். ஆனா பத்தாவது நிமிஷத்திலேயே, உடல் நலமில்லைன்னு சொல்லிக்கிட்டுப் படுக்கப் போனவர், டக்குனு எழுந்து, முடிவை மாற்றிக் கொள்கிறாராம்! பத்து நிமிஷத்துல உடம்பு சொஸ்தமாகி விட்டது என்கிறார்! என்ன திரு பொய்ரெட். உங்களுக்கு அவர் சிறப்பா அறிமுகமானவர்ங்கிறதுக்கா, அவர் என்ன சொன்னாலுமா நம்புவீங்க..! வேணுமின்னே அவர் மீது நான் பழி சுமத்தலே. ஆனா நம்பும்படியாய் இல்லையே!'' என்ற புது சீமான், ''ஓஓ..! இப்போ உங்க நினைப்புல என்ன கடந்துக்கிட்டிருக்குனு என்னால படிக்க முடியவில்லைனு நினைக்காதீங்க...! இந்த வழக்குல இயற்கையா சந்தேகப்படும்படி இருப்பது நீதான்னு எண்ணுறீங்க..! என்னை...! தப்பிப்பற்ற பாவப்பட்ட மருமான்! இல்லையா...!'' என்றார்.

நாக்கிலிருந்து கிண்டலான ஓசையை எழுப்பிக் காட்டினார் மார்ஷ். ''போகவே மாட்டேன்னு அடமாய் முடிவெடுத்து விட்டு மருந்து மாத்திரையெல்லாம் போட்டு விழுங்கி பெரியம்மா ஜானே ஓய்வெடுத்துக் கொண்டிருந்த பொன்மாலைப் பொழுதுல, நான் கடற்கரையில உலவிக் கொண்டிருந்ததாய் யாராவது சொல்லியிருந்தா... அவனை உலுக்கி எடுத்து, நான் அங்கிருந்ததற்கான காரணத்தை வாங்க

அல்லாடாதீங்க, திருமிகு பொய்ரெட்! நான் அங்கு தானிருந்தேன். இப்படிச் சொன்னதும், ஒருவேளை திட்டம் தீட்டி உலவிக் கொண்டிருந்திருப்பானோ... அல்லது, ஒரு வேளை நரிப்பயலான இந்த மார்ஷ் தான், நேற்றிரவு பொய் தலை முடியையெல்லாம் வைத்து மாறுவேடம் பூண்டு, தன்னை ஜானேயாய் அலங்காரம் செஞ்சுக்கிட்டு இங்கே வந்து சென்றவனோ... இப்படியெல்லாம் உங்களோட அதிநுட்பமான மூளையைக் குழப்பிக்காதீங்க...!''

தான் சொல்வதில் முழு திருப்தி கொண்டு, நாங்களிருவரும் என்ன பிரதிபலிக்கிறோம் என ஒரு முறை பார்த்துக் கொண்டார் மார்ஷ். இவன், சம்பவ இரவன்றுஇங்கு வந்திருந்தானா என, தன் தலையை ஒருபுறமாய் சாய்த்துக் கொண்டு, உன்னிப்பாய் மார்ஷைப் பார்த்துக் கொண்டிருந்தான் பொய்ரெட். எனக்கென்னவோ, மார்ஷ் போதை வெகுவாய் ஏற புலம்புவதாய் பட்டது.

''எட்ஜ்வேரைக் கொல்ல என்னிடம் இலக்கு உள்ளது! இலக்கு! இப்போ, உங்களுக்கு, நான், மிக மதிப்பு வாய்ந்த தகவலை, ஓர் அன்பளிப்பாய் தரப் போறேன். என் மாளிகைக்கு வந்திருக்கீங்க... அன்பளிப்பில்லாமலா..? நேற்று காலை சீமான் எட்ஜ்வேரைப் பார்க்க நான் வந்திருந்தேன். ஏன்? இப்படிக் கேட்கலாம், நீங்க! பணம் கேட்க! ஆமாம்... நாக்கைத் தொங்கப் போட்டுக்கிட்டு இன்னும் கேளுங்க...! பணம் கேட்டு வந்திருந்தேன். தம்படி இல்லை என்று கொடூரமாய்க் கத்தினார். வெறும் கையோடு வெளியேறினேன். அந்த இரவிலேயே - அதே இரவிலேயே - சீமான் எட்ஜ்வேர் காலமாகிறார். சீமான் எட்ஜ்வேர் காலமானார். சிறப்பான தலைப்பு, இல்லையா! சீமான் எட்ஜ்வேர் காலமானார்! புத்தகக் கடையில் தொங்கும் துப்பறியும் நாவலின் தலைப்புப் போல...!''

கொஞ்சமாய் நிறுத்தினார். கண்கள் இழுத்துக் கொண்டன. பிறகு மறுபடியும் சற்றே நிலையானார். இப்பொழுதும் பொய்ரெட் ஒரு வார்த்தைப் பேசவில்லை.

''உங்களோட அமைதி என்னைக் கொல்லுது, மிஸ்டர் பொய்ரெட். ஹேஸ்டிங்ஸைப் பாருங்க... ஏதோ பேயைப் பார்த்து விட்டது போல.. அல்லது இன்னும் சில நொடிகளில் அப்படி ஒரு விகாரமான ஒன்றைப் பார்க்கப் போவது போல, விக்கித்துப் போய் உட்கார்ந்திருக்கார்! எதுக்கு இப்படி பயப்படறீங்க, ஹேஸ்டிங்ஸ்...! கொஞ்சம் பொறுமையாயிருங்க. எதிர்பாராத முடிவு... இதோ

வந்துக்கிட்டேயிருக்கு! ஆங், எதில் விட்டேன்..! ஓஹ்... ஞாபகம் வந்துட்டுது! 'நரித்தந்திரம் மிகுந்த' எனக்கு எதிரான வழக்கு... அதில் தானே விட்டேன்..! விவாகரத்தினைக் காரணம் காட்டி, பழி, பெரியம்மா ஜானே மீது எறியப்படணும்! சீமான் எட்ஜ்வேரின் மருமான்... வேறு யாருமல்ல, அதுதான் நான், இந்த மருமான், ஒரு காலத்தில் சிறப்பான பெண் கதாபாத்திரங்களை ஏற்று நடிப்பதில் மேடையில் புகழ் பெற்றிருந்த இந்த மருமான்... தனது பழுத்த அனுபவத்தை, நீண்ட இடைவேளைக்குப் பிறகு மீண்டும் அரங்கேற்றுகிறான். பெண் தன்மை மிகுந்த குரலில் ஜானே காட்டும் ஒருவிதக் கவர்ச்சி கிறக்கத்தைக் காட்டி, வந்திருப்பது ஜானே என்று பட்லரிடம் அறிவித்து விட்டு நளினமாய் இப்படியும் அப்படியும் இடையை ஆட்டி ஆட்டி நடந்து உள்ளே செல்கிறான். எந்த சந்தேகமும் எழவில்லை! 'ஜானே கண்ணே... வந்துவிட்டாயா...' என ஓடோடி வருகிறார் சீமான் எட்ஜ்வேர். 'வந்தே விட்டேன், நாதா...' என நானும் ஓடிப் போய் அப்படியே அவரை இறுகக் கட்டிக் கொள்கிறேன். அப்போதே, உடனடியாய், அவர் கழுத்தைச் சுற்றி இறுக்கமாய் கட்டியிருந்த என் கைகளின் உதவியோடு, பேனா கத்தியை அவரது கீழ் கழுத்து வழி குத்தி சீவி சாய்க்கிறேன். போலியாய் வந்திருந்த அப்பெண் - அதாவது திருவாளர் மார்ஷ் - வெளியேறுகிறாள். தன் வீடு வந்து, வெட்டி முறித்த களைப்புத் தீர தூங்க ஆரம்பிக்கிறாள்.''

சிரித்தார். முதலில் ஒலி கம்மியாய் ஆரம்பித்த சிரிப்பு, பின் அடக்க முடியாததாய் வளர்ந்துக் கொண்டே போயிற்று. அடங்காத போதை. ஆனால், நிறுத்தாமல், மீண்டும் மதுவும் சோடாவும் கலந்து ஒரு கோப்பை அடித்தார். இவ்வளவு நேரம் பேசும் வரை, நாற்காலியின் முன்னால் விழுந்துவிடுபவர் போல் நகர்ந்திருந்தவர், இப்போது நன்றாய் உள்ளே புதைந்து படுத்தாற் போல் அமர்ந்துக் கொண்டார். போதையின் வீரியம்... அளவுக்கதிகமாய் வியர்த்தது.

''எப்படி இருக்கு நான் விட்ட கதை? உண்மையாயிருக்கலாம் என்பது போலவே இல்லே...?! ஆனா மிஸ்டர் பொய்ரெட்.... இங்கு தான் சமாசாரத்தின் கருவே இருக்கு. அது - ஏமாற்றம்! ஜானேயும் கொலை நடந்த தருணத்தில் விருந்திலிருந்திருக்கிறார். நானோ கடற்கரையிலிருந்திருக்கிறேன். கொலைக்கான இலக்குத் தெரியும். இருவரும் வேறுவேறு இடங்களில் இருந்துள்ளனர். உங்கள் கூட்டத்துக்கு - ஏமாற்றம்!''

நிரப்பியிருந்த கோப்பையை வடிகட்டியிருந்தார் - வயிற்றுக்குள்!

''திருமிகு பொய்ரெட்...! குற்றவாளி என சந்தேகம் எழும் நபர், குற்றம் நடந்தபோது, அந்தயிடத்தில் இல்லாது வேறு இடத்தில் இருந்து விடும் இருப்பின்மைக்கான விவாதம், எனக்கு மிகவும் பிடித்த ஒண்ணு..!'' குறிப்பிட்டுச் சொன்னார், சின்ன சீமான்! ''துப்பறியும் கதைகளைப் படிக்க நேரிடும் போதெல்லாம், இருப்பின்மைக்கான விவாதத்தைக் கதாசிரியரோடு நாளும் மனதில் நிகழ்த்திப் பார்த்துக் கொண்டே தான் படிப்பேன் - அது ஒரு சுகானுபவம்! சீமான் டாஸ்வேரின் கொலையில் காணப்படும் இருப்பின்மைக்கான விவாதமும், மிகச் சுவையானதுதான்! என்ன சொல்றீங்க...? சரி... சரி... பேசத் தொடங்கிய பிரச்சனைக்கு வருவோம்! அன்றிரவு யாருடன் நானிருந்தேன்! திரு, திருமதி, மற்றும் செல்வி - மார்த்திமேயர்... நாம் மேயர் என்போமே...! இவங்க தான் அந்த மூவர்! கொழு கொழு பணக்காரக் குடும்பம்! இயல் இசை நாடகக் கலையின் மீது அதிக நாட்டமுண்டு! கான்வெண்ட் தோட்டப் பகுதியில், ஒதுக்குப்புறமாய், இக்குடும்பத்துக்கு தனி வீடு ஒண்ணு இருக்கு. அவ்வீட்டுக்கு, பண பலம் நிறைந்த வளரும் இளைஞர்களை அழைத்து விருந்து வைப்பது இவங்களோட வழக்கம். அவர்களுடைய எதிர்பார்ப்புக்கு பொருந்தும் வகையில், லண்டனையே விலைக்கு வாங்கும் அளவுக்கு பலத்த பண அந்தஸ்து நிறைந்தும், கட்டுமஸ்தான இளைஞனுமாய் நானிருக்கிறேன். அழைத்திருக்கிறார்கள். இசை நாடகத்தில் எனக்கு ஈடுபாடு உண்டா...? கேட்டால், இல்லைனு தான் சொல்வேன். ஆனா அன்று வேறு வழியில்லாமல் போயிற்று. செல்வி மேயருடன், அன்று, அத்தனி வீட்டில் இடம் பெற்ற இசை நடனத்தில் ஆட வேண்டியதாயிற்று. ஆடினேன். திடீரென்று பழக்கமில்லாமல் ஆடியதால் தொடையிரண்டும் ரத்தம் கட்டிப் போனது வேறு கதை! புரிஞ்சுக்கிட்டிருப்பீங்கனு நம்பறேன், பொய்ரெட்! பெரியப்பாவின் உன்னத குருதி கழுத்திலிருந்து வழிந்து அவர் உயிர் பிடுங்கிய போது, நான் வைரத் தோடுகள் அணிந்து அலங்காரம் செய்யப்பட்டிருந்த செல்வி மேயரின் காதோடு என் இதழ் பதிக்கும் அளவுக்கு நெருக்கமாய், நேருக்கு நேர் கட்டியணைத்துக் கொண்டு, கசிந்த மெல்லிய இசைக்கு இயைந்துப் போய், ஆடிக் கொண்டிருந்தேன்...! இதுதான் உண்மை. திருமிகு பொய்ரெட்.''

புதைந்துக் கிடந்த தனது இருக்கையிலிருந்து, தனது இந்த நீண்ட உரையாடலை, முடித்துக் கொண்ட மார்ஷ், வளைந்தெழுந்து, முன்னுக்கு வந்தார்.

''கிளம்பிய உங்களை நிறுத்தி, நான் அறுத்துத் தள்ளிடலேனு நினைக்கிறேன்'' என்றார், சிறு நமுட்டுச் சிரிப்புச் சிரித்தபடி. ''இன்னும் ஏதாவது கேட்கணுமா...?''

''நீங்க எங்களோட நேரத்தை வீணடிக்கலே, மார்ஷ். புதுத் தகவல்கள் தந்திருக்கீங்க'' என்று விட்டு, மேலும் வர்ணிக்காமல் நிறுத்திக் கொண்ட பொய்ரெட், ''வேறு ஏதாவது கேள்வி என நீங்க மிகக் கனிவாய் அனுமதி தந்துள்ளபடியால், ஒரே ஒரு சிறு கேள்வியை மட்டும் நான் கேட்க விரும்புகிறேன்'' என்றான் பொய்ரெட்.

நான் சுறுசுறுப்பானேன். பீடிகைப் போடுகிறான் பொய்ரெட். எனில், கேட்கப் போகிறக் கேள்வி, ஆழமாயும் அதிரடியாகவும் தானிருக்கப் போகின்றது. சற்றே சிந்தித்துப் பார்த்தேன். அந்த அளவுக்கு அதிரடியான கேள்வி எதுவும் எனக்குள் தோன்றவில்லை. என்னதான் கேட்கப் போகிறான் என விறுவிறுப்பானேன்.

''தாராளமாய்க் கேட்கலாம்'' என்றார் மார்ஷ்.

''சீமான் மார்ஷ்..! எத்தனை நாட்களா நீங்க மிஸ் கர்லோட்டா ஆடம்ஸுடன் பழகி வந்தீங்க...?''

பல நூறு அர்த்தம் பொதிந்த கேள்வி. இந்தக் கேள்வியை, எதிரே அமர்ந்திருக்கும் இளையவர் எதிர்பார்த்திருக்கவே மாட்டார். சம்பந்தப்படாத நானே பிரமித்து ஆடிப் போனேன். மார்ஷின் நிலையைச் சொல்லவும் வேண்டுமோ..!

தொய்வகன்று, இறுக்கமாய், நெட்டைக் குத்தலாய் அமர்ந்தார் மார்ஷ். இக்கேள்வியால் போதை கூட கொஞ்சம் தெளிந்திருந்தது. அவர் முகத்தில் ஓர் அன்னிய உணர்வு வந்து அமர்ந்துக் கொண்டது.

''என்ன காரணத்துக்காக அந்த விஷயமெல்லாம் உங்களுக்குத் தெரியணும்? நாம் பேசிக் கொண்டிருந்த விஷயத்தில், உங்கள் கேள்விக்கான பதில் செய்யப் போவதுதான் என்ன...?''

''தெரிந்துக் கொள்வதில் சிறு ஆர்வம் தட்டியது - அவ்ளோ தான்'' என்று அலுங்காமல் பேசினான் பொய்ரெட். ''மீதி எல்லாவற்றையும் நீங்க மிக விமரிசையாக விளக்கி விட்டபடியால், மேலும் கேட்க வேண்டிய அவசியமே இல்லாமல் போய் விட்டது.''

ரொனால்ட் மார்ஷ் நம்பிக்கையற்று பார்வையைப் பொய்ரெட்டின் மீது பதித்தெடுத்தார். பேசி விட்டு, இனிமையான சாயலோடு

அமர்ந்திருந்த பொய்ரெட்டின் கலக்கமற்ற முக பாவம் கூட, மார்ஷை எரிச்சல் கொள்ளத் தான் செய்தது. ஏதோ சந்தேகத்துடன் தான் தன்னை இப்படிக் கேட்டு விட்டார் என மார்ஷ் எண்ணிக் கொள்வது விளங்கிற்று.

''கர்லோட்டா ஆடம்ஸ்? ம்! கிட்டத்தட்ட ஒரு வருடமாய்த் தெரியும்! அல்லது பதினைந்து மாதங்களாய் இருக்கலாம்! அவருடைய முதல் காட்சியினை இங்கு நடத்திய போது அதனைப் பார்க்கச் சென்றிருந்தேன் - பழக்கம் ஏற்பட்டது.''

''பல நூறு பேர் கூடியிருந்த அரங்கில், உங்களிருவருக்கு மட்டும் பழக்கம் ஏற்பட்டு விட்டதா? முன் மொழிந்தது யார்?''

''நினைவில்லை.''

''அவரை உங்களுக்கு அதிகமாய்த் தெரியுமா?''

''விளங்கவில்லை.''

''அதாவது - நெருக்கமாய் தெரியுமானு தெரிஞ்சுக்கப் பிரியப்படறேன்.''

''ஆமாம்! இருந்தாலும், நினைத்துக் கொண்டேயிருக்கும் படியும், பழகிக் கொண்டேயிருக்கும் படியும் தூண்டும் பெண் வகையல்ல அவர்! யாரோடும் அதிகம் பேசாத கலகலப்பற்ற பெண்.''

''இருக்கலாம். ஆனா நீங்க அவரை விரும்பினீர்கள், ஆங்?''

ரொனால்ட் மார்ஷ், தீவிரமாய் போகும் பொய்ரெட்டை முறைத்துப் பார்த்தார். ''நீங்க எதுக்காக அந்தப் பெண் பற்றி தொடர்ச்சியா இத்தனை ஈடுபாடான கேள்விகளை முக்கியப்படுத்திக் கேட்கிறீங்கன்னு எனக்குப் புரியுது. அன்று, ஆடம்ஸுடன் நானும் இணைந்து வந்திருந்த காரணத்தாலா? ம்? ஆமாம், திரு. பொய்ரெட்! நான் கர்லோட்டா ஆடம்ஸை மிகவும் விரும்பறேன். அவர் கருணை குணம் என்னைக் கவர்ந்து விட்டது. மற்றவரின் அவதியைக் கவனமாய்க் கேட்டு, ஆறுதல் தந்து, அவனையும் ஒரு மனிதனாகப் பார்க்கிறார் அவர். அது என்னைப் பாதித்து விட்டது.''

பொய்ரெட், ஆடம்ஸ் பற்றி மார்ஷ் வர்ணித்ததை ஏற்றுக் கொண்டு தலையசைத்தான்.

''நான் இப்போ ஒரு விஷயம் சொல்ல வேண்டியுள்ளது. அதைக் கேட்டா மனமுடைந்து வருந்துவீங்க.''

''மனமுடைந்து? வருத்தமா? எது குறித்து?''

''ஆடம்ஸ் இறந்து விட்டார் - அது குறித்து.''

''என்ன?'' - ரொனால்ட் மார்ஷ், தாளாத அதிர்ச்சியில் தூக்கி வீசப்பட்டார். ''கர்லோட்டா... இறந்துட்டாளா?''

கேட்ட செய்தியால் மூர்ச்சையாகிப் போனவராய் ஆனார். ''பொய்..! என்னை வம்புக்கிழுத்துப் பார்க்காதீங்க, திருமிகு பொய்ரெட்! கடைசியாய் அவளைப் பார்த்தபோது மிக சந்தோஷமாயிருந்தாளே...''

''அது எப்போது?'' - விருட்டென்று துரிதமாய் அறியத் துடித்தான் பொய்ரெட்.

''நேற்றைய முன் தினம்னு நினைக்கிறேன்!''

''எந்த சந்தோஷமும் அவரின் முடிவிலிருந்து அவரை மாற்ற வில்லை. இறந்தே விட்டார்.''

''நிச்சயமாக எதிர்பாராது திடீரென நிகழ்ந்து விட்ட துயரமாய் தான் இது இருக்கணும்! எப்படி நிகழ்ந்தது? சாலை விபத்து?''

பொய்ரெட் சற்றே துயரமாய் மேற்கூரையைப் பார்த்தான். ''கிடையாது'' என்றான். ''வெரோனல் எனும் போதை மருந்தினை அளவுக்கதிகமாய் உட்கொண்டதால் மரணித்து விட்டார்.''

''ஓ..! அப்படியா! பரிதாப முடிவு! பயங்கரமாய் அச்சுறுத்தும் முடிவு! என் இனியவளே!''

''போனவர் திரும்புவது கிடையாது.''

''மிக வருந்துகிறேன். அதீத சந்தோஷமாய்த் தானே வாழ்ந்து வந்தார். எந்த சிக்கலுமற்ற அமைதியான வாழ்க்கை! தான் மிக நேசிக்கும் தன் சகோதரியைக் கையோடு கூட்டிட்டு வந்து, தன்னுடனேயே தங்க வைத்துக் கொண்டு இப்படி பல திட்டங்களைச் சுமந்திருந்தாளே! எல்லாம் போயின! சே! எதற்கும் நான் இத்தனை வருந்தியவனில்லை.''

''ஆமாம்'' என மார்ஷின் கருத்தை ஆமோதித்து பொய்ரெட் சொன்னான்: ''இளமையில் மரணிப்பதைப் போன்ற கொடுமை, மனிதப் படைப்பில் வேறில்லை. மரணமென்பதே அறியாது, பல சாதித்து வாழ வேண்டும் எனத் துடித்தெழும் பருவம்- வாழ்க்கைப் பாதையில் அத்தனை கதவுகளும் திறந்திருக்க, அவையனைத்தையும் அனுபவிக்க தெம்பும் உறுதியும் நிறைந்த பருவம் - அவற்றை அனுபவிக்காமல் உயிர்விடுவது - - -''

ரொனால்ட் மார்ஷ், பேசிக் கொண்டிருந்ததைப் பாதியிலேயே விட்டுவிட்ட பொய்ரெட்டை, அர்த்த புஷ்டியோடு பார்த்தார். ''நீங்க பொதுவா சொல்கிறீர்களா - அல்லது - எதையாவது உணர்த்த இப்படிப் பேசினீங்களானு எனக்கு சரியாய் விளங்கலே, திருமிகு பொய்ரெட்.''

''புரியலே?''

கேட்டவாறே எழுந்த பொய்ரெட், கைகளை நீட்டி விடை பெற குலுக்கத் தயாரானான். அப்போது, ''என் எண்ணங்களை முன்

...ந்தேன் - சற்றே பலமாய் - கடுமையாய்! வாழ வேண்டும் எனும் ...மையிலிருந்து, மனிதனின் குரோத புத்தியால், குரூரமாய் ஓர் இளைய ஜீவன் பறிக்கப் படுவதை நான் மன்னிக்கவே மாட்டேன், சீமான் ...ர்ஷ்!'' என்றான். ''இன்றைய தினம் உங்களுக்கு நல்ல தினமாக அமையட்டும். சந்திப்போம்.''

''ஓ... ஓ...! நன்றி!'' - சரிந்து விழுந்து விட்டாற் போன்ற உணர்வோடு ...ை கொடுத்தார் சீமான்.

அறைக் கதவைத் திறந்துக் கொண்டு வெளியேறியதும், அப்படியே ...ராலுடன் முட்டி மோதிக் கொண்டேன் என்றே சொல்ல வேண்டும் ...ள்ளே வர சரியாக அவரும் அறை வாயிலில் வந்திருந்தார்.

''ஆஹ்..! திருமிகு பொய்ரெட்! நீங்கள் இன்னும் கிளம்பவில்லைனு கேள்விப்பட்டேன். உங்களுக்கு நேரமிருந்தா, சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். அவசரம்! என் அலுவலக அறை வரை வர ...' சேபிக்க மாட்டீர்கள்னு எண்ணுகிறேன்.''

காரியதரிசியின் அறைக்குள் நுழைந்ததும், ''நான் சொல்ல ...ள்ளவை, அந்த சிறு பெண் குறித்தவை'' என்றபடி கதவை முழுவதுமாக மூடினார்.

''சொல்லுங்க மிஸ்!'' - சொல்ல மறுப்பவரும் சொல்லி விருப்பார்கள் - அப்படி தேன் கலந்துக் கேட்டான் பொய்ரெட்!

''இன்று மதியம் உங்களுடன் பேசிக் கொண்டிருந்தபோது அர்த்தமற்று, அபத்தமாய் நிறையப் பேசினாள், கெரால்ட். அவை அர்த்தமற்றவையே! அபத்தங்கள் - ஆம், அவை அபத்தங்களே! திருமிகு பொய்ரெட்...! நினைவுகளை அடைகாத்து ஆழ்ந்து யோசித்துக் கொண்டேயிருக்கா அவ. கடந்த கால அர்த்தமற்ற அபத்தங்களை மட்டுமே சிந்தித்துக் கொண்டிருக்கா.''

''எனக்கும் அது புரியுது. அதிகபட்ச அழுத்தத்தில் தான் மிஸ் கெரால்ட் வாழ்ந்துக்கிட்டிருக்காங்க. மன அழுத்தம்! பரிதாபக் குழந்தை.''

''வெளிப்படையாவே சொல்கிறேன், திரு பொய்ரெட்! அவளுக்கு சந்தோஷமான வாழ்க்கை வாய்க்கவில்லை. அவளுக்கு ராஜ வாழ்க்கை அமைந்துள்ளது என யாரேனும் மேலோட்டமாய் பார்த்து விட்டு வர்ணித்தால் - அது சகலமும் பொய். சீமான் எட்ஜ்வேர், ஓர் அசாதாரணமான விசித்திர மனிதன். சிறு குழந்தைகளின் பிள்ளைப் பிராயத்தில், அவற்றை வளர்க்கும் போது, எத்தனை அமைதியும் சந்தோஷமும் கலந்த சூழ்நிலையை உண்டு பண்ணித்தர வேண்டும்

என்ற இங்கிதமே அறிந்திராத படைப்பு! கெரால்டை, அவர் மிரட்டி வைத்திருக்கிறார்.''

அப்படித் தானிருந்திருக்க வேண்டும் என ஏற்றுக் கொண்டு தலையசைத்தான் பொய்ரெட். ''அப்படித்தான் ஏதாவது செய்திருப்பார் என நானும் ஸ்திரமாய் நம்பியிருந்தேன்.''

''பயமுறுத்தி, அச்சுறுத்தி, கடிந்துப் பேசித் தான் வைத்திருந்தார். அவர்... அவர்... எப்படிப் போட்டு விளக்குவது என தெரியவில்லை. அவர்... அவர்... ஆங்... இப்படிச் சொல்லலாம்...! அவரைப் பார்த்து யாராவது பயந்து ஒடுங்கினால், அதைக் கண்டு மட்டும் மன நிறைவு காணும் வகை அவர்!''

''அப்படிப்பட்டவராய்த் தானிருக்க வேண்டும்.''

''மேதாவி. எத்தனை புத்தகங்கள் படித்திருக்கிறார் தெரியுமா? பிரமித்திருக்கிறேன்! மதி நுட்பமும், சமயோஜித புத்திசாலித்தனமும் பெற்ற மனிதரும் கூட! ஆனா சில வழிகளில் - அப்படிப்பட்ட அனுபவத்தை நான் எதிர்கொள்ளாமலே இருந்திருந்தாலும் அவர் குணம் குரூரம் மிகுந்துத் தானிருந்தது. அவருடைய பெண்டாட்டி சீமானை விட்டுட்டு ஓடிவிட்டதில் எனக்குத் துளியும் ஆச்சரியம் கிடையாது - ஜானேயை சொல்கிறேன். ஜானே பற்றிய எக்கருத்தும் எனக்கு இல்லை. ஆகையால், ஜானேயை நான் தூக்கி வைத்துப் பேசுவதாய் எடுத்துக் கொள்ளாதீங்க. சீமான் எட்ஜ்வேருடன் ஒப்பிடும்போது, அவர் ஓடிச் சென்றதில் வியப்பில்லைனு சொல்ல வரேன். ஆனா, சீமான் எட்ஜ்வேரை மணந்துக் கொண்டதால், அவர் தகுதிக்குக் கிடைத்திருக்க வேண்டியதையும் தாண்டிப் பல அனுகூலங்களை அடையப் பெற்றார் என்பது நிஜம். ஜானேயைப் போல கெரால்டால் ஓடிப் போக முடியலே. கலங்கிய கண்களுடன் அவளே சொன்னது போல - மகள் என பந்தப்பட்டு விட்டாள் - அதுதான் காரணம்! பல நாட்கள் தனக்கென ஒரு மகள் இருக்கிறாள்... அவளின் நல்வாழ்வு இருக்கிறது என்பதையெல்லாம் மறந்து விடுவார், சீமான். பிறகு திடுமென ஒரு நாள் அவருக்கு மகள் குறித்த ஞாபகம் வரும். அப்போது சந்திக்கும்போது கூட அருவெறுப்பாய் குரோதமாய் தான் போய்ப் பார்த்து வருவார். சில சமயங்களில் நான் நினைப்பதுண்டு - இப்படி நான் சொல்லக் கூடாது தான் - இருந்தாலும்...''

''ம்...! சொல்லுங்க, சொல்லுங்க, மிஸ் கரோல்! என்ன நினைப்பீங்க...?''

''இப்படி தன் பெண்ணைக் கொடுமைப்படுத்துவதன் வாயிலாக, தன் முதல் மனைவி மீதான பழி தாகத்தைத் தணித்துக் கொள்கிறாரோ

...று கூட நான் நினைப்பேன். மிக இனிமையான மனித ...ங்களெல்லாம் ஒன்றாய் கொண்டிருந்த அற்புதமான பெண்மணி ...று கேள்விப்பட்டிருக்கேன். அந்த குணவதியையும் அடித்துத் ...கியிருக்கிறார். இதையெல்லாம் உங்களிடம் நான் சொல்லி ...க்கத் தேவையில்லை தான்! ஆனா, கெரால்டின் பைத்தியக்காரத் ...மான காட்டுக் கத்தலுக்கான காரணத்தை நான் விளக்க வேண்டிய ...யம் ஏற்பட்டதால், வேறு வழியின்றிப் போனது. அவள் ...னாளே... தன் தந்தையை வெறுத்ததாய்... அவரின் மரணம் ...தான்... என்றெல்லாம்! அவளைப் பற்றி முழுவதும் அறியாத ...ங்களைப் போன்ற புது மனிதர்களுக்கு, கெரால்ட் ஒரு விந்தையாய் ...யப் விடக் கூடாது பாருங்கள்... அதற்காகத்தான் சொன்னேன்.''

''மிக்க நன்றி மேடம்! என்னைப் பொறுத்தவரை, சீமான் எட்ஜ்வேர் ...ருமணமே செய்துக் கொள்ளாமல் வாழ்ந்திருந்தால், அதுவே அவர் ...ன் குலத்துக்கு செய்திட்ட பெரும் தொண்டாயிருந்திருக்கும்.''

பொய்ரெட் குறிப்பிட்டதை அனுபவித்து ஏற்றுக் கொண்டார், ...யதரிசி கரோல்.

''மிஸ் கரோல்...! தனது மூன்றாவது திருமணம் குறித்து அவர் ...ந்தித்ததே இல்லையா?''

''அதெப்படி முடியும்? அவரின் மனைவி தான் கல்லுக்குண்டு ...ால உயிருடன் இருக்காரே!''

''ஜானே வேண்டும் விடுதலையை அவருக்குக் கொடுத்து விடுவதன் மூலம், சீமானுக்கு வழி கிடைத்து விடுமில்லையா?''

''உள்ளபடி பார்த்தால், அவருக்கிருந்த இரு பெண்டாட்டிமார் ...ளாலும், அவருக்கு வேண்டிய அளவு கஷ்டங்கள் நேர்ந்துள்ளதாகவே எனக்குத் தோணுது.''

''இதனால், மூன்றாவது திருமணத்திற்கான சிந்தனையே அவருக்குள் எழுந்திருக்காதுனு நினைக்கிறீங்க? அப்படி ஒருவரும் உங்களுக்குத் தட்டுப்பட்டதேயில்லையா? கொஞ்சம் சிந்தியுங்க, மிஸ் கரோல்! யாருமில்லை?''

கரோலின், முன் கோபம் எழுந்தது.

''ஊஂஃப்..! இதே கேள்வியைப் பிடித்துக் கொண்டு எவ்வளவு நேரம் நான் சுரண்டித் தள்ளுவீர்களோ...! அது தான் யாருமில்லை என சொல்கிறேனா, இல்லையா!''

அத்தியாயம் - 14

# ஐந்து கேள்விகள்

''சீமான் எட்ஜ்வேர் மறுபடியும் திருமணம் செஞ்சுக்கப் பிரியப் பட்டிருக்கலாம்னு உனக்குத் தோன்றிய சாத்தியக் கூறினைப் போய், திரும்பத் திரும்ப ஏன் மிஸ் கரோலிடம் நச்சரிச்சே?'' என பொய்ரெட்டைக் கேட்டேன் நான். இந்தக் கேள்வியை, இருவரும் ஜாகை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்த போது கேட்டேன்.

''அப்படியும் ஒரு பாதை திறந்துக் கிடக்கேனு எதிர்பாராது என்னுள் தோணிச்சுடா... அதான்.''

''ஓ!?''

''விவாகரத்து விஷயத்துல சீமான் எட்ஜ்வேரிடம் தோன்றியுள்ள திடீர் திருப்பத்தை விளக்க ஏதாவது ஒரு காரணத்தை நான் என் மூளைக்குள் துளாவிக்கிட்டேயிருந்தேன் ஹேஸ்டிங்ஸ்! இதுல ஏதோ ஒரு விசித்திரமான காரணம் இருக்குதுடா.''

''எனக்கும் அப்படித் தான் படுது. விளக்கயியலாது முட்டிக் கொண்டு நிற்கும் திருப்பம், இது.''

''அப்படிச் சொல்வது தான் சரி - முட்டிக் கொண்டு தான் நிக்குது! மிஸஸ் ஜானே நம்மிடம் என்ன சொன்னாரோ அது போலவே தான் சீமான் எட்ஜ்வேரும் நம்மிடம் சொன்னார். அனைத்து வகை வக்கீல்களின் உதவியையும் நாடித் தானிருக்கிறார் ஜானே. ஆனால் எட்ஜ்வேர், தனது முடிவிலிருந்து ஓரங்குலம் கூட அசைந்துத் தரவேயில்லை. அவர் விவகாரத்துக்கு ஒத்துக் கொள்ள மாட்டார் - அப்படி ஒரு மனோபாவம் அவருக்கு! பிறகு திடுதிப்புனு வளைந்துக் கொடுக்கிறார்.''

''இல்லை, வளைந்துக் கொடுப்பது போல் நடிக்கிறார்'' என்று ஞாபகப்படுத்தினேன் நான்!

''உன் கோணமும் ரொம்பச் சரி ஹேஸ்டிங்ஸ்! ஒத்துக் கொள்வதாய் வெறுமனே கூட சொல்லியிருக்கலாம். நமக்கு சாட்சியங்கள் இல்லை. அக்கடிதத்தில் என்ன எழுதியிருந்தது என்றும் நாமறியோம். ஒரு பக்கம் மாகணம் பொருந்திய சீமான் பொய் சொல்கிறார் என எடுத்துக் கொள்ளலாம். ஏதோ காரணத்துக்காக அவரே சரடு விடுகிறார். இருக்கலாம், இல்லையா? ஏன் எனும் காரணம் தான் நமக்குத் தெரியாது. மாறாக, அவர் கடிதம் எழுதியதாய் எடுத்துக்கிட்டா, அப்படி அவர் செய்ததற்கு நிச்சயமா ஒரு காரணம் இருந்திருக்கணும். மிக இயற்கையாக நம்முன் தானாக விரியும் கற்பனைக் காரணம் வேறென்னவாக இருக்க முடியும் - சீமான் எதிர்பாராது யார் மீதோ ஆசை கொண்டு, கலியாண தாகம் அடைந்திருப்பார் என்பது தானே வசதியான காரணமாகுது! இது மட்டுமே சீமானின் சட்டென்ற மாற்றத்திற்கான இயற்கையான காரணமாக முடியும். எனவேதான் காரியதரிசியை நான் துருவினேன்.''

''ஆனால் அப்படி ஏதுமில்லைனு, முடிவாய் கவிழ்த்துப் போட்டு மூடிட்டார் கரோல்!''

''ஆமாம், காரியதரிசி... ... ... செல்வி கரோல்... ... ...'' - சிந்தனையாய் குறிப்பிட்டான் பொய்ரெட்.

''இப்போ சிந்தனையில என்னத்தை விரட்டிக்கிட்டிருக்கே?'' என்று கேட்டேன் நான், சற்று எரிச்சலாய். தன் குரல் பாவத்தாலேயே தன் மனம் கொண்டுள்ள உணர்வினை விளக்கி விடவல்லவன், பொய்ரெட் - எனவே தான் மிஸ் கரோல் பற்றி ஏதோ தினுசாய் அவன் எண்ணத் துவங்கியிருப்பதை என்னால் அறிய முடிந்தது. ஆயினும் இப்படியா ஒரு மனிதன் வழக்கென்று ஒன்று அகப்பட்டு விட்டால், அதில் உண்மையை அறியாமல் விடமாட்டேன் என்று அலைந்துக் கொண்டே இருப்பான் என எரிச்சலும் விளைந்தது!

''மிஸ் கரோல் சொல்லும் சாட்சியங்களை அப்படியே நம்பி விடுவது ரொம்ப அபாயம், ஹேஸ்டிங்ஸ்.''

''அவர் பொய் சொல்கிறார்னு நினைக்கிறாயா? என்ன காரணமா யிருக்கும்? அவரைப் பார்த்தா நேருக்கு நேர் பேசுபவராயல்லவா தோணுது!''

''அதனால்தான்! அப்படிப் பட்டபட்டென்று அவர் முடிவெடுத்து விடுவதால் தான்! ஹேஸ்டிங்ஸ்! தப்புத் தப்பாய் அர்த்தப்படுத்திக் கொண்டு, தவறை உண்மையென்று தானாய் முடிவெடுத்து வாதிடும்

குணம் கொண்டோர் தரும் சாட்சியங்களை நம்புவது வெகு கஷ்டம்! அப்படிப்பட்ட குணாதிசயம் மட்டுமே கொண்டு ஆக்கப்பட்டுள்ள மிஸ் கரோல், சீமான் எட்ஜ்வேரின் காரியதரிசியாய் இருந்திருப்பது, நம் துரதிர்ஷ்டம்.''

''என்ன சொல்ல வரே?''

''தெரிந்தே ஏமாற்றும் கபடு - இது ஒரு வகை. இவ்வகையல்ல மிஸ் கரோல்னு நான் நினைக்கிறேன். ஆனா, நடந்துள்ள ஒரு விஷயத்தில் காரண காரியங்களைக் கொஞ்சமும் கருதாது, நடுநிலையோடு ஆராயாது - சாதகமாக தன் மனதில் தோன்றும் கருத்தும் எண்ணமும் அபிப்பிராயமும் தான் சரினு வாதிடுவது, இன்னொரு வகை! எஜமானனுக்கு மிக உண்மையானவர்களின் குணாதிசயமாகும், இது! ஏற்கெனவே நம்மிடம் ஓர் அப்பட்டமான பொய்யை மிஸ் கரோல் சொல்லியிருக்கிறார் என்பதைக் குறித்துக் கொள். ஜானேயின் முகத்தை தான் மிகச் சரியாய் பார்த்ததாய் சொல்லியிருக்கிறார் - அது சாத்தியமே கிடையாது எனும் நிலையில்! அப்படினா எதை வெச்சுக்கிட்டு ஜானேயைப் பார்த்ததாய் அவர் அடித்துச் சொல்கிறார்? ஆராய்வோம். முதல் மாடி வராண்டாவில் நின்னுக்கிட்டு, கீழே குனிந்து, ஜானே வில்கின்ஸனைப் பார்க்கிறார். அது ஜானே வில்கின்ஸனே என்றொரு சந்தேகமற்ற முடிவு அவர் மூளைக்குள் நுழைஞ்சுடுது. அவரைப் பொறுத்தவரை குழப்பமின்றி அவருள் பதிவாகி விடுது - அது ஜானே வில்கின்ஸன் தான் என்று! மிகத் துல்லியமாய் தான் பார்த்தது ஜானே தான் என்கிறார்! அவர் மனத்தில் இப்படி அபிப்ராயம் நிலை கொண்டு விட்டால் - காரண காரியங்கள் ஒதுக்கப்பட்டு விடுகின்றன. ஜானே வில்கின்ஸன் முகத்தினைப் பார்த்திருக்கவே முடியாதுனு மிஸ் கரோலுக்கு அழுத்தந்திருத்தமாக விளக்கப்பட்டு விட்டது. இல்லையா? ஆனால் பயன்? ஒண்ணுமில்லை! அவரைப் பொறுத்த மட்டில் அது ஜானே தான்! மாற்றவே முடியாது! இதே நிலை தான் அவர் சொல்லும் எந்த சாட்சியத்திலும்! நம் கேள்விகளுக்கு, தான் அறிந்து வைத்துள்ள தகவல்களிலிருந்து பதில் தருவாரே அன்றி, யோசித்து - காரண காரியங்களை ஆராய்ந்து - நடந்த உண்மைகளின் அத்தாட்சி யோடு அவருக்கு சொல்லத் தெரியாது. அதுதான் - அப்படித்தான் - அதுவேதான் என அடித்துக் கூறும் சாட்சியங்களை மட்டும், அருமை ஹேஸ்டிங்ஸ், சந்தேகக் கண் கொண்டு தான் அணுக வேண்டும். ஏன்னா, பொய்யை, மெய்யென்று, அப்படி அடித்துச் சொல்லும் பேதைகள் அவர்கள்!''

''சாட்சியங்கள் பற்றி மிக அழகாய் விளக்கம் தந்துட்டேடா.''

''மூன்றாவது திருமணம் பற்றிய என் கேள்விக்கான மிஸ் கரோலின் பதிலும், இதே கதைதான். முட்டாள்தனமாய் ஆலோசிக்காதீர்கள்னு சொல்லி என் கேள்வியையே பெருக்கித் தள்ளிட்டார். ஏன்? ஏன்னா, காரிய காரணம் பொதிந்து அவர் சிந்தித்ததே கிடையாது - அதனால தான்! ஒருவேளை, இக்கேள்விக்கு ஆமாம் எனும் பதில் சொல்லும் விதமாய் சீமான் எட்ஜ்வேர் சமீபத்தில் துளியாவது நடந்துக் கொண்டாரா... என சிந்திக்க கரோலுக்கு மனம் ஒப்பாது! எனவே, வழக்கில் ஆரம்ப நிலையில் நாம் நின்றுக் கொண்டிருந்த கட்டத்திலேயே தான் நாம் இன்னும் இருக்கிறோம்; காரியதரிசியின் சாட்சியங்களை நம்பி ஒன்றும் செய்வதற்கில்லை.''

''ஜானே வில்கின்ஸனின் முகத்தினை அவர் பார்த்திருக்கவே முடியாதுனு நீ சொன்னபோது கூட, கரோல் கொஞ்சமும் யோசித்ததாய் எனக்குப் படலே'' - குறிப்பிட்டுச் சொன்னேன் நான்.

''அதனால, நான் அவரை பொய் சொல்பவர்னு வகைப்படுத் தாமல், எஜமானனுக்கு உண்மையானவர்னு வகைப்படுத்தினேன்! அவர் வேண்டுமென்றே பொய் சொல்வதாய் எனக்குத் தோணலே'' என்ற பொய்ரெட்டின் முகத்தில் எதிர்பாராது சில முடிச்சுகள் விழுந்து நிலைத்தன. ''ஆனா - ஆனா -'' என எண்ணத்தில் காரியதரிசியை மனதில் வைத்துக் காற்றில் சொன்னான். சில நொடிகள் நழுவின. இப்பொழுது புருவ முடிச்சுகள் அவிழ, சராசரியானான்.

''என்ன நினைப்பு?'' என்றேன் நான், ஆர்வமாய்.

ஒன்றுமில்லை என்பது போல தலையசைத்துக் காட்டினான். ''ஒரு சாத்தியக் கூறு தோணிச்சு. பிறகு அது அவ்வளவு சீக்கிரமாய் சாத்தியப்பட வாய்ப்பில்லைனும் தோணிச்சு. சாத்தியமில்லை தான்.''

இதற்கு மீறி சொல்ல மறுத்து விட்டான்.

''மிஸ் கரோல், சீமானின் மகள் மீது மிகுந்த பாசம் நிறைந்தவராய் இருக்கார்'' என்றேன்.

''ஆமாம். மகளுடனான உரையாடலின்போது, அவரும் உடனிருந்து உதவ வேண்டும் என்ற முடிவில் தானிருந்தார். ஹேஸ்டிங்ஸ்! மிஸ் கெரால்ட் குறித்த உன் கிரகிப்பு - கருத்து என்ன?''

''அவருக்காக நான் மிக வருந்தறேன்.''

''உனக்கு மிக இளகிய மனது ஹேஸ்டிங்ஸ். துப்பறியும் துறையில், இரும்பு மனம் கொண்டு இயங்க வேண்டும் தெரியுமா? மனக்

கிலேசத்தில் வாழ்ந்துக் கொண்டிருக்கும் யுவதிகள், உன்னை எப்போதுமே உலுக்கி விடுகின்றனர்.''

''நீ அப்படி ஏதும் உணர்வதேயில்லையா?''

மன பாரத்தோடு ஆமோதித்தான், துப்பறியும் நிபுணன். ''உணர்வேன். ஆனா மனம் வரைக் கொண்டு செல்ல மாட்டேன். கெரால்ட் பொண்ணு அமைதியும் சந்தோஷமும் மிகுந்த இளமையை அனுபவிக்கவில்லை. இது, அவர் முகத்தில் மிக நன்றாகவே பிரதிபலிக்குது.''

''ஆனாலும், ஹெர்குல்'' என அன்பாய் குறிப்பிட்டுக் கூப்பிட்ட நான், ''இத்தனை குழப்பங்களில் வாழ்ந்தாலும், அவர் மனம் தெளிவாய் தான் உள்ளது! திருமதி ஜானே வில்கின்ஸனுக்கும் சீமான் எட்ஜ்வேரின் கொலைக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை எனும் அவரின் திட்டவட்டமான அறிவிப்பு தான், எததனை செழுமையும் முழுமையுமாய் விளங்கிற்று.''

''இது, ஆள் மாறாட்டத்தைப் பொருத்தவரை தான் ஹேஸ்டிங்ஸ். ஆள் மாறாட்டத்தைப் பொருத்தவரை அப்படி ஒரு ஸ்திரமான முடிவில் தானிருக்கிறார் கெரால்ட்! ஆனாலும்...''

''என்ன ஆனாலும்? நண்பா! நேருக்கு நேர் அவரைப் பார்த்துப் பேசிப் பழகி வந்த பிறகுமா உனக்கு திருப்தி ஏற்படலே?''

''அன்பு ஹேஸ்டிங்ஸ்! பார்த்துப் பேசிப் பழகி வந்ததில் விளைந்தது தான் என்ன? அவர் மிக சோகமான, இறுக்கமான, பயம் சூழ்ந்த வாழ்க்கையை வாழ்ந்து வந்திருப்பதாய் தெரிஞ்சுக்கிட்டோம்! தன் தந்தையை வெறுத்ததாயும் அவரோட மரணத்தால், தான் ரொம்பவும் மகிழ்ச்சிக் கொள்வதாயும் அவர் ஒப்புத்துக்கிறார்! நேற்று காலையில சீமான் நம்முடன் என்னதான் பேசியிருப்பார் என்பதில் இன்னமும் கூட அவருக்கு ஓர் இருப்புக் கொள்ளாமை இருக்கத்தான் செய்யுது! இவை தவிர வேறென்ன கண்டோம்?''

''இவற்றை சொல்வதில் அவருக்குள்ளே மிளிர்ந்த அந்த வெகுளித் தன்மை..? அது உனக்குப் புலப்படலியா!''

''வெளிப்படையாய் நடந்துக் கொள்வது அவர்கள் பரம்பரையின் மரபணுக் குணம்னு தான் நான் சொல்வேன். புதிய சீமான் மார்ஷை எடுத்துக்கோ. அப்பப்பா...! எத்தனை வெளிப்படையாய், வெகுளி யாய் நம்முடன் பேசித் தள்ளினார். அவர் பெண் வேடம் பூண்டு சென்றிருப்பார்னு நமக்குத் தோணியிருக்கவே செய்யாது - ஆனா, அதையும் அவரே போட்டு உடைத்தார்!''

''ஆமாம்'' என ஒப்புக் கொள்ள வேண்டிய நிலைக்கு சென்றேன் நான். அங்கு மார்ஷ் நடந்துக் கொண்ட விதத்தினை நினைத்தபடி, ''அவர் உண்மையான நடத்தையே அப்படித்தான் போலும்'' என்றேன்.

சரியாகப் புரிந்து கொண்டாய் என ஆமோதித்த பொய்ரெட், ''நல்ல தைரியசாலி போலத் தான் தெரியறார்'' என்ற என் கருத்தை விசித்திரமான கருத்தடா உன் கருத்து என விமர்சித்தான். அப்படி சொன்னதற்கான காரணத்தையும் விளக்கினான்: ''பேச விட்டேன், கவனிச்சியா! துளியும் நான் வாய் திறக்கவேயில்லை. கடைசியில், முழுக்கவும் வித்தியாசமான ஒரு விஷயத்தைப் பற்றி உரையாடியதும், என்ன ஆயிற்று சின்ன சீமானின் தைரியம்! அக் கேள்வியால் அவருக்குள் ஏற்பட்ட அலைக்கழிப்பு... பதற்றம்...! இவை தான் அவரின் உண்மை!''

''கர்லோட்டா ஆடம்ஸின் மரணம் குறித்துக் கேள்விப்பட்டதும் அவரிடம் தோன்றிய அடக்கயியலா அதிர்வும், அச்சமும் நியாயமான வருத்தம்னு தான் நான் நினைக்கிறேன்'' என்றேன். ''ஆனா நீ அதை புத்திசாலித்தனம் மிகுந்த சிறந்த நடிப்பும்பே!''

''அப்படியும் சொல்லிட முடியாது. விவரிப்பது கடினம். அந்த உணர்வுப் பங்களிப்பு, நியாயமான வருத்தம் போல இருந்தது என்பேன்!''

''இக்கொலை சம்பந்தமாக தனக்குத் தெரிந்திருந்த அத்தனை தகவல்களையும், சேதாரமின்றி நம் முன் அவர் தூக்கிப் போட்டது ஏன்னு நினைக்கிறே? வெறுமனே பிரமிப்பூட்டுவதற்காகவா?''

''அப்படி இருக்க சாத்தியமுண்டு. விஷயங்கள் தெரிந்திருந்தும் சொல்லப்படாத போது, அவை சந்தேகப்பட இடமளிக்கின்றன. ஒளிவுமறைவின்றி சொல்லிட்டா, அவர் தான் சொல்லிட்டாரே என்ற ஆறுதலில், அவ்விஷயங்களை நாம் அந்த நபரோடு பொருத்திப் பார்ப்பதையே விட்டுடுவோம்! ஆனால், அவை, அப்படி விட்டு விடாமல் கருத்தில் கொள்ள வேண்டிய முக்கிய விஷயங்களாய் கூட இருக்கலாம்.''

''உதாரணத்திற்கு - சீமான் எட்ஜ்வேருக்கும், மார்ஷுக்கும் இடையே, சம்பவ தினத்தன்று காலை நடந்த தகராறு...''

''வெரி கரெக்ட்! எப்படியும் அந்த சங்கதி வெடிக்கும் என்று அவருக்கே தெரியும். எனவே அவரே சொல்லி விடும் பட்சத்தில், அவர் மீது நாம் கொள்ளும் தீவிர சந்தேகம் நிச்சயம் குறையுமல்லவா!''

''கோமாளி போல நடந்துக்கிறாரே ஒழிய, அவர் அப்படிஒன்றும் அசமஞ்சம் இல்லை போல!''

''ஓஹ்..! அவர் அசமஞ்சமே கிடையாது. தேவையான போது தவறாமல் உபயோகிக்க, அவருக்கு ஏகமான அளவு சாதுர்யம் இருக்கு! எங்கே எப்போ எப்படி விழிச்சுக்கணும் என்பதை, கோமாளி எனும் போர்வையில் நிறைவேற்றும் அதிபுத்திசாலி அவர்.''

அழகாய் வார்த்தைகளை இட்டு நிரப்பி மார்ஷை வர்ணித்த பொய்ரெட்டை ரசித்தேன்.

''இப்படிப்பட்ட அதி புத்திசாலிகளைக் கிரகிப்பது, செம குஷியான அனுபவமாயிருக்கும் தெரியுமா...! சரி, அருமை நண்பா! பசிக்குது - ஒட்டல் போவோமா! பிறகு ஒன்பது மணிக்கு மிக முக்கியப் பிரமுகர் ஒருவரைச் சந்திக்க முன் அனுமதி வாங்கியிருக்கேன் - அதுக்கு கிளம்பணும்.''

''யாரது?''

''முதலில் வயிற்றுக்கு - பிறகு செவிக்கு! சாப்பிட்டுக் காபி குடித்து முடிக்கும் வரை இவ்வழக்கு குறித்துப் பேசவே வேண்டாம்ப்பா! சாப்பிடும் போது மட்டும், மூளை, வயிற்றின் சேவகனாக இருக்கணும்.''

சொன்ன வார்த்தையை சிரமேற் கொண்டான் பொய்ரெட் - வழக்கு குறித்துப் பேசவும் இல்லை... சிந்திக்கவும் இல்லை. அவன் வாடிக்கையாய் செல்லும் உணவகம் சென்று, ருசியான ஆம்லெட், கோழி வறுவல், சிறிது முட்டை சாதம் மற்றும் நிறைய ரம் ஆகியவை புசித்தோம்.

ரம் உள்ளிறங்கியதால், காபியை மறுத்த பொய்ரெட், உணவு மேஜையின் எதிரே அமர்ந்திருந்த என்னை மிக வாஞ்சைப் பொங்கப் பார்த்து சிரித்தான். ''எனக்கு மிக இனியவனே'' என்றான். ''நான் உன்னை மிக சார்ந்து இருக்கிறேன் தெரியுமா - மிக! மிக, மிக! நீபோ கூட அறிந்திருக்க மாட்டாய்!''

நான் சற்றுக் குழம்பியும் ஆனால் மிக மிக ஆனந்தமும் அடைந்தேன். இதற்கு முன்னால் ஒரு முறை கூட, என்னை, பொய்ரெட் இப்படிப் பாராட்டியதில்லை. எனக்குள், ரகசியமாய், இதுகுறித்து சிறு மனத்தாங்கல் கூட உண்டு! என் ஆலோசனைகளையெல்லாம் ஓரங்கட்டி விட்டு, அவன் என்ன நினைக்கிறானோ அதை மட்டுமே செயல்படுத்தி முன்னேறுவதாய் தான் இதுவரை நான் நினைத்து வந்துள்ளேன்.

''உனக்கே தெரியாம, அன்பு ஹேஸ்டிங்ஸ், நீ, பல முறை சரியான பாதை நோக்கி வெளிச்சம் போட்டுக் காட்டியிருக்கே'' என்று அன்பு மேலோங்க சொன்ன பொய்ரெட் என் மனதுள் மேலும் உயர்ந்தான். உலகே வியக்கும் துப்பறியும் நிபுணர் என்னை சார்ந்திருப்பதாய் தரும் மான்றிதழை விட வேறென்ன எனக்கு மேலாய் இருந்து விடும்?

''ஆகவே, சீமான் எட்ஜ்வேர் கொலை வழக்கில், இதுவரை நிகழ்ந்துள்ள நகர்த்தல்களில், என் முன் விரிந்துக் கிடக்கும் விடை காணா ஐந்துக் கேள்விகளை உன் முன் வெளிச்சம் போட்டுக் காட்டப் போகிறேன், டியர் ஹேஸ்டிங்ஸ்...! பார்ப்போம் இன்றோ, நாளையோ, நாளை மறுநாளோ - இக் கேள்விகளுக்கு உன்கிட்டேயிருந்து சாதகமான விடை கிடைக்குதானு...!''

''நான் தயார்'' என்றேன். ''அந்த ஐந்துக் கேள்விகள் தான் என்னென்ன?''

''முதல் கேள்வியை நாம் ஏற்கனவே விவாதித்திருக்கிறோம். விவாகரத்துக் குறித்த அணுகுமுறையில், சீமான் எட்ஜ்வேர், ஏன் தன் முடிவினை மாற்றிக் கொண்டார்? எனக்கு, ஓரிரு அபிப்ராயங்கள் தானா முன்வந்து நிற்பதா தோணுது. ஒண்ணு உனக்கே தெரியும் - அது, மூன்றாவது திருமண ஈர்ப்பு.

''எனக்குள் நானே கேட்டுக் கொள்ளும் இரண்டாவது கேள்வி - அந்தக் கடிதத்திற்கு என்ன ஆயிற்று? சீமான் எட்ஜ்வேரும் அவரது மனைவியும் பிரியக் கூடாது என்ற எண்ணத்தில் அந்தக் கடிதத்தைப் பதுக்கியது யார்?

''மூன்று: நேற்று நேர்காணல் முடிந்து நூலகத்தை விட்டு வெளியேறிய பிறகு, நீ பார்த்த சீமான் எட்ஜ்வேரின் முக பாவங்களுக்கான அர்த்தங்கள் தான் என்னென்ன? சொல் ஹேஸ்டிங்ஸ்..! இந்த மூன்றாவது கேள்விக்கு உன்னிடம் ஏதேனும் பதில்கள் இருக்கா?''

நான் பரிதாபமாய் இல்லை என தலையசைத்தேன். ''அது எனக்குப் புரியலே.''

''நீ கற்பனையில் சொல்லலே, இல்லையா? நீ பார்த்தது நிஜம்தானே? உனக்குக் கற்பனை கொஞ்சம் ஜாஸ்திடா!''

''இல்லை, இல்லை'' என ஆவேசமாய் சொன்னேன் நான். ''நான் பார்த்தது, தவறாகப் புரிந்துக் கொண்டதல்ல என்பது சர்வ நிச்சயம்.''

''எனில், அது, விளக்கம் தேடும் ஒரு முக்கிய கேள்வி! எனது நான்காவது கேள்வி, மூக்குக் கண்ணாடி குறித்தது! ஜானே வில்கின்

ஸனும் கண்ணாடி அணிவதில்லை... கர்லோட்டா ஆடம்ஸும் கண்ணாடி அணிபவரல்ல. எனில், *கர்லோட்டா ஆடம்ஸின் பையில், சக்தி வாய்ந்த அந்த மூக்குக் கண்ணாடிக்கு என்ன வேலை?*

''இப்பொழுது எனது ஐந்தாவது கேள்வி: சிஸ்விக்கில் தான் ஜானே வில்கின்ஸன் இருக்கின்றாரா என அறிய யாரோ ஒருவன் ஏன் தொலைபேசி செய்ய வேண்டும் - *அந்த யாரோ ஒருவன் யார்?*

''என்னையே நான் பிய்த்துப் போட்டு அல்லாடிக் கொண்டிருக்கும் கேள்விகள், இவை தான் நண்பா! இவற்றிற்கு விடை கிடைச்சுட்டா, மிக மகிழ்வேன். இவ்விடைகளை வெச்சுக்கிட்டு, திருப்திகரமா விளக்கவல்ல ஒரு கோட்பாடு வகுக்க முடிஞ்சுட்டா, வழக்கையே கூட நியாயமாய் முடிச்சுடலாம்.''

''இவை தவிரவும் பல கேள்விகள் இருக்கே, பொய்ரெட்!''

''உதாரணம் தா?''

''ஆள் மாறாட்ட உத்தியோகத்தில், கர்லோட்டா ஆடம்ஸைப் புகுத்தியது யார்? சம்பவ தினத்தன்று இரவு பத்துக்கு முன்னும், பத்துக்குப் பின்னும், கர்லோட்டா ஆடம்ஸ் இருந்த இடங்கள் எவை? D, யார்?''

''இக்கேள்விகளுக்கு நுணுக்கமான முக்கியத்துவம் எதுவும் கிடையாது. இவை - நமக்கு விடை தெரியாத கேள்விகள். நாம் விடை அறியாத சில உண்மைகள். அவ்வளவே. ஆனா நான் கேட்ட ஐந்துக் கேள்விகளும், உளவியல் சம்பந்தப்பட்டவை. அவை தான் நமக்குத் துப்பு காட்டி உதவக் கூடியவை.''

''போதும் பொய்ரெட்'' என்றேன் முடிவாக. இனி வழக்கு பற்றி, மூளை குடைய பேசாது, துப்பறியும் நிபுணரின் வாயை எப்படியாவது கட்டி விட வேண்டும் என முடிவெடுத்துக் கொண்டேன். திருப்பித் திருப்பி அதே கேள்விகள் - பதில்தான் காணோம். மறுபடியும் சீமான் எட்ஜ்வேர் பற்றிப் பேசினால் என்னால் தாளாது. ஆகவே, ''எங்கோ ஒன்பது மணிக்குப் போகணும்னு சொன்னே...'' என்றேன்.

கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டான் ஹெர்குல் பொய்ரெட். ''ஞாபகப்படுத்தியதற்கு நன்றிடா'' என்றபடி கிளம்ப ஆயத்தமானான்.

''எங்கு கிளம்பிக் கொண்டிருக்கிறோம்?''

''சிஸ்விக்'கில் இருக்கும் சர் மொன்டாகு கார்னர் வீட்டுக்கு! விருந்தன்று ஜானேவுக்கு வந்த அந்தத் தொலைபேசி அழைப்பு குறித்து எனக்கு சில தகவல்கள் வேண்டியிருக்கு.''

## அத்தியாயம் - 15

# சர் மொன்டாகு கார்னர்

சிஸ்விக் நதிக் கரையில் அமைந்திருந்த சர் மொன்டாகு கார்னரின் இல்லத்தினை நாங்கள் அடைந்த பொழுது மணி ஏறத்தாழ ...ந்திருக்கும். பல வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கி கண்ணுக்கும் ...ருந்துக்கும் ஒருசேர கவின் அளித்த நந்தவனத்தின் பின்னணியில், அமைதியான பங்களாவாய் அமைந்திருந்த கட்டுமானம் அது. மரச் ...டங்களும் வண்ணக் கண்ணாடிக் கதவுகளும் கொண்டு அழகாக ...ும், நேர்த்தியாகவும் எழுந்து நின்ற அருமைமிகு முன்னறைக்குள் நாங்கள் அனுமதிக்கப்பட்டோம். பலதூண்களும், உயர மேற்கூரையும் அக்கூரையில் பல தினுசுகளினாலான தொங்கு விளக்குகளும் அமைந்து, அரண்மனையில் ராஜா கூடும் இடம் போல விசால ...ாயிருந்தது. இவ்வறையின் வலப்புறத்தில் திறந்திருந்த கதவின் ...ழியே அடுத்து இருந்த உணவருந்தும் அறை கண்களில் பட்டது. அங்கு ...லர் அமர்ந்து சாப்பிடும்படியான உயர் மர மேஜை ஒன்றும் அதில் ...ல மெழுகுவர்த்திகள் எரிய ஒளியூட்டப்பட்டிருந்த சூழலும் கண்களுக்குத் தென்பட்டன.

''இந்த வழியே வரீங்களா?'' என பவ்யமாய் வழிகாட்டினான் ...' லர்.

அவன் காட்டிய வழியே நீண்டு விரிந்திருந்தப் படிகளில் ஏறி, முதல் ...ளத்தில் நீளமாய் இருந்த ஓர் அறைக்குள் நுழைந்தோம். இவ்வறை ...யிலிருந்து பார்க்கும்போது, கீழே வளைந்து சுழிந்து வேகமாய் ஓடிக் கொண்டிருந்த சிஸ்விக் நதி, கண் கொள்ளா ரம்யக் காட்சியாக விளங்கிற்று.

''திருமிகு ஹெர்குல் பொய்ரெட்'' - எங்களை வழிநடத்தி வந்த ...ணியாள் அறிவித்தான்.

அறையிலிருந்த அனைத்துப் பொருட்களும் பழைமையை நினைவூட்டும்படி சிரத்தையாய் தெரிவு செய்யப்பட்டிருந்தன. அங்கு நிலவிய பழங்காலத்து உயிர்ப்பும், அதனைக் கூட்டிக் காட்ட என்றே ஒளிர்ந்துக் கொண்டிருந்த ஒளி குறைந்த விளக்குகளும், பாரம்பரியம் மிகுந்த நூற்றாண்டுகளுக்குள் நம்மை இட்டுச் சென்றன. அறையின் எதிர் மூலையில் நதியின் காட்சி தீர்க்கமாய் தெரியும்படி போடப்பட்டிருந்த மேஜையில் நால்வர் அமர்ந்து சீட்டு விளையாட தயாராகிக் கொண்டிருந்தனர். பணியாளன் தந்த அறிவிப்பினைக் கேட்டதும், அந்த நால்வரில் ஒருவர் எழுந்து, நுழைவிலேயே நின்றுக் கொண்டிருந்த எங்களை நெருங்கி வந்தார். சொன்னார்: ''உங்களுடன் நட்பு ஏற்படுத்திக் கொள்வதுல நான் மிகப் பெருமையடையறேன், திருமிகு பொய்ரெட்.''

ஈடுபாடு பொதிந்து சர் மொன்டாகு கார்னரை நான் கவனிக்கலானேன். வித்தியாசமாக, மிகச் சிறிய கண்களைப் பெற்றிருந்தார் மொன்டாகு - அவை பேராற்றல் கொண்டவையாக இருந்தன. தனக்கு வசீகரம் சேர்க்கும் விதமாய் நுணுக்கமாய் தெரிவு செய்த டோபா மயிர் அணிந்திருந்தார். அருகிலிருப்போரின் உணர்வுகள் தன்னைப் பாதிக்கவே பாதிக்காதவாறு பார்த்துக் கொள்ளும் மன முதிர்ச்சி பெற்றவராய் இருந்தார்.

''உங்களுக்கு என் நண்பர்களை அறிமுகம் செய்து வைக்கிறேன். திரு மற்றும் திருமதி விட்பர்ன்.''

''நாங்க ஏற்கனவே சந்திச்சிருக்கோம்'' என்று, ஜானே வில்கின்ஸன், ஆடம்ஸுக்கு அளித்த விருந்தில் எங்களிருவரையும் சந்தித்ததைப் பிரகாசமாய் நினைவு கூர்ந்தார் திருமதி விட்பர்ன்.

''இது செல்வன் ராஸ்.''

சந்தோஷம் தரும் அழகு முகம் கொண்டிருந்த இருபத்தியிரண்டு வயது காளை, இந்த ராஸ். குலுங்கும் வெண்ணிற முடிக் கற்றைகள். அவை அழகைப் பேரழகாக்கிக் காட்டின.

''கொண்டாட்டமா நீங்க துவங்கிய விளையாட்டை நான் இடையூறு செஞ்சுட்டேன். அதுக்கு பல நூறு மன்னிப்புகளைக் கேட்டுக்கறேன்'' என்றான் பொய்ரெட்.

காபியை மறுத்து விட்ட பொய்ரெட், கொஞ்சமாய் பழைய சரக்கு ப்ராண்டிக்கு சரியென்றான். பெரிய, பிடியில்லாத மதுக் கோப்பையில், அதிகமாக நிரப்பப்பட்டு ப்ராண்டி அளிக்கப்பட்டது.

அதனை நாங்களிருவரும் உறிஞ்சிக் கொண்டிருக்கும் போது, ஒரு பேருரையையே நிகழ்த்தித் தள்ளி விட்டார் மொன்டாகு. ஜப்பானிய மொழி அழகு, சீனாவின் மொழியோடு ஜப்பானிய மொழிக்குள்ள ஒற்றுமை, பாரசீக நாட்டுக் கம்பளங்களின் கலை நயம், வித்வத் நிறைந்த பிரெஞ்சு மொழி எழுத்தாளர்கள், நவீன இசை மாற்றங்கள், ஐன்ஸ்டீனின் மாமேதாவித் தனம்.. என எதையும் விட்டு வைக்கவில்லை!

தனது சிறப்பான விருந்தோம்பலில் திருப்தியடைந்தவராய், இருக்கையில் வசதியாய் சாய்ந்து இப்பொழுது அமர்ந்து கொண்டவர், நான் என்ன சகாயம் செய்ய வேண்டும் என சிரிப்பால் உணர்த்தினார்! அவரை நாங்களிருவரும் இடையூறு ஏதுமின்றி இத்தனை நேரமாய் தனி ஆவர்த்தனம் செய்ய விட்டதில் பரம திளைப்பிலிருந்தார். கலை மற்றும் பாரம்பரியத்தைப் பறைசாற்றும் விதமாய் பொருட்கள் அலங்கரித்திருந்த இவ்வறையில், மையமாய் என் தாத்தா அமர்ந்திருப்பது போலிருந்தது, மொன்டாகுவைப் பார்க்கும் போது!

''திருமிகு சர் மொன்டாகு கார்னர்'' என்று கனத்த குரலில் அழைத்துத் துவங்கிய ஹெர்குல் பொய்ரெட், ''கனிவு நிறைந்து நீங்க ஆற்றிக் கொண்டிருந்த உரையாடலின் இடையே நான் இப்போ நுழைஞ்சு, வந்த காரியத்தைப் பேச விரும்பறேன்'' என்று வலிக்காது மொன்டாகுவின் வாய்க்குப் பூட்டுப் போட்டான்.

மொன்டாகு, மிகச் சிறிதாய் நீண்டு, ஒல்லியாய் அமைந்து, சுறாவின் பற்களை நினைவூட்டிய தனது கை விரல்களை மறுத்து அசைத்து, ''அதற்கென்ன இப்போ அவசரம்'' என்றார். துப்பறியும் நிபுணரிடம், தான் இன்னும் பேருரை ஆற்ற வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு. ''இன்னும் ஏகமாய் நேரம் இருக்கே.''

''இந்த வீட்டுல மங்கலான இந்தப் பாரம்பரியச் சூழலில், மன பாரமெல்லாம் கரைய நீண்ட நேரம் அமர்ந்திருப்பதே, ஒரு சுகானுபவம்'' என்று, மொன்டாகுவின் கருத்துக்கு ஒத்துழைத்தார் திருமதி விட்பர்ன்.

''ஆயிரமாயிரமாய்... இல்லை, கோடி கோடியாய் பணத்தினைக் கொட்டிக் கொடுங்கள்... ம்ம்ம்... லண்டனில் மட்டும் போய் தங்கவே மாட்டேன். ஏகாந்தமான நதியின் சலசலப்பு ஓசையும், பட்சிகளின் ஒலியும் அன்றி வேறெதுவும் தொந்தரவு செய்யாத இந்த த்யான ஆழ்நிலையைப் பின்னுக்குத் தள்ளி விட்டு, ஓ கடவுளே, இந்த நகர

மக்கள் அதிர்வான நாட்களிலேயே புதைந்துப் போவது தான் எத்தனை கொடுமை!'' என்று உணர்ந்து குறிப்பிட்டார் சர் மொன்டாகு கார்னர்.

நிஜமாகவே ஒருத்தன் மூட்டை மூட்டையாய் பணக் கட்டுக்களை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தால், த்யானம் - ஏகாந்தம் என்றெல்லாம் வர்ணிக்கும் இந்த த்ரேதாயுத சூழலைக் காற்றில் கரைத்து விட்டு, அவன் பின்னாலேயே ஓடி விட மாட்டாரா இவர்... எனும் குறும்பான கற்பனை எனக்குள் எட்டிப் பார்க்க, ஆனால் உடனேயே மாறுபட்ட இக்கருத்தைக் காலடியில் போட்டு நசுக்கி விட்டேன்.

''அமைதி தானே வாழ்க்கை!'' என்று மறுபடியும் மொன்டாகுவை ஆதரித்துப் பேசினார் திருமதி விட்பர்ன். ''பணமாம் பணம்! பைசா பிரயோஜனப்படாத பணம்! ஆமாம், பணம்னா என்ன...?''

''ஆஹ்...'' என்ற திரு சார்லஸ் விட்பர்ன், தன் மனைவி வெளியிட்ட அக் கேள்விக்குப் பதிலாய், தனது பேண்ட் பையில் கிடந்த சில நாணயங்களைக் கையால் உலுக்கி ஓசையெழுப்பிக் காட்டினார்!

''சார்ல்ஸ்..! அதிகப்பிரசங்கித்தனம்!'' என திருமதி முறைக்க, ''மன்னிக்க, மன்னிக்க'' என அப்படியே அடங்கிக் கொண்டார் சார்லஸ் விட்பர்ன்!

''இதுபோன்ற இறை சூழ்நிலையில் கொலை பற்றிப் பேச ஆரம்பிப்பது, மன்னிக்க முடியாததுதான்'' என விஷயத்துக்குள் நாசூக்காக நுழைந்தே விட்டான் பொய்ரெட்.

''சரி...! விஷயத்தைத் துவங்கியே ஆகணும்னு தீர்மானிச்சுட்டீங்க. எனில் பரவாயில்லை'' என நட்பாய் பொய்ரெட்டின் தோளினை, வளைந்து முன்வந்து தட்டி விட்ட மொன்டாகு, பொய்ரெட் குறிப்பிட்ட கருத்துக்கு, ''கொலை பற்றிப் பேசுவதில் தவறென்ன இருக்கு?'' என்று கேட்டார். ''கொலை செய்வது - ஒரு கலை'' என, தனது கலைத் தேடும் குணத்தைக் கொலை குறித்த வர்ணனையிலும் புகுத்திக் காட்டினார் மொன்டாகு. அதை விளக்கவும் செய்தார்: ''எத்தனையெல்லாம் திட்டமிட்டு, அகப்பட்டுக் கொள்ளா வண்ணம் எந்தத் துப்பினையும் விட்டு வைக்காமல், நுட்பமாய் ஒரு கொலை நிகழ்த்தப்படுகின்றது...! எனில் கொலை, ஒரு கலை தானே! கொலைகாரன், ஒரு கலைஞன்! இவனையும் விட கைதேர்ந்த கலைஞன் - அக்கொலையைத் துப்பறியும் நிபுணன்! ஆனா இந்த போலீஸை மட்டும் கலைஞன்னு கருத மாட்டேன். கண்ணில்

பபடுபவற்றை அப்படியே நம்பி வழக்கை முடித்துப் போட்டால் போதும் என அலையும் வெறும் அதிகாரிகள்! இன்று இங்கு ஒரு போலீஸ்காரர் வந்திருந்தார்! அவரும் விதிவிலக்கல்ல! படபட மனிதன்! மோனாலிஸா பற்றிக் கூட அவருக்குத் தெரியவில்லை! சே!''

''ஜானே வில்கின்ஸன் விஷயத்தை மனசுல வெச்சுக்கிட்டு தான் வந்துபோயிருப்பார்னு நினைக்கிறேன்'' என்றார் திருமதி விட்பர்ன், துரிதமான ஓர் ஈடுபாட்டோடு.

''நீங்க தந்த விருந்துல கலந்துக்கிட்டு, அந்த நடிகை இங்கிருந்து விட்டது தான் அவரின் பெரும் அதிர்ஷ்டம்'' என்றான் பொய்ரெட்.

''நானும் அப்படித்தான் நினைத்தேன்'' என்றார் மொன்டாகு. ''அவருடைய புத்திக் கூர்மை மற்றும் திறமை ஆகியவற்றை நான் ஏற்கெனவே அறிந்தவன். அதனாலதான் அவருக்கு நான் ஏதும் உதவியாய் இருக்க முடியுமானு இப்ப கேட்டுக்கிட்டிருந்தேன். பெரிய அளவிலான ஒரு தொழில் துவங்கப் போகிறாராமே! வட்டிக்குப் பணம் கொடுக்கலாம்னு எனக்குள்ளே ஒரு திட்டம். ஆனா, அவருக்கு, வேறுவிதமான உதவியாய் நானிருக்கணும்னு விதி உள்ளதே!''

''ஜானே, ஓர் அதிர்ஷ்டசாலி'' என்றார் திருமதி விட்பர்ன். ''சீமான் எட்ஜ்வேரிடமிருந்து எப்படியாவது தப்பித்தாகணும்னு தலைகீழா பிரயத்தனப்பட்டுக்கிட்டிருந்தார். இப்போ பாருங்க.. எவனோ போய் சீமானையே கொன்று ஜானேயின் கஷ்டத்தைத் தீர்த்து வெச்சுட்டான்! மெர்ட்டான் மாகாணத்து இளைய பிரபுவை இப்போ முழு மன திருப்தியோடு கலியாணம் செய்துக் கொண்டு விடுவார் - ஊரே இப்படித்தான் பேசிக்குது! ஆனாலும், மெர்ட்டானின் ராணிக்கு - அதாவது இளைய பிரபுவின் அன்னையாருக்கு - இந்த திருமணத்துல உடன்பாடே இல்லையாமே!''

''தனிப்பட்ட முறையில, நேற்றைய விருந்தில் என்னை மிகக் கவர்ந்து விட்டார், ஜானே! கிரேக்க நாட்டுக் கலைகள் மற்றும் கலைப் பொருட்கள் பற்றி என்னை விட அவருக்கு மிக அதிகமான தகவல்கள் தெரிஞ்சிருக்கு'' - மொன்டாகு மனமாரப் பாராட்டினார்.

'ஆமாம்' 'இல்லை' என்றெல்லாம் ஜானே சொல்லுவது போல நானே கற்பனை செய்து பார்த்துக்கிட்டேன். 'ஓ.. உண்மையிலேயே எத்தனை அழகு இது' என்றெல்லாம் கூட, அவரின் மந்திரம் போன்ற கவர்ச்சிக் குரலில், விட்டிருப்பார்! இந்த மொன்டாகுவைப் பொறுத்தவரை, தனக்குத் தெரிந்தவை என இவர் பறைசாற்றும்

விஷயங்களை, காது கொடுத்து சிந்தை சிதையாது கேட்டுப் பாராட்டுவோர் தான், புத்திசாலிகள் - எனவே, ஜானே புத்திசாலியாகி விட்டார்!

''எட்ஜ்வேர் ஒரு சந்தேகப் பிராணி - எல்லா விஷயத்திலும்'' என்றார் சார்லஸ் விட்பர்ன். ''கடுவன் பூனை. புண்படுத்தாது பழகவே தெரியாத எமன். நிச்சயம் அவருக்கு எதிரிகள் இருந்திருப்பார்கள் என்பது என் அசையா நம்பிக்கை.''

''நான் கேள்விப்பட்டது உண்மையா, திருமிகு பொய்ரெட்'' என்று கேட்டார் திருமதி விட்பர்ன். ''யாரோ அவரது பின்னந்தலையில் பேனா கத்தியால் மிக ஆழமாய் சீவிக் கொன்று விட்டார்களாமே?''

''மிகச் சரியே, திருமதி விட்பர்ன். அட்சர சுத்தமா, பிசகாம, மேலாண்மை தெறிக்கத் தான் சீவியிருக்காங்க - ஓர் அறுவை சிகிச்சையின் போது இருக்கும் துல்லியம் போல!''

''ஆஹா..! ஒரு கலைஞனைப் போல எத்தனை அழுத்தமாய் மனதில் பதிய வைக்கிறீங்க, மிஸ்டர் பொய்ரெட்'' என வாய் பிளந்தே விட்டார் சர் மொன்டாகு கார்னர்.

''இப்போ..'' என ஆரம்பித்த பொய்ரெட் ''நான் வந்த காரணத்தைச் சொல்லிடறேன். இங்கு விருந்துல கலந்துக்கிட்டிருந்தபோது, திருமதி எட்ஜ்வேரை யாரோ போன்ல அழைச்சிருக்காங்க. அந்தத் தொலைபேசி சம்பாஷணை குறித்துத் தகவல்கள் அறியத் தான் நான் இங்கு வந்திருக்கிறேன். உங்களுடைய பணியாளை, இது சம்பந்தமாக நான் சில கேள்விகள் கேட்க நீங்கள் என்னை அனுமதிப்பீர்கள்னு நம்பறேன்'' என்றார்.

''பேஷா, பேஷா! அந்த அழைப்பு மணியை ஒலிக்க முடியுமா, ராஸ்?''

ஒலித்த மணிக்கு விடையாய் வந்து நின்றான் பட்லர். நல்ல உயரமாகவும் நடுத்தர வயதையும் ஒத்திருந்த அவன், கிருத்துவ ஆலயப் போதகர் போல தன்னை அலங்கரித்திருந்தான்.

அவனிடம் ஏன் அழைக்கப்பட்டான் என விளக்கினார் மொன்டாகு. கவனமாய் பொய்ரெட் பக்கம் மரியாதை கலந்து திரும்பி, நிலைமையை எதிர் கொண்டான் பட்லர்.

''தொலைபேசி அடித்ததும், இங்கிருந்து யார் பதில் சொன்னது?'' - பொய்ரெட் துவங்கினான்.

''நான் தான் ரிஸீவரை எடுத்து பதில் தந்தேன், ஸார். தொலைபேசி, அறைக்கு வெளியே உள்ள அகண்ட வராண்டாவில் இருக்கு.''

''அழைத்த ஆள், மிஸஸ் எட்ஜ்வேரிடம் பேசணும்னு கேட்டானா? அல்லது ஜானே வில்கின்ஸனிடம் பேசணும்னு கேட்டானா?''

''மிஸஸ் எட்ஜ்வேருடன், ஸார்!''

''என்ன தான் சொன்னான்? சொன்னது சொன்னபடி வேண்டும்.''

சில நொடிகள் யோசித்தான்.

''எனக்கு நினைவுள்ள வரையில் ஸார்... ரிஸீவரை எடுத்து 'யாரது'ன்னேன். உடனே ஒரு குரல் 'சிஸ்விக் 43434 தானே?'னு கேட்டது. அப்படியே என்றேன். 'எனில், கொஞ்சம் காத்திருங்கள்' என்றது அந்தக் குரல். பிறகு வேறொரு குரல் 'இது சிஸ்விக் 43434 தானே'னு கேட்டு, அதுக்கு நான் ஆம்னு பதில் தந்ததும், 'அங்கு மிஸஸ் எட்ஜ்வேர் விருந்தில் கலந்துக் கொண்டிருக்காரா?'னு கேட்டது. நான், 'ஆமாம்... மிஸஸ் எட்ஜ்வேர் இங்கே விருந்துல கலந்துக் கொண்டிருக்கறார்'னேன். அக்குரல், 'நான் அவரோடு பேச விரும்பறேன்'னு கனிவாய் கேட்டுக் கொண்டது. அப்போ சாப்பாட்டு மேஜையில் விருந்தாளிகளுடன் உணவருந்திக் கொண்டிருந்த மிஸஸ் எட்ஜ் வேரிடம் போய் விஷயத்தைச் சொன்னேன். அவர் எழுந்து கொண்டார். போன் இருக்கும் வழி நோக்கி அழைச்சுக்கிட்டுப் போனேன்.''

''பிறகு?''

''திருமதி எட்ஜ்வேர் ரிஸீவரை எடுத்துக் காதில் பொருத்தி 'யாரது?' என்றார். ஓரிரு நொடிகள். பிறகு 'ஆமாம் - சரி தான். திருமதி எட்ஜ்வேர் தான் பேசுவது' னார். பேச ஆரம்பித்து விட்டார் என அறிந்ததும் திரும்பி உள்ளே செல்ல எத்தனித்த என்னை, மிஸஸ் எட்ஜ்வேரின் குரல் தடுத்து நிறுத்தி, அவர்கள் இணைப்புத் துண்டிக்கப்பட்டு விட்டது என்றது. யாரோ கலகலவென சிரித்து விட்டு வேண்டுமென்றே ரிஸீவரை வைச்சுட்டதா என்றார். தொலைபேசியில் அழைத்தவர் யார்னு பேர் சொன்னாங்களான்னு கேட்டார். அப்படி எந்தத் தகவலையும் அவர்கள் தரவில்லை. இவைதான் நடந்தன ஸார்.''

புதிய தகவல் எதுவும் பணியாள் சொன்னதில் இல்லை. சற்றே எரிச்சலானான் பொய்ரெட்.

''நடந்துள்ள கொலையுடன், விருந்துக்கு வந்த தொலைபேசி அழைப்பு சம்பந்தப்பட்டிருப்பதா எதிர்பார்க்கிறீங்களா, மிஸ்டர் பொய்ரெட்?'' - திருமதி விட்பர்ன்.

''கறாராய் அடித்துச் சொல்ல முடியாது, திருமதி விட்பர்ன். ஏன் அப்படி ஒரு அழைப்பு வந்து கேலியாய் நகைத்து பின் வெட்டப்பட வேண்டும்... என ஆவலைத் தூண்டி விடும் ஒரு நிகழ்வு.''

''விளையாட்டாய் சிலர் இப்படி தொலைபேசி செய்து ஏமாற்றுவது உண்டு. என் நண்பர்கள் என்னை சில சமயம் இப்படி காலை வாரி விட்டிருக்கிறார்கள்.''

''நம் வீட்டுத் தொலைபேசி எண்ணில் நம் நண்பர்கள் விளையாடலாம், திருமதி விட்பர்ன்! அவங்களுக்குத் தொடர்பே இல்லாத இன்னொருத்தர் வீட்டுக்குத் தொலைபேசி செய்து விளையாட மாட்டாங்க.''

சிந்தனையில் ஆழ்ந்தார் திருமதி விட்பர்ன்.

மீண்டும் பணியாளிடம் பேசிப் பார்த்தான் பொய்ரெட்.

''ஒலித்தது ஆணின் குரலா? அல்லது போன் செய்தது ஒரு பெண்ணா?''

''பெண் குரல்னு தான் ஞாபகம், ஸார்.''

''எப்படிப்பட்ட அமைப்பிலான குரல் அது? தாழ்ந்த? அல்லது உயர்ந்த? கீச்கீச்சென்ற? அல்லது நல்ல தடிமனான?''

''தாழ்ந்து தான் ஒலித்தது, ஸார். எச்சரிக்கையுடன் மேலும் தனித்துவம் கொண்டு இருந்தது'' - இப்படிச் சொல்லிவிட்டு சற்றே நிறுத்தினான். ''ஒருவேளை நான் கற்பனைக் கலந்துக் கூட இப்படி விளக்கலாம், ஸார்! ஆனா.. அது நிச்சயம் அந்நிய நாட்டுக் குரல் ஸார். ஆங்கில வார்த்தைகளை உச்சரித்த விதம், நம் நாட்டு வாடையில் இல்லவே இல்லை.''

''ஒருவேளை, ராஸ் நாட்டு ஆளாக இருக்குமோ...'' என்று கிண்டலாய் ராஸை வம்புக்கிழுத்தார் திருமதி விட்பர்ன். ''இல்லை, ராஸாகவே கூட இருக்குமோ?''

''இருக்கும், இருக்கும்..!'' என, ராஸ் இக்கிண்டலை ரசித்துச் சிரித்தான். ''இப்படிச் சொல்லிட்டா பயந்துடுவேனா...! நான் எதற்கும் பயப்படவே வேண்டாம். நேற்று விருந்து முழுவதும் இங்கிருந்தவன் நான்.''

பொய்ரெட் பணியாள் பக்கம் திரும்பினான்.

''பட்லர்...! மீண்டும் ஒருமுறை அக்குரலை எங்கு எப்போது கேட்டாலும், அதனை குழப்பமின்றி அடையாளம் கண்டுவிட முடியும்னு நினைக்கிறீங்களா?''

பணியாள் தயங்கினான். ''பதில் சொல்லத் தெரியலே, ஸார்! நான் தான் அக்குரலோடு பேசியவன் - எனவே என்னால் முடியலாம்! என்னால் முடியணும்னு நினைக்கிறேன்.''

''உனக்கு நன்றிகள் நண்பா.''

''நன்றி, நன்றி ஸார்!''

முதுகு வளைத்து வணக்கம் தெரிவித்து, பவ்யமாய் பின்னாலேயே கொஞ்சம் நடந்து, எங்களை விட்டு அகன்றதும், ஓசை எழாமல் நடந்து வெளியேறினான்.

சர் மொன்டாகு கார்னர், பிறகு மிக நட்போடு பழகி, முதிர்ந்தவர்களுக்கே இருக்க வேண்டிய முதிர்ச்சியை அழகுபட வெளிப்படுத்திக் கொண்டிருந்தார். எங்களிருவரையும் வற்புறுத்தி சீட்டாட்டத்துக்கு அழைத்தார். இங்கு வந்தது இதற்கல்ல எனும் பொருளில் நான் மறுத்து விட்டேன். பொய்ரெட் ஆட்டத்தில் இணைந்துக் கொள்ள விரும்பினான். இளையவன் ராஸ், விட்டால் போதும் எனும் தொனியில் பொய்ரெட்டுக்கு வழி விட்டு விட்டு, தான் விலகிக் கொண்டான். நாங்களிருவரும் அகலமாய் புரண்டோடிக் கொண்டிருந்த சிஸ்விக் நதியையே கண் கொட்டாது ரசித்துக் கொண்டிருந்தோம். மாலை மங்கியது. சர் மொன்டாகு கார்னருக்கும் பொய்ரெட்டுக்கும் அதிக பண லாபம் உண்டு பண்ணித் தந்த சீட்டாட்டம் முடிந்தது.

எங்களை இத்தனை நேரம் விருந்தோம்பிய மொன்டாகுவுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டு நாங்கள் கிளம்ப, ராஸ், எங்களுடன் வருவதாக இணைந்துக் கொண்டான்.

வெளியேறி, இரவுக்குள் நுழையும் போது, ''வித்தியாசமான குள்ளர்'' என்று மொன்டாகுவை வர்ணித்தான், பொய்ரெட்!

அரவமேயற்ற சிஸ்விக் நதி தீரத்தின்இரவு, குளுமையாகவும், அமைதியாகவும், அதி அற்புதமாகவும் அமைந்திருக்க, நடந்தபடி கொஞ்சம் சென்று, வழியில் எதிர்ப்படும் ஏதேனும் டாக்ஸியைப் பிடித்துக் கொள்ளலாம் என்றான் பொய்ரெட். அப்படியே ஏற்றுக் கொண்டு காலாற நடந்தோம். அப்பொழுது மீண்டும், ''ஆமாமாம். மிக வித்தியாசமான குள்ளர் - சர் மொன்டாகு'' என்றான்.

''பல கோடானு கோடி பணத்துக்கு அதிபதியான பணக்கார குள்ளரும் கூட'' என திருத்தினான் ராஸ். தொடர்ந்தான்: ''என்னை ஏனோ அவருக்கு அப்படி பிடித்து விட்டது! இருக்கட்டும் - தொடரட்டும்! இதுபோன்ற பசையுள்ள ஆட்கள் நம் பின்னாலிருப்பது, மிக பெருத்த பலம்.''

''நீங்க ஒரு நடிகரா, மிஸ்டர் ராஸ்?''

ஆமாம் என்றான் ராஸ். அறிமுக காலத்திலேயே தனக்கு உடனடி அங்கீகாரம் கிடைக்காமல் போய்விட்டதில் பலத்த வருத்தமிருந்தது ராஸுக்கு. ஆனால், ரஷ்ய மொழியிலிருந்து மொழி மாற்றம் செய்யப்பட்ட சில நாடகங்களில் பங்கேற்றதன் மூலம், சமீப காலமாய், நல்ல விமரிசையாய் அடையாளம் காணப்படுகிறான், ராஸ்! இதைக் குறிப்பிட்டு ராஸைத் தேற்றிய பொய்ரெட், சாதாரணமாய்க் கேட்டான். ''எனில், உங்களுக்கு கர்லோட்டா ஆடம்ஸைத் தெரிஞ்சிருக் கணுமே?'' என்றான்.

''தெரியாது. செய்தித் தாள்களில் அவர் மரணம் குறித்து வெளியாகி யிருக்கும் செய்தியினை இன்றிரவு படித்து அறிந்துக்கிட்டேன். அதிகமாய் உட்கொள்ளப்பட்ட போதை மருந்துனு எழுதியிருந்தாங்க. இந்தக் காலத்துப் பெண்கள், முட்டாள்கள்.''

''நானும் படித்தேன்! ஆனால் அவர் சார்ந்தத் துறையில் நல்ல திறமைசாலி அவர்!''

''ஓஹோ...''

தனது திறமை மற்றும் நடிப்புப் பற்றிய பேச்சினைத் தவிர வேறு யாருடைய பங்களிப்புப் பற்றியும் ரசிக்கும் குணத்தவனல்ல என்பதை சிறப்பாய் வெளிப்படுத்தியது, ராஸுவின் இந்த 'ஓஹோ!'

''கர்லோட்டா ஆடம்ஸ் நடத்திய காட்சிகளில் ஒன்றினைக் கூடவா நீங்க பார்த்ததில்லே?'' என்றேன் நான்.

''இல்லை, எங்களிருவரின் துறைகளும் வெவ்வேறானவை. அவர் செய்வது வேறு - விகடகவி. நான் - ஒரு நடிகன். எனவே பார்க்க வேண்டிய தேவை ஏற்படலே. ஒருவரைப் பழித்துக் கிண்டலடித்துச் செய்யப்படும் விகடகவி எல்லாம், இப்பொழுது வேணும்னா பைத்தியக்காரத்தனமாய் கூட்டம் சேர்க்கும். ஆனா, நாள்கணக்காய் நிற்காது.''

''ஆஹ்..! இதோ ஒரு வாடகைக் கார்!'' என்றான் பொய்ரெட். கையிலிருந்த குறுந்தடியை ஆட்டியாட்டி அதன் ஓட்டுனரை அழைத்தான்.

வாடகைக் கார் எங்களை நெருங்குவதற்குள், ''நான் நடந்து போறேன்'' என்றான் ராஸ். ''நல்ல சீதோஷ்ணம்! காலாற நடக்கப் பிடிக்கின்றது! கொஞ்ச தூரத்துல, என் வீட்டு வரை செல்லும் நேரடி பேருந்தும் கிடைக்கும்.''

இப்படிச் சொன்ன ராஸ், திடீரென்று ஒரு விகாரமான சிரிப்பினை உதிர்த்தான். ''நேற்றைய விருந்து, ஒரு கேலிக் கூத்து'' என்றான்.

''அப்படியா?'' - வந்து நின்ற வாடகைக் காரில் ஏறுமுன் நிதானித்து விட்டு பின் இப்படிக் கேட்டான் பொய்ரெட்.

''நாங்கள் மொத்தமே பதின்மூணு பேர்தான் இருந்தோம். கடைசி நேரத்துல சிலர் வராம விட்டுட்டாங்க. இரவு உணவெல்லாம் முடித்து, கை கழுவி கிளம்பும் போது தான், யார் யார் வரவில்லை என்பதையே கவனித்தோம்.''

''யார் முதலில் வந்து முதலில் கிளம்பியது?'' என்று கேட்டேன் நான்.

இதற்கு, சிறு சந்தேகம் பொதிந்த சிரிப்பு வெடி ஒன்றை வெளியிட்டான் ராஸ். பிறகு ''நானே'' என்றான்.

அத்தியாயம் - 16

# தர்க்கங்கள்

வீடு திரும்பியபோது, அங்கு எங்களுக்காக ஜேப் காத்திருப்பதை அறிந்தோம்.

''மேற்கொண்டு முன்னேறுமுன், இங்கு வந்து உங்களோட உரையாடிச் செல்லலாம்னு தோணிச்சு'' என்றார்.

''வெல்கம், திரு. ஜேப். எல்லாம் எப்படிப் போய்க்கிட்டிருக்கு?''

''அப்படி ஒண்ணும் மெச்சும்படியா முன்னேற்றங்கள் ஏற்படலே என்பது தான் உண்மை.'' இப்படிக் கூறிய ஜேப், வருத்தம் தோய்ந்துக் காணப்பட்டார். ''எனக்கு உதவிகரமாய் அமையும்படி ஏதேனும் தகவல்கள்...?'' என்றும் நாடினார்.

''எனக்குள் ஓரிரு சிறு அபிப்ராயங்கள் எழுந்துள்ளன. அவற்றை உங்க கூட பகிர்ந்துக்க விரும்பறேன்'' என்றான் பொய்ரெட்.

''உங்களுக்கு ஒண்ணு தெரியுமா... ஒரு வகையில் எனக்கு சிறப்பான எச்சரிக்கை மணியே நீங்கதான் திரு பொய்ரெட்! உங்களின் ஆலோசனைகளைச் சில முறை நான் கேலி செய்து அல்லது விமர்சித்து வாரி விட்டாலும், மனதுக்குள் ஆழ இறக்கிக் கொள்கிறேன் என்பது தான் நிஜம். சிறிய முட்டை போல இருக்கும் உங்கள் மண்டைக்குள் தான் எத்தனை சரக்கு..!''

அதிகம் பொருட்படுத்தாது ஜேப்பின் பாராட்டினை ஏற்றுக் கொண்டான் பொய்ரெட். ஹெர்குல்லிடமிருந்து விஷயங்களைக் கறக்க வேண்டும் என்பதற்காகவே பாசாங்காகப் பாராட்டும் ஜேப்பின் தலையில் ஓங்கி ஒரு குத்து விடலாமா எனத் தோன்றியது எனக்கு.

''ஆள் மாறாட்டம் பற்றி ஏதேனும் துப்புக் கிடைத்துள்ளதா, பொய்ரெட்...? அதில் தான் எனக்கு ஆலோசனைகள் தேவை..! அன்னிக்கு என்னதான் நட ந்திருக்கும்? அங்கு சென்றது தான் யார்?''

''அதுபற்றித் தான் நான் உங்களிடம் பேச வேண்டும்னு நான் எண்ணியிருந்ததே..!''

இவ்வாறு கூறிய பொய்ரெட், கர்லோட்டா ஆடம்ஸ் பற்றி ஜேப் எங்காவது கேள்விப்பட்டிருக்கிறாரா எனக் கேட்டான்.

''ம்! கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனா உடனடியா பொருத்திப் பார்க்க நினைவுக்கு வரவில்லை.''

அவர் யாரென்று தீர்க்கமாய் விளக்கினான் பொய்ரெட்.

''அவரா?'' என்று நினைவுபடுத்திக் கொண்டார் ஜேப். ''அவர் விகடகவியும் மாறுவேடப் பங்களிப்புகளும் செய்யக் கூடியவரா...! ஆ.....! அதுசரி, இப்போ அவர் மீது நிலை கொள்ள உங்களை எது தூண்டிச்சு? எந்தத் தகவலின் பேரில் ஆடம்ஸின் மீது கவனம் செலுத்தறீங்க?''

ஏகமாய் தர்க்கித்து, கலந்தாலோசித்து, நாங்களிருவரும் மேற்கொண்ட நடவடிக்கைகளையும், எடுத்துக் கொண்டுள்ள முடிவுகளையும் விளக்கினான் பொய்ரெட்.

''கடவுள் அனுக்கிரகத்தால், உங்க ஊகங்கள் சரியாத்தானிருக்கணும்..!'' என்று பொய்ரெட் சொன்னவற்றை விளங்கிக் கொண்ட ஜேப் ஆச்சரியமானார். ''உடைகள், தொப்பி, சாம்பல்நிற கையுறை போன்ற இத்யாதிகள் மற்றும் அந்த வெண்ணிற பொய்க் கூந்தல்...! அவராய்த் தானிருக்கணும்னு நிரூபிக்கும் சாட்சிகள்..! ஆனாலும் - ஆடம்ஸை ஆள்மாறாட்டத்துக்கு உபயோகப்படுத்தியுள்ளதை நிரூபிக்க, நம் கையில் ஏதுமேயில்லை என்பதையும் கவனத்தில் கொள்ளணும். இதைக் கண்டுபிடிப்பதும் அவ்வளவு சுலபமாயிருக்கப் போவதில்லை'' என்று தொடர்ந்த ஜேப், ''நீங்க மேதாவி என்பதுல சந்தேகம் இல்லைம்பேன், பொய்ரெட்...! மிகச் சிறப்பான வேலை செய்திருக்கீங்க...! பிரமாதமான வேலை...! மறுக்க முடியாது...!'' என்று பொய்ரெட்டைப் பாராட்டி விட்டு, தனக்கு இந்த அணுகு முறையில் அதிக நம்பிக்கை இல்லை என்பதை முன்வைக்கலானார்.

''என்னைப் பொறுத்தவரை, திருமிகு பொய்ரெட், இந்த மாதிரி, திரைக்குப் பின்னால் இருந்துக்கிட்டு வில்லன் இயக்கும் ஆலோசனையிலெல்லாம் அதிகம் நம்பிக்கை கிடையாது. கர்லோட்டா ஆடம்ஸ் வளர்ந்த முதிர்ந்த பெண் அப்படினு சொல்றீங்க... எனில் யோசிக்காமலா இப்படி அகலக் கால் வெச்சிருப்பார்...? எனவே, அவர் சம்மதமின்றி நடந்துள்ளது எனும் உங்கள் கோணத்தில் எனக்கு ஒப்புதல்

கிடையாது...! சீமான் எட்ஜ்வேரின் மாளிகைக்கு ஓர் இலக்கோடு தான் ஆடம்ஸ் சென்றிருக்கார் - அது - ஏதோ ரகசியத்தை வெளியிட்டு விடுவதாகக் கூறி பணம் பறித்தல்...! பணம் சம்பந்தமாகப் போகப் போவதாய் தான் ஆடம்ஸும் அவர் தோழியிடம் குறிப்புக் கொடுத்துப் பேசியிருக்கிறார்...! சீமானோடு விவாதிச்சிருப்பார் - அது வாக்குவாதமாய் போய் முடிந்திருக்கும்...! எளிதில் சமாளிக்க முடியாத குரோதனாக சீமான் எட்ஜ்வேர் மாற, இந்த ஆடம்ஸ் பொண்ணும் அபாயகரமாய் பொறுமையிழக்க, விளைவு: போட்டுத் தள்ளி யிருப்பார்...! கொன்று விட்டு வீடு திரும்பிய பிறகு, கோபமெல்லாம் வடிந்து, சுயமான அமைதி ஆடம்ஸாக மாறிய பிறகு, தூள் தூளாய் நொறுங்கிப் போயிருப்பார். கொலை செய்ய வேண்டும் என்று நினைத்திருக்கவே மாட்டார் - ஆனா நடந்துடுச்சு. தனக்குத்தானே விதித்துக் கொள்ளும் வலிக்காத தண்டனையாக அதிக வெரோனலைக் குடித்திருப்பார் என்பது என் கணிப்பு...!''

''நீங்க சொல்வதை, அனைத்து சந்தேகங்களையும் தீர்த்து வைக்கும் சிறப்பான கணிப்பாகவா நினைக்கிறீங்க?''

''எனினும் விளக்கம் காணாத பல முடிச்சுகள் இன்னும் இருக்கத்தான் செய்யுது..! ஒப்புக்கறேன். அதுக்கு என்ன செய்வது...? யோசிச்சுக்கிட்டே போனா முடிவில்லாது நீண்டுக் கொண்டே தானிருக்கும். இன்னொண்ணையும் நான் இப்போ சொல்லட்டுமா..! சீமானை ஏமாற்ற திட்டமிட்டவனுக்கும், கொலைகாரனுக்கும் சம்பந்தமே இல்லைனு சொல்லி, இருவரும் வெவ்வேறானவர்கள் எனும் கோணத்துல வழக்கை விரட்டலாம்..! இப்படிப் பலப்பல..! எனவே, எது மிகச் சிறப்பாய் பொருந்துதோ, அதை அப்படியே நீதிமன்றத்திடம் ஒப்படைத்து விட்டு, வழக்கை பரணில் ஏற்றுவதுதான் புத்திசாலித்தனம்..!''

''வாயை மூடுங்க ஜேப்..'' என்று கொஞ்சம் காரமாகவே மறுத்தான் பொய்ரெட். பொய்ரெட்டுக்கும் கோபமேற்படுத்த இந்த ஜேப்பால் மட்டுமே இயலும்...!

பொய்ரெட்டின் கோபத்துக்கு சிறு அசட்டுச்சிரிப்பைப் பதிலாக்கிய ஜேப், ''இது எப்படி இருக்கிறதுனு சொல்லுங்க...?'' என கொலைக் கான காரணமாய் இன்னுமொரு அபிப்பிராயத்தை முன்வைத்தார்: ''விளையாட்டா இந்த ஏமாற்று வேலையை யாராவது செய்துப் பார்த்திருக்கலாம்...! உன்னால் ஜானே வில்கின்ஸனாக சீமானின்

மாளிகை வரை சென்று வர முடியுமா என யாரோ கிண்டலாய்க் கேட்க, அந்த சவாலை விளையாட்டாகக் கூட ஆடம்ஸ் நடத்திக் காட்டியிருக்கலாம், இல்லையா...?'' - கொஞ்சம் நிறுத்திய ஜேப், பின்வருமாறு முடித்தார்: ''எனினும், என்னைப் பொறுத்தவரை, நான் கூறிய முதல் அபிப்பிராயத்தில் தான் எனக்கு உடந்தை...! சீமானுக்கும் இந்த விகடகவிப் பெண்ணுக்கும் இடையே அப்படி என்னதான் தொடர்பு இருந்திருக்கும் என்பதை நாம் எப்படியாவது கண்டு பிடிச்சாகணும்.''

இப்பொழுது கர்லோட்டா ஆடம்ஸின் வீட்டு வேலைக்காரி, அமெரிக்காவுக்கு தபால் செய்த கடிதம் குறித்து சொன்னான், பொய்ரெட். அக்கடிதம் நமக்குப் பேருதவியாய் இருக்கும் எனும் பொய்ரெட்டின் கருத்தையும் மறுக்காது ஆமோதித்துக் கொண்டார் ஜேப். கடிதம் குறித்த அத்தனை தகவல்களையும் தனது சிறு குறிப்புப் புத்தகத்தில் எழுதிக் கொண்ட ஜேப், ''உடனடியாய் இந்த சமாச்சாரத்தை நான் கவனிக்கிறேன்'' என்றார்.

தொடர்ந்தார்:

''அந்த விகடகவிப் பொண்ணைத் தான் கொலையாளியாக நினைக்க நான் அதிகம் முற்படுகிறேன், மிஸ்டர் பொய்ரெட். ஏன்னா, வேறு ஒருவரையும் என்னால ஊகிக்க முடியலே. இப்பொழுதைய சீமானை, அதாவது மார்ஷ், அவரை எடுத்துப்போம். அவரிடம் சீமானைக் கொன்றே போடணும்... வேறு வழியே கிடையாது... போன்ற இலக்கு எதுவும் தென்படலே. அவரைப் பற்றிய செய்திகளெல்லாம் தப்பாய் தானிருக்கு - பணம் பணம் என்று எட்ஜ்வேரைப் பிடுங்கினாராம். யார் தான் பணத்தாசையின்றி இருக்காங்க? இது விஷயமா நேத்து சீமான் எட்ஜ்வேரைச் சந்தித்துப் பேசியிருக்கிறார் மார்ஷ். இதை ரகசியமாய் மறைக்காமல் அவரே என்னிடம் சொன்னார், அதனால, இவ்விஷயம் உப்பு சப்பற்றுப் போகுது. அவர்களிருவருக்கும் இருந்த பகையின் காரணமாக மார்ஷின் மீது நம் பார்வையை ஆழப் பதிக்க நினைச்சாலும் அதுவும் முடியாமல் தான் போகுது - ஏன்னா, அவரும் நேற்று இரவு வேறொரு விருந்தில் இருந்திருக்கிறார்! மேயர் குடும்பத்தோடு இசை நாடகத்தில் பங்கேற்றுக் களித்திருக்கிறார். கொடை பணக்காரக் குடும்பம் - விடுவாரா புது சீமான்! மார்ஷ் சொல்வது உண்மையானு விசாரித்தும் விட்டேன் - உண்மையே! மாலையில் சிற்றுண்டியில் கலந்துக் கொண்டு, நடனமாடி, பின், இரவு நேர விருந்துக்கு உணவகம் சென்றுள்ளனர்.''

''அவர் பெண்..?''

''யார்..? சீமான் எட்ஜ்வேரின் மகளா? அவளும் நேற்று மாலை முழுவதும் வீட்டிலில்லை. எல்லோரும் மாளிகையில் இல்லாமல் வேறெங்கோ தானிருந்திருக்காங்க, திரு பொய்ரெட்..! கார்த்யூ எனும் குடும்பத்தோடு, இந்த சீமானின் மகளும் வெளியேறி, வேறெங்கோ நடனக் காட்சியைக் கண்டு களித்துவிட்டு, விருந்து சாப்பிட்டு மகிழ்ந்திருக்கா. பிறகு அவங்களாலேயே மாளிகையில் கொண்டு வந்து இறக்கி விடப்பட்டிருக்கா. இரவு பதினொன்றே முக்காலுக்கு திரும்பியிருக்கா. எனவே அவளும் நம் சந்தேகப் பட்டியலிலிருந்து விலக்கப்படுகிறாள். காரியதரிசி கரோல், நல்ல இங்கிதமான பெண். சாமர்த்தியமும் திறமையும் மிகுந்த கண்ணியமான பெண். பிறகு அந்த பட்லர். அவன் பின்னால் அலைந்து நமக்கொன்றும் ஆகப் போவதில்லை. ஆயினும் சந்தேகத்துக்கிடங் கொடுக்கிற போக்கில் தான் அவன் நடந்துக் கொள்வதாய் என் மனம் கூறுது. சீமான் எட்ஜ்வேரின் ஜாகையில், அவன் பணியில் சேர்ந்த விதம் கூட சரியில்லை எனப் பேச்சு - அது என்னனு தெரியலே. அவனுக்குப் பின்னால் ஓர் ஆள் போட்டிருக்கிறேன், இருந்தாலும், சீமானின் கொலைக்கான இலக்கெல்லாம் அவனிடம் துளியும் தென்படவில்லை.''

''இவை தவிர புதிதாய் எந்த உண்மையும் வெளிச்சத்துக்கு வரலையா?'' என்று கேட்டான் பொய்ரெட், சிறு ஆதங்கத்தோடு.

''ஒன்றிரண்டு புலப்பட்டுள்ளன. அவை உதவுமா உதவாதா என்றெல்லாம் இப்பொழுதே சொல்ல முடியாது. சீமான் எட்ஜ்வேர் மாளிகையின் பிரதானக் கதவுச் சாவி காணாமல் போயுள்ளது.''

''ஆமாமாம்.''

''நான் குறிப்பிட்டது மாதிரி, இது அதியற்புதமாய் விளக்குப் போட்டு உதவலாம் - இல்லை - ஈரப் பட்டாசு போல பிசுபிசுத்தும் போய் விடலாம். பொறுத்திருந்து தான் பார்க்கணும். என் மூளைக்கு நல்ல வேலை தரும் முக்கிய அம்சம் இதுதான்: நேற்று சீமான் எட்ஜ்வேர், காசோலை மூலமாகப் பணம் எடுத்திருக்கார். ரொம்ப அதிகமான பணமில்லை - வெறும் நூறு பவுண்ட் தான். இதற்கு இணையான பிரெஞ்சு செலவாணியா எடுத்துள்ளார் - பாரீஸுக்குச் செல்வதால் இருக்கலாம். அந்தப் பணம் காணாமல் போயுள்ளது.''

''இதை உங்களுக்குச் சொன்னது யார்?''

''மிஸ் கரோல். அவர் தான், பாங்க் வரை போய், காசோலையைப் பணமாக்கி வந்திருக்கார். இதை என்னிடம் சொன்னார். அந்தப் பணத்தைக் கேட்டேன். அப்போதுதான் அது காணாமல் போயிருக்கும் விஷயமே தெரிய வந்தது.''

''நேற்று சாயங்காலம் அது எங்கு வைக்கப்பட்டிருந்ததாம்?''

''மிஸ் கரோலுக்கு இதுகுறித்தும் தெரியலே. மூன்றரை மணி பாங்கில் கொண்டு வந்திருந்த பணத்தை சீமான் எட்ஜ்வேரிடம் ஒப்படைத்திருக்கிறார் கரோல். வங்கியில் வைத்துத் தரப்பட்ட கவரோடய தான் கொடுத்திருக்கார். அப்போது சீமான் வழக்கம் போல் நூலகத்தில் இருந்திருக்கிறார். அதைப் பெற்றுக் கொண்ட சீமான் எட்ஜ்வேர், தனது மேஜையின் ஒரு தட்டில் அப்பணத்தை வைத்து மூடியிருக்கார்.''

''நிச்சயமா இது நிறைய யோசிக்க வெக்குது, ஜேப்...! சிக்கல் நிறைந்த விஷயமிது, தெரியுமோ...!''

''இப்போ சீமான் கழுத்தில் நடந்தேறிய கசாப்பு வேலையைப் பற்றி...!'''

''சொல்லுங்கள், ஜேப்...!''

''டாக்டரைப் போய்ப் பார்த்து வந்தேன். சாதாரண பேனா கத்தியால் கொலை நிகழவில்லைங்கிறார் அவர். அது போன்றது தானாம் - ஆனால் முழுக்க முழுக்க வேறு விதமாக வடிவமைக்கப்பட்ட கத்தியாம். கற்பனைக்கெட்டாத கூர்மை கொண்டிருந்த கத்தியாம் அது.''

''க்ஷவரக் கத்தி?''

''கிடையாது, திரு பொய்ரெட். அதைவிட சிறியதாம்.''

இப்பொழுது பொய்ரெட் சற்றே இருப்புக் கொள்ளாமல் தவிப்பானான்.

''புது சீமான் மார்ஷ், தான் நல்ல நகைச்சுவையாய்ப் பேசுவதாய் எல்லோரும் சொல்லணும்னு எதிர்பார்ப்பவராய் தெரியுது'' என்று குறிப்பிட்ட ஜேப், ''தன்னைக் கொலைகாரன்னு சந்தேகப்படுவதில் விறுவிறுப்பு இருக்கு என்றார்! நாம் அவரை சந்தேகப்படுகிறோம் என்று வேறு ஸ்திரமாய் சொல்லிச் சிரிக்கிறார். கோமாளி'' என்றார்.

''அதுதான் அவரது புத்திசாலித்தனம்...!''

''குற்ற உணர்வாய்க் கூட இருக்கலாம்..! அவருடைய பெரியப்பாவின் மரணம் அவருக்கோர் ஆறுதலாய் அமைந்துள்ளது - மீண்டும் மாளிகைக்குள் வந்துவிட்டாரே..!''

''இதற்கு முன் அவர் எங்கு வசித்து வந்தாராம்?''

''செயின்ட் ஜார்ஜ் சாலை, மார்ட்டீன் தெருவில். ஏகமாய் ஒண்டுக் குடித்தனங்கள். தாராளமாய் புழங்கும் வாய்ப்புகளற்ற குடியிருப்பு. தொடர்ச்சியாய் ஐந்து நிமிடம் சேர்ந்தாற் போல் நிற்க முடியாதபடி ஒவ்வொரு சதுரத்துக்கும் ஒரு வீடு!''

''முகவரியை எழுதிக்கோ, ஹேஸ்டிங்ஸ்.''

குறித்துக் கொண்டேனே ஒழிய, வியந்தேன். தற்சமயம் மார்ஷ் மாளிகைக்கு வந்துவிட்ட பிறகு, அந்தப் பழைய முகவரியெல்லாம் தேவையற்றது என்பது என் எண்ணம்.

இப்பொழுது கிளம்ப எழுந்துக் கொண்ட ஜேப், ''என்னைப் பொறுத்தவரை, அந்த ஆடம்ஸ் பெண் தான் கொன்றிருக்கிறாள். அவரிடம் இலக்குத் தென்படாமலிருக்கலாம் - ஆனா கொஞ்சம் கடினமாய் மெனக்கெட்டு துலக்கினால், புதுப்புது உண்மைகள் புலரும்!''

''தீவிர இலக்குக் கொண்டு இன்னும் ஓர் ஆள் உலவிக் கொண்டிருக் கிறார் - அவர் மீது நீங்க சிந்தனையையே செலுத்தலே'' என்று குறித்துக் காட்டினான் பொய்ரெட்.

''யாரது, திரு பொய்ரெட்?''

''சீமான் எட்ஜ்வேரின் மனைவியை மணமுடிக்க உள்ளதாய் பேசப்படும் ஆள் - மெர்ட்டான் மாகாணத்து இளைய பிரபுவைச் சொல்கிறேன்.''

''ஆமாம்'' என சிந்தனையாய் குறிப்பிட்டுக் கொண்ட ஜேப், ''ஆமாம்...! அவரிடம் கொலைக்கான தீவிர இலக்கு நிச்சயமாய் உள்ளது'' என்றார். ''ஆனா, அத்தனை உயர் பதவியிலிருக்கும் ஒரு நபர் நேரடியாய் கொலையில் இறங்குவாரா என்பது சந்தேகமே! மேலும் அவர் பாரீஸில் அல்லவா இருக்கிறார்...!''

''எனில், அவரை நீங்க முக்கியக் குற்றவாளியா வகைப்படுத்த வில்லையா?''

''ம்...'' என சிறு ராகமாய் குறிப்பிட்ட ஜேப், ''நீங்கள் வகைப்படுத்தியிருக்கீங்களா?'' என திருப்பிக் கேட்டார்.

பொய்ரெட் கேட்ட கேள்விக்கு ஆமாம் இல்லை என எந்தப் பதிலும் தராது, மேற்கூறிய அசட்டுக் கேள்வியை சிறிதாய் சிரித்தபடி கேட்ட ஜேப், அப்படியே வெளியேறினார்.

அத்தியாயம் - 17

# பட்லர் — சீமான் எஜமானர் இல்லத்துப் பணியாளர்

தொடர்ந்த மறுநாள், எங்களுக்கு வேலை வெட்டி இல்லாத ஓய்வு நாளாய் புலர, இதற்கு எதிர்மாறாய் அமைந்திட்டது ஜேப்'புக்கு! காலை தேநீர் வேளையில் எங்களைப் பார்த்துப் போக ஒரு நடை வந்திருந்த இன்ஸ்பெக்டர் ஜேப், முகமெல்லாம் சிவந்துத் துடிக்கும் மிகக் கடுமையான கோபத்தில் இருந்தார் - ''என்னைப் பேடியாக்கிட்டான் அந்த நாய்'' என்றார் வந்தவுடனேயே.

''என்ன பைத்தியக்காரத்தனமான பேச்சு இது'' என்றான் பொய்ரெட் ஆறுதலாய். ''நீங்களாவது பேடியாவது..!''

''ஆமாம். நான் பேடிதான். அந்த நாசமாய் போகிற பட்லரை... இதோ..'' என தன் இரு கைகளையும் எங்கள் பக்கமாய் நீட்டி, பத்து விரல்களையும் விரித்து முன்னும் பின்னும் திருப்பித் திருப்பிக் காட்டி, ''... இதோ இந்தப் பத்து விரல்களின் இடுக்குகள் வழியே நழுவ விட்டுட்டேன்'' என்றார்.

''என்ன..? அவனைக் காணலையா?''

''ஆமாம். நாய் மகன் - (என்றும், மேலும் சில அவமரியாதையான வார்த்தைகளையும் இட்டு பட்லரை வைத ஜேப்) - என்னை அந்தரத்துல தொங்க விட்டு ஓடியே விட்டான். இதில் என்னை செருப்பாலேயே அடித்துக் கொள்ள வைப்பது எது தெரியுமா... அவனைக் கொஞ்சமும் நான் சந்தேகப்படாமல் விட்டு வைத்தது தான்! மேலதிகாரிகளை பிரிந்து என்னால் பார்க்க முடியலே.''

''அமைதி, அமைதி. என்ன செய்வது! பார்ப்போம்! முதலில் தேவை, அமைதி!''

''ஆமாமாம் - உட்கார்ந்த இடத்திலிருந்து அமைதி அமைதி என வெள்ளைக் கைக்குட்டையாய் வக்கணையாய் கையை ஆட்டுவது சுலபம்தான்! யார் அங்கு காவல்துறை தலைமையகத்தில் கமிஷனரிடம் பாட்டு வாங்குவது! ஊஃப்... பேடி என்று விட்டார் என்னை! இதுபோல பேயறைந்தாற் போல் நூறு பேருக்கு முன்னால் விமர்சிக்கப் பட்டிருந்தால், நீங்க அமைதியாய் இருப்பீங்களா..! இதேபோல முன்பும் சில வழக்குகளில் தலைமறைவாகிப் பின் வந்தவன் தானாம் அந்த நாய்..!''

ஜேப் வழுக்கை விழுந்திருந்த தன் முன்தலை முழுதும் முளைத்திருந்த வியர்வை முத்துக்களைப் புறங்கையால் வழித்து விட்டுக் கொண்டார். உலுக்கப்பட்டவராய் தளர்ந்துப் போயிருந்தார். மேற்கூறியவாறு ஜேப் கதறிக் கொண்டிருந்தபோது, கோழி ஒன்று முட்டையிடும் போது வலியால் முனகுவதை நினைவூட்டுவது போல், பரிதாப ஓசைகள் சில எழுப்பியபடியிருந்தான் பொய்ரெட்! நம்பிக்கையிழந்துப் போயிருந்த ஜேப்'புக்கு முன்னால், ஒரு பெரிய கண்ணாடிக் கோப்பை முழுவதும் உயர் ரக மதுவையும் அதில் கொஞ்சம் சோடாவையும் கலந்து வைத்தேன்.

''நன்றியப்பா'' என்றார். ''இதுதான் எனக்கு இப்போதுள்ள ஒரே ஆறுதல்.''

குடித்த சில நொடிகளுக்குப் பிறகு சிறிது அதிர்வு அடங்கியவராய் பேசினார்: ''அந்த பட்லர் ஓடி மறைந்து விட்ட இப்பொழுது கூட, அவன்தான் கொலை செய்திருப்பான்னு நான் நம்பலே. கொலை விசாரணை முடுக்கி விடப்பட்டிருக்கும் சூழ்நிலையில், கொலை யுண்டவரின் பிரத்யேக வேலைக்காரன் தலைமறைவாவது தவறு என்றாலும், அதற்கு வேறு காரணங்களும் இருக்கலாம். எப்படி யானாலும், அவனைப் பிடிக்காமல் விட மாட்டேன், பார்த்துக்கிட்டே இருங்கள்...! கண்ணியமா செயல்படாத சில மதிப்பற்ற நைட் க்ளப்கள்ல நேரடி தொடர்பு கொண்டிருந்திருக்கிறான் - ஆபாசமான அசிங்கங்களில் ஈடுபட்டிருக்கிறான் - இதெல்லாம் இப்போது தெரிய வருது.''

''ஒழியட்டும்! இவை அந்த பட்லருடைய தனிப்பட்ட ஆசாபாசங்கள்! இதெல்லாம் அவனை ஒரு கொலைகாரனாகக் காட்ட வேண்டிய அவசியமில்லையே!''

''நிச்சயமா! இரவு விடுதிகளுக்கு உதவும் வகையில் ஏதோ தொழில் செய்துக் கொண்டு அவன் இயங்கியிருக்கலாம்... இது, அவனை

கொலைகாரன் என ஆக்கும் அவசியமில்லை தான்!'' என்ற ஜேப், தனது பழைய பல்லவியான, ''சந்தேகத்துக்கிடமின்றி, கொலையாளி அந்த ஆடம்ஸ் பெண் தான்'' என்று விட்டுத் தொடர்ந்தார்: ''இருந்தாலும் எனது இந்த ஊகத்தை நிரூபிக்கத் தான் இன்னும் ஒரு சாட்சியமும் அகப்படலையே..! ச்சே..! இன்று ஆடம்ஸ் குடியிருப்பு முழுவதையும், என் ஆட்களை விட்டுக் கவிழ்த்துப் பார்த்துட்டேன். உதவும் படியாய் குண்டூசி முனை கூட கிடைக்கலே. தந்திரமும் சூட்சும புத்தியும் மிகுந்த ஜாக்கிரதையான பெண் தான் அந்த ஆடம்ஸ் பெண்! பணப் பட்டுவாடா குறித்த சில கடிதங்களைத் தவிர வேறு எந்தக் கடிதத்தையும் அவ அங்கு விட்டு வெக்கலே. எந்த வங்கியிலிருந்து வந்த கடிதங்கள் அவை என்பது வரை அழகாக முகவரி எழுதப்பட்டு பாதுகாக்கப்பட்டிருக்கும் கடிதங்கள் அவை. வாஷிங்டனில் வசிக்கும் அவரது சகோதரியிடமிருந்து வந்திருந்த சிற்சில கடிதங்கள் - அவை, வழவழா கொழ கொழா என இல்லாமல் நெற்றியிலடித்தாற் போல் எழுதப்பட்டிருந்த முதல் ரக கடிதங்கள். பழைய காலத்திய, அதிக விலைமதிப்பற்ற சில நகைகள். தினசரி நடவடிக்கைகளைப் பதிந்து வைக்கும் டைரியெழுதும் பழக்கம் அவரிடம் இல்லை. அவருடைய வங்கிக் கணக்கு புத்தகத்தாலும் செக் புத்தகத்தாலும் எந்த உதவியும் இல்லே. இதையெல்லாம் கூட விட்டு வைக்கலாம் - ஆனா, அந்த ஆடம்ஸ் பொண்ணுக்கு தனிப்பட்ட அபிலாஷையினாலான வாழ்க்கையே இல்லை என்பதுதான் ஆச்சரியமா இருக்கு!''

''யாருடனும் பழகாத கலகலப்பற்ற பெண் அவள்'' என்று குறிப்புக் கொடுத்தான் பொய்ரெட். ''இப்படிப்பட்ட நபர்களிடமிருந்து நமக்கு எந்த உதவியும் கிடைக்காதுதான்.''

''ஆடம்ஸுக்கு ஒத்தாசையாயிருந்த பெண்ணிடமும் பேசிப் பார்த்தேன். பிரயோஜனமில்லை. ஒரு தொப்பிக் கடை வைத்து நடத்திக் கொண்டிருக்கும் பெண்ணின் கடைக்குச் சென்று அவளிடமும் பேசி விட்டு வந்தேன். ஆடம்ஸின் நெருக்கமான தோழியாம் அவள்.''

''ஆஹ்..! செல்வி ட்ரைவர் பற்றி என்ன நினைக்கிறீங்க..?''

''சமயோஜிதம் மிக்க விழிப்பான பெண்ணாய் தெரியறா... அவளாலும் பிரயோஜனம் எதுவும் நேர்ந்து விடவில்லை! எதிர்பார்த்தது தான்! காணாமல் போன எத்தனை வழக்குகளை நான் கையாண்டிருப்பேன். அப்பெண்களின் உறவினர்களையும் நண்பர்களையும் விசாரிக்கும் போது பாடப்படும் நேர்த்திசையைத் தான் இவர்களும்

பாடினார்கள் - 'புத்திசாலித்தனமும் அன்பும் ஒருங்கே நிறைந்த கண்ணியமான பெண். எந்தத் தவறான ஆண் தொடர்பும் அற்ற மரியாதைக்குரிய பெண்!' இதை நான் ஒப்புக் கொள்ளவேயியலாது, திரு பொய்ரெட். ஆண் தொடர்பு இல்லை என்பது ஒவ்வாத கருத்து. பெண்களுக்கு ஆண் நட்பு இருக்கும் - உறுதி. இல்லைனா, அந்தப் பெண்ணிடம் ஏதோ குறை என்றுதான் பொருள். இந்த உறவினர்களும் நண்பர்களும், அவளுக்குக் கெட்டப் பெயர் வந்துவிடக் கூடாதே என்பதற்காக மறைத்துக் கூறும் இதுபோன்ற தகவல்கள், நம்மை என்னமாய் சீரழிக்கின்றன..!''

மூச்சு வாங்கக் கொஞ்ச நேரம் நிறுத்திய ஜேப், நான் மீண்டும் நிரப்பியிருந்த மதுக் கோப்பையை, ''நன்றி கேப்டன் ஹேஸ்டிங்ஸ்'' என்றபடி கையிலெடுத்துக் கொண்டு, ''எங்கு நிறுத்தினேன்?'' எனும் சிறு நினைவு படுத்தலூடே தொடர்ந்தார்:

''அவருக்கு ஆண் துணை இருந்திருக்க வேண்டும் - இருந்திருக்கு. இந்தக் கோணத்தில் விரட்டி விரட்டி நாம் துப்புத் தேட வேண்டும். ஒரு டஜன் இளைஞர்களுடன் இரவு உணவுக்குச் செல்வது, இரவு நடனத்துக்குப் போவது என்றுதான் அவரும் வாழ்ந்திருக்கிறார் - இதைக் குறிச்சுக்கோங்க, திரு பொய்ரெட்! ஆனா இவனுக்கு அவன் இளைத்தவனில்லை என்பது போல ஒருத்தனாலும் நமக்குப் பலனில்லை. தற்போதைய சீமான், நடிகர் மார்ட்டீன் என்று பட்டியல் நீளுகிறது. ஆனா குறிப்பிட்டு சொல்லும்படிதான் ஒரு விஷயமும் குதிரலே. ஆமாம், போனோம், சாப்பிட்டோம், வந்தோம்... என்கின்றனர். என்ன செய்ய! அவர் தனியாகவே நின்று மோதி எட்ஜ்வேரை வீழ்த்தியிருக்கிறார் திரு பொய்ரெட்! ஆகவே அவருக்கும் கொலையுண்ட சீமானுக்கும் இடையே நிலவிய தொடர்பு பற்றி ஆராயத் துவங்கியுள்ளேன். அப்படி ஒன்று இருந்தாக வேண்டும். இதற்காக நான் பாரீஸுக்குச் செல்லணும்னு நினைக்கிறேன். அந்த சிறு தங்க நிறத்தாலான பெட்டியில் பாரீஸ் எனப் பொறிக்கப்பட்டுள்ளது - கடந்த வருட குளிர் காலத்தில், சீமான் எட்ஜ்வேர், கலைப் பொருள் கண்காட்சி என்று சொல்லிக் கொண்டு, பலமுறை பாரீஸ் சென்று வந்துள்ளதாய் காரியதரிசி கரோல் சொன்னார். இதனால் உண்மையிலேயே அங்கு அப்படியெல்லாம் கலைக் கண்காட்சிகள் நடந்ததா என்றறிய நான் பாரீஸுக்குச் சென்று திரும்பத் தான் வேண்டும். இதுக்கு நடுவுல, நாளை, நீதிமன்ற விசாரணை

ஆரம்பமாகின்றது. ஒத்தி வைப்பார்கள். இருந்தாலும், நான் ஆஜராக வேண்டுமே. எனவே, நாளை பகல் விமானம் பிடித்து பாரீஸ் கிளம்ப உத்தேசம்.''

''உடல் முழுதும் உங்களுக்கு சக்தி, ஜேப். இதைக் காணும்போது எனக்கு வியப்பாயுள்ளது.''

''ஆனா நீங்க மெதுவாய் சோம்பேறியாகி வரீங்க. இப்படிச் சொல்லுவதற்கு மன்னிக்க! இங்கு வெறுமனே உட்கார்ந்துக்கிட்டு சிந்திக்கிறீங்க! அதனால என்ன பலன்! பூஜ்யம்! விஷயம் நாடி செல்லணும், திரு. பொய்ரெட் - அவை நம்மை தேடி வராது!''

அப்போது, வேலைக்காரன் கதவு திறந்துக் கொண்டு உள்ளே வந்தான்.

''திரு ப்ரையன் மார்ட்டீன், ஸார்! பார்க்க முடியுமா, அல்லது பிறகு வரச் சொல்லட்டுமா?''

''அடச்சே! என்ன நடக்குது இங்கு?' என்று எழுந்துக் கொண்டு விட்டார் ஜேப். ''சினிமா நடிகர்களெல்லாம் ஆலோசிக்க வரும் ஜோசியக்காரனாகிட்டீங்க, நீங்க'' என்றார் வெறுப்பாய்.

நமுட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டு தன் தோள்களைக் குலுக்கிக் காட்டினான் பொய்ரெட். ஜேப் மெலிதாய் சிரித்தபடி கேட்டார்: ''இவனுங்க வந்துக் கொட்டும் பணத்தால் நீங்க கோடீஸ்வரனாகி யிருக்க வேண்டுமே பொய்ரெட்! பணத்தையெல்லாம் என்ன செய்றீங்க? மூட்டை மூட்டையாய்...''

இருவரும் கலகலவென சிரித்துக் கொண்டனர். அப்போது பொய்ரெட் கேட்டான்: ''ஏகமான பணம் பற்றிப் பேசும்போது ஒண்ணு நினைவுக்கு வருது, திரு ஜேப்! தனது சொத்து முழுவதையும் காலமாகி விட்ட சீமான் எட்ஜ்வேர் என்ன செய்திருக்கிறார்?''

''விற்க முடியாத அசையா சொத்துக்கள் அனைத்தையும் தன் மகள் ஜெரால்டினுக்கு எழுதியுள்ளார். செல்வி கரோலுக்கு கணிசமான ஒரு தொகை, இதுதான் உயில். சிக்கலில்லாத எளிமையான உயில்.''

''இது எப்போது எழுதப்பட்டது?''

''எட்ஜ்வேரின் மனைவி அவரை விட்டு விட்டு ஓடியதுமே எழுதி வைத்திருக்கிறார். இரு வருடங்களுக்கு முன்பு. இந்த உயிலில், தனது மனைவிக்கு சல்லிக் காசு கூட கிடையாது என்பதை ஆணித்தரமாய் தெரிவிக்கப்படுத்துகிறார் - அதைக் கவனியுங்கள்.''

''வஞ்சகமும் பழிவாங்கும் மனமும் மட்டுமே கொண்டு உலவியுள்ள மனிதன்'' - தனக்குள்ளேயே முனகிக் கொண்டான் பொய்ரெட்.

''பற்பல வருடங்களாக'' என்று பொய்ரெட்டின் முனகலுக்கு வலு சேர்த்துவிட்டுக் கிளம்பிப் போனார் ஜேப்.

ப்ரையன் மார்ட்டீன் நுழைந்தார். மிக அழகான உடையாலும் ஒப்பனையாலும் அலங்கரித்திருந்த மார்ட்டீன், இளமை வெடித்து எழும் சுந்தர சொரூபனாய் தோன்றினார். பிரதிபலித்த ஆண் கவர்ச்சியையும் மீறி அவரிடம் சோர்வும் சந்தோஷமற்ற மனோ நிலையும் தெரிந்தன.

''மறுநாளே வருவதாய்ச் சொல்லிட்டு, சிறிது நாட்களாக வராமலே வைத்து விட்டேன், மிஸ்டர் பொய்ரெட்'' என்று மன்னிப்புக் கோரும் தொனியில் சொன்னார், இளம் நடிகர். ''எங்க சமாசாரத்தில் உங்களைப் புகுத்துவதில் அவளுக்கு கொஞ்சமும் இஷ்டமில்லை, திருமிகு பொய்ரெட். கேட்க மாட்டேன் என்கிறாள். பிடிவாதமாய் நிற்கிறாள். எனவே, அவ்விஷயத்தை நாம் அப்படியே விட்டு விட வேண்டியது தான். உங்கள் பொன்னான நேரத்தை அன்றும் இன்றும், இவ்விஷயம் கருதி வீணாக்கி விட்டதற்காக மிக... மிக வருந்துகிறேன்.''

''அப்படியா!''

''ஆமாம். சம்பந்தப்பட்ட அப்பெண்ணைப் போய்ப் பார்த்தேன். விவாதித்தேன். கெஞ்சினேன். மன்றாடினேன். அனைத்தும் வீண்.''

''நான் எதிர்பார்த்தேனே!''

மார்ட்டீன் சில நொடிகள் பின்னுக்குத் தள்ளப்பட்டதாய் அதிர்ந்துப் போனார். ''எதிர்பார்த்தீர்களா? எதை?''

''இதை! நீங்க இப்போ சொன்னீங்களே... இதை! உங்க தோழியைக் கலந்தாலோசித்து விட்டுப் பிறகு சொல்வதாய் நீங்கள் விடை பெற்ற பொழுதே எல்லாம் 'திட்டமிட்டபடித்' தான் நடக்கும்னு எனக்குத் தெரியும், திரு மார்ட்டீன்!''

''எனில் இதற்கு ஏதாவது விளக்கம் வெச்சிருக்கீங்களா?''

''ஒரு துப்பறியும் நிபுணரிடம், தான் சொல்லும் ஒவ்வொரு வார்த்தைகளுக்கும், அட்சரத்துக்கும், கணக்கிட்டுப் பகுத்தாராய்ந்து ஒரு விளக்கம் இருக்கும், நண்பா! இது தான் துப்பறிதலே ஒழிய, சம்பவ இடத்திலிருந்து எடுக்கும் பொருட்களை வைத்து ஆராய்ந்துக் கொண்டு வெறுமனே நேரத்தைக் கடத்துவது அல்ல! சரியா! எனினும் முழுதாய்

விளக்கம் கண்டு விட்டேன்னு சொல்லிட முடியாது. எனக்குள் ஓர் எண்ணம் - ஓர் ஊகம் உதித்துள்ளது. இதுதான் ஆரம்பம், முதல் கட்டம்.''

''இரண்டாவது கட்டம்?''

''முதல் கட்டத்துல ஓர் எண்ணம் ஊகித்து முடிவாகிறது இல்லையா அது சரியாக வேண்டும். இதோ, இப்போ, உங்கள் சமாசாரத்தில் சரியென ஆகி விட்டதைப் போல! எனில் அந்த சமாச்சாரம் குறித்த என் கணிப்புகள் சரிதான்; எனக்குத் தெரியும் என்றாகிறது. இதுதான் இரண்டாவது கட்டம் - கொஞ்சம் மூளையைக் கசக்கிக் கொண்டால் போதும், இளைய கதாநாயகனே! எந்த ரகசியங்களையும் வெளியே கொண்டு வந்துவிடலாம்.''

''உங்களது முதல் கட்ட ஊகம் வெற்றி பெற்று விட்டதால், இரண்டாவது கட்ட முழு விளக்கம் என்னன்னு என்கிட்டே சொல்ல முடியுமா?''

மறுத்துத் தலையசைத்தான் பொய்ரெட். ''துப்பறியும் அதிகாரி, முக்கிய முடிவுகளைப் பேசுவதில்லை. இது விதி.''

''கோடிட்டாவது காட்டக் கூடாதா?''

''எதுக்காக?''

இக் கேள்வியை, அமைதியும் மற்றவரைப் புண்படுத்தும் குணமும் அற்ற பொய்ரெட்டிடமிருந்து மார்ட்டீன் எதிர்பார்த்திருக்கவே மாட்டார். சோர்ந்துப் போனார்.

''ஒன்று மட்டும் சொல்ல முடியும்'' என்று சோர்ந்துப் போன மார்ட்டீனின் முகம் சற்றே ஒளிரப் பேசிய பொய்ரெட், ''எனது முழு விளக்கத்தையும் நீங்க அந்த தங்கப்பல் கதையை சொல்லி முடித்த கணத்தில் எழுதி முடிச்சுட்டேன்'' என்றான்.

ப்ரையன் மார்ட்டீன் கண்ணகல பொய்ரெட்டைப் பார்த்தார். ''என்னை பயங்கரமாய் பயமுறுத்தறீங்க'' என்று அறிவித்தே விட்டார் மார்ட்டீன். ''எதை என்னிடமிருந்து எதிர்பார்த்து இப்படிப் பொடி வைத்துப் பேசி என்னை விரட்டறீங்கனு எனக்குத் தெரியவேயில்லை. உங்கள் அணுகுமுறையிலிருந்து சிறு குறிப்புக் கூட எனக்குக் கிடைக்கலே.''

இதற்கும் மறுத்துத் தலையசைத்தான் பொய்ரெட். ''விட்டுடுவோம். வேறு ஏதேனும் பேசுவோம்'' என்றான் புன்முறுவியபடி.

''சரி, அதுக்கு முன்னால - உங்களுக்கு நான் தரவேண்டிய கட்டணம்? எனக்கு நீங்க சொல்லியாக வேண்டும்.''

''மன்னிக்கவும், மார்ட்டீன். உங்களுக்கு உபயோகமாய் நான் ஒன்றுமே செய்யலே.''

''உங்களின் பொன்னான நேரத்தை நான் உபயோகித்துள்ளேனே! அதற்கு?''

''ஒரு வழக்கு என்னைக் கவர்ந்து இழுத்து விட்டால், அதன் உண்மையை நாடும் பொருட்டு, நான் சம்பளம் வாங்குவதில்லை. உங்களின் சமாச்சாரம் என்னை மிகக் கவர்ந்த ஒன்று.''

''நன்றி'' என்றார் மார்ட்டீன்.

''வாருங்கள் மார்ட்டீன்... வேறு எதையாவது பேசுவோம்.''

''கீழே இறங்கிப் போய்க் கொண்டிருப்பது, ஸ்காட்லாண்ட் போலீஸ் தானே?''

''ஆமாம். இன்ஸ்பெக்டர் ஜேக்கப் என்கிற ஜேப். மறந்துட்டீங்களா!''

''படிக்கட்டுகளில் விளக்கு ஒளி மிக மங்கலாக இருந்ததால் சிறு குழப்பம். இவர், ஒரு முறை என்னை நாடி வந்து, அதிகமா போதை மருந்து உட்கொண்டு இறந்துப் போன நடிகை கர்லோட்டா ஆடம்ஸ் பற்றிய சங்கதிகளை விசாரித்துச் சென்றார்.''

''ஓ! செல்வி ஆடம்ஸை உங்களுக்கு நன்றாய் தெரியுமா?''

''அப்படியெல்லாம் இல்லை. அமெரிக்காவில் சிறு பிள்ளையாய் இருந்த போது பழக்கம். இங்கு ஓரிரு முறை அவரை சந்திச்சிருக்கேன். அவருடைய பங்களிப்பை ஆழமாய் பார்க்கும் வாய்ப்புக் கிட்டிய தில்லை. அவருடைய மரணச் செய்தி என்னைத் துயரப்படுத்தியது.''

''அவரை விரும்பினீங்களா?''

''ஆமாம். அவர் ஓர் அசாதாரணப் பிறவி. யார் வேண்டுமானாலும் அணுகிப் பழகத் தகுந்தவர்.''

''கருணையோடு பேசும் சுபாவம் - ஆமாம் மார்ட்டீன்... நானும் இக்குணத்தினை அவரிடம் அதிகமாய் பார்த்திருக்கிறேன்.''

''தற்கொலையாய் இருக்கலாம்னு நினைக்கிறாங்க, இல்லையா? இதை உறுதி செய்ய எந்தத் துப்பும் கிடைத்து, அது இன்ஸ்பெக்டர் ஜேப்புக்கு உதவும்னு எனக்குத் தோணலே. கர்லோட்டா ஆடம்ஸ் மிக தனிமையானவர் - கலகலப்பற்றவர் - தன் சம்பந்தப்பட்ட விஷயங்களை வெளியில் சொல்லாதவர்.''

''அது தற்கொலையாயிருக்கும்னு என நான் நினைக்கவில்லை.''

''ஒரு விபத்தாய் தானிருக்க முடியும். உங்கள் கருத்தை நானும் ஆமோதிக்கிறேன், திருமிகு பொய்ரெட்.''

இப்பொழுது சிறு இடைவேளை விளைந்தது. ஒருவரும் பேசவில்லை. பிறகு சிறு சிரிப்பினூடே, ''சீமோன் எட்ஜ்வேரின் மரணம் யாரோ ஒருவர் செய்த சதி வேலையாயிருக்குமோனு திசை திரும்பிக்கிட்டிருக்கு... இல்லை?'' எனக் கேட்டான் பொய்ரெட்.

''ஆமாமாம்... எங்கும் இதே பேச்சு. உங்களுக்குத் தெரியுமா - அல்லது போலீஸுக்காவது ஏதேனும் தெரிய வந்திருக்கா - யார் தான் கொன்றிருப்பார்கள்னு? இப்போ ஜானே வில்கின்ஸன் முழுவதுமாக வழக்கிலிருந்து தப்பிய பிறகு, எப்படித்தான் இது முடியப் போகுது?''

''போலீஸுக்கு ஆழமான சந்தேகம் உள்ளது.''

ப்ரையன் மார்ட்டீன் விறுவிறுப்பானார். ''உண்மையாவா? யார் மீது?''

''பட்லர் திடுமென காணாமல் போய்ட்டான். உங்களுக்கே இப்போ புரிஞ்சிருக்குமே!''

''பட்லர்! மகா அழகன்! ஆண்களே மையல் கொள்ளத் துடிக்கும் அழகு!''

''உங்களைப் போலவே!''

பொட்டிலறைந்தாற் போலானேன் நான். முதல் முதலில் பட்லரைப் பார்த்தக் கணத்தில், அம்முகம், எங்கோ பார்த்த முகமாய் ஏன் எனக்குப் புரிந்தது என்பது, இப்பொழுது தெளிவாயிற்று.

''நான் கூச்சப்படும் அளவுக்கு என்னைப் புகழ்கிறீர்கள்'' - மார்ட்டீன் வாய் விட்டுச் சிரித்தபடி சொன்னார்.

''ஆனா, உண்மை தானே! எல்லா இளைய யுவதிகளும், கன்னிப் பெண்களும், அலுவலகம் போகும் பெண்களும், வீட்டில் சும்மாயிருக்கும் பெண்களும் என பெண் சமூகமே உங்க பின்னாலே ஓடி வரலே! மார்ட்டீன் என்றால் மன்மதன் என்றாகி விட்டதே!''

''போதும், போதும்... இனி தாங்காது'' - எழுந்துக் கொண்டார் மார்ட்டீன். ''மிக்க நன்றி, திரு பொய்ரெட். உங்களை நான் சில முறை தொந்தரவு செய்ததற்கு மீண்டும் மன்னிப்புக் கேட்டுக்கறேன்.''

எங்களிருவருக்கும் கை குலுக்கல்கள் கொடுத்துக் கிளம்பியவரின் முகத்தில், திடுமென, புதிதாய், குழப்பமும் பயமும் வந்து நிரவியதைக் கவனித்தேன். அவருடைய சோர்வும் அமைதியற்ற மனோநிலையும் சந்தேகத்துக்கிடமின்றி ஊர்ஜிதமாயின.

எனக்குள் பரவிக் கிடந்த ஆவலான எதிர்பார்ப்பினைப் பொய்ரெட்டிடம் கொட்டக் காத்துக் கிடந்தேன். மார்ட்டீன் வெளியேறியதும் கதவு மூடப்பட்டதோ இல்லையோ... நான் தெரிந்துக் கொள்ளத் துடித்ததைக் கொட்டியே விட்டேன். ''ஏய், பொய்ரெட்...! சொல்லு...! மார்ட்டீன் திரும்பி வந்து, சந்தேகத்துக்கிடமாய் அமெரிக்காவில் அவருக்கு நடந்ததாய் சொன்ன விஷயங்களைத் துப்பறிதல் குறித்து, மறுபடியும் ஆரம்பிச்சு உன்னுடன் பேசுவார்னு, நீ எதிர்பார்த்தியா?''

''அப்படித்தானே நான் மார்ட்டீனிடம் சொன்னேன்...! நீயும் கேட்டியே, ஹேஸ்டிங்ஸ்...!''

''எனில்... எனில்...'' வார்த்தை எழாமல் நான் கேட்டேன். நான் கேட்க வந்தது என்ன என்று அறிந்துக் கொண்டு பொய்ரெட் மறு கேள்வி கேட்டான்: ''எனில், அவர் கலந்தாலோசித்து வருவதாய் சொன்ன - நாமறியாத அந்த மர்மப் பெண் யார் என்று - உனக்கு சர்வ நிச்சயமாய் வெளிச்சமாகியிருக்கணும், ஹேஸ்டிங்ஸ்.''

பொய்ரெட் புன்முறுவினான். அப்புன்னகை மாறாமலேயே பின்வருமாறு புதிராய் பேசினான்:

''எனக்கு சிறு அபிப்பிராயம் உள்ளது. அருமை நண்பா! நான் சற்று முன் குறிப்பிட்டது போல, தங்கப்பல் குறித்து பேசப்பட்டதிலிருந்து தான், எனக்குள் இந்த அபிப்ராயம் முளைத்தது. என் அபிப்ராயம் சரி எனும் பட்சத்தில், அந்தப் பெண் யார் என்பது குறித்த என் கணக்கும் - அப்பெண், மார்ட்டீன் என்னிடம் வருவதைத் தடுப்பாள் என்றும், மேலும், ஏன் அவள் அப்படித் தடுப்பாள் என்றும் நான் போட்டிருந்த கணக்குகளும் - மிகச் சரியாய் போகும்...! பார்த்தாயா... என்னிடம் மார்ட்டீன் வருவதை அப்பெண் தடுத்தே விட்டாள்! எனில், என் கணக்கு சரி, சரி, சரி! ஹேஸ்டிங்ஸ் கண்ணா... இந்த சமாச்சாரம் குறித்த முழு உண்மையும் இப்போது எனக்குத் தெரியும்! கடவுள் உனக்குக் கொடுத்துள்ள மூளையைக் கொஞ்சமாய் உபயோகித்தால் கூட போதும்... உனக்கும் சட்டென புரிந்து விடும்! என்ன முழிக்கறே! போடா! நீ இப்படி வீழும் போதெல்லாம், அசட்டையாயிருந்த ஒரு சமயத்தில் இறைவன் உன்னை என்னுடன் சேர்த்து விட்டானோனு தான் நினைக்கத் தோணுது!''

அத்தியாயம் - 18

# இன்னொருவன்

சீமான் எட்ஜ்வேர் கொலை மீதான முதல் நீதிமன்ற விசாரணை குறித்தோ அல்லது கர்லோட்டா ஆடம்ஸின் மரண விசாரணை குறித்தோ இங்கு விலாவாரியாக விவரிக்க நான் முற்படவில்லை. கர்லோட்டா விஷயத்தில், துரதிர்ஷ்டவசமாய் நேர்ந்து விட்ட விபத்து என்று தீர்ப்பாயிற்று. சீமான் எட்ஜ்வேரின் விஷயத்தில் அப்படியாகவில்லை. மாறாக, அவர் கொலையான செய்தி எப்படி அறியப்பட்டது போன்ற விசாரணைகளும், மருத்துவ சாட்சியங்களும் விவாதிக்கப்பட்ட பிறகு, வழக்கு ஒத்திப் போடப்பட்டது. வயிற்றின் மீதான பிரேதப் பரிசோதனை அறிக்கைகளின் படி, சீமான் எட்ஜ்வேரின் துர்மரணம் நிகழ்ந்த நேரம், இரவு சாப்பாடு முடிந்து ஒரு மணி நேரத்திற்குள் என அறிவிக்கப்பட்டது. இதற்குப் பிறகு ஒரு மணி நேரம் வரை நீட்டித்து தப்பறிய வாய்ப்பளிக்கப்பட்டது. இதன்படி துர்மரணம், இரவு பத்திலிருந்து பதினொன்றுக்குள் நிகழ்ந்ததாய், ஆயினும் குறிப்பாய் இரவு பத்தினை ஒட்டியே நிகழ்ந்ததாய் முடிவாயிற்று.

கர்லோட்டா ஆடம்ஸ், ஜானே வில்கின்ஸன் போன்று வேடமிட்டு மாளிகைக்குப் போய் வந்ததாய் நாங்கள் வடிவமைத்திருந்த கோட்பாட்டின் எந்த உண்மையும், கொஞ்சமும் கசிய அனுமதிக்கப்படவில்லை. தேடப்பட்டு வரும் சீமான் எட்ஜ்வேரின் பணியாள் குறித்த அங்க அடையாளங்கள் நிருபர்களுக்கு அளிக்கப்பட்டன; இதனால், பட்லர்தான் இவ்வழக்கில் அவசியமாய் தேடப்படும் குற்றவாளியாய், ஒரு பொது அபிப்பிராயம் உருவாகி நிலைத்தது. அன்றிரவு ஜானே வில்கின்ஸன் வந்து சென்றதாய் பட்லர் குறிப்பிட்டிருந்த கதை, அவனே துணிந்து நிர்மாணித்துக் கட்டி விட்டக் கதையாய் பார்க்கப்பட்டது. காரியதரிசி கரோலின் வலுவான - திடசித்தம் நிறைந்த சாட்சியம் பற்றியும் மூச்சு விடப்படவில்லை. போலீஸால் வெளியிடப்பட்ட

இச்சிறிய தகவல்களின் அடிப்படையில், அனைத்து செய்தித்தாள்களிலும், இவ்விரு மரண விசாரணைகள் குறித்து பத்திகள் இருந்தன - ஆனால், மிகக் குறைந்த உண்மைகளைச் சுமந்து!

இதற்கிடையில், தாமதமேதுமேயின்றி, ஜேப், கருமமே கண்ணாயினார் என, வழக்குகளில் முனைப்பாய் இயங்கிக் கொண்டிருப்பதும் எனக்குத் தெரியும். ஆனால், அசட்டையாய், வீட்டுக்குள்ளேயே அடைபட்டு, பொய்ரெட் கடைப்பிடித்த சுறுசுறுப்பற்ற மனோபாவம் என்னை வெறுக்கடித்தது. துப்பறியும் நிபுணருக்கு கொஞ்சம் வயதாக ஆரம்பித்து விட்டதால் விளையும் பலஹீனம் தானோ இந்த மந்த நடவடிக்கைக்குக் காரணம் என, அடிக்கடி தோன்றும் காரணம், இப்போதும் என்னுள் வெட்டியது. ''பல சிக்கலான வழக்குகளைக் கண நேரத்தில் பைசல் பண்ணிக் காட்டியுள்ள நீ, வயதாவதால் உண்டாகும் அயர்ச்சியைத் தள்ளிப் போட்டுத்தான் தீரணும்'' என நான் குறிப்பிட்டுக் காட்டியதற்கு, அவன் நீடித்த மௌனம் என் வெறுப்பைக் கூட்டவே செய்தது. ''கவனி பொய்ரெட்... இளமையிலிருந்தது போலவே, வீரியமும் திடகாத்திரமும் கொஞ்சமும் குறையாம தான் இப்பவும் இருக்கே'' என்றேன். போஷாக்கான கிளர்ச்சி வார்த்தைகள் அவனுள் உத்வேகத்தை ஏற்படுத்தலாம் எனும் நினைப்பில்! ''எனவே, முதல்ல எழுந்து, வெளியே போய் துப்பறிஞ்சேன்னா, இவ்வழக்கினை, இன்னும் விமரிசையாய் நீ முடிக்கலாம்'' என்றேன்.

அவனோ ''என்னடா ஹேஸ்டிங்ஸ்...! எனக்கென்ன கலியாணத்துக்குப் பெண்ணா பார்க்கிறே? உன் அறிவுரைகள் அப்படித்தான் இருக்கு...!'' என்று சிரித்துவிட்டு, ''இனி... இதோ... இந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்தபடி தான் இந்த வழக்கினை முடிக்கப் போறேன். தேவையான அளவுக்கு நான் வெளியில் அலைந்தாயிற்று'' என்றான்.

''அப்படி முடியாது, பொய்ரெட்.''

''முழுக்க முழுக்க முடியாதுதான்..! ஒப்புக்கிறேன்..! ஆனா வழக்கின் கூறுகள் தெளிவாய் தெரிந்த பிறகு, முடியும் நண்பா!''

''நாம ஒண்ணுமே செய்வது கிடையாது. எல்லாத்தையும் ஜேப் தான் அலைஞ்சு அலைஞ்சு முடிக்கிறார். அதனால்தான் சொல்கிறேன். இப்படியே குத்துக்கல்லா உட்கார்ந்துக்கிட்டு என்னதான் செய்யறே?''

''காத்திருக்கிறேன்.''

''மண்..! எதை எதிர்பார்த்துக் காத்திருக்கே?''

''நான் மனம் நிறையும்படி, என் நிருபர், அதாவது ஜேப், எனக்கு முழுமையா அத்தனை தகவல்களையும் தந்து முடிக்கணும்னு... காத்திருக்கேன்!''

''புரியலே, புரியலே...! என்ன சொல்ல வரே...! ஊஃப்! துப்பறியும் நிபுணர் எனும் அங்கீகரிப்பால், நீ வெறுமனே காலை ஆட்டிக்கிட்டு உட்கார்ந்திருப்பதுல தப்பொண்ணுமில்லே பொய்ரெட்! ஆனா என் நிலைமையைக் கொஞ்சம் நினைச்சுப் பாரு...! ஜேப் இப்படி மாடாய் உழைக்க, எந்த அங்கீகரிப்பில் நானும் காலை ஆட்டிக் கிட்டு உனக்கு சமமா உட்கார்ந்திருப்பது? லஜ்ஜையா இருக்கிறதப்பா!''

''குரைக்கும் நாயை நுழைவாயிலில் கட்டி விட்டு, வாசலில் அரவம் கேட்கும் போதெல்லாம் நாம் ஏன் போய் எட்டி எட்டிப் பார்க்கணும்? உயிர் நண்பா! நான் ஜேப்பைத் தான் குறிப்பிடறேன்! லஜ்ஜையுமில்லை, ஒன்றுமில்லை! நீ புளகாங்கிதமடைந்துப் புகழும் உடல் அலைச்சலினால் கிடைக்கவல்ல தகவல்களை, ஜேப் கொண்டு வந்துக் கொட்டறார். பிறகென்ன! அவர் அதிகாரத்துக்குட்பட்ட பற்பல ஆட்களும் வசதிகளும் அவருக்கு உண்டு... சுலபமாய் அலைகிறார் - எனக்குக் கிடையாதே! என் சக்திக்குட்பட்டு அலைந்தாயிற்று - சீமான் எட்ஜ்வேர், மிஸ் ட்ரைவர், மிஸ் பென்னட், இன்னும் பலர். அமைதியா காத்திரு! வெகு துரிதமாய் இன்னும் பல தகவல்களைச் சுமந்தபடி ஓடி வருவார் ஜேப்... இதில் சந்தேகமேயில்லை.''

அப்படியே ஆயிற்று. தொடர்ச்சியான விசாரணைகளின் விளைவாக, சிறிது சிறிதாக மேம்பட்ட தகவல்கள் கிடைக்கப் பெற்றிருந்தார், இன்ஸ்பெக்டர் ஜேப். மறுநாளே, மலர்ச்சியான முகத்தோடு எங்களைக் காண வந்தார் அவர்.

''மெதுவாத்தான் நகருது'' என்றார். ''எனினும், ஏதோ ஒரு மூலையில் போய் முட்டிக் கொண்டு குழம்பாமல் நம்பிக்கையூட்டும் தளங்களில் தான் போய் நிற்கிறோம்.''

''அப்படினா, வாழ்த்துக்கள் இன்ஸ்பெக்டர். இப்போ நீங்க நிற்கும் நம்பிக்கையூட்டும் தளம் தான் எது?''

''சம்பவ இரவன்று சுமார் ஒன்பது மணியளவில், நல்ல வெண்ணிற அமெரிக்கக் கூந்தல் பெற்ற ஒரு பெண், ஆஸ்டன் ரயில் நிலையத்திலுள்ள பயணிகள் அறையில், ஒரு சிறு பெட்டியை ஒப்படைத்து விட்டுப் போயிருக்கிறாள் என்பதைக் கண்டுபிடிச்சிருக்கேன். அவர்களிடம் கர்லோட்டா ஆடம்ஸின் சிறு பெட்டியைக் காண்பித்து

அடையாளம் கேட்டேன் - அதே பெட்டி தான்னு அடிச்சு சொல்றாங்க...''

''ஆஹ்...! ஆஸ்டன்...! ரீஜெண்ட் மாளிகைக்குச் செல்ல அருகிலுள்ள மிகப் பெரிய ரயிலடி..! ஆக, கர்லோட்டா ஆடம்ஸ் அன்றிரவு அங்கு போயிருக்கார். பெண்களுக்கான கழிவறையில், ஜானே போலத் தோன்றத் தேவையான அத்தனை ஒப்பனைகளையும் செய்துக் கொள்கிறார். பிறகு, அந்த ஒப்பனைப் பெட்டியைக் கொண்டு போய் பயணிகள் அறையில் ஒப்படைக்கிறார். அப்பப்பா...! எத்தனை சீரிய திட்டம்...! அது சரி... அந்தப் பெட்டி மீண்டும் எத்தனை மணிக்கு பெறப்பட்டுள்ளது?''

''பத்தரை மணிக்கு, திரு பொய்ரெட்! ஒப்படைத்த அதே பெண் தான் பெற்றுச் சென்றதாய் சொல்றாங்க.''

பொய்ரெட் கிரகித்துக் கொண்டு தலையசைத்தான்.

''இதனைத் துப்புத் துலக்கும் போது, மேலும் ஒரு பிரமாதமான தகவலையும் அறியப் பெற்றேன். கர்லோட்டா ஆடம்ஸ், அன்றிரவு பதினொரு மணியை யொட்டி, லையன்ஸ் கார்னர் விடுதியில் இருந்ததற்கான நம்பத்தகுந்த தகவல் கிடைச்சிருக்கு.''

''வாவ்! இதெப்படி உங்களுக்கு தெரிய வந்தது?''

''ஓர் ஊகம் - ஆனா, மிகச் சரியா அமையும் என்ற நம்பிக்கை யினாலான ஊகம்! தங்க நிறப் பெயர் பொறிக்கப்பட்ட ஆடம்ஸின் அந்த சிறு பையினைப் பற்றி, செய்தித் தாள்கள்ல முக்கியத்துவம் கொடுத்து செய்திகள் வெளியாகியிருக்கு, தெரியுமா! சில நிருபர்கள், நம்மைப் போன்ற அங்கீகரிக்கப்பட்ட துப்பறியும் ஆசாமிகளை விட புத்திசாலித்தனமாய் இயங்கறவங்க. அப்படிப்பட்ட ஒருவன், நடிகைகளிடையே பரவி வரும் போதைப் பழக்கம் பற்றி கட்டுரைத் தொடர் எழுதியிருக்கான். ஞாயிறு இலவச இணைப்பில். சமீப இதழில் - **உயிர்க் குடித்த சிறு பெட்டி - இளம் பெண்ணின் பரிதாப முடிவு - உலகமே முன்னால் விரிந்துக் கிடக்க, போதையால் பரலோகம் சென்ற இளம் நடிகை** - இப்படியெல்லாம் தலைப்புகளிட்டு வெளுத்துக் கட்டி யிருக்கான். இதனை லையன்ஸ் கார்னர் விடுதியின் ஒரு பணிப் பெண் படிச்சிருக்கா. அன்னிக்கு ராத்திரி அவ டியூட்டியில் இருக்கும் போது வந்த ஒரு வாடிக்கையாளப் பெண்ணிடம், அப்படியே அச்சு அசலாக அதே பையைப் பார்த்து பிரமித்திருக்கிறா, அவ. தங்க எழுத்து, தங்க முலாம் பூசிய பை என்று படித்த குறிப்புகளெல்லாம், அந்தப் பணிப்

பெண்ணுக்குள் நன்கு இறங்கியிருக்க வேண்டும். அடையாளம் கண்டுபிடிச்சுட்டா. C.A. என்று அதில் எழுதியிருந்ததை அவளால நினைவு கூர முடியுது. தாள முடியாம, அந்த ரகசியத்தைப் பூட்டி வைக்கத் திராணியில்லாம, மிகப் பெருமையாய், பார்க்கும் அனைவரிடமும் இது பற்றியே பேசித் தள்ளியிருக்கா. சும்மா இல்லாமல் இதனை மாலை மணியோசை செய்தித் தாளுக்கும், தொலைபேசி செய்து சொல்லியிருக்கிறாள். '**திறமை மிகு இளம் நடிகையின் கடைசி நிமிடங்கள்**' எனும் தலைப்பில் இன்று மாலை சுடச் சுட செய்தி பறக்கப் போகுது பாருங்க, திரு பொய்ரெட்!''

''இதெப்படி இத்தனை விரைவாய் உங்கள் செவிகளை அடைந்தது, இன்ஸ்பெக்டர்?''

''ஓஹ்! மாலை மணியோசை செய்தித் தாளுடன் நல்ல சுமுகமான உறவில் இருக்கோம். வேறு ஏதோ விஷயமாய் என்னை வந்து அந்த நிருபர் சந்திச்சுப் பேசிக் கொண்டிருந்தபோது அவரிடமிருந்து இந்த செய்தி வழிஞ்சுது. தாமதியாது உடனடியாய் நான் லையன்ஸ் கார்னர் விடுதிக்கு விரைந்து - - - ''

மிகச் சரி. ஜேப் செய்வதுதான் மிகச் சரி. இதுபோல் தான் மளமளவென தாமதியாது துப்பறிதலில் முன்னேற வேண்டும். பொய்ரெட்டின் மீது கோபமும், அவனைக் கிளப்பி ஜேப் போல இயங்க வைக்க முடியவில்லையே என இயலாமையும் என்னுள் விளைந்தன. ஜேப் அதிசயிக்கத்தக்க வேகத்தில் இயங்கி எங்களுக்கு தகவல்களை அள்ளி அள்ளி தந்துக் கொண்டிருக்கிறார்; பொய்ரெட்டோ, சாந்தமே உருவாக அவற்றை வாங்கிப் போட்டுக் கொண்டு தெய்வமே என்று அமர்ந்திருக்கிறான்.

ஜேப் தொடர்ந்தார்:

''அந்தப் பணிப் பெண்ணைப் பார்த்துப் பேசியிருந்தேன். அவ தந்தத் தகவல், சந்தேகத்துக்கு இடம் தராத நம்பகத் தன்மை வாய்ந்ததாய் தான் எனக்குப் பட்டது. கர்லோட்டா ஆடம்ஸ் ஒரு சினிமா நடிகை கிடையாது. அதனால் அவர் முகம் பணிப் பெண்ணுக்குப் பிரபலமாய் இல்லை. எனவே சில புகைப்படங்களைக் காண்பித்து, இவற்றில் வந்தது யார் என்று கேட்டேன். கர்லோட்டா ஆடம்ஸின் புகைப் படத்தை அவளால் அடையாளம் கண்டு எடுக்க முடியலே. பிறகு, பெண்ணின் முகத்தைக் குறிப்பாய் தான் பார்க்கவில்லைனு ஒத்துக் கிட்டா. வந்தவள், இளையவள் - கறுப்பாயிருந்தாள் - மிக ஒல்லித்

தேகம் - அந்த இரவிலும் புத்தம் புதிதாய் ஒப்பனை செய்திருந்தாள் - என்றெல்லாம் தகவல்கள் தந்தாள். அழுக்கேறாத புதுத் தொப்பி அணிந்திருந்ததாயும் சொன்னாள். அது, முகம் முழுக்க மறைக்கும்படி வடிவமைக்கப்பட்டிருந்ததாம்.''

''அப்படியே முழுதுமாய் பார்த்திருந்தாலும், அடையாளம் சொல்வது மிக கஷ்டம், இன்ஸ்பெக்டர்! ஆடம்ஸின் முகம், ஞாபகம் வைத்துக் கொள்ள உகந்த முகமல்ல. அது ஸ்மரணையற்ற முகம். அதில், உணர்வுகள் ஓடும் ஆற்று நீர் போல் ஓடிக் கொண்டும் மாறிக் கொண்டும் இருக்கும்.''

''மிகச் சரியா சொன்னீங்க, பொய்ரெட்! முக பாவம், ஓடிக் கொண்டேயிருக்கும் ஒரு முகம், அவர் முகம்! இந்த ஆராய்ச்சி இப்பொழுது வேண்டாம். லையன்ஸ் கார்னர் விடுதிப் பணிப் பெண்ணின் கூற்றுப்படி, கறுப்பில் உடையணிந்து வந்த அந்தப் பெண், கையில் சிறு பெட்டி ஒன்றும் வைத்திருந்தாளாம். அந்தக் காட்சி, பணிப் பெண்ணை அறைந்திருக்கிறது. மிகச் சிறப்பான ஒப்பனை செய்து வரும் ஒரு பெண், இப்படியா மிகச் சிறு பெட்டி ஒன்றைக் கையில் பொருத்தாமல் சுமந்துக்கிட்டு, செய்திருக்கும் ஒப்பனையைக் குறைத்துக் காட்டுவார் - இப்படி நினைச்சிருக்கா அவ. முட்டைப் பொடிமாசுக்கும், காபிக்கும் சொல்லிட்டு, அவை வருவதற்காக அப்பெண் காத்து உட்கார்ந்திருந்தாலும், எதுக்காகவோ வேணும்னே நேரத்தைக் கழிப்பது போலத்தான் இருந்தது என்கிறாள் பணிப்பெண். கையில் அணிந்திருந்த கைக்கடியாரத்தை, பலமுறை சரிபார்த்துக் கொண்டேயிருந்தாளாம். சாப்பிட்ட உணவுக்குக் காசு வாங்க வந்தபோது தான் அந்தத் தங்க நிற சிறு கைப்பையைப் பணிப்பெண் கவனிச்சிருக்கா. பெட்டி உள்ளிருந்து அதனை எடுத்து வெளியே மேஜையில் வைத்துக் கொண்டு அழகு பார்த்துக் கொண்டிருந்தாளாம் அந்தப் பெண்! அச்சிறுப் பையின் மூடியை கூட, ஓரிரு முறை திறந்து மூடியபடி யிருந்தாளாம். அப்பொழுதெல்லாம் கனவாய் சிறு சிரிப்பினை உதிர்த்துக் கொண்டாளாம். பணிப்பெண்ணுக்கு, அந்த தங்க எழுத்து பொறிக்கப்பட்டிருந்த பை, ஏனோ, வெகு பிரமாதமாய் பிடித்துப் போயிற்றாம் - அதனால் தான் வெச்ச கண் வாங்காம கவனிச்சிருக்கா. 'அதேபோல் ஒரு பை வாங்கி, என் பெயரையும் தங்க முலாம் பூசிய எழுத்துக்களில் பொறித்துக் கொள்ளத் தான் போகிறேன்' என்கிறாள்! சாப்பிட்டதற்குண்டான பணம் செலுத்திய பிறகும் கூட சிறிது நேரம் உட்கார்ந்தே தான் இருந்திருக்கிறாள் அவள். பிறகு

..சியாய் கைக்கடிகாரத்தை ஒரு முறை பார்த்து விட்டு, கிளம்பலாம் ...ம் முடிவோடு, கிளம்பியிருக்கிறார்.''

''யாருக்காகவோ காத்திருந்து விட்டு, வராததால், கிளம்பிப் ...யிருக்கிறார்'' என்ற பொய்ரெட்டின் முழுக் கதை சுருக்கத்தில் ...ச்சல் தெரிந்தது. ''நிழலாய் ஒரு மர்ம மனிதன். யாரந்த நபர்? ...லோட்டா ஆடம்ஸ் பிறகு அந்த நபரைப் போய் சந்தித்தாரா? ...ல்லை, அந்த ஆளை சந்திக்காமலே வீட்டுக்குப் போய் விட்டு, அங்கிருந்து தொலைபேசி செய்திருப்பாரா? ஓ! இதுக்கு மட்டும் எனக்கு ...டை தெரிஞ்சுடக் கூடாதா...? இதுக்கு மட்டும் உதவும் படியான ... எனக்குக் கிடைச்சுடக் கூடாதா...?'' - பரபரப்பானான் ...ய்ரெட்.

''இது உங்கள் கருத்து, திரு. பொய்ரெட். 'நிழலாய் ஒரு மர்ம ...னிதன்!' இதுபோல் நிழலாய் ஒரு மர்ம மனிதன்னு சொல்லிக் கொள்வ ...ல்லாம் கட்டுக் கதை! ஆடம்ஸ் யாருக்காகவும் காத்திருக்கலேனு ...ன் சொல்ல வரலே - இது சாத்தியமே! சீமோன் எட்ஜ்வேருடனான ...லை வெற்றிகரமாய் முடிஞ்சதும், அங்கு யாரையோ சந்திப்பதற்காக ...வர் அவசர ஏற்பாடு செய்திருக்கலாம். இப்போ... நமக்குத் ...ரிந்ததையும் வெச்சுக்கிட்டு ஆழ சிந்திச்சா வழக்கிற்கான விடை ...க்கும், பொய்ரெட்! ஏதோ வாக்குவாதத்தால தனது ...றுமையைக் கட்டுக்கடங்காது இழந்து விடும் ஆடம்ஸ், சீமானை ...டறார். ஆறுவது சினம். கொலை நிகழ்ந்ததும் அவர் சுயம் ...ரித்துக் கொள்கின்றது. அங்கிருந்து புறப்பட்டவர், ரயிலடி வந்து, ...ண்டும் நிஜ ஆடம்ஸாக மாறுகிறார். பெட்டியைத் தூக்கிக்கிட்டு தனது ...யிருப்புக்குப் போறார். தனிமை. நடந்த குரூரம் அவரை ... கொள்கின்றது. காத்திருந்தாரல்லவா, யாருக்காகவோ, அவன் ...ந்து இப்பொழுது ஆடம்ஸை அறைகின்றது. ஏன் தெரியுமா... ...ம்ஸ், அன்னிக்கு ராத்திரி ரீஜெண்ட் மாளிகைக்குச் சென்றதை ...றிந்து வைத்திருக்கும் ஒரே ஆளல்லவா, அவன்...! தன் வாழ்வே ...ண்டு விட்டதாய் அறிகிறார். கண நேர முடிவு - தனது வெரோனல் ...தை மருந்துப் பையைத் திறக்கிறார். மிக அதிக அளவிலான ...ரோனலைக் கரைத்துக் குடித்து சுலபமாய் இக்கட்டிலிருந்து ...தலையாகிறார்.''

பொய்ரெட் எவ்வித அறிகுறிகளையும் காட்டிக் கொள்ளாமல் ஜேப் ...வை மட்டும் பார்த்துக் கொண்டேயிருந்தான். எனக்கு, ஜேப் கூட

புத்திசாலித்தனமாய் நடந்துக் கொள்பவரா என ஆச்சரியம் மிகுந்துக் கொண்டேயிருந்தது.

''அந்த 'நிழலாய் ஒரு மனிதன்' குறித்தெல்லாம் எனக்குத் துளியும் துப்புக் கிடைக்கலே, திரு பொய்ரெட்! மேலும் முக்கியமா, சீமான் எட்ஜ்வேருக்கும் அந்த ஆடம்ஸ் பெண்ணுக்கும் இடையே நிலவிய தொடர்பு பற்றியும் எனக்கு எந்த உளவும் இல்லை. ஆனா, அந்த இணைப்பைக் கண்டுபிடிச்சு வெளியிடாம விடவே மாட்டேன் - கொஞ்ச காலம் பிடிக்கலாம் - அவ்வளவே! இதேபோல, பாரீஸ் விஷயங்கள் குறித்தும் ஒன்றும் துலங்கலே. ஒன்பது மாதங்களுக்கு முன் நடந்த சமாச்சாரங்கள் - விசாரணையில் அறிவதென்பது கஷ்டம்தான். ஆயினும், சீமானின் பாரீஸ் விஜயங்கள் குறித்து துல்லியமாய் அறிய, என் ஆட்கள் அங்கு விசாரணையில் ஈடுபட்டுத்தானிருக்காங்க. இவ்விசாரணைகளில் நிச்சயம் ஏதேனும் வெளிச்சமாகத் தான் போகுது. இத்தனை விடை தெரியாத கேள்விகள்! என்ன பொய்ரெட், அப்படிப் பார்க்கிறீங்க..! என் அணுகுமுறைகளில் திருத்தம் தர விரும்ப றீங்களா?''

பேசட்டும் என விட்டு வைத்துக் காத்திருக்கிறான் பொய்ரெட் - ஜேப்பின் மூலம், வழக்கு நிமித்தமாய் நடந்துள்ள பல நகர்த்தல்கள் விளக்கப்பட்டு முடிந்ததும், பொய்ரெட் சொன்னான்: ''ஓர் ஆலோசனை, இனிய ஜேப்! வாடகை டாக்சிகளை முற்றுகையிடுங்க. ஆடம்ஸைச் சுமந்துக் கொண்டு ரீஜெண்ட் மாளிகைக்குச் சென்ற வாடகை டாக்சி வேணும். கிட்டத்தட்ட பத்தரை - பத்தே முக்கால் வாக்கில்!''

ஜேப் எச்சரிக்கையாய் கண்களைக் கொட்டிக் கொண்டார். இரைக் கண்ட நாயின் காதுகள் எழுந்து நிற்பது போல விறைப்பானார்.

''அப்படி ஓர் எண்ணம் உங்களுக்குள் உதித்துள்ளதெனில், நிறைவேற்றுகிறேன்.''

சிறு கைகுலுக்கல்களுடன் ஜேப் வெளியேறியதும், பதினாறு வயது கட்டிளங்காளையாய் சுறுசுறுப்பானான் பொய்ரெட். எதற்கு இந்த அவசரம் என வியந்து வாய் திறந்த என்னை, ''எதுக்கு இந்த அவசரம் னெல்லாம் கேட்டு நச்சரிக்காதே! போ! போய் கொஞ்சம் சாம்பிராணி தூள் கொண்டு வா. அல்லது சாம்பல். அல்லது ஊதுவத்தி சாம்பல் - இது ஊதுவத்தி குப்பியருகே இருக்கும். பார்! காலையில் சாப்பிட்ட ஆம்லெட், சட்டையில் சிந்தி அசிங்கப்படுத்திடுச்சு.''

கொண்டு வந்து தந்தேன். சாம்பலை லாகவமாய் தடவி, கறையை அகற்றி விட்டான். சட்டை கறையின்றி ஆனது. தொப்பியிலிருந்த சிறு அழுக்குகளும் போகும் வண்ணம், தட்டி, உதறி, சிறு துணியால் துடைத்து விட்டு சிறப்பாக்கினான். காலணியைப் பளபளவென மெருகு செய்தான். என்னைப் பார்த்து, ''உன் சட்டையும், உன் டை'யும்! பொருந்தவேயில்லையடா! ஒன்று சட்டைக்குப் பொருத்தமான டை போடு. இல்லை டை'யை எடுத்து விடு. ஆங்..! உன் வலத்தோளருகே என்ன அழுக்கு அது? அதை, நீக்கு!''

''பொய்ரெட்..! ரொம்பத்தான்! என்ன, மகா கணம் பொருந்திய மகாராஜா யாரையாவது பார்க்கப் போகிறோமா என்ன!''

என்னைத் திரும்பிப் பார்த்த பொய்ரெட் ''ஆமாம்'' என்று பதில் தந்து திணறடித்தான். ''இன்னிக்குக் காலை செய்தித்தாள்ல படித்தேன். மெர்ட்டான் மாகாணத்து இளைய பிரபு, மெர்ட்டான் மாளிகைக்கு திரும்பிட்டாராம். அவர், இங்கிலாந்து நாட்டின் ஆங்கில சபையின் உயர்நிலை அங்கத்தினர்னு தெரிய வந்தது. இந்த சாக்கில், நாடு திரும்பியிருக்கும் அவருக்கு, ஒரு துப்பறியும் நிபுணராய், உரிய மரியாதை செய்து வரலாம் என எண்ணம்.''

இப்படியெல்லாம் வலியப் போய் வரவேற்பு தரும் வகையல்ல இந்த பொய்ரெட். ஆகவே, ''இதெல்லாம் நமக்கு வழக்கமில்லையே?'' என்றேன்.

''எனக்கு அவரைப் பார்த்தாகணும்'' என்று, என் கேள்விக்குப் பதில் தந்தான்! அழுத்தமான முற்றுப்புள்ளி! இதற்கு மேல் அவனிடமிருந்து என்னால் எதுவும் பெயர்க்க முடியவில்லை. வேறு வழியின்றி, வருகிறாயா இல்லையா? என கண்களால் கேட்ட பொய்ரெட்டுக்கு வழக்கம் போல் சம்மதம் தெரிவித்து, அவனுடன் கிளம்பினேன்.

மெர்ட்டான் மாளிகையில், இளைய பிரபுவைச் சந்திக்க முன்பதிவு இருக்கிறதா என காவலாளியால் நிறுத்தப்பட்டான் பொய்ரெட். இல்லை என்று தான் பதில் தர முடிந்தது. பொய்ரெட்டின் அடையாள அட்டையை சுமந்து உள் சென்று உடனடியாய் திரும்பி வந்த காவலாளி, இளைய பிரபு, நொடிக் கூட அவகாசம் தரயியலாத அளவுக்கு இன்று காலை முழுவதும் வரிசையாய் வேலைகள் வைத்திருப்பதாயும், இதற்கு மன்னிப்புத் தெரிவித்ததாயும் சொன்னான்.

உடனே பொய்ரெட், அருகிலிருந்த இருக்கை ஒன்றில் தொப்பென அமர்ந்து விட்டான். ''பரவாயில்லே, அவர் காலையில் முடிக்க என ஒதுக்கியிருக்கும் அத்தனை வேலைகளையும் செய்து முடிக்கட்டும்.

காத்திருக்கேன். எவ்வளவு நேரம் ஆனாலும் பரவாயில்லே. பல மணி நேரங்கள் காத்திருக்க வேண்டுமாயினும் பாதகமில்லே.''

இது கொஞ்சங்கூட தேவையே அற்ற பிடிவாதம். விநோதமாய் நடந்துக் கொண்ட பொய்ரெட்டை எதிர்த்துப் பேச தைரியமில்லாமல், நானும் அடங்கிக் காத்திருந்தேன்.

காலை கடந்த ஒரு முற்பகல் வேளையில் உள்ளே அழைக்கப் பட்டோம். இளைய பிரபு இருபத்தேழு வயதினை ஒட்டியிருந்தார். மிக ஒல்லியாகவும் த்ராணியற்றவராயும் தெரிந்த அவரிடம் எவ்வித ஈர்ப்புக்குண்டான அடித்தளமும் காணப்படவில்லை. நெற்றிப் பொட்டுகள் மற்றும் முன் தலை முழுவதும் வழுக்கை விழத் துவங்கியிருந்தவரின் முடிக் கற்றைகள் நீளம் குறைந்து, தண்ணீர் விட்டு அழுந்த வாரியது போலிருந்தன. முசுட்டுத்தனமாய் இருந்த சிறு வாய் மற்றும் நிலையற்ற மங்கிய கண்கள். சிலுவையில் அறையப்பட்ட இயேசு நாதரின் விதவிதமான அச்சுகளும் மதம் சார்ந்த கலைப் பொருட்களும் நாங்களிருந்த அறைச் சுவரெங்கிலும் இடம் பெற்றிருந்தன. விசாலமான புத்தக அலமாரியிலும் கலாச்சார மற்றும் பாரம்பரிய புத்தகங்களன்றி வேறில்லை. இளைய பிரபு என அழைக்கப்படும் இவரைப் பார்த்த மாத்திரத்தில், தெருவோரத்தில், மெலிந்து பலவீனமாய் போய், நாடா அரைஞாண் கயிறு முதலியன விற்றுக் கொண்டிருக்கும் நோஞ்சான் இளைஞன் தான் நினைவுக்கு வந்தானே ஒழிய, ஒரு மாபெரும் மாகாணத்தின் முதல் குடிமகனாய்த் தோன்றவேயில்லை! பள்ளிக் கூடமெல்லாம் அனுப்பப்படாமல் வீட்டுக்குள்ளேயே அடைத்து வைக்கப்பட்டு தான் பாடங்கள் புகட்டப்பட்டிருக்க வேண்டும் - தொட்டாற் சுணுங்கியாயிருந்தார்.

இப்படிப்பட்டவர்தான் - ஜானே வில்கின்ஸன் விரித்த வலைக்குள் உடனே விழுந்து விட்ட பரிதாப இரை! அபத்தத்தின் உச்சம்! இவருடைய குணாதிசயம், குறுகிய மனப்பான்மை நிறைந்த கர்வம் மிகுந்ததாயிருந்தது. இவர் காட்டிய விருந்தோம்பலில், அன்பும் கருணையும் மட்டும் பாக்கியிருந்தன!

''உங்களுக்கு என் பெயர் தெரிந்திருக்க வேண்டும்'' என ஆரம்பித்தான் பொய்ரெட்.

''இப்பெயரோடு எனக்குப் பரீச்சயமில்லை.''

''ஓ..!'' என ஏற்றுக் கொண்ட பொய்ரெட், ''நான் வன்முறை சார்ந்த குற்றங்களின் மனோநிலையைத் துப்பறியும் அதிகாரி'' என்றான்.

இளைய பிரபு அமைதியாயிருந்தார். இன்னும் முடிக்கப்படாமலிருந்த ஒரு கடுதாசி விரிந்திருந்த மேஜையின் முன்னே அவர் அமர்ந்திருந்தார்;

நாங்கள் அவர் எதிரே அமர்ந்திருந்தோம். கையிலிருந்த பேனாவால், மேஜையை நிலை கொள்ளாது தட்டிய வண்ணமிருந்தார் அவர்.

வலிக்காது கேள்வி கேட்கும் இங்கிதமற்று, ''என்ன காரணத்துக்காக என்னை சந்திக்க விரும்பினீங்க?'' எனும் கேள்வியை, ஒவ்வாமையும் அதிகாரமும் கலந்து கேட்டார் இளைய பிரபு. இக்கேள்வியைக் கூட பொய்ரெட்டின் முகம் பார்த்துக் கேட்கவில்லை. எதிரே அமர்ந்திருந்த பொய்ரெட்டுக்குப் பின்னாலிருந்த பெரிய ஜன்னலின் வழியே வெளியே பார்த்தபடி தான் கேட்டார்!

''தற்சமயம், நான், சீமான் எட்ஜ்வேரின் மரணம் நிகழ்ந்ததற்கான சூழ்நிலைகள் பற்றி துப்பறிவதுல முழுவதுமாய் ஈடுபட்டிருக்கேன்.''

இக்கேள்வியால், தளர்ச்சியான, ஆனால் அதேசமயம் பிடிவாதமான இளைய பிரபுவின் முகத்தில் எந்த சலனமும் ஏற்படவில்லை. ''அப்படியா?''என்று கேட்டவர், ''இதிலெல்லாம் எனக்கு ஈடுபாடு இல்லை'' என்றார்.

''ஆனா, நீங்க, சீமான் எட்ஜ்வேரின் மனைவியோடு - அதாவது ஜானே வில்கின்ஸன் - இவரோடு அதிகம் ஈடுபாடு கொண்டுள்ளீர் என்னு எண்ணுகிறேன்...!''

''அது சரியே.''

''தனது கணவன் மண்டையைப் போட வேண்டும் எனும் ஸ்திரமான வேண்டுதலில் அவர் குறியாய் இருந்திருக்கிறார் என்பதை நீங்களும் அறிந்திருப்பீர்கள்னு நினைக்கிறேன்.''

''அதுபோன்ற எதுவும் எனக்கு நிஜமாய் தெரியாது.''

''மாண்புமிகு இளைய பிரபு! உங்களை, ஒளிவு மறைவு எதுவுமின்றி, நேரடியா கேட்க விரும்பறேன்...! நீங்க விரைவில் ஜானே வில்கின்ஸனை மணக்கப் போறீங்களா?''

''நான் யாரையாவது மணமுடிக்க நிச்சயிக்கப்பட்டா, அது செய்தித் தாள்கள் மூலமாய் நிச்சயம் அறிவிக்கப்படும். உங்கள் கேள்வியை, அவமதிப்பான ஓர் அதிகப்பிரசங்கிக் கேள்வியாய் நான் கருதுகிறேன்.''

இப்படிச் சொன்னவர், சட்டென எழுந்துக் கொண்டு விட்டார். பொறுமை தெரியாத இனம். ''நன்றி வணக்கம்'' என்றார்.

பொய்ரெட்டும் எழுந்துக் கொண்டான். தர்மசங்கடமாய் உணர்ந்தான். தலையை சற்றே தொங்கப் போட்டுக் கொள்வதாய் ஆயிற்று. வார்த்தைகள் தடுமாறின. ''உங்களைப் புண்படுத்த வேண்டும் என - -- ''

பொய்ரெட்டை வாய் திறக்க விடவில்லை, மொர்ட்டான் மாகாணத்து இளைய பிரபு. ''நன்றி வணக்கம் என்றேன்'' என்றார் சற்றே உரக்க, கடுமையாய்.

இம்முறை பொய்ரெட் அடிபணிய வேண்டியதாயிற்று. குப்புற விழுந்தும் மண் ஒட்டாததை வெளிப்படுத்திக் கொள்ளாது வெளியேறினான். தூசு போல் என்னை இளைய பிரபு துடைத்துப் போட, நானும் தொடர்ந்தேன்.

பொய்ரெட்டைப் பார்க்கப் பார்க்க எனக்குப் பரிதாபமாயிற்று. அவன், விசாரிக்கும் போது, அதிரடி பட்டாசாய் உபயோகப்படுத்தும் அணுகுமுறை, இம்முறை அநியாயமாய் தோற்றுப் போனது. பதவி பலம்! ஒரு மாகாணத்தின் முதல் மந்திரிக்கு எதிரில், துப்பறியும் நிபுணரும், போலீஸ் தலைவரும், நீதிபதியும், யாராயினும்... அடித்து விரட்டப்படும் கரு வண்டு என்பது நிஜத்தில் போதிக்கப்பட்டது.

''இம்முறை, எதிராளியை மடக்கிப் போட, நீ கேட்கும் அதிரடிக் கேள்வி எனும் அணுகுறை, தோத்துடுச்சு பொய்ரெட்'' என்றேன், ஆறுதலாய்! ''அடக்கமற்ற முரடன். மரியாதை தெரியாத மனிதன். எந்த உண்மை காரணத்தினால், அவரைப் பார்த்தே ஆகணும்னு ஓடோடி வந்தே?''

''இவரும் ஜானே வில்கின்ஸனும் நிஜமாகவே திருமணம் செய்துக் கொள்ளப் போகிறார்களா என எனக்குத் தெரிஞ்சாகணும்.''

''ஜானே அப்படித்தானே சொன்னார், பொய்ரெட்!''

''அவள் சொல்வாள் ஹேஸ்டிங்ஸ்! தங்களுக்கு சாதகமாய் எது பொருந்துகிறதோ அதை மட்டும் கூறிக் கொண்டு அலையும் வகை அவ! ஜானே, இந்த இளைய பிரபுவை மணக்க முடிவு செய்திருக்கலாம் - ஆனா, இந்த பிரகஸ்பதியோ - அப்படி ஓர் எண்ணமே கொஞ்சமும் இல்லாது வாழ்ந்து வரலாம்!''

''எப்படியோ போய்த் தொலையட்டும். உங்களை, காது மடலில் சுத்தும் கொசுவை அடித்துத் துரத்துவது போல் வெளியேற்றியிருக்கார் - ஞாபகமிருக்கட்டும்.''

''வெளியே வந்து துப்புத் துலக்கறதில்லேனு என்னை வையறே! வெளியே வந்து உளவு தேடினால், சின்னச் சின்ன அவமானங்களுக்குக் கூட சூடாகிறே. நீ எனக்கு உபயோகமா, இல்லை உபத்திரவமா, இனிய ஹேஸ்டிங்ஸ்!'' என்று நேரம் பார்த்து என்னைக் குத்திக் காட்டிய பொய்ரெட், ''நண்பா! நிச்சயமானால் செய்தித் தாள்களுக்கு உடனடியாய் செய்தி தருவேன் என்றாரில்லையா! அந்தச் செய்தியை இப்போது என்னிடம் தந்து விட்டார் - அவரறியாமலே!'' என்றான். உள்ளூர திருப்திகரமாய் சிரித்தபடி, ''எனக்கு, இவர்கள் சமாச்சாரம் எந்த அளவுக்குப் போயிருக்கிறது என்பது அட்சர சுத்தமாய் புரிஞ்சுடுச்சு'' என்றான்.

*மிக நம்பிக்கையாய் பொய்ரெட்டிடமிருந்து வரும் குறிப்பு ஆகையால், ''எப்படி... எப்படி தெரியும்?'' என ஆவல் பொங்கக் கேட்டேன். ''என்ன விளங்கியது? அவர் நடந்துக் கொண்ட விதத்திலிருந்து கண்டுபிடிச்சியா...?'' என துரிதமானேன்.*

*''சே சே! அவர் ஒரு கடுதாசி எழுதிக் கொண்டிருந்ததைப் பார்த்தேயில்லை?''*

*''ஆமாம்.''*

*''அதில் உள்ளது விஷயம்! என்னவோ ஜேப் ஜேப்'னியே...? அவரோட விசாரணைகளெல்லாம் நடந்துள்ள உண்மைகளின் பட்டியல் அண்ணா...! அவற்றை வெச்சுக்கிட்டு ஒண்ணும் ஆகாது. இப்போ நான் பிடித்துள்ளேன் பார் கொம்புத் தேன்... இதற்குப் பெயர் தான் துப்பு - உளவு'' என்ற பொய்ரெட், தொடர்ந்து சொன்னதை தான், புத்திக் கூர்மைக்கும் சாதுர்யத்துக்குமான நடைமுறை எடுத்துக்காட்டு, இம்முறையும் பொய்ரெட் போல இயங்க முடியாமல் தோற்று விட்டதற்கு வெட்கினேன். பொய்ரெட் சொன்னான்: ''என் ஆரம்ப கால போலீஸ் பயிற்சியில, ஒருவர் எழுதுவதை, அவர் எதிரில் அமர்ந்து, அப்படியே தலைகீழாய் படிக்கக் கற்றுக் கொள்வது, துப்பறிதலில் செமத்தியான பலன்களை அளிக்கும்னு சொல்லிக் கொடுத்து, பயிற்சியும் தந்தாங்க. இதுவரை உதவியிராத அப்பயிற்சி, இப்போது உதவியுள்ளது. என் இனிய நண்பா! குறிச்சுக்கோ... இளைய பிரபு அக்கடிதத்தில் பாதி எழுதியிருந்த வரிகள் இவை:*

**''என் உயிரினும் மேலான ஜானே..! நான் பூஜிக்கும் என் மன தேவதையே..! அப்ஸரஸே! நீ எனக்கு எத்தனை உகந்தவள் என நான் எப்படி உனக்குப் புரிய வைப்பது! பாவம் கண்ணே நீ..! எத்தனை யெல்லாம் அவதிப்பட்டிருக்கிறாய்! உன் அழகு பிம்பத்துக்கு, இத்தனை ஹிம்ஸைகள் தேவையா...!''**

*''பொய்ரெட்'' - என நிலை மறந்து அலறி விட்டேன் நான். ''போதும்... போதும்... மேலே வேண்டாம். இது போன்ற ஒரு செயலை செய்யலாமா...? ஒருவரின் அந்தரங்க கடிதத்தைப் படிப்பதாவது?'' - நான் வருந்திப் போய் சொன்னேன்.*

*''மனோதிடமற்றவன்டா நீ! துப்பறிதலில், சில அதர்மங்கள், தர்மங்கள் தான்! சகித்துக் கொண்டு நடைமுறைப்படுத்தத் தான்வேண்டும். புரிஞ்சுக்கோ!''*

*நான் அமைதியானேன். பொய்ரெட் மிக விளையாட்டாய் சொல்லும் இந்த அநாகரீக செயலை என்னால் ஜீரணிக்க முடிய*

வில்லை. ஜானே சொல்லியாயிற்று, இளைய பிரபுவுடனான காதலை! அதில் போய் என்ன சந்தேகம் இவனுக்கு! ''நீ இப்போது செய்திருக்கும் அனைத்துமே... இளைய பிரபு சொன்னது போல, அதிகப்பிரசங்கித் தனமானவைதான்! ஜானே வில்கின்ஸனின் வேண்டுகோளுக்கிணங்கி சீமான் எட்ஜ்வேரைப் பார்த்து வந்தவன்னு ஒழுங்கா அறிமுகம் செஞ்சுக்கிட்டிருந்தா, தேவையான மரியாதையைக் கொடுத்து அவரே பேசியிருக்கப் போகிறார்.''

''ஆஹ்...! நீ சொல்வது சரிதான். ஆனா என்னால் அப்படி நடந்துக் கொள்ள முடியாதே! வில்கின்ஸன் என் கட்சிக்காரர். என் கட்சிக் காரரின் கஷ்ட நஷ்டங்களை நான் மற்றவரிடம் போய் பேசுவது மட்டும் தர்மமா? அது தொழில் தர்மம் கிடையாது! ஒரு வேலையை ரகசியமாய் செய்து முடிப்பதாய் கையிலெடுத்துக் கொண்டதுக்கு அப்புறம் அதைப் பார்ப்பவர்களிடமெல்லாம் பேசி விவாதிப்பது மரியாதையாகாது.''

''மரியாதை..?! ம்..!'' - நான் இப்படிப் பழித்துச் சொல்ல, பொய்ரெட்டோ, ''சரியாய் சொன்னாய்..! மரியாதையே!'' என பதிலுக்குப் பழித்து முடித்தான்.

நானும் விடுவதாயில்லை. ''ஆனா பொய்ரெட்! ஜானே தான் இவரை மணக்கப் போகிறாரே! இதில் துருவித் துருவி என்ன பார்த்துடப் போறே?''

''அதுக்காக, இருவருக்குள்ளும் வேறு ரகசியங்கள் இல்லைனு ஒதுக்கி விட முடியாது. சொல்லப் போனால் - இருக்கின்றன - ரகசியங்கள் இருக்கின்றன! இருவரும் திருமணம் செய்துக் கொள்ள வுள்ளதால், அவங்களுக்குள்ளே ரகசியங்கள் இருக்காதுனு நீ வாதிடுவது, பத்தாம் பசலித்தனம்..! உன்னைப் போல் நுனிப் புல் மேய என்னால் முடியாது! ஒரு துப்பறியும் நிபுணருக்கு உரிய தர்மத்தோடும் மரியாதையோடும், நான் சிந்திக்க வேண்டியுள்ளது. வெற்றி தோல்வி சார்ந்து என் தரம் வேண்டுமாயின் அவ்வப்போது தாழலாம் - ஆனா நான் வகிக்கும் பதவிக்கான புனிதத்தை எக்காரணம் கொண்டும் தாழ்த்திக் கொள்ள நான் பிரியப்பட வில்லை.''

நான் அமைதியானேன்.

## அத்தியாயம் - 19

# ராணி

நடந்துக் கொண்டிருக்கும் விவகாரம் சம்பந்தமாய் மறுநாள் காலையில் நிகழ்ந்த சந்திப்பினை, என்னை அதீத ஆச்சரியத்தில் தூக்கியெறிந்த ஒரு சம்பவம் என்று தான் சொல்வேன்!

நான் மாடி பால்கனியில் அமர்ந்திருந்தேன். பொய்ரெட் பிரகாசமான கண்களோடு உள்ளே நுழைந்தான். நுழைந்தவன், ''நம்மைச் சந்திக்க ஒரு விஸிட்டர் வந்திருக்கார்'' என்றான், சற்றே பரவசமாய்.

''யாரது?''

'மெர்ட்டான் மாகாணத்து விதவை ராணி.''

''என்ன ஆச்சரியம்! எத்தனை அதிசயம்! எதுக்காக? என்ன வேணுமாம்?''

''என்னுடன் கீழேயிறங்கி வந்தேன்னா, எல்லாம் விளங்கும்.''

துரிதமாய் சம்மதித்தேன். படியிறங்கி அறையுள் நுழைந்தோம்.

விதவை ராணியாகப்பட்டவர், குள்ளமாயிருந்தார். அலங்கார வேலையெல்லாம் அதிகமில்லாத, ஆடம்பரமற்ற ஒரு கறுப்பு உடையில் வந்திருந்தார். பிறர் கருத்துக்கு செவியே சாய்க்காது தன்னிச்சையாய் செயல்படுபவர் என்பது அவர் அமர்ந்திருந்த மேட்டுமையான கோணத்திலிருந்து சுலபமாய் புரிந்தது. இது மட்டுமில்லாது, கருணையேயற்ற ஒரு ஜீவன் இவர் எனும் கருத்தையும் என்னுள் ஊன்றும் படி பார்த்தார். இவரின் மகனான இளைய பிரபு, எதிலும் ஒட்டாத எதிர்மறை குணம் கொண்டு சுருங்கி வாழ்கிறார் என்றால், எதுவாயினும் சந்தித்து வெற்றிக் கொள்ளும் திமிர் கொண்ட நேர் மறை குணமாய் இவர் இருக்கிறார்! தைரியமும், பச்சாதாபமற்ற அணுகுமுறையும் கொண்ட அலைகள், அவரிடமிருந்து கிளம்பி அறை

முழுவதையும் மெது மெதுவாக நிறைப்பதை என்னால் உணர முடிந்தது.

யாரையெல்லாம் வாழ்நாளில் இவர் சந்தித்திருப்பாரோ, ஒருவர் விடாமல் அத்தனை பேரையும், தன் கால்களுக்குக் கீழே கிடத்தியே தான் இவர் வாழ்ந்திருப்பார் என்பதில் துளியும் சந்தேகம் கிடையாது.

என்னையும் பொய்ரெட்டையும் மேட்டுக்குடி பார்வையால் அளந்துவிட்ட பிறகு, பொய்ரெட்டிடம் பேச ஆரம்பித்தார். அவர் குரல், பேசும் பொருளில் சுத்தமாயும், அடித்துச் சொல்லும் முறையிலும் இருந்தது. கட்டளையிடவும், அடிபணிந்து நட.. என ஆணையிட்டு மட்டும் பழகியக்குரல்!

''நீங்க தான் திரு பொய்ரெட்டா?''

என் இனிய நண்பன் தலைவணங்கி அங்கீகரித்தான். ''உங்களுக்கு உதவக் காத்திருக்கிறேன், ராணி'' என்றான்.

என்னைப் பார்த்தார். அப்பார்வையில் தொனித்த கேள்விக்கு ''இவன், என் உயிர் நண்பன் ஹேஸ்டிங்ஸ்! காப்டன் ஹேஸ்டிங்ஸ். இவ்வழக்கில் எனக்கு உதவிக் கொண்டிருக்கும் சிறப்பான கரம்'' என்று பதில் தந்தான் பொய்ரெட்.

நொடிப் பொழுது அப்பார்வையில் சந்தேகமிருந்தது. பொய்ரெட்டின் விளக்கத்திற்குப் பிறகு நட்பாய் தலையசைத்துக் கொண்டார் - அதிகார நட்பு!

பொய்ரெட் சுட்டிக் காட்டிய இருக்கையில் அமர்ந்துக் கொண்டார். ''ஒரு தர்மசங்கடமான விஷயம் குறித்து உங்க ஆலோசனையை நாடி வந்திருக்கேன், திரு பொய்ரெட்! விஷயத்தை இப்போ நான் உங்களுக்கு சொல்லப் போறேன். இது முழுக்க முழுக்க ராஜ ரகசியமாய் வைக்கப்படணும்னு முதலிலேயே அறிவுறுத்த விரும்பறேன்.''

சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் ஆணித்தரமான அதிகாரம் கொண்டிருந்தன.

''இப்படி நீங்க சொல்லத் தேவையேயில்லை, ராணி'' என்று அழகாய் ஆமோதித்து பதில் தந்தான் துப்பறியும் நிபுணன்.

''எங்கள் ராஜாங்கத்தின் முக்கிய மந்திரி ஒருவர் தான் உங்களைப் பற்றியும் உங்களின் கீர்த்தியைப் பற்றியும் வான் புகழச் சொன்னாள். அவள் உங்களைப் பற்றி பேசிய மரியாதையிலிருந்து, நான் சொல்லவுள்ள விஷயத்துக்கு உதவ நீங்கள் மிகச் சரியான ஆள்னு முடிவெடுத்தேன்.''

''சத்தியம் செய்து தரேன், ராணி. என்னால செய்துத்தர முடியும்னு நான் நினைக்கும் பட்சத்தில், விஷயத்தை என்னிடம் போட்டுட்டு நீங்க நிம்மதியாய் போகலாம். முடித்துக் காட்டுவேன்.''

இருந்தும் ராணி தயங்கினார். நொடிகள் நழுவின. பிறகு, சிறு பிரயத்தனப்பட்டு விஷயத்துக்குள் நுழைந்தார். ''திரு பொய்ரெட்! என் மகன், அந்த நடிகை ஜானே வில்கின்ஸனை மணமுடிக்காமல் பார்த்துக் கொள்வது, இனி உங்க பொறுப்பு.''

மாளாத ஆச்சரியத்தைத் தான் பொய்ரெட் அடைந்திருக்க வேண்டும் - ஆனால் வெளிக் காட்டாமல் அட்டகாசமாய் மறைந்து விட்டான். ராணியை, முக்கியத்துவம் கொடுத்து படித்தபடி, சில கணங்கள் பதில் தர எடுத்துக் கொண்டான். கேட்டான்: ''இதில் நான் என்ன செய்ய இருக்குனு இன்னும் சற்றே சிறப்பா விளக்க முடியுமா?''

என்னைப் போய் என்ன வேலை செய்யச் சொல்கிறீர்கள் என்பதை, மிக நாசூக்காக வெளிப்படுத்தினான் பொய்ரெட்.

''அது அவ்வளவு சுலபமில்லே. இது போன்ற கூத்தாடிகளோடெல்லாம் நிகழும் கலியாணங்கள், ராஜ பரம்பரைக்கு நேரிடும் பேரிடியாய் நான் நெனைக்கிறேன். என் மகனின் வாழ்க்கையையே இவ்வகைத் திருமணங்கள் சிதைத்து எறிஞ்சுடும்.''

''அப்படியா நெனைக்கிறீங்க?'' - இன்னும் அவரிடமிருந்து மன ஆழத்து முடிவுகளை வாங்கத் தூண்டில் போட்டான் பொய்ரெட்.

''இக்கருத்தில் நான் ஸ்திரமாயிருக்கேன். என் மகன், மிகப் பெரிய - சீரிய சிந்தனைகளோட வாழ்பவன். அவனுக்கு சராசரி உலக வாழ்க்கை பற்றி ஒண்ணுமே தெரியாது. அவன் வயதினை ஒத்த இளம் பெண்களெல்லாம் அவனுக்குள் எவ்வித கிளுகிளுப்பையும் ஏற்படுத்துவதில்லை. அவங்களை இவன் துளி சட்டை செய்வதுமில்லை. புத்தியற்ற அற்பமான பதர்களாகத்தான், இவன் பெண்களைக் கருதறான். ஜானேயைப் பொறுத்தவரை, மறுக்கவில்லை... அழகின் சிகரம்தான் அவ. ஒப்புக்கிறேன். கூடவே, ஆண்களை அடிமையாய் கிரகித்து இழுக்கும் சக்தியும் அவளுக்கு உண்டு. இவற்றைப் பயன்படுத்தி என் மகனை அவ ஏமாற்றி இழுத்திருக்கா. இதுதான் உண்மை. பால் கவர்ச்சி - இனக் கவர்ச்சி - தன் வேலையைக் காட்டியிருக்கு. இவனும் அவ அழகில் எப்படியோ சொக்கிப் போய் விழுந்தே விட்டான். தெய்வாதீனமாக, என் மகனை மணக்கும் வழியின்றி தான் அவ இருந்தா... ஆனா, இப்போ சீமான் எட்ஜ்வேர் மரணித்து விட்டதால் ---''

இத்தனை நேரம் அவசரப்படாமல் பேசி வந்தவர், இப்பொழுது திடீரென துரிதமானார். இக்கலியாணத்தை நிறுத்தியே ஆக வேண்டும் என படபடத்தார். ''அவங்க ரெண்டு பேரும் இன்னும் ஓரிரு மாதங்களுக்குள் மணமுடிக்க உத்தேசித்திருப்பதாய் தகவல் கிடைச்சிருக்கு. என் மகனின் சந்தோஷம் முழுவதும் நரகத்தில் தள்ளப்படப் போகின்றது! இதை நான் அனுமதிப்பதற்கில்லை!'' - அதிகாரக் கண்டிப்போடு இறுதியாய் குறிப்பிட்டார் ராணி. ''இதை நிறுத்தியே தீரணும், திரு பொய்ரெட்.''

பொய்ரெட் தன்னிரு தோள்களையும் இணையாய் குலுக்கிக் காண்பித்தான்.

''மாண்புமிகு ராணி...! நீங்க கூறுவது தவறுனு நான் சொல்ல வரலே. இத்திருமணம், ஒரு சரியான பொருத்தம் அல்ல என்பது தான் என் ஆழமான கருத்தும்! ஆனா யாரால் என்ன தான் செய்ய முடியும்?''

''உங்களால முடியும். உங்களிடம் கேட்டுட்டேன். நீங்க எதையாவது செய்யத்தான் வேண்டும்.''

பொய்ரெட் மரியாதையாய் மறுத்துத் தலையசைத்தான்.

ராணி பதிலுக்கு, ''ஆமாம், ஆமாம், ஆமாம். நீங்க எனக்கு உதவியே தீரணும்'' என கட்டளையாய் சொன்னார்.

''எதைச் செய்தாலும், உங்க எதிர்பார்ப்பைப் பூர்த்தி செய்ய முடியாது, மகாராணி! உங்க மகன், அந்த நடிகைக்கு எதிராய் என்ன சொன்னாலும், கூசாது ஒதுக்கித் தள்ளுவார் என்று தான் சொல்வேன்! ஏன்னா, அது தான் உண்மை! மேலும், அந்த நடிகைக்கு எதிராகவும், அவதூறாய் சொல்ல எதுவும் கிடையாது என்பதையும் நாம சிந்திக்கணும்! மதிப்புக் குறைவாய், தரமற்ற வகையில், ஜானேவுக்கு எதிராய் பட்டியலிட ஒண்ணும் கிடையாது என்பது என் கணிப்பு. இவ்வகையில், ஜானே, ஜாக்கிரதையாகத் தான் வாழ்ந்திருக்கிறார் என்று கூட சொல்லலாம்.''

''ஆமாமாம்'' என்று, பொய்ரெட் கடைசியாய் தந்த குறிப்பை ஏற்றுக் கொண்டார் ராணி.

''ஆஹ்..! எனில், மகாராணி, நீங்க ஏற்கனவே இக்கோணத்தில் விசாரணைகள் செஞ்சிருக்கீங்க போல!''

''இத்திருமணத்திலிருந்து என் மகனை முழுசாய் காப்பாற்ற, என்னால் செய்ய முடியாத எதுவும் இந்த உலகத்துல கிடையாது. திரு பொய்ரெட்'' என்ற ராணி, ''எதுவும் கிடையாது'' என்பதை மட்டும் மீண்டும் அழுத்தந்திருத்தமாக சொல்லிக் காண்பித்தார்.

சிறு இடைவேளை தந்து விட்டு, ''இதனைச் செய்து முடிக்க பணம் ஒரு தடைக்கல்லாய் இருக்க வேண்டாம்'' என்றார். ''எத்தனை வேணுமோ கேளுங்க! ஆனா இத்திருமணம் நிறுத்தப்படணும்! அதை நீங்க தான் செய்தாகணும்!'' என்றவர், ''செய்றீங்க'' என முடித்தார்.

மீண்டும், பொய்ரெட், மரியாதையாய் மறுத்துத் தலையசைத்தான். ''பணம் எனக்கு ஒரு பொருட்டே அல்ல, மகாராணி! இதில் என்னால் எதுவும் செய்வதற்கில்லை. காரணம், இதோ, இப்பவே சொல்லிடறேன்! மேலும், மகாராணி... இப்படி ஆவேசமாக முயன்று நிறுத்தவும் எனக்கு இதில் ஒன்றும் தட்டுப்படலே...! இவ்விஷயத்தில், மாண்புமிகு ராணி, என்னால் எவ்வித உதவியும் செய்ய இயலாது - முடியாது! ஆங்..! ஒரு சிறு ஆலோசனை தர ஆசை... என்னை நீங்கள் அதிகப்பிரசங்கி என எண்ணாமலிருப்பீர்களேயானால்...!''

இப்படிச் சொல்லிவிட்டு என்னைப் பார்த்தான் பொய்ரெட். நான் மட்டு மரியாதையின்றி, துப்பறியும் நிபுணரைத் தரக் குறைவாய் அதிகப்பிரசங்கி என்று சொன்னேனல்லவா... அதற்காக பார்க்கிறான். நான் சொல்லியிருக்கக் கூடாது தான். கண்களாலும் முக பாவத்தாலும் பூரணமாய் மன்னிப்புக் கேட்டேன்!

எங்களிருவருக்கிடையே நிகழ்ந்த இச்சிறு மௌன உரையாடலை, ''என்ன ஆலோசனை அது?'' எனும் ராணியின் அதிகாரக் குரல் கலைத்தது.

''உங்க மகனுக்குள், உங்களுக்கு எதிராக, வீணாக பகையையும், விரோதத்தையும் வளர்த்துடாதீங்க! தன் துணையைத் தானாகவே தேர்ந்தெடுக்கும் வயது, அவர் வயது! அவரின் தேர்வு உங்களின் தேர்வாயில்லாத காரணத்தால், நீங்க தான் சரினு தப்புக் கணக்குப் போட வேண்டாம். அவரின் தேர்வு, பிறகு துரதிர்ஷ்டமானால், ஆகட்டும் - ஏற்றுக் கொள்ளுங்கள் - அப்படி வாழ்வில் தோன்றும் துரதிர்ஷ்ட கணங்களை ஏற்றுக் கொண்டு தான் வாழ்ந்தாகணும். அவர் முடிவெடுக்கட்டும். விட்டு விடுங்க. அவருக்கு உதவி தேவைனு உங்களை நோக்கி அவர் கை நீட்டும்போது மட்டும், ஓர் உதவிக் கரமாய் நீங்க இருங்க. ஆனா, உங்களுக்கு எதிராய் அவரை நீங்களே தூண்டி விட்டுடாதீங்க.''

''நிலைமை உங்களுக்குப் புரியலே'' - சொல்லிவிட்டுக் கிளம்புவதை உணர்த்துவதாய் எழுந்துக் கொண்டார் ராணி. அவர் உதடுகள் குரோதத்தில் துடித்துக் கொண்டிருந்தன.

''அப்படி நினைக்காதீங்க மகாராணி. நிலைமையை மிக நன்றாகப் புரிஞ்சுக்கிட்டிருப்பதால் தான்இப்படிப் பேசினேன். நல் வாழ்வை நாடும் தாயின் மனது எனக்குப் பரிபூரணமாய் தெரியும். இப்போ, ஒரு துப்பறியும் நிபுணனாய், அதிகாரமாய், உங்கள் நலம் கருதிச் சொல்றேன் - பொறுமை, பொறுமை! பொறுமையாயிருங்க. அமைதியாயிருங்க. இச்சிந்தனையிலிருந்து உங்க எண்ணத்தை மாற்றுங்க. திசை திருப்புங்க. இந்த சமாச்சாரம் தானாகவே பிட்டுக் கொள்ள இன்னும் ஒரு வாய்ப்பு இருக்கின்றது - அதனால சொல்றேன். நீங்க காட்டும் எதிர்ப்பு, உங்க மகனுக்குள் வீண் பிடிவாதத்தினைத் தான் வளர்த்து விடும்.''

''வருகிறேன் திரு பொய்ரெட்'' - தாட்சண்யமின்றி சொன்னார் ராணி. ''நான் ஏமாந்துட்டேன்.''

''உங்களுக்கு உதவ இயலாமல் போய் விட்டதற்காக அதிகபட்சமாய் நான் வருந்துகிறேன், மகாராணி. நான் மிகவும் இக்கட்டான நிலையிலிருக்கேன். இதுவும் இன்னொரு காரணம். உங்களுக்கு முன்னால், திருமதி எட்ஜ்வேர், ஏற்கனவே, என்னை வந்து சந்தித்து ஆலோசனை பெறும் மரியாதையை எனக்குச் செய்துட்டார்.''

''ஓஹோஹோஹோ...! இதுதான் காரணமா..!'' - ராணியின் வார்த்தைகள் கத்தி கொண்டு அறுப்பதாய் வந்து விழுந்தன. ''நீங்க எதிரணிக்காக விளையாடுகிறீர்களா? புரியுது. திரு பொய்ரெட்... அவ கணவன் கொலை செய்யப்பட்டிருந்தும், ஏன், ஜானே வில்கின்ஸன் கைது செய்யப்படவில்லை என்பதற்கான காரணம் இப்போ புரியுது!''

''தப்பபிப்ராயம், மகாராணி!''

''யார் சொன்னது தப்பபிப்ராயம்னு! மிகச் சரியான கருத்து நான் சொன்னது! பின் ஏன் அவ கைது செய்யப்படலே? கொலை நடந்த இரவு அவள் அங்கு தானிருந்திருக்கா! அந்த மாளிகைக்குள் அவ நுழைந்ததற்கும், பிறகு சீமான் எட்ஜ்வேரின் நூலகத்துக்குள் நுழைந்ததற்கும், உள்ளங்கை நெல்லிக் கனி போல சாட்சிகள் இருந்தும் ஏன் அவ கைது செய்யப்படலே? இந்த நடிகைக்குப் பிறகு வேறு யாரும் கைதாகலே. காரணம் - அவ உங்க கட்சிக்காரி! ஆஹ்ஹா! இத்தனை கைப்பாவைகளாவா நம் போலீஸ் இயங்கிக் கொண்டிருக்கின்றது? பாருங்க, திரு பொய்ரெட்! இதை நான் விடப் போவதில்லை..!''

இருவருக்கும் பட்டும் படாது கைகுலுக்கல்கள் தந்து விட்டு, அவிழ்ந்திருந்த கழுத்துப் பட்டையை இறுக்காமல் காதுகளை சுற்றிக்

..டிக் கொண்டு, அதிகமாய் வளைந்தெல்லாம் விடைபெறும் ...யாதை செலுத்தாது, வெறுமனே சிறிதாய் தலையை மட்டும் ...அசைத்து விடை பெற்று, புயலாய் கிளம்பினார், ராணி.

''ஸ்டாஃப்'' என்றேன் நான். ''பெண்ணா..?! அரக்கி.''

''அவர் நினைப்பது போலவே தான் சுற்றும் பூமி கூட சுழலணும் ...றும் பிடிவாதத்தின் தாக்கம்!''

''ஆயினும் பொய்ரெட்... ராணியின் இந்த ஆட்டமெல்லாம், தனது ...ரின் நல்வாழ்வின் மீது இவர் காட்டும் அபரிமித அக்கறையினால் ...லேயே!''

பொய்ரெட் ஏற்றுக் கொள்வதாய் தலையசைத்தான். சொன்னான்: ''அது உண்மைதான் ஹேஸ்டிங்ஸ். ஆனாலும், நீ என்ன நினைக்கிறே... ...லேன வில்கின்ஸனை, இளைய பிரபு மணப்பதென்று அவ்வளவு ...பெரிய குற்றமாகுமா?''

''இப்படி ஒரு கேள்வி ஏன் பொய்ரெட்? ஜானே, மெர்ட்டான் ...கோண இளவரசர் மீது உண்மையிலேயே காதல் கொண்டு தான் இருக்கிறார் என்பதில் உனக்கு நம்பிக்கை இல்லையா?''

''இல்லையெனத் தான் நினைக்கிறேன்'' என்று சந்தேகமாய் சொன்னவன், உடனேயே, ''நிச்சயமாய், ஜானே, இளவரசர் மீது நிஜமாய் காதலில் இல்லை, இல்லை'' என அடித்துச் சொல்லிவிட்டு, ''ஆனா, இளைய பிரபுவின் கீர்த்தியின் மீதும், பதவியின் மீதும், அபரிமிதமாய் மண்டிக் கிடக்கும் சொத்து பத்துக்கள் மீதும், ஜானே, மிக நிஜமாகக் காதல் கொண்டிருக்கிறார்'' என்றான். தொடர்ந்தான்: ''தன் குறியை அடைவதில் மிக ஜாக்கிரதையாக காய்களை நகர்த்தும் ...ர்வழி, இந்த ஜானே! பூமியில் இப்படி இன்னோர் அழகி கிடையாது ...றும் அளவுக்குக் கொட்டிக் கிடக்கும் பேரழகும், அவரின் ...ராசையும், ஜானேயின் ஜாக்கிரதையான போக்குக்கு, சிரமமின்றி ...தவும் கிரியா ஊக்கிகள்..! ஓர் உண்மை தெரியுமா ஹேஸ்டிங்ஸ்... இளைய பிரபு, அவரின் தரத்திற்கு ஏற்ப வேறொரு ராஜ பரம்பரையைச் ...ர்ந்த பெண்ணையே கூட, பிரபுவை விட அவர் சொத்தினை நாடும் ஜானேயைப் போன்ற வேறோர் இளவரசியைக் கூட மணந்திருக்கலாம் ..ஆனா, சொல், எந்தப் பெண்ணாயினும், ஜானேயைப் போல, தன் திருமணம் குறித்து இப்படி ஒரு மேடை நாடகம் நடத்திக் காட்டிக் கொண்டு திரிவார்களா..?''

''இல்லை தான்..!'' என்றேன் நான்.

''உண்மைக் காதல் நிறை குடம் ஹேஸ்டிங்ஸ்... தளும்பாது! நான் இளவரசியாகிடணும் - இதுதான் ஜானேயின் குறி.''

''ஆனாலும் - - - ''

''ஒரு நிமிடம், ஒரு நிமிடம்... நான் இன்னும் என் கருத்து முழுவதையும் பேசி முடிக்கலே! ஒரு வேளை, பிரபுவினை மட்டும் உயிராய் நேசிக்கும் ஒரு பெண் அவருக்கு மனைவியாக அமைவதாய் வைத்துக் கொண்டாலும், அதனால் பெரிய பலன் என்ன விளைஞ்சுடப் போகுது? மிக மிக நேசிக்கும் பெண்ணொருத்தி மனைவியா வாய்ப்பதை விட துரதிர்ஷ்டம் வேறு இல்லை என்பதைத் தான் நான் பல நேரங்களில் கவனிச்சிருக்கேன். பொறாமை எனும் தீயில் மெல்ல மெல்ல அவள் விழுந்து விடுகிறாள் - தனக்கேத் தனக்கு என கணவனைப் பொத்தி வைக்க முனைந்து அமிர்தமும் விஷமான கதையாய், கணவனின் வெறுப்பை சம்பாதிக்கிறாள் - அவனுடைய அத்தனை நேரமும் கவனமும் தன் மேலேயே விழுந்துக் கிடக்க வேண்டும் எனும் அணுகுமுறையால், அவனுடைய சுதந்திரத்தில் தலையிட்டு, கடைசியில், அவனுடைய முதல் எதிரியாகவே ஆகிப் போகிறாள்..! ஆஹ்..! நண்பா.. இப்படிப்பட்ட வாழ்க்கையையா, ரோஜாக்களின் படுக்கை என்பது...?''

''வர வர, எல்லாவற்றிலும், நீ ரொம்பக் குற்றங்குறை சொல்றே, பொய்ரெட்!''

''உண்மையைத் தான் பிரதிபலித்தேன் நண்பா...! கவனிச்சியா..! இந்தக் கிழவி என்னமாய் தகவல்களைச் சேகரித்து வைத்திருக்கிறாள் என்று..! எத்தனை வஞ்சம் தீர்க்கும் பழிகார குணமும் கொண்டிருக்கிறாள், கவனிச்சியா..! ஜானே வில்கின்ஸனுக்கு எதிராக திருப்பவல்ல அத்தனை சாட்சியங்களையும், கிழவி தேடிப் பிடிச்சு வெச்சிருக்கா..!''

''ஆமாமாம்! ஜானேயைக் கம்பிகளுக்குப் பின்னால் தள்ள வாதாடும் அரசு வக்கீலுக்குத் தான் அதிக வாய்ப்பு - நடிகையைக் காப்பாற்ற உள்ள வக்கீலுக்கு அல்ல... இல்லையா?'' - நான் புன்முறுவியபடி சொன்னேன்.

''இத்தனை துல்லியமாய் தகவல்களை இவர் எப்படி அறிந்திருப்பார்?''

''ஜானே, இளைய பிரபுவிடம் சொல்லியிருப்பார்.பிரபு, தாயாரிடம் வழக்கம் போல, ஒன்று விடாமல் சொல்லியிருப்பார்..!''

''சாத்தியமே..! ஆனாலும் எனக்கு இன்னொரு- - -''

பொய்ரெட்டின் கருத்தைப் பேச விடாமல் தொலைபேசி மணி அடித்தது. ரிஸீவரை எடுத்து நான் பேசினேன்.

சிற்சில இடைவெளிகளில், 'ஆமாம்' என்று நான் சொல்லிக் கொண்டேயிருந்தேன் - நான் பேச வேறொன்றும் இருக்கவில்லை. இறுதியில் ரிஸீவரை வைத்துவிட்டு, கிளர்ச்சியுடன் பொய்ரெட் பக்கம் திரும்பினேன்.

''அது, ஜேப்! பல விஷயங்கள் சொன்னார். ஆனா, எல்லா வற்றிற்கும் சேர்த்து, முதலில், உன்னைத் தான் வாழ்த்தினார். அமெரிக்காவிலிருந்து, ஏதோ ஒரு கடுதாசி குறித்து நகல் கிடைக்கப் பெற்றுள்ளார். அடுத்ததாக, டாக்ஸி டிரைவரைக் கண்டு பிடிச்சுட்டாராம். அவருடன் விசாரணை வைத்துக் கொள்ளலாம்னார். டிரைவரைப் பற்றித்தான் நினைத்திருக்கவே இல்லை என்றும், அவன் பக்கமாய் சிந்திக்க வைத்ததற்கு நன்றியும் சொன்னார். 'நிழலாய் ஒரு மனிதன்' என நெற்றியில் ஆணியடித்தாற் போல் நீ சொன்னதை இத்தனை நாட்களாய் பரிகசித்து வந்தது தவறுனு இப்போ உணர்வதாய் திருப்பித் திருப்பிச் சொன்னார். சற்று முன் இங்கு ராணி வந்து, இந்த போலீஸ்காரர்களே ஊழல் பெருச்சாளிகள் என்றெல்லாம் கதற விட்டுச் சென்ற விஷயத்தை நான் ஒதுக்கிட்டேன்.''

''நிழலாய் ஒரு மனிதன் என்ற என் கருத்தைக் கடைசியில் ஜேப் ஏற்றுக் கொண்டுவிட்டார்!'' என தனக்குத் தானே முணுமுணுத்த பொய்ரெட், ''இக் கொலை வழக்கு குறித்து என்னுள் இன்னுமொரு சாத்தியமான கூற்று உருவாகி நிலை பெறும் போதா, 'நிழலாய் ஒரு மனிதன்' என நான் கோடிக் காட்டியதை எல்லோரும் உணர வேண்டும்...?!'' என சொல்லிக் கொண்டான்.

''என்ன சொல்றே, பொய்ரெட்! புது கூற்றா...? இன்னொரு கோட்பாடா..? என்னது அது...?''

''சீமான் எட்ஜ்வேரைக் கொன்றுபோட வேண்டும் எனும் நேரடி இலக்கு இல்லாமலே கூட அவர் கொல்லப்பட்டிருந்திருக்கலாம் - எனும் கோட்பாடு, தியரி..!''

''பொய்ரெட்...'' - நான் குழப்பத்தில் கூவினேன்.

''வேறு வழியில்லை நண்பா..! படு சிக்கலான இவ்வழக்கில் கூற்றுகள் உதித்துக் கொண்டே தானிருக்கும். ரொம்பவும் மனதில்

எடுத்துக் கொள்ளாமல் இருந்தாயென்றால், குழப்பமும் வராது - வெறுப்பும் வராது!''

அமைதியடைந்தேன்.

''சீமானுடன் நேரடி விரோதம் இருந்திருக்காது - ஆனா ஜானே வில்கின்ஸனோடு, இருந்திருக்கும். எனவே, கொலை போன்ற ஏதேனும் ஒரு குற்றத்தில் ஜானேயை சம்பந்தப்படுத்தி, அவரைத் தூக்கில் தொங்க விடும் அளவுக்கு, அவர் மீது யாரேனும் பகை கொண்டிருந்ததாய் கற்பனை செய்து பார்...! வழக்கு, புதுக் கோணத்தில் பிரகாசிப்பது தெரியும்...!''

இப்படிச் சொல்லி, விட்டத்தைப் பார்த்து பெருமூச்செறிந்தவன், எழுந்துக் கொண்டு, ''ம்... கிளம்பு... போவோம்... ஜேப் என்ன சொல்றார்னு கேட்போம்.''

அத்தியாயம் - 20

# டாக்ஸி ஓட்டுநர்

முள் முள்ளாய் மீசையை வளர்த்துக் கொண்டு காவி ஏறிய பற்களுடனிருந்த, ஒரு வயது முதிர்ந்த பெரியவரிடம் ஜேப் விசாரித்துக் கொண்டிருந்தபோது நாங்கள் சென்றடைந்தோம். நடுநடுங்கும் பரிதாபக் குரலில் பதில் தந்துக் கொண்டிருந்தான் அந்தக் கிழவன்.

''வாங்க, வாங்க'' என்றார் ஜேப். ''அலையற்ற கடலில் பிரயாணிப்பது போல, வழக்கு, ஜம்முனு போகுது. விரைவில் தீர்த்து விடலாம்னு நினைக்கிறேன். இது, ஜேப்ஸன். டாக்ஸி டிரைவர். ஜூன் 29 அன்றிரவு, இரு நபர்களை ஏற்றிக் கொண்டு ரீஜெண்ட் பகுதிக்குச் சென்றிருக்கிறான்.''

''ஆமாமாம்'' என்று அவசர அவசரமாய் பதில் தந்தான் ஓட்டுநர் - கைகளை பவ்யமாய் வயிற்றுக்குக் குறுக்கே கட்டியபடி. ''அது ஓர் அற்புத இரவய்யா. அதனால தான் நல்லா நினைவிருக்கு. பனி மூடிய லண்டன் வானில் நாம் எங்கு முழு நிலவைப் பார்க்கிறோம்? ஆனால் அன்று பார்க்க முடிந்தது. நான் ஒரு நிலா பைத்தியம். ஓர் இளம் பெண்ணும் ஓர் ஆணும், அருகிலிருக்கும் ரயிலடி பக்கத்துல நின்னுக்கிட்டிருந்தாங்க. என்னை கை வீசி அழைத்து ஏறிக்கிட்டாங்க.''

''என்ன உடையில் இருந்தாங்க?''

''நடன உடை போலிருந்தது ஸார். அந்த ஆடவன் வெண்ணிற கோட் சூட்டிலும், பொண்ணு, வெண்ணிற பண மதிப்புமிக்க அலங்கார உடையிலும் இருந்தாங்க. பெண்ணின் வெண்ணிற உடையில், அதே வெண்ணிறத்திலேயே பல பறவைகள் அச்சுக் கோர்க்கப்பட்டிருந்தது. மிகப் பிரமாதமான வேலைப்பாடாயிருந்தது. ஏதோ சிறப்பான நடன நிகழ்ச்சியிலிருந்து வருவதாய்த் தோணிச்சு.''

''அப்போ மணி என்ன...?''

''பதினொன்றிருக்கலாம்.''

''பிறகு?''

''ரீஜெண்ட் பகுதிக்குப் போகச் சொன்னாங்க. அங்கு போன பிறகு எந்த மாளிகைனு சொல்வதாய்ப் பேச்சு. வேகம் வேகம் என அவசரப்படுத்தினாங்க. டாக்ஸியில் ஏறும் எல்லோரிடமும் இது வாடிக்கை. விமானத்தைப் பிடிக்கப் போவது போல பறப்பாங்க. இறங்கியதும் மூச்சு பேச்சின்றி வீட்டுக்குள்ளே போய் கதவை மூடிக்கிடுவாங்க. இதுங்க படுத்தும் அவசரத்துல, ஒரு விபத்து நடந்துடுச்சுன்னா, குற்றம் முழுவதையும் ஓட்டுநர் தான் ஏற்கணும்! வேடிக்கையாயில்லை..!''

''ம்..'' என அதிகாரமாய்க் கண்டித்தார் ஜேப். ''வீண் பேச்சு தேவையில்லை'' என உணர்த்தினார்.

''ஏழுநிமிடங்கள் தான் பிடித்திருக்கும் - ரீஜெண்ட் பகுதிக்குள் நுழைஞ்சுட்டேன். அத்தனை வேகம். சில நொடிகளில் ஓர் ஓரமாய் வண்டியை உடனடியா நிறுத்தும்படி அந்த ஆடவன் சொன்னான். நான் நிறுத்தினேன். பொண்ணும் பையனும் இறங்கிக்கிட்டாங்க. அந்த ஆடவன் போகவில்லை. பொண்ணு மட்டும் தெருவைக் கடந்து, எதிர்புறத்தில், நாங்க வந்த திசையிலேயே திரும்பி நடக்கலானாள். நான் இந்த ஆடவனையே கவனிச்சுக்கிட்டிருந்தேன். டாக்ஸியின் வெளியே, எனக்கு முதுகு காட்டிக் கொண்டு நின்ற ஆடவன், சென்றுக் கொண்டிருந்த பொண்ணையே வெச்ச கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார். தன் இரு கால் சட்டைப் பைகளுக்குள்ளும் கைகளைச் சொருகியிருந்தார். ஐந்து நிமிடம் போல் கழிந்ததும், அவரிடமிருந்து சிறு சிறு முணுமுணுப்புகள் விளைந்ததை என்னால் கேட்க முடிந்தது. என்ன பேசினார்னு கேட்கவில்லை. ஆனா, என்ன உணர்வில் பேசினார்னு அரளும் புரளுமாய் புரிந்தது. தனக்கு மட்டும் கேட்க முடிந்த அளவில், சந்தோஷ ஆச்சரியத்தில் என்னவோ சொல்லிக் கொண்டிருந்தார் - பிறகு நிறுத்திக் கொண்டார். இந்த அளவுக்கு அவரை நான் ஏன் கவனிச்சுக்கிட்டிருந்தேன்னா, என்னை ஏமாற்றி விட்டு இருவரும் காசு தராது ஓடி விடக் கூடாதில்லையா... அதுக்காக! சில முறை நான் ஏமாந்துப் போயிருக்கிறேன், ஸார்... அவை சொல்லிக் கொடுத்த பாடம் தான் இது...! எனவே விடாமல் அவரைப் பார்த்துக் கொண்டேயிருந்தேன் - இப்படி அப்படி திரும்பாம! பிறகு, சட்டென, தெருவைக் கடந்து எதிர்ப்புறம் சென்றவர், அங்கிருந்த பெரிய மாளிகைகள் நிரம்பிய வளாகத்திற்குள் நுழைந்தே விட்டார். என் பணம்..? நான் சிந்திப்பதற்குள், வாசல் தடுப்புச் சுவரின் பெரும்

இரும்புக் கதவைத் திறந்துக் கொண்டு, அவர் ரொம்ப உள்ளே போயிருந்தார்.''

''நுழைந்தவர் என்ன செய்தார்?''

''ஒரு மாளிகைக்குள் நுழைந்தார்.''

''நிலைக் கதவைத் திறந்துக் கொண்டு உள்ளே போனாரா?''

''போனாரே! சாவி போட்டுத் திறந்துப் போனார்.''

''அந்த வீட்டின் எண் என்ன?''

''17 அல்லது 19. சரியாத் தெரியலே. ஊகம் தான். என்னை நிறுத்தி விட்டு, அமைதியான அந்த இருளில் சவாரி வந்த இருவரும் காணாமல் போனது, எனக்கு தர்ம சங்கடத்தை ஏற்படுத்தியது. அங்கெல்லாம், வெகு நேரம் டாக்ஸியை நிறுத்தக் கூடாது. சிறு சிந்தனையோடு போன இருவரும் வருகிறார்களானு பார்த்துக்கிட்டே இருந்தேன். ஐந்து நிமிடம் போல் ஆகியிருக்கும். இந்த ஆடவன் நுழைந்த மாளிகை போன்ற வீட்டிலிருந்து, அப்பெண்ணும் அவனும் சேர்ந்துவந்தனர். டாக்ஸியில் ஏறிக் கொண்டனர். கான்வெண்ட் தோட்டப் பகுதியில் ஒரு நடன நிகழ்ச்சி நடைபெறும் வீட்டுக்குப் போகணும்னு அறிவிச்சுட்டு வழி காட்டினாங்க. அந்த வீட்டை அடைவதற்கு சற்று முன்பாகவே டாக்ஸியை நிறுத்தி இறங்கிக்கிட்டவங்க, பிரயாணங்களுக்குண்டான பணத்தைத் தந்தாங்க. நிறைய நிறைய தந்தாங்க - நான் எதிர்பாரா தொகை. ஏதோ வில்லங்கத்தில் தான் இருவரும் அகப்பட்டிருக் காங்கன்னு என் உள் மனம் எச்சரித்தாலும், அதைக் கேட்காமல், அத்தனை பணத்தையும் வாங்கிக் கொண்டு, விட்டேன் சவாரி..!''

''மேலும்...?''

''அவ்வளவே...!''

''நன்றி'' என்ற ஜேப், ''இப்போ உன் கண்களை இந்தப் புகைப் படங்களின் மீது செலுத்தி, அன்று வந்த பொண்ணு, போட்டோக்கள்ல இருக்காளானு சொல்ல முடியுமா..?'' என்றுகேட்டார்.

ஏறத்தாழ ஒரே மாதிரியான சாயல் கொண்ட சில புகைப்படங்கள் மேஜையின் மீது விரித்துப் போடப்பட்டன. நாங்கள் மூவரும் ஓட்டுநரிடமிருந்து வரவுள்ள பதிலை சிறு ஆவல் பொங்க எதிர்பார்த் திருந்தோம்.

''அதோ... அவரேதான்'' என்றான் ஜேப்ஸன். தன் சுட்டு விரலை வெகு நிச்சயமாக அவன் காட்டியது... கெரால்டின் புகைப்படத்தின் மீது!

''நிச்சயமாய்..?''

''சர்வ நிச்சயமாய்! மிக ஒல்லியாகவும், கறுப்பு நிறத்திலுமான பொண்ணு அவர்.''

''இப்போ, அந்த ஆடவன் குறித்து..!''

இன்னொரு சிறு கட்டுப் புகைப்படங்கள் அவனிடம் தரப்பட்டன. சிலமுறை மீண்டும் மீண்டும் கவனம் பொதிந்து அவன் பார்த்தாலும், விடை தரயியலவில்லை. ''நிச்சயமா சொல்லத் தெரியலே'' என்றான். ''இந்த இரு புகைப்படங்களில் இருப்பவர்களில் ஒருவராயிருக்கும்.''

இப்படி ஜேப்ஸன் சொன்ன இருபடங்களில் ஒன்று ரொனால்ட் மார்ஷுடையது - ஆனால், அதனை டிரைவர் தேர்ந்தெடுக்காமல், மார்ஷ் போன்ற சாயலற்ற இன்னொன்றைத் தான் தேர்ந்தெடுத்தான்.

ஜேப்ஸன் வெளியேற, நிம்மதியான முக பாவத்தோடு, புகைப்படங்களை அடுக்கினார் ஜேப். ''இவை போதாதா?'' என நிம்மதியானார் ஜேப். ''புது சீமான் மட்டும் சரியா அடையாளம் காட்டப்பட்டிருந்தால் சுலபமாகியிருக்கும். ஏழெட்டு வருடங்களுக்கு முன்பு எடுக்கப்பட்ட புகைப்படங்கள். புதிய புகைப்படத்தைக் காட்டியிருக்கணும். தவறு செய்துட்டேன். மறுபடியும் ஜேப்ஸனை அழைத்து, மார்ஷின் புதிய புகைப்படத்தைச் செருகி விட்டு, கண்டுபிடிக்காமல் விட மாட்டேன்'' என்ற ஜேப், ''திரு பொய்ரெட்'' என மன்னிப்புக் கோரும் குரலில் அழைத்து, ''அவ்வப்போது உங்களை வெறுப்பேற்றும்படி பேசியதற்கு மன்னிக்கவும். ஓட்டுநரைப் பற்றி நீங்கள் ஆலோசிச்சது, மாபெரும் சாதுர்யம்'' என்று பாராட்டினார்.

பொய்ரெட் அலட்டிக் கொள்ளாமலிருந்தான். தனக்குள் ஓட்டுநரின் கணிப்பு எப்படி உதித்தது என்பதை சுருக்கமாய் விளக்கினான்: ''இருவரும், வெவ்வேறு நடன விருந்துகளுக்குப் போயிருப்பதாய்க் கேள்விப்பட்டதுமே, விருந்தின் போது கிடைக்கும் சிறு இடைவேளை களின் போது, இருவரும் சந்தித்திருக்கும் சாத்தியக் கூறு என்னுள் வெட்டியது. இடைவேளையின் போது கொஞ்ச நேரம் வெளியேறி வருவதை யாரும் கவனிக்கப் போவது கிடையாது - இன்னும் அவங்க விருந்துல, தான் இருக்காங்கனே கருதுவாங்க. துப்பறியும் நாம், இங்கு முக்கியமாய் கவனிக்க வேண்டிய வாய்ப்பு என்னனா - அரை மணி நேரத்துக்குள், நடன விருந்திலிருந்து கிளம்பி, ரீஜெண்ட் மாளிகைக்குப் போய் சிறிது நேரம் அங்கு தங்கியும் இருந்து, பின் அங்கிருந்து திரும்பி

யந்து விடலாம் - என்பதைத்தான்! நான் வேறோர் இடத்தில் இருந்தேன், இருந்தேன்னு திரும்பத் திரும்ப மார்ஷ் சொன்ன கணத்திலிருந்தே, அந்தகவலில் மட்டும் ஏதோ வில்லங்கம் இருக்குனு நுகர்ந்தேன்.''

''சந்தேகம் - வாழ்க்கைக்கு வேண்டாம் - நமக்கு மிக அவசியம்'' என வாஞ்சையோடு பொய்ரெட்டின் தோள்களைத் தடவி விட்டுச் சொன்ன ஜேப், ''இனி அடுத்தது'' என்ற இரண்டாவது விஷயத்தை ஆரம்பித்தார்.

''நியூயார்க் போலீஸிலிருந்து கிடைக்கப் பெற்றுள்ள தந்திச் செய்தி. மிஸ் லூசி ஆடம்ஸுடன் தொடர்புக் கொண்டிருந்திருக்கிறார்கள். கார்லோட்டா, அவரது இளைய சகோதரிக்கு அனுப்பியுள்ள கடிதம், இன்று காலை அவர் கைகளுக்குக் கிடைச்சிருக்கு. கடிதத்தைப் பெறுவதற்குள் போதும் போதும்னு ஆகிடுச்சாம். போலீஸாயினும் மிக மிக அத்தியாவசியமானால் மட்டுமே தர முடியும்னு மிகக் கறாரா இருந்திருக்கிறார் அவர். பிறகு கடித நகலை மட்டும் தர சம்மதித்திருக்கிறார். அந்த நகலை, அவசரம் கருதி, தபாலில் அனுப்பாமல், தந்தியில் தட்டி, அனுப்பியுள்ளனர். இதோ - அது! உங்கள் எதிர்பார்ப்பு மற்றும் ஊகங்கள் அனைத்தையும் மிக நிஜமாய் பிட்டுப் பிட்டு வைக்கும் பதிவு!''

மிகுந்த சிரத்தையோடு தந்தியின் நகல் தாளைப் பெற்றுக் கொண்டார் பொய்ரெட். அவர் பின்னால் போய் நின்றுக் கொண்டு நானும் படிக்கலானேன்.

இனி தொடரும் செய்தி லூசி ஆடம்ஸுக்கு. ஜூன் 29. 8, ரோஸ் அடுக்ககம், லண்டன், S.W.3 (என்ற தபால் குறிப்புக்குப் பிறகு, கடிதம் தொடங்கியது)

அன்பு சகோதரி,

கசமுசாவென கிறுக்கி ஒரு சிறு கடிதம் மட்டுமே சென்ற வாரம் எழுத முடிந்தது - அதற்கு மன்னிக்க! இங்கு ஏகமான வேலைப் பளுவும் நேரந் தாழ்த்தாது செய்து முடிக்க வேண்டிய பணிகளும் நிரம்பியிருந்ததால் தான் அப்படி ஆயிற்று! கண்மணி! இப்படி ஒரு வெற்றியை இதுவரை நான் கண்டதேயில்லை. என் சமீபத்திய நிகழ்ச்சிகளைப் பற்றிக் குறிப்பிடுகிறேன்! பெரிய விளம்பரங்கள், நிகழ்ச்சிகளை நடத்த பணம் தந்தவர்களுக்குக் குவிந்த லாபம், பாராட்டியே அமைந்த

விமர்சனங்கள்... என எல்லாமே வெற்றி. எனக்கும் கணிசமான பணம் கிடைத்துள்ளது. நாடு விட்டு நாடு வந்திருந்தாலும், எல்லோரும் என்னிடம் மிகக் கனிவாகவே உள்ளனர். இங்கு மிகச் சிறந்த சில நண்பர்கள் கிடைக்கப் பெற்றேன். அடுத்த வருடம், கண்மணி, இரண்டு மாதங்கள் வரை வாடகைக்குக் கொட்டகைகளை எடுத்துக் கொண்டு நிகழ்ச்சிகள் அளிக்கலாம் என முடிவு செய்துள்ளேன். அத்தனை புகழ் கிடைத்துள்ளது எனக்கு!

அன்பு சகோதரி..! இனி உனக்கு நான் சொல்ல வரும் விஷயத்தை எப்படி எழுதி விளக்குவது எனபுரியாமல் சந்தோஷ வெள்ளத்தில் திக்கு முக்காடிக் கொண்டிருக் கிறேன். காரணம் என்ன என்கிறாயா..! இதோ, ஒரு நிமிடத்தில், கடிதம் முடியும் போது உனக்கே கூட தெரிந்துவிடும்! அதற்கு முன், இங்கு நான் சந்தித்த சில பெரும் புள்ளிகள் என்னிடம் சொன்னவற்றைக் கேளேன்! திரு ஷிமர், என் திறமையில் மயங்கி, என் மீது மிக சிரத்தையெடுத்துக் கொண்டு பேசினார்; அதுமட்டுமல்ல, எனக்கு பல வகைகளில் சகாயமாய் இருக்கவல்ல கலைப் பிரியரான சர் மொன்டாகு கார்னரிடம் ஒரு நாள் விருந்துக்கு அழைத்துச் செல்வதாய் சொல்லியு மிருக்கிறார். சென்ற வாரத்தில் ஒரு நாள் நடிகை ஜானே வில்கின்ஸனை சந்தித்தேன். என் திறமை மற்றும் என் வளர்ச்சி ஆகியவற்றை பலர் முன்னிலையில் மிக சிலாகித்துப் பேசினார். இந்த அறிமுகத்திலிருந்து நான் சொல்ல விழையும் சந்தோஷ செய்தியை ஆரம்பித்துக் கொள்கிறேன்.

ஜானேயை எனக்கென்னவோ அதிகம் பிடிக்க வில்லை. எனக்குத் தெரிந்த ஒருவரிடமிருந்து, வில்கின்ஸனைப் பற்றி வண்டி வண்டியாய் கேள்விப் பட்டேன். மிகக் கொடூரமாகவும், இரக்கமற்றும் நடந்து வந்திருக்கிறார் என நினைக்கிறேன் - கள்ளத்தனமும் வஞ்சகமும் கூட்டுச் சேர்ந்த ரகசியமான பெண்மணி அவள்! இதுகுறித்த தாக்கத்துக்குள் நான் இப்பொழுது

நுழைய விரும்பவில்லை. சீமான் எட்ஜ்வேரின் மனைவி இந்த ஜானே என்பது உனக்கும் தெரியும்தானே? அந்த ஆளும் ஜானேவுக்குக் குறையாமல் கொடுமைகள் செய்து வந்ததாய் பிறகு கேள்விப்பட்டேன். அழகும் கிடையாது. அந்த சீமான், அவரது மருமான் உறவு வரும் மார்ஷை (இவரை முந்தைய ஒரு கடிதத்தில் நான் ஏற்கனவே உனக்கு அறிமுகம் செய்துள்ளேன்) மிகக் கேவலமாக வெட்கப்படும்படி நடத்தியிருக்கிறார். தயவின்றி மார்ஷை வீட்டை விட்டுத் துரத்தியெறிந்து விட்டு, அவருடனான தொடர்பையும் துண்டித்துக் கொண்டு விட்டார். அத்தனை கதையையும் மார்ஷ் என்னிடம் சொன்னார். அவரின் நிலைக்கு மனமொப்பி வருந்தினேன். அவர் என் இரு மணி நேர விகடகவி காட்சியை சிரித்துச் சிரித்து ரசித்ததாய்ச் சொன்னார். சீமான் எட்ஜ்வேரேக் கூட ஏமாந்துப் போய் விடுவார்... அத்தனை துல்லியம் என்றவர், ''ஹேய்..! என்னிடம் ஒரு சிறு பந்தயத்துக்கு வர முடியுமா..?'' என்று ஒரு சிறு பந்தயத்தை என்னிடம் கட்டினார். நான் மறுப்புக் கூற முடியாத பந்தயம் அது! பந்தயத் தகவலைக் கேட்டு சின்னதாய் சிரித்த நான், எவ்வளவு தருவீர்கள் என விளையாட்டாய் தான் கேட்டேன். என்னருமை சகோதரி..! அதற்கு அவர் தந்த பதில் என் மூச்சை நிறுத்தித் தான் விட்டது! பத்தாயிரம் டாலர்கள். கண்மணி! பத்தாயிரம் டாலர்கள்! என்னால் நடத்திக் காட்ட இயலும் ஒன்றுமில்லா சிறு மாறுவேடத்துக்காக, பத்தாயிரம் டாலர்கள்! 'சரி' என்றேன். 'ஜானேயாய் மாறுவேடத்தில் செல்லும் ஆபத்தான பந்தயத்தை ஏற்றுக் கொள்கிறேன்' என்றேன். பிறகு நீண்ட நேரம் அமர்ந்து நானும் அவரும் திட்டம் தீட்டி முடித்தோம்.

என் அடுத்த கடிதத்தில் விலாவாரியாக சொல்கிறேன் - நான் கண்டுபிடிக்கப்பட்டேனா இல்லையா போன்ற எல்லாவற்றையும்! ஓஹ்! கண்மணி..! என் உயிரான இளைய சகோதரி..! பத்தாயிரம் டாலர்களடி! நேரமில்லை... உடனடியாய் நான் ஒப்புக் கொண்டுள்ள

**'ஏமாற்று' வேலையை முடுக்கிவிட வேண்டும்.**

**நெஞ்சார்ந்த பல கோடி அன்புகள், என் இளைய சகோதரிக்கு..!**

**உன்,**

**கர்லோட்டா.**

பொய்ரெட், வாசித்து முடித்த தந்தி நகலைக் கீழே வைத்தான். எவ்வகையிலோ, இக் கடிதம், பொய்ரெட்டின் அடி மனத்தினைத் தொட்டு விட்டிருப்பதை என்னால் உணர முடிந்தது.

ஆனால் ஜேப்'போ, வேறு விதமாக பிரதிபலித்தார்.

''*அவர் தான் என பிடித்து விட்டோம்*'' என்று வெற்றியைக் கொண்டாடும் விதமாக ஆனந்தமாய் குறிப்பிட்டார் ஜேப்.

''ம்'' - சொன்ன பொய்ரெட்டின் குரல், உணர்வற்று அந்நியத் தனமாய் ஒலித்தது.

ஜேப், பொய்ரெட்டை ஆர்வம் பொங்கப் பார்த்தார். ''என்ன பொய்ரெட்? முகமே சரியில்லை...!''

''ஒண்ணுமில்லை'' என்றான் பொய்ரெட். ''இப்போ, நடந்துள்ளதாய் நமக்குத் தெரிய வந்துள்ள எதுவும், நான் நினைத்ததைப் போல் அமையலே. அவ்ளோ தான்.''

இப்படிச் சொன்ன ஹெர்குல் பொய்ரெட், சந்தோஷம் குலைந்த கடுமையான மனோநிலைக்கு தள்ளப்பட்டான்.

''ஆயினும்.. இப்படி ஒரு சாட்சியம் கிடைத்துள்ள போதிலும்...'' என்று ஏதோ நாங்களிருவரும் இங்கு இல்லாததைப் போல தனக்குத்தானே பேச ஆரம்பித்த பொய்ரெட், ''*நான் நினைத்ததைப் போல் தான் நடந்திருக்கணும்*'' என்று சொல்லிக் கொண்டான். ''ஆமாம், அதுதான் சரி, அதுதான்.''

''என்ன திரு பொய்ரெட்..! இக்கொலையின் பின்னணியில், அதிலும் குறிப்பாக அந்த வெகுளியான ஆடம்ஸ் பெண்ணைப் பணத்தாசைக் காட்டி யாரோ ஒருநிழல் ஆசாமி தான் இந்த இக்கட்டில் புகுத்தி விட்டுள்ளான் என்று தானே நீங்க மூச்சுக்கு முன்னூறு தரம் சொல்லி வந்தீங்க?''

''ஆமாம். ஆமாம்.''

''எனில், ஏனிந்தக் குழப்பம்? என்ன எதிர்பார்க்கிறீங்க?''

பொய்ரெட் பெருமூச்செறிந்து விட்டு அமைதியானான். பதிலொன்றும் சொல்லவில்லை.

''நீங்க நுழையயியலா ஒரு குகை, திரு பொய்ரெட். சொல்லவும் மாட்டீங்க. வழக்கை முடிக்க விடவும் மாட்டீங்க. எதுவுமே உங்களைத் திருப்திப் படுத்துவதில்லே. நம் கைகளுக்கு அந்த ஆடம்ஸ் பெண் அனுப்பிய இத்தந்திக் கடிதம் கிடைத்திருப்பது ஒரு பெரும் அதிர்ஷ்டம். இதை வெச்சுக்கிட்டு முன்னேறணும், திரு பொய்ரெட்.''

''திரு ஜேப்! இப்படி ஆடம்ஸ் செய்வார்னு கொலைகாரன் கொஞ்சமும் எதிர்பார்த்திருக்க மாட்டான். எப்போ அந்த பத்தாயிரம் டாலருக்காக ஆடம்ஸ் கையொப்பமிட்டாரோ, அப்பவே தனது மரணத்திற்கும் சேர்த்தே அவர் கையொப்பமிட்டுட்டார். இதைத்தான் நான் அன்றும் சொன்னேன். கொலைகாரன், கொலை மற்றும் ஆடம்ஸ் சம்பந்தமா, தேவையான அத்தனை முன்னெச்சரிக்கை நடவடிக்கை களையும் எடுத்துக் கொண்டதாய் தான் நினைச்சிருக்கான். ஆயினும், தன்னையும் அறியாமலேயே, அந்த வெகுளிப் பொண்ணு, அவன் நினைப்பைப் பொய்யாக்கியிருக்கா! மரணம் பேசும்! ஆம், சில சமயங்களில் மரணம் பேசும்!''

''தலையும் புரியலே... வாலும் புரியலே! எப்படியோ போங்க! நான் மேற்கொண்டு வேலைகளை முடுக்கி விடணும்.''

''காப்டன் மார்ஷ் - எட்ஜ்வேர் பரம்பரையின் தற்போதைய சீமான் - அவரைக் கைது செய்யப் போறீங்களா?''

''ஏன் கூடாது?'' - எரிச்சலானார் ஜேப். ''இவ்வழக்கு, அவருக்கு எதிரா சந்தேகமற நிரூபணமாகி விட்டதா உங்களுக்குத் தோணலையா?''

''இருக்கலாம்.''

''உங்களுக்கு நம்பிக்கை வரலே திரு. பொய்ரெட். உங்களைப் பொறுத்தவரை, மிகக் கஷ்டப்பட்டு ஒரு வழக்கு முடிவடைவதில் தான் உங்களுக்கு நம்பிக்கை. சட்டென முடிஞ்சுட்டா - நம்ப மாட்டீங்க. இதோ பாருங்க. நீங்க ஊகித்தபடியே வழக்கு மிக அழகாய் வடிவம் கொண்டு சாட்சிகளோடு நிக்குது... ஆனா இதிலும் உங்களுக்கு திருப்தியில்லே. சரி, சொல்லுங்க... இப்போ வந்துள்ள சாட்சியத்தில் ஏதேனும் குற்றம் குறை கண்டுபிடிச்சிருக்கீங்களா?''

பொய்ரெட் ஸ்தம்பித்துப் போய் உட்கார்ந்திருந்தான். பேச மறுத்தான்.

''என்ன ஹேஸ்டிங்ஸ் இது?''

இப்படிக் கேட்ட ஜேப்'புக்கு என்னால் எவ்வுதவியும் செய்ய முடியவில்லை. அன்று டாக்ஸி ஓட்டுநர் பற்றி, பொய்ரெட் ஆலோசித்த

போது இப்படித்தான் ஜேப் விமர்சித்தார் - கடைசியில் அதுதான் உண்மையாயிற்று. எனவே, இப்பொழுது என் அருமை நண்பனின் சிந்தனைக்கு குறுக்கே நான் போக விரும்பவில்லை.

இருவரும் அமைதியாகவேயிருக்க, ''சீமானின் மகள், இக் கொலைக்கு ஓர் உதிரிப் பாகமாக பயன்பட்டிருக்கிறாரா, இல்லையா என்பது எனக்கு இன்னும் தெரியலே''என ஜேப் தான் பேசினார்: ''எனக்கென்னவோ, டேன்ஸுக்குப் போறதெல்லாம் முன்கூட்டியே தெரிஞ்சுக்கிட்டதுக்கு அப்புறம்தான், அவரோடு கிளம்பி அவ போயிருப்பானு தோணுது. இல்லேனா, சீமானின் மகளையும் கூடவே இழுத்துக்கிட்டு மார்ஷ் ஏன் போகணும்? இருவரையும் விசாரிச்சா தான் தெரிய வரும்.''

''அப்போ, கூட நானும் இருக்கலாமா?'' - கேட்டான் பொய்ரெட்.

''நிச்சயமா, இதென்ன கேள்வி பொய்ரெட்! நீங்களில்லாமலா? நானே அழைக்கணும்னிருந்தேன்!''

இப்படிச் சொன்ன ஜேப்,மேஜை மீது கிடந்த தந்தியின் நகலை எடுத்துக் கொண்டு எழுந்தார்.

நான் பொய்ரெட்டைத் தனியாய் கூட்டிச் சென்று, ''என்னப்பா விவகாரம்'' என மிக ஆறுதலாய்க் கேட்டேன்.

''நான் மன விசாரத்திலிருக்கேன், டியர் ஹேஸ்டிங்ஸ்! அலைகளற்ற கடல் பயணம் போல் வழக்கு முடியுது. இது கூடாது. இதில் ஏதோ தவறு இருக்கு - இன்னும் இருக்கு. எங்கோ ஒரு மூலையிலிருந்து - நிதர்சன உண்மை - நம்மிடம் அண்டாமல் தப்பித் தப்பி ஓடிக்கிட்டிருக்கு. கிடைத்துள்ள அனைத்துத் தகவல்களும் அழகாய் பொருந்தி நிற்கின்றன - நான் ஊகித்தது போலவே தான் நகர்ந்துள்ளன - ஆனாலும் என் நண்பா...'' என்று பொய்ரெட், என் கைகளை இறுகப் பற்றிக் கொண்டு, ''இன்னும் ஏதோ தவறு ஒளிந்து இருக்கு''என்றான். ''ஆயிரம் குற்றவாளி தப்பிக்கலாம். ஆனா எக்காரணத்தைக் கொண்டும் ஒரு நிரபராதி தண்டிக்கப்படக் கூடாதுடா'' என என்னிடம் மிகப் பரிதாபமாய்ச் சொன்னான்.

என் உயிரினும் மேலான பொய்ரெட் வாடுவதைக் காண சகியாது, அவனை என் நெஞ்சோடு அணைத்தபடி நின்றேன் நான்.

அத்தியாயம் - 21

# ரொனால்ட் சொன்னது

போய்ரெட்டின் மனோநிலையைப் புரிந்துக் கொள்வது எனக்கு மிகக் கடினமாக இருந்தது. ரீஜெண்ட் பகுதிக்குச் சென்றுக் கொண்டிருந்த எங்கள் பயணம் முழுவதும், அவனைக் கலக்கமுறச் செய்தக் குழப்பத்திலும், அதனால் மண்டிய எரிச்சலிலும் இருந்தான் ஹெர்குல். இதனால், புகழ் பாடிக் கொண்டிருந்த ஜேப்'பின் எந்தவொரு வார்த்தையிலும் தன் சிந்தையைப் பதிக்காதிருந்தான் துப்பறியும் நிபுணன். ஒரு நிலையில், தான் கண்டுக் கொண்டிருந்த பகற் கனவிலிருந்து சிறு பெருமூச்செறிந்து நிகழ்காலத்தில் வந்தான் அவன். ''எதுவாயினும்'' என்று முணுமுணுப்பது போல் வலுவற்று மெதுவாய் சொன்ன அவன், ''முதல்ல ரொனால்ட் என்ன சொல்றார் என்பதைக் கேட்டுட்டு, பிறகு மேற்கொண்டு ஆக வேண்டியதைப் பார்ப்போம்'' என்று கட்டளையாய் சொன்னான்.

''அவர் மட்டும் முன் யோசனையுள்ளவரா இருந்தா, வாய் திறக்க மாட்டார்'' என்றார் ஜேப். ''ஏதேனும் பேச வேணும்னு அவசர அவசரமாய் பேசியே உண்மையைக் கக்கி விடும் ஓராயிரம் ஆசாமிகளை நான் பார்த்திருக்கேன். இத்தனைக்கும், வேணும்னா உங்க வக்கீலை அருகில் வெச்சுக்கலாம்னு அவங்களை நாம எச்சரித்திருப்போம் - இருந்தும் நம்மைப் பார்த்தவுடனேயே அவனுங்களா பேச ஆரம்பிச்சுடுவாங்க! குற்றம் செய்த மனசு குறுகுறுக்கத்தானே செய்யும்! எந்தப் பொய்யையெல்லாம் அவிழ்த்து விட்டால் வழக்கிலிருந்து லகுவாகத் தப்பி விடலாம் என கணக்குப் போட்டு வெச்சிருந்தாங்களோ, அந்தப் பொய்யையெல்லாம், விசாரணை என வந்த பிறகு, திறந்து விட்டக் குழாயிலிருந்து கொட்டும் தண்ணீர் போல, அவசரமாகக் கொட்டுவாங்க! எல்லாப் பொய்களையும் முதல்ல ஒரு நல்ல சட்ட ஆலோசகரிடம் சொல்வது

தான் பாதுகாப்பானதுனு எண்ணவே மாட்டாங்க! இந்த மார்ஷ் எந்த வகையோ!''

பெருமூச்சு விட்டுத் தொடர்ந்தார்:

''சட்ட ஆலோசகர்கள், துர்மரணம் அடைந்தோர் பிரேதங்களை விசாரிக்கும் அதிகாரிகள், வக்கீல்கள் - இவர்களெல்லாம் தான் போலீஸின் முதல் எதிரிகள்..! கண்ணாடி போல் சுத்தமாக உண்மையைப் பிரதிபலிக்கும் பரிசுத்தமான வழக்குகளை, வெகு சுலபமாக முடித்திருக்கேன் - ஆனா, பிரேத விசாரணை நடத்தும் அதிகாரிகள், முட்டாள்தனமான வாதங்களை நீதிமன்ற விசாரணைக் குழு முன்னாடி கொண்டு வந்துப் போட்டுக் குழப்பிப் பிசைந்து, பாதகக் குற்றவாளிகளைத் தப்பிக்க விட்டுடுவாங்க. நம் சாட்சியங்கள் எல்லாம் அங்கே தவிடு பொடியாகிப் போகும். பணம் செய்யும் பாடு! இந்தக் களேபரத்தில், தங்கள் படிப்பு கற்றுத் தந்த கலை நுணுக்கம் வாயிலாக, இயன்ற வரை, புதுப்புது முடிச்சுகளை அறிமுகப்படுத்தி, வழக்கினை முடியவே விடாம வளர்த்து விடும் இந்த வக்கீல்கள் வேறு..!''

பாவம் ஜேப்! பேசாத பொய்ரெட்டால் விளைந்த அமைதியைக் களைய என்னவெல்லாம் பேச வேண்டியுள்ளது!

ரீஜெண்ட் மாளிகைக்கு வந்து சேர்ந்த போது, நாங்கள் தேடி வந்த புது சீமான், உள்ளே இருப்பதாய் தெரிய வந்தது. குடும்பமே, சாப்பாடு மேஜையை ஆக்கிரமித்துக் கொண்டு, மதிய உணவில் இறங்கி யிருந்தது. சீமான் மார்ஷோடு தனிமையில் பேச வந்திருக்கும் இஷ்டத்தைத் தெரிவித்தார் ஜேப். நூலகத்தில் காத்திருக்கும்படி அறிவுறுத்தப்பட்டோம்.

ஓரிரு நிமிடங்களில் மார்ஷ் எங்களைக் காண வந்தார். வரும்போது அவர் முகத்தில் வழக்கமான புன்னகை குடி கொண்டிருந்தது. அது, எங்கள் மூவரையும் வரிசையாய் பார்த்து முடித்தபோது சிறு மாற்றம் கொண்டு குன்றியது. அவர் உதடுகளும் இறுகிக் கொண்டன.

''வணக்கம் இன்ஸ்பெக்டர்'' என்றவர், ''என்ன எல்லோரு மாய்...?'' எனக் கேட்டார்.

ஜேப், நாங்கள் வந்திருக்கும் விஷயத்தை, தனக்கே உரிய உயர் போலீஸ் மொழியில், மரியாதைக் குலையாமல் முன் வைத்தார்.

''ஓ. ' இது தான் விஷயமா?'' - சொன்னார் மார்ஷ்.

ஜேப்புக்கருகில் வருமாறு இருக்கை ஒன்றினை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தார்அவர். ''இப்போ சில விஷயங்களைச் சொல்லியே ஆகணும்னு நினைக்கிறேன், இன்ஸ்பெக்டர்'' என்றார்.

''அதற்குத் தடையேதுமில்லை, சீமானே..!''

''கேட்டா, நான் எத்தனை முட்டாள்தனமா இருந்திருக்கிறேன்னு தான் உங்களெல்லாருக்கும்தோணும். நானும் அப்படித்தான் இப்போ நினைக்கிறேன் - முட்டாளாய் இருந்துட்டேன்! ஆனா எக்காரணம் கொண்டும், நான், இப்போது சொல்லவுள்ள விஷயத்தை, மறைத்து வைக்கலே. சொல்ல வேண்டிய கட்டாயம் ஏற்பட்டிருக்கவில்லை என்பதே உண்மை!''

ஜேப் எப்பதிலும் தரவில்லை. தொடர்ந்து பாவமற்ற முகத்துடனே அமர்ந்திருந்தார்.

''அதோ...'' என்று அருகிலிருந்த சிறு மேஜையைச் சுட்டிக் காட்டிய சீமான் மார்ஷ், ''அங்கு சிறு மேஜையும், அதற்கான வாகான நாற்காலியும் இருக்கு'' என்றார். ''தேவையானா, உங்க போலீஸ் காரியதரிசி அங்கு அமர்ந்து நான் இப்போது சொல்பவற்றை ஒரு வாக்குமூலமாய் கூட எழுதிக்கலாம்.''

அப்படி ஒரு முன்னேற்பாட்டோடு ஜேப் வந்திராதபடியால், மார்ஷின் ஆலோசனைக்கு ஒரு நன்றியை மட்டும் தெரிவித்துக் கொண்டார்.

''ஆரம்பிக்கிறேன்'' என்று அறிவித்தார் மார்ஷ். ''என் கொஞ்சமான புத்திசாலித்தனத்தை உபயோகித்து யோசிக்கும்போது, அன்றிரவு நடந்த அந்த ரகசிய ஆள் மாறாட்டம் பல்லிளிச்சிடுச்சுனு நினைக்கிறேன்! கார்த்திமேயர் வீட்டு நடனத்திலிருந்து நான் நழுவியது... டிரைவர் சொல்லிட்டானோ?''

''அன்றிரவு நீங்கள் சென்று வந்த அத்தனை இடங்களும் எங்களுக்குத் தெரியும்'' என்றார் ஜேப், மரம் போன்ற முக இறுக்கத்தோடு.

''ஸ்காட்லாண்ட் போலீஸ் அல்லவா! சூரர்கள்! ஆனா ஸ்காட்லாண்ட் முதன்மை இன்ஸ்பெக்டரே! ஒரு வன்முறைக் குற்றத்தை நிகழ்த்தியாகணும்னு வெறியோடு நான் இங்கு வந்திருக்கும் பட்சத்தில், ஒரு வாடகைக் காரினை வெச்சுக்கிட்டு வந்து, 'பாரப்பா, நான் இந்த வீட்டுக்குள்ளே தான் போய் திரும்பப் போகிறேன்..'னு டாக்ஸி ஓட்டுநரையும் சாட்சியா நிறுத்திட்டு செயல்பட்டிருக்க மாட்டேன், இல்லையா...! இந்த நிதர்சனத்தை நீங்க எண்ணிப்

பார்க்கவேயில்லையா, இன்ஸ்பெக்டர்...! ஆஹ்..! அதோ பாருங்கள்...! பொய்ரெட் நினைத்திருக்கிறார்...!''

''ஆமாம்'' என்றான் பொய்ரெட், ''இப்படி எனக்குத் தட்டுப்பட்டது.''

''இப்படி சாட்சி வெச்சுக்கிட்டு தீர்த்துக்கட்டுவதல்ல, திட்டமிட்டு செய்யப்படும் ஒரு கொலை'' என விளக்கினார் மார்ஷ். தொடர்ந்தார்: ''என் நிலைமை, கையில தம்புடி இல்லாம ஆயிற்று. பணமேயற்ற நிலை. இது உங்களுக்கே விமரிசையாய் தெரிஞ்சிருக்கும்னு நினைக்கிறேன். என் பெரியப்பாவை வந்து சந்தித்தேன். கேட்டேன். மன்றாடினேன். அவருக்கு என் மீது அபிலாஷையே கிடையாது. ஆனா அவர் வகிக்கும் பதவி பெயர் கருதியாவது, அவரின் சகோதரன் மகனான நான் பிச்சை எடுக்கும் அளவுக்குத் தாழ்ந்து விட்டதாய் உலகம் பேசுவதை அவர் விரும்ப மாட்டார்னு நினைச்சேன். அவருக்கு முன் விரிந்துக் கிடந்ததென்னே, எங்களிருவருக்கும் இடையேயான சண்டை சச்சரவுகள் தானே அன்றி, நான் நினைத்தது போல, அவரின் பெயர் புகழெல்லாம் அல்ல.

''வெளியேறினேன். விதிப்படி நடக்கட்டும் - பொறுத்துத் தாங்கிக் கொள்ளனும்னு நினைத்து ஆறிக் கொண்டேன். அப்போதான் மேயர் வீடு நினைவுக்கு வந்தது. மாலையில் அவர்கள் அளிக்கும் விருந்துக்குப் போகும்போது, கடனாக அவங்ககிட்டே கேட்டுப் பார்ப்பதாய் முடிவெடுத்துக்கிட்டேன் - உள்ளூர எவ்வித நம்பிக்கையுமின்றி! செல்வி மேயரைத் திருமணம் செய்துக் கொள்ளலாமோனு கூட அப்போ எனக்குள் ஓர் எண்ணம் ஒளிர்ந்தது! இக்கட்டிலிருக்கும் போது என்னல்லாம் தோணுது பாருங்க! நானோ சீமான் வீட்டு கன்றுக்குட்டி - அதனால இப்படித் தோணியிருக்கலாம்! ஆனா எனக்கிருக்கும் வரலாற்றினைக் கேள்விப்பட்டா அந்தப் பெண் என்னை ஏற்றுக் கொள்ளுமா எனும் சந்தேகமும் இல்லாமலில்லை! இந்நிலையில் தான், எதேச்சையாக, சீமானின் மகளான கெரால்டினை அன்று சந்தித்தேன். அடிக்கடியெல்லாம் அவளை நான் சந்திப்பதில்லை. நான் மாளிகையில் வசிக்கும்போது மரியாதை மிகுந்து வளைய வந்த சிறு பெண்ணவள்! அவளைத் தனியே அழைத்துப் போய் என் நிலைமை முழுவதையும் அவளிடம் சொன்னேன். அவர் அப்பா மூலமாகவும், அரசலும் புரசலுமா என் நிலைமையைக் கொஞ்சம் அறிந்து வெச்சிருந்தா. அந்த சீமான், இதை மட்டும் குழந்தையிடம்

சொல்லியிருப்பார்... என்னைப் பற்றி தப்பான ஓர் அபிப்பிராயத்தை கெரால்டிடம் ஏற்படுத்த வேண்டாமா..! பிறகு, மன உறுதியோடு ஒரு முடிவினை எனக்கு அவ அறிவிச்சா; அவளுடைய முத்துக்களை அடைக்களித்து உதவுவதாகவும் மறுக்காமல் ஏற்றுக் கொள்ளும்படியும் சொன்னாள். அம்முத்துக்கள், அவள் தாயாருடையவை.''

கொஞ்சம் நிறுத்தினார் மார்ஷ். உண்மையாகவே உணர்ச்சி வசப்படுவதாய் அவர் குரலில் தெரிந்தது. அல்லது அப்படித் தோன்ற வேண்டும் என காட்டுகிறாரா... தெரியவில்லை!

தொடர்ந்தார்: ''இறைவனே வந்து உதவுவதாக நெனச்சு வந்துக்கிட்டேன். எனக்குத் தேவையான பணத்தை அம்முத்துக்களை வெச்சுக்கிட்டு என்னால புரட்ட முடியும். மிக விரைவா அவற்றை மீட்டுத் தந்துடுவேன்னு மண்ணின் மீது அடித்து சத்தியம் செய்தேன். இந்நிலையில் விளைந்த சங்கடம் என்னவென்றால், குழந்தை தந்து உதவுவதாக சொன்ன முத்துக்கள், ரீஜெண்ட் மாளிகையில் இருக்கின்றன, என்பதுதான்! உடனடியா கிளம்பிப் போய், தாமதிக்காது, அப்பொழுதே முத்துக்களை எடுத்து வந்து விடுவது தான், சிறப்பான செயல்னு ரெண்டு பேரும் முடிவெடுத்துக்கிட்டோம். அடுத்த கணமே ஒரு வாடகைக் காரினை அமர்த்திக் கொண்டு, பறந்தோம்.

''மாளிகை வாசலில் ஒரு வாடகைக் கார் வந்து நிற்கும் ஓசையை, உள்ளிருக்கும் ஒருவரும் கேட்டுடக் கூடாது என்ற முன்னெச்சரிக்கை காரணமாக, டாக்ஸியை, தெருவுக்கு எதிர்ப்புறத்தில், கொஞ்சம் தள்ளி நிறுத்தச் சொன்னேன். கெரால்ட் குழந்தை இறங்கி, தெருவைக் கடந்து மாளிகை இருந்தப்புறம் சென்றாள். அவளிடம் மாளிகையின் நிலைக் கதவு சாவி இருந்தது. எனவே அரவம் எழுப்பாமல் உள்ளே போய் அவளால் முத்துக்களைக் கொண்டு வந்துட முடியும். எதேச்சையாக யாராவது வேலைக்காரனுங்களைப் பார்த்துட்டாதான் உண்டு - மற்றபடி யாரையும் அவள் உள்ளே சந்திக்கப் போவதில்லை. காரியதரிசி கரோல், ஒன்பதரை மணிக்கு மேல் விழித்திருந்தது கிடையாது. சீமானே கூட, நூலகத்தில் தான் இருந்தாக வேண்டும்.

''இந்த அனுகூலங்களை மனத்தில் கொண்டு, கெரால்ட் போனா; நான் கார் பக்கம் முதுகுக் காட்டி அதில் சாய்ந்துக் கொண்டும், சிகரெட் ஒன்றினைப் புகைத்துக் கொண்டும், மாளிகையைப் பார்த்தவண்ணம் காத்திருந்தேன். போன குழந்தை, முத்துக்களோடு வருகிறாளானு அவ்வப்போது மாளிகையைப் பார்த்தபடி நின்றிருந்தேன். இப்போ

தான், நான் சொல்லிக் கொண்டிருக்கும் உண்மைக் கதையின் முக்கியமான பகுதிக்கு வரேன் - இதை நம்புவீங்களோ, மாட்டீங்களோ - உங்கள் இஷ்டம்! ஒரு மனிதன் நான் நின்றுக் கொண்டிருந்த நடை பாதை வழியே என்னைக் கடந்து போனான். யாருமில்லாத அப்பகுதி யில் ஒருவன் நம்மருகே நடந்துப் போவதால் உருவாகும் சிறு துணுக்குறலோடு அவனை நான் கவனிச்சேன். நான் ஆச்சரியப்பட்டுப் போகும்படி, தெருவைக் கடந்த அம்மனிதன், எண் 17க்குள் நுழைந்தான் - இது தான் எங்கள் பரம்பரை மாளிகை. ரீஜெண்ட் மாளிகை. நான் சற்றுத் தள்ளி நின்றுக் கொண்டிருந்தபடியால், அவன் நுழைந்தது பதினேழு என்று தான் குத்துமதிப்பா கவனிச்சேனே அன்றி, முடிவா தெரியல்லே. நான் இரு காரணங்களுக்காக ஆச்சரியப்பட்டுப் போனேன். ஒண்ணு, அவனிடமிருந்த சாவியால் நிலைக் கதவைத் திறந்துக் கொண்டு சிரமமின்றி உள்ளே நுழைந்தான்; இரண்டாவது, அவன் ஒரு பிரபல நடிகனோனு நான் அடையாளம் கண்டேன்.

''எனக்குள் எழுந்த ஆச்சரியம், என்ன சமாச்சாரத்துக்காக அவன் உள்ளே நுழைந்தான் என அறிய என்னைத் தூண்டியது. எண் 17ல் சாவி என் சட்டைப் பையில் அப்போ இருந்தது. சாவி, மூன்று வருடங்களுக்கு முன்னால என்னிடமிருந்து தொலைந்துப் போயிடுச்சுன்னு தான் எண்ணியிருந்தேன். எதிர்பாராது ஓரிரு தினங்களுக்கு முன் வேறெதையோ தேடிக் கொண்டிருந்தபோது எனக்கு அது மறுபடியும் கிடைச்சது. அன்று காலையே அதை பெரியப்பாவிடம் கொடுத்துடணும் எனும் திட்டத்தில் தான் நான் இருந்தேன். எனினும், இருவருக்குள்ளும் நடந்த வாக்குவாதத்தின் சூட்டில், மறந்துப் போயிடுச்சு.

''டாக்ஸி டிரைவரைக் கொஞ்சம் காத்திருக்கும்படி அறிவுறுத் திட்டு, தெருவை வேகமாய்க் கடந்து, எதிர்ப்புற நடைபாதையில் அவசரமாய் நடந்து, எண் 17னை அடைந்து, பூட்டப்பட்டிருந்த நிலைக் கதவினை என் சாவியால் திறந்தேன். முன் வரவேற்பறை ஹோனு காலியாயிருந்தது. யாரேனும் பார்வையாளர் மிக சமீபத்தில் வந்ததற்கான அறிகுறி எதுவும் அங்கு தென்படலே. என்னை நானே நிலைநிறுத்திக்கிட்டு, ஒரு நிமிடம் போல அப்படியே நின்னுக் கிட்டிருந்தேன். பிறகு, ஏதோ ஓர் உந்துதலில், நூலகக் கதவு வரை போய் நின்றேன். என் பெரியப்பாவோடு, வந்த அந்த மனிதன், உள்ளே இருக்கலாம். அப்படியாஎால், உள்ளிருந்து ஏதேனும் பேசும் சப்தம் வர

வேண்டும். நூலகக் கதவினை ஒட்டிப் போய் காது கொடுத்து நின்றேன். அப்படி எந்த பேசும் ஓசையும் உள்ளிருந்து வரவேயில்லை.

''திடீரென எத்தனை தாழ்ந்த வெட்கங்கெட்ட முட்டாள்தனமான செயலை நான் செஞ்சுக்கிட்டிருக்கேன் என்பதை உணர்ந்தேன். இந்தப் பெரிய மதில் சுவருக்குள், மாளிகைப் போன்ற சீமானின் வீடு தவிர, இன்ன பிற வீடுகளும்உண்டு. எல்லாமே பெரும் புள்ளிகளின் அரண்மனை போன்ற வீடுகள். ஒருவேளை, வந்த மனிதன், வேறு ஏதாவது வீட்டுக்குள் போயிருந்தால்...?! ரீஜெண்ட் பகுதி என கருதப்படும், இந்தப் பெரும் மதில் சுவருக்குள் அடங்கியுள்ள வீடுகள், இரவு வேளையில், மிக ஒளி மங்கிய விளக்குகளால் தான் ஒளியூட்டப்படுகின்றன. எந்த முட்டாள்தனமான காரணத்தால் நான் அந்த மனிதனைப் பின்தொடர்ந்து இத்தனை தூரம் உள்ளே வந்து நின்னுக்கிட்டிருக்கேன்னு எனக்கு விளங்கவேயில்லை. எதிர்பாராது என் பெரியப்பா மட்டும் உள்ளிருந்து வெளியே வந்து என்னைப் பார்த்துட்டா, என் நிலை..?! உதவ ஓடோடி வந்த குழந்தை கெரால்டையும் அல்லவா சேர்த்து வம்பில் இழுத்துப் போடுவேன்..! இதெல்லாவற்றுக்கும் காரணம் அந்த மனிதன் தான்... எதையோ செய்யப் போவது போலவும், அது ஒருவருக்கும் தெரிந்து விடக் கூடாது என்ற பாவனையிலும் அம்மனிதன் நடந்துக் கொண்ட விதம் தான், என்னை அந்த அளவுக்குத் தூண்டி இயங்க வைத்தது. அதிர்ஷ்ட வசமாக, அதுவரை ஒருவரும் என்னைக் கவனிக்கவில்லை. எவ்வளவு சீக்கிரத்தில் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் வெளியேற வேண்டும் என முடிவெடுத்தேன்.

''வேகவேகமாக, ஓசையே யெழுப்பாத பூனை நடை நடந்து நிலைக் கதவினை அடைந்த அதே கணத்தில், டைனா, கைகளில் முத்துக் கடைகளடங்கிய பெட்டியைச் சுமந்துக்கிட்டு, மாடிப் படிகளில் இறங்கியபடி வந்துக்கிட்டிருந்தா. டைனா- கெரால்டை நான் மிக மதிக்கும் போதும் அன்பு காட்டும் போதும் டைனானு நான் சொல்வேன்! டைனா என்றால் சுந்தரி என்று பொருள். என் அன்பு சகோதரி - கெரால்ட் ஒரு டைனா தான் - சுந்தரி! என்னைப் பார்த்ததில், வார்த்தை எழாது அப்படி விழித்தாள், நின்று விட்டாள். அவளைப் பிடித்து விறுவிறுவென வெளியே இழுத்து வந்து, நான் உள்ளே போனதற்கான அத்தனை காரணத்தையும் விளக்கினேன். பிறகு தாமதியாது கிளம்பி நடன விருந்துக்குப் பறந்தோம். சிறு

இடைவேளைக்குப் பிறகு தொடங்கவிருந்த அந்த நடனத்துக்காக மேடையின் திரைச் சீலை உயர்ந்துக் கொண்டிருந்தது. நடுவில் நாங்களிருவரும் வெளியில் போய் வந்ததற்கான சந்தேகம் அங்கிருந்த யாரிடமும் எழவில்லை. அன்னிக்கு ராத்திரி வெப்பம் சற்றுத் தூக்கலாயிருந்ததால், காற்றோட்டமாயிருக்கட்டுமேனு, ஏறக்குறைய எல்லோருமே, தோட்டம் நோக்கி, அடிக்கடி சென்று வந்த வண்ணமாய் தானிருந்தனர்.''

இப்பொழுது தன் கதை முழுவதையும் சொல்லி நிறுத்திக் கொண்டார் மார்ஷ். நாங்கள் மூவரும் எவ்வித குறுக்கீடும் செய்யவில்லை. அவரே மீண்டும் தொடரும்படியாயிற்று: ''இப்போ நீங்க முதல் கேள்வியா என்ன கேட்கப் போறீங்கனு எனக்குத் தெரியும்..! 'இதை.. இத்தனை பெரிய விஷயத்தை... ஏன் நீ முன்னமேயே எங்களிடம் சொல்லலை...?' இப்படித்தானே கேட்க விருப்பப்படறீங்க..?! நீ தான் கொலைகாரனுக்கான முழு இலக்கோடு திகழ்பவன் என, போலீஸ் லட்டி, என்னை நோக்கி ஆக்ரோஷமாக நீண்டுக் கொண்டிருக்கும் போது, கொலை நடந்த இரவு... அதுவும் கொலை நடந்த நேரத்தையொட்டி நான் ரீஜெண்ட் மாளிகைக்குச் சென்று வந்ததாய் சொல்வது, புத்திசாலித்தனமாகுமா...? அப்படிச் சொன்னாலும் தான், நீங்க, அத்தகவலை லகுவாக எடுத்துப்பீங்களா?

''வெளிப்படையாவே சொல்கிறேன்... நான் இத்தகவலை, வேணும்னேதான் மறைத்தேன்! இதை நீங்க உண்மையென நம்புவதாகவே இருந்தாலும், உங்களிடம் சொல்வது, எனக்கும் குழந்தை கெரால்டுக்கும் நிம்மதியற்ற மனக் குடைச்சலைத் தான் சேர்க்கும். கொலையோடு எங்களிருவருக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. நாங்க அங்கு எதையும் பார்க்கவுமில்லை. நாங்க அங்கு எதையும் கேட்கவுமில்லை. பெரியம்மா ஜானே தான் கொன்றிருக்க வேண்டும் என்று நான் தாராளமா நம்பறேன்'' என்றவர், தன்னை ஸ்திரமாக்கிக் கொண்டு கேட்டார்: ''இப்போ மறுபடியும் என்னை எதுக்கு இந்த வம்புல புகுத்தறீங்க? சீமான் எட்ஜ்வேருக்கும் எனக்கும் நிகழ்ந்துள்ள மனஸ்தாபங்கள்... எனக்கு ஏற்பட்ட பணமுடை எல்லாவற்றையும், எப்படியாவது நீங்க தூண்டித் துருவிக் கண்டு பிடிச்சிடுவீங்கன்னு அறிந்துதானே, நானே உங்களிடம் சொல்லி யிருக்கேன்...! அதையெல்லாம் சொல்லாமல் விட்டு மறைச்சிருந் தேன்னா, என்னை இன்னும் அதீத சந்தேகக் கண் கொண்டு துளைத்து,

அந்த இரவில் நான் எங்கெல்லாம் போய் வந்தேன் என்றறிய இன்னும் தீர்க்கமாய் துருவி, விசாரணை என்ற பெயரில் என் பிராணனை வாங்கியிருப்பீங்க..! ஒண்ணு தெரிஞ்சுக்குங்க... மூச்சு வாங்க, ஒரு திரைக்கதை போல இப்போ நான் சொல்லி முடித்துள்ளேனே, உண்மை, அது அத்தனையையும் சொல்லாமல், அப்படி எதுவுமே நடக்கலைனு நான் தலையிலடிச்சு சத்தியம் பண்ணி உங்களை வெளியேற்றியிருக்கலாம். தோர்த்திமேயர் குடும்பம், நான் விருந்திலிருந்து இம்மிக் கூட நகரவில்லை எனும் கருத்தில் தானிருக்காங்க! என் பெரியப்பா மகளுடன் நான் ஓர் அரை மணி நேரம் போல வெளியே போய் வந்ததெல்லாம் அவங்களுக்குத் தெரியாது - அப்படியே தெரிஞ்சாலும், சந்தேகப்படும் அளவுக்கெல்லாம் கொண்டு போய் விடாது! கெரால்டையும் நாங்களிருவரும் தத்தம் நடன விருந்தில் தானிருந்தோமே ஒழிய, நடுவில் கழன்றுக் கொண்டு வேறெங்கும் போய் வரவில்லை என்று சொல்ல வைத்து விட முடியும்.''

''இப்படி மறைத்து வைத்துப் பேச, செல்வி கெரால்ட் சம்மதித்தாரா?'' - ஜேப் இப்பொழுது இடை புகுந்துக் கேட்டார்.

''ஆமாம். சம்மதிச்சா. சீமான் இறந்த செய்தி கிடைத்ததும் முதல் வேலையா கெரால்டைத் தொடர்புக் கொண்டு, விருந்திலிருந்து வெளியேறிப் போய் மீண்டும் வந்து சேர்ந்துக் கொண்ட சேதியை, எக்காரணம் கொண்டும் வெளியே சொல்லக் கூடாதுனு எச்சரித்தேன் - அப்படிச் சொல்லிட்டா அது நம் உயிருக்கே உலை வைத்து விடும் என்றும் அறிவுறுத்தினேன். புரிந்துக் கொண்டாள். சம்மதித்தாள்.

''விஷயம் உங்க காதுகளுக்கு எட்டிய பிறகு, அதை நான் போட்டு உடைப்பதென்பது தவறுதான். முன்னமேயே சொல்லியிருக்கணும்! ஆனா, சொன்ன அத்தனையும் போதுமான அளவுக்கு உண்மை. இன்று காலை கெரால்டின் நல் முத்துக்களைப் பெற்றுக் கொண்டு எனக்குப் பணம் தந்த பெண் வியாபாரியின் முகவரியைக் கூடத் தருகிறேன்... போய் விசாரித்துக் கொள்ளலாம். அவளைப் போய் விசாரித்தீர்களே யாயின், நான் இவ்வளவு நேரமாய் சொன்ன ஒவ்வொரு அட்சரத்தின் மதிப்பும் தெரிய வரும்.''

இவ்வளவு தான் என்பது போல் முடித்துக் கொண்டு, தன் இருக்கையில் வசதியாய் சாய்ந்து அமர்ந்தார் மார்ஷ்.

ஜேப், தொடர்ந்து எவ்வித உணர்ச்சியும் பிரதிபலிக்காது தான் இருந்தார். ஆனால், பின்வரும் கேள்வியைக் கேட்டார்: ''சீமான்

எட்ஜ்வேரை, ஜானே தான் கொன்றிருக்க வேண்டும்னு நினைப்பதாய் சொன்னீங்க...?''

''ஏன், நீங்க மட்டும் அப்படி நினைக்கவில்லையா என்ன...? பட்லரின் கதைக்குப் பிறகாவது நினைத்திருக்க வேண்டுமே...!''

''மிஸ் ஆடம்ஸுடனான உங்கள் பந்தயம் பற்றி..?''

''ஆடம்ஸுடன் பந்தயம்? யார்.. கர்லோட்டா ஆடம்ஸையாக் குறிப்பிடறீங்க...? அவருக்கும் பேசிக் கொண்டிருக்கும் சமாச்சாரத் திற்கும் என்ன இணைப்பு..?''

''சம்பவ இரவன்று, ஜானே வில்கின்ஸனைப் போல மாறுவேடம் பூண்டு ரீஜெண்ட் மாளிகைக்குள் வந்து செல்வதற்காக, செல்வி ஆடம்ஸுக்கு, நீங்க பத்தாயிரம் டாலர்கள் கொடுக்கலே..?''

ரொனால்ட் மார்ஷ் கண்ணகல விழித்தார். ''அவருக்கு பத்தாயிரம் டாலர்கள் கொடுத்தேனா...? யார்..? நானா..? முட்டாள்! அடி முட்டாள்! பணியாட்களை வைத்துத் தூக்கிப் போட்டு விடுவேன், உங்களை - நினைவிருக்கட்டும்! யாரோ எதையோ கதை கட்டி விட்டா, அதைத் தூக்கிக்கிட்டு விசாரணை என ஓடி வந்து விடுவீங்களா என்ன? கற்பனையில் வாழாதீங்க..! அவரே உங்களிடம் சொன்னாரா? கூட்டி வாருங்கள் கேட்போம்...! ஓஹ்...! சே...! அவர் இறந்து விட் டாரில்லை...?''

ரொனால்ட் மார்ஷ், எங்களில் ஒருவர் மாற்றி மற்றொருவர் மீது தன் கண்களை மேய விட ஆரம்பித்தார். இத்தனை நேரம் வளவளவென பேசித்தள்ளிய அவருக்கு இப்பொழுது ஒரு வார்த்தை கூட எழவில்லை. பந்தயம் பற்றிக் கேட்குமுன்வரை தேர்ச்சியடைந்த மரியாதைக்குரிய வராய் தான் பதற்றமின்றிக் காணப்பட்டார். இப்பொழுதோ, முகம் வெளிறிப் போக, மானின் மிரட்சி பொங்கி வழியும் பீதிப் பார்வையைக் காட்டிக் கொண்டிருந்தார். அவர் முகம் முழுவதும் ஒரு சிறு வியர்வைப் போர்வை விளைந்திருந்தது.

''எனக்கு நீங்க சொல்லும் இப்புது சேதி கொஞ்சமும் விளங்கலே'' என்றார். ''நான் சொன்னவை அனைத்தும் உண்மை. ஆனா நீங்க அவற்றை நம்பவேயில்லை - மூவருமே நம்பவில்லை.''

இப்பொழுது, நாங்களிருவரும் அதிசயிக்கும்படி, பொய்ரெட் முதுகு வளைத்து, தன் இருக்கையிலிருந்து முன் வந்து, இந்த நீண்ட சம்பாஷணையில், முதலும் கடைசியுமாக வாய் திறந்து சொன்னான்: ''நான் முழுக்க முழுக்க உங்களை நம்பறேன்.''

அத்தியாயம் - 22

# ஹெர்குல் பொய்ரெட்டின் விநோத நடத்தை

நானும் ஹெர்குல் பொய்ரெட்டும் எங்கள் இருப்பிடத்தில் இருந்தோம்.

''என்ன நடக்குதுனே பிடிபட மாட்டேங்குது. ஒவ்வொருவரும் தாங்கள் சரி என்றே - - -'' கட்டுப்பாடற்று மிதமிஞ்சிய வேகத்தோடு, கையை, 'போதும், நிறுத்து' என்று எனை நோக்கி நீட்டிக் காட்டி, நீட்டிய கைகள் காற்றில் சன்னமாய் நடுங்கிக் கொண்டிருக்கும் அளவுக்கான ஆக்ரோஷத்தோடு, அப்படியே நின்றுக் கொண்டிருந்தான் பொய்ரெட். இப்படி ஒரு குரோத நிலையில் நான் துப்பறியும் நிபுணனை என் வாழ்நாளில் பார்த்ததில்லை. வழக்கினை நம் மனத்துக்குள் நுழைய விட்டு, அது நம்மை ஆட்கொள்ளும் அளவுக்கு செய்து கொள்ளக் கூடாது என்று சொல்லவல்ல பொய்ரெட்டா இப்படி ஆடிப் போயிருப்பது?

''உன் கால்ல விழுந்து யாசித்துக் கேட்டுக்கறேன், ஹேஸ்டிங்ஸ்..! இப்போ வேண்டாம்... இப்போ வேண்டாம்.''

இப்படிச் சொல்லி முடித்த கணத்திலேயே, பறித்தெடுக்கும் வேகத்தில் தன் தொப்பியை எடுத்துத் தலையில் பொருத்திக் கொண்டு, ஏதும் சொல்லிக் கொள்ளாது எங்கள் ஜாகையை விட்டு வெளியேறியே விட்டான். இது நடந்து ஒரு மணி நேரம் கழித்து ஜேப் வரும் வரை கூட, பொய்ரெட் திரும்பவில்லை.

''குள்ளர் வெளியே போயிருக்கிறாரா...!'' - விசாரித்தார் ஜேப்.

நான் ஆம் என தலையசைத்தேன்.

ஜேப், தன்னை ஓரிருக்கையில் புதைத்துக் கொண்டார். தன் முன் நெற்றியைக் கைக் குட்டையால் துடைத்துக் கொண்டார். இன்று உஷ்ணம் சற்று அதிகம்.

''எந்த சிந்தனை அவரை வெளியே இழுத்துப் போயிருக்கு? அந்த மார்ஷின் முகமருகே போகும்படி தன்னை நன்றாய் முன்னால் வளைத்து நெருங்கி, 'நான் முழுக்க முழுக்க உங்களை நம்பறேன்'னு இந்த பொய்ரெட் சொன்ன போது, நீங்க என்னை செருப்பால அடித்திருக்கலாம், ஹேஸ்டிங்ஸ்..! நாடகக் காட்சியில் நடிப்பது போல எப்படி அனுபவித்துச் சொன்னார், கவனிச்சீங்களா...? சீமானைக் குற்றம் சாட்டி விசாரித்துக் கொண்டிருந்த என்னையும் வெச்சுக்கிட்டு, இந்த துப்பறியும் குள்ளர், சீமானுக்கு சாதகமாய் அப்படிச் சொன்னது, என்னைப் பளார் பளார்னு அறைவதைப் போலிருந்தது. சே.''

நானும் ஜேப் போலத் தான் உணர்ந்தேன். ஒப்புக் கொண்டேன்.

''இப்போ நம்மை இங்கு விட்டுட்டு, மணிக்கணக்காய் வெளியே போய்ட்டார். வெளியே போய் துப்பறி துப்பறினு சொல்லும் போது ஒண்ணையும் காணோம். இப்போ என்ன காரணத்துக்காக வெளியே போயிருக்காராம்...?''

''ஒண்ணுமில்லே'' என்றேன் நான். தெரிந்தால்தானே சொல்ல! அதற்காக பதில் சொல்லாமலும் இருக்க முடியாதே!

''ஒன்றுமேவா இல்லை..?''

''சுத்தமாய் ஒண்ணுமில்லை இன்ஸ்பெக்டர். வரும் வழியில் நான் வழக்கு குறித்துப் பேச ஆரம்பித்த போது, புயலாய் என்னை ஒரு முறை முறைத்தான். அப்படி அவனைப் பார்த்த நான், மூர்ச்சையாகிப் போனேன். ஏதோ ஆழ்ந்த சிந்தனை போலும்! அவனைத் தனியாய் விட்டு விடுவதே மேல்னு தோன்றியது எனக்கு! இங்கு வந்ததும் ஆறியிருப்பான்னு நெனச்சு மறுபடியும் ஆரம்பிச்சேன். அடிக்காத குறைதான் போங்க...! வாய் திறக்காதேனு உணர்த்தினான். கீழே கிடந்த தொப்பியை அப்படியே அபகரித்து எடுத்தான். ஓட்டமாய் வெளியேறிட்டான்.''

இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம் - பொய்ரெட் இல்லாது நாங்களிருவரும் ஒன்றுமில்லை என நிரூபணமாகிய தருணம். ஜேப் முன் வழுக்கையைத் தட்டிக் கொண்டிருந்தார் - அங்கிருந்து கதவு திறந்துக் கொண்டு ஏதோ விழப் போவது போல!

முன்பு, பல வழக்குகளில், பொய்ரெட்டை, 'என்னைத் தொட்டவர்' என்று இந்த ஜேப் வர்ணித்திருக்கிறார். பொய்ரெட்டின் சிந்தனைக்குள் என்னதான் ஓடிக் கொண்டிருக்கிறது என்பதை ஜேப்பால் அறிய முடியாததாலும், ஆனால், சிந்தித்து விட்டு கடைசியில்

பொய்ரெட் காட்டும் ஒளிதான் வழக்கை முடித்துப் போடும். அதனாலும் தான், 'என்னைத் தொட்டவர்' என பொய்ரெட்டைத் தூக்கி வைத்துப் பேசுவதாய் நான் கருதினேன். ஆனால், இப்பொழுது இங்கு, என்னால், பொய்ரெட்டினுள் எழுந்துள்ள இந்த விநோத நடத்தையைப் புரிந்து கொள்ளவே இயலவில்லை என்றுதான் சொல்லத் தோன்றுகின்றது. சந்தேகப்படும்படி மாறியுள்ளான். நாங்களெல்லோரும் ஆச்சரியமும் அதிசயமும் அடைந்து அவனைப் புகழும்படி, அவன் எப்படி கணித்து வைத்திருந்தானோ, அப்படித் தானே வழக்கு இப்பொழுது வடிவம் கண்டுள்ளது..? மறுபடியும் ஏன் சாந்தி பெறாமல் புனருத்தாரணம் செய்கிறான்...?

இப்படி நடந்துக் கொள்கிறானே... இவனுக்கு என்னாயிற்று என்று அவனுடைய நல் நண்பர்கள் எல்லோரும் மனக்கிலேசம் கொண்டு வருந்தி அச்சப்படும்படிச் செய்கிறான். அதைரியமடைந்து மறுப்பாய் தலையசைத்துக் கொண்டேன் நான்.

''அவர் இப்போது என்றல்ல... எப்போதுமே விநோதமானவர் தான்!'' என்று பேச ஆரம்பித்தார் ஜேப். என் மனம் முழுதும் என் அருமை நண்பன் எங்கு போனான்... அவனுக்கு என்ன ஆயிற்று... என்பதிலேயே சுழன்றுக் கொண்டிருந்ததால், இந்த இன்ஸ்பெக்டர் எவ்வளவு பேச வேண்டுமோ, அவ்வளவு பேசிக் கொள்ளட்டும் என விட்டு விட்டேன். தொடர்ந்தார்: ''விவகாரங்களை, அவருக்கென்று உள்ள கோணத்தில் தான் பார்ப்பார் - அதுவும், முழுக்க முழுக்க ஒரு சந்தேகக் கோணம். அவர், துப்பறியும் உலகில், மேதாவிகளுக்கெல்லாம் மேதாவி தான் - இதில் இரண்டாம் கருத்துக்கு இடமில்லை. இப்படிப்பட்ட அதி மேதாவிகள், சுயக் கட்டுப்பாட்டின் உச்சத்தில் தான் எப்போதும் இருப்பார்கள் என்றும், எந்நேரத்திலும், அக்கட்டுப்பாட்டு உச்சியிலிருந்து சறுக்கி விழுந்து விடும் அபாயம் மிக்கவர்கள் என்றும் சொல்லிக் கேள்விப்பட்டிருக்கேன். அது நடந்து விட்டதோ என்னவோ! எந்த பிரச்சனையும் மிகக் கஷ்டமான பாதையில் சென்று தான் முடிய வேண்டும் - அதுதான் சரி - என்றே எதிர்பார்க்கும் குணம்! நேரடியாய், தேங்காய் உடைத்தது போல முடிந்துவிடும் எந்த வழக்கிலும் அவருக்குத் திருப்தி ஏற்படாது - இது, அவருடனான என் அனுபவம்! ஆளை உலுக்கி எடுக்கணும் - அப்படி முடியும் வழக்குதான் அவருக்கு சாத்தியமான வழக்கு! எங்கிருந்து கற்று வந்தாரோ, இப்படி ஒரு குணத்தை!''

இதற்கு பதில் தருவது எனக்குக் கடினமானதாக இருந்தது. எனக்கும், ஜேப் கூறியது போல, பொய்ரெட்டின் அணுகுமுறையை, எதிலும் சேர்த்துப் பார்க்க இயலவில்லை. ஆயினும், இப்படி விமர்சனத்துக்குள்ளாகும் பொய்ரெட் என் உயிரினும் மேலான ஆத்ம நண்பனாயுமிருப்பதால், சொல்லொணா கவலை என்னுள் விளைந்தது.

இருவரும் உரையாட வார்த்தை ஏதும் எழாது அமைதியாயிருக்கும் போது, பொய்ரெட் அறைக்குள் நுழைந்தான்.

என் இறுக்கம் தளரும்படி, கவலை ஓயும்படி, நல்ல வேளையாக, இப்பொழுது போதுமான அளவு அமைதியோடு வந்திருந்தான் ஹெர்குல் பொய்ரெட்.

வழக்கம் போல, எவ்வித அவசரமுமின்றி அமைதியாக தன் தொப்பியைக் கழற்றி வைத்தான். வைக்கும் ஒலி கூட எழாது, பக்குவமாய் தன் சிறு கைத்தடியை மேஜையில் வைத்தான். அவனுக்குண்டான இருக்கையில் மரியாதை பொங்க அமர்ந்தான். இது - என் சராசரி பொய்ரெட்!

''என்ன, இனிய ஜேப்..! இவ்வளவு தூரம்..! சந்தோஷம்..! எனக்குள்ளும், எவ்வளவு விரைவாய் முடியுமோ, அவ்வளவு சீக்கிரமா உங்களைச் சந்திக்கணும் என்ற எண்ணமிருந்தது.''

ஜேப் பதில் தராது பொய்ரெட்டையே பார்த்தார். பொய்ரெட் எதையோ ஆரம்பிக்கிறான்... விளக்கட்டும் எனும் எதிர்பார்ப்பில் அமைதியாயிருந்தார் இன்ஸ்பெக்டர்.

இதை உணர்ந்துக் கொண்ட பொய்ரெட், மெதுவாக மற்றும் கருத்துப் பொதிந்த முக்கியத்துவக் குரல் தந்து பேச ஆரம்பித்தான்: ''நாம் தவறாக இருந்துட்டோம், திரு ஜேப்! நாம் எல்லோருமே தவறாக இயங்கிட்டோம்! இத்தனை கடந்த பிறகு இவ்வுண்மையை ஏற்றுக் கொள்வது தாங்க முடியாத வலியாகத் தானிருக்கும். ஆனா நாம தவறு செய்துட்டோம்.''

''போகட்டும்'' என்றார் ஜேப் நம்பிக்கையாய். ''பல வழக்குகள் அப்படித்தான் முடிவது போல் தோன்றும்; ஆனா மீண்டும் புதிதாய் உருவெடுத்து வளரும்.''

''அது தவறல்லவா! நாம முயன்று மெனக்கெட்டு செய்த அத்தனை உளவுகளும் தவறு என்பது கேவலமல்லவா! அப்படியாகி விடுவது வருந்தத்தக்கது! நான் என் நெஞ்சில் ரத்தம் கசிய வருந்தறேன் - விசனப்படறேன்.''

''தவறாகவே போயிருக்கட்டும். அதற்குப் போய் அதர்மமாய் ஏதோ செய்துவிட்டது போல கலங்க வேண்டியது அநாவசியம்! அந்த சீமான் செய்த அத்தனைக்கும், என்ன தேவையோ அவற்றைத் தான் இப்போ அனுபவிச்சுக்கிட்டருக்கார்.''

''அவருக்காக நான் வருந்தவில்லை, திரு. ஜேப். நான் வருந்துவது, உங்களுக்காக..!''

''எனக்காகவா...! போச்சுடா...! உங்களுக்குக் கூட இப்படி மனமுடைய தெரியுமா...! எனக்காகவெல்லாம் நீங்க விசனப்பட வேண்டும், திருமிகு பொய்ரெட்...''

''ஆனா, வாடுகிறேனே...! நான் மனச்சாட்சியால் ஆக்கப்பட்டவன், திரு. ஜேப்...! அது கேட்கும் கேள்விகளுக்கு என்னால பதில் தர முடியாவிட்டால், நான் அழிந்தே விடுவேன்! இந்த வழக்கு இப்போது அடைந்துள்ள நிலையை அடைய உங்களைத் தூண்டியது யார்...? அது நான். அது - ஹெர்குல் பொய்ரெட். நான் தான் என் சிந்தனைகளையெல்லாம் உங்க மீது திணிச்சேன். உங்கள் சிந்தனைக் கோணத்தை, நான் தான் கர்லோட்டா ஆடம்ஸ் பக்கமா திருப்பி விட்டேன்... அமெரிக்க கடிதம் பற்றிய தகவலையும் நான் தான் உங்களுக்குள் புகுத்தினேன். உங்களின் ஒவ்வொரு நகர்த்தலுக்கும், நான்தான் திசை காட்டினேன் - உங்களை, நீங்களாய் சிந்தித்து நகரயியலாதபடி முடமாக்கி விட்டேன்.''

''அய்யய்யே..! யாராவது மந்திரம் போட்டு உங்க தைரியத்தைக் குலைச்சுட்டாங்களா என்ன...! நீங்க சொல்லாவிட்டாலும், மேற்கூறிய அத்தனை விஷயங்களையும் நானாகவே அடைந்திருப்பேன், திரு பொய்ரெட்! வழக்கம் போல், எனக்கு முன்னால, நீங்க, அதிபுத்திசாலியாகவும், அதி வேகமாகவும், சிந்தித்து இயங்கி முன்னேறிட்டீங்க. அவ்ளோதான்.''

''இது எனக்கு ஆறுதல் தரலே. நான் சொன்ன துப்புக்களைக் கொண்டு நீங்க இயங்கியுள்ள நிலையில், உங்களுக்கு ஏதேனும் அவப்பெயரோ, உபத்திரவங்களோ நேரிட்டா, நான் என்னை மிகக் கசப்பாக நொந்துக்குவேன்.''

ஜேப், விடை தெரியாத புதிர் ஒன்று தரப்பட்டவரைப் போல தெரிந்தார். இச்சிக்கலான வழக்கைத் தெளிவாக்குவதால், அரசாங்கத்திடமிருந்தும் மேலும் பல முனைகளிலிருந்தும் விளைய வல்ல நற்பெயரனைத்தும் தனக்கே வந்து சேரும் எனும் பொறாமையால் தான்

பொய்ரெட் இப்படிப் பேசுகிறார் என ஜேப் எண்ணிக் கொண்டிருப்பதை, என்னால் அவர் முகத்திலிருந்து துல்லியமாய் படிக்க முடிந்தது. கேவலமான நினைப்பு - ஆனால், அதுதானே ஜேப்! பொய்ரெட் எனும் மரத்தை உலுக்கி எடுத்து, எத்தனை பழங்களை அடைய முடியுமோ, அத்தனையையும் அடைந்து விடுவார்! இது, இந்த மட பொய்ரெட்டுக்கு எத்தனை சொன்னாலும் விளங்காது. சீமான் எட்ஜ்வேரின் கொலை வழக்கு காற்றில் பறக்க, இப்போது பொய்ரெட் - ஜேப் வாக்குவாதம் முதன்மையாகி விடுமோ எனும் பயம் எனக்குள் வந்தது! எனது இந்தக் கணிப்பு அத்தனையையும் ஊர்ஜிதப் படுத்தும்படி அமைந்தது, ஜேப் பேசிய பின்வரும் வாக்கியம்!

''கவலைப்பட வேண்டாம் பொய்ரெட்..! (கிண்டல் கலந்து நாடகப் பாணியில் இப்படிச் சொன்னார்). இவ்வழக்கு சுபமாய் முடிந்ததில், துப்பறியும் நிபுணர் ஹெர்குல் பொய்ரெட்டுக்கும் கணிசமான பங்கு இருந்தது என மேடை கட்டி அறிவிக்க நான் தவறவே மாட்டேன்.''

இழுத்து வைத்து நாலு அறை அறையலாமா என ஆவேசம் எழுந்தது எனக்கு. பொய்ரெட்டா... உண்மையை மட்டுமே தேடும் பொய்ரெட்டா... பெயர் புகழுக்கு அலைபவர்..?

''ஓஹ்...'' என வெகுளியாய் மறுத்தான் பொய்ரெட். ''அது அல்ல என் பிரச்சனை'' என்ற பொய்ரெட், முட்டாளடா நீ என்பது போல் நாக்கிலிருந்து பொறுமையிழந்த ஓர் ஒலி எழுப்பிக் காட்டினான். தொடர்ந்தான்: ''எனக்கு பெயர் புகழ் வேண்டாம். இவ்வழக்கு போறப் போக்கை வெச்சுப் பார்த்தா அப்படி ஏதும் கிடைச்சுடும் போலத் தெரியலே. படு தோல்வியை நோக்கி நீங்க உங்களை செலுத்திக் கொண்டிருக்கீங்க - அதுக்குக் காரணகர்த்தா - நான்.''

பொய்ரெட் இவ்வாறு மிகுந்த வருத்தம் தோய்ந்த வெறுப்பிலிருக்க, எதிர்பாராது கடகடவென இடியாய் சிரித்தடங்கினார் ஜேப். பொய்ரெட் பகிரங்கமாகத் தாக்கப்பட்டவனாய் அவமானப்பட்டான்.

''மன்னிச்சுடுங்க திரு பொய்ரெட்'' என்று தனது செய்கைக்கு வருத்தம் தெரிவித்த ஜேப், சிரித்த சிரிப்பில் அவரது கண்ணோரம் கசிந்திருந்த கண் நீரை வழித்தெறிந்து விட்டு, விரிவாய் பேசலானார்: ''கவனிங்க, பொய்ரெட். எல்லாத்தையும் மறப்போம். சரியா...?! வருவது புகழோ, அல்லது இகழோ... அதை நான் என் தோளில் தாங்கிக்கறேன். நீங்க அதுக்குப் போய் இப்படி ஊரையெல்லாம் கூட்டி விசனப்பட வேண்டாம். நான் எடுத்துள்ள அதிரடி நடவடிக்கையால,

பூகம்பம் வெடிக்கும்னு நீங்க உணர்வது சரிதான். நீதிமன்றம் மூலம், அந்த சீமான் மார்ஷ் தான் குற்றவாளியென தீர்ப்புக் கூற வைப்பேன். புத்திக் கூர்மை நிறைந்த சட்ட ஆலோசகரோ அல்லது வக்கீலோ, சட்டத்திலிருக்கும் சாதகமான ஏதேனும் ஓர் ஓட்டையைக் கண்டுபிடிச்சு, அதன் மூலம் சீமான் மார்ஷை வெளியே கொண்டுவர வாதாடலாம்! ஆனா நானும் விடாமல் போராடுவேன். சாட்சிகளை வைத்தே தீர்ப்பு கூறும் நீதிமன்றம் என்ன முடிவெடுக்கும்னு நமக்குத் தெரியாது. தீர்ப்பு, அவருக்கு சாதகமாகி அவர் வெளியே வந்து விட்டாலும், எனக்கு எந்தக் கெடுதலும் யாராலும் நேரா. அவருக்கு தண்டனை வாங்கித் தராவிட்டாலும், சரியான நபரைத்தான், சீமான் என்றும் கருதாது நாம் கைது செய்துள்ளோம் எனும் நற்பெயர் நிச்சயம் கிடைக்கும். அது போதாதா! பேசாமல் இருமய்யா.''

பொய்ரெட், ஜேப்பினை, அனுசரணையாகவும், பரிதாபமாகவும் பார்த்துக் கொண்டேயிருந்தான். ''அபரிமித நம்பிக்கை உள்ளது, உங்களுக்கு'' என்றான். ''எப்பவுமே உங்களுக்கு நம்பிக்கை தான். நீங்க சந்தேகிப்பதே கிடையாது. அல்லது, அதிசயித்து 'இப்படியிருக்க முடியுமா'னு யோசிப்பதும் கிடையாது. மொத்தத்தில் சிந்திப்பதே கிடையாது - ரொம்ப சுலபமான வேலை!''

''உங்க வாழ்க்கையையே துப்பறிதலுக்கு நீங்க எழுதி வெச்சுட்டீங்க - நான் அப்படியேதும் செய்யலே. இது தான் வித்தியாசம். ஒரு வழக்கு ஏன் துவங்கிய அன்றே முடியக் கூடாது? ஒரு சமாச்சாரம் வெகு சுலபமாய் பைசல் ஆவதில் உங்களுக்கு என்னய்யா சிரமம்?''

பொய்ரெட் ஜேப்பைப் பார்த்தான். பெருமூச்செறிந்தான். எதற்காகவோ தன் கையைப் பாதி தூக்கினான். பிறகு தூக்கிய கையை மறுத்தசைத்து, அப்படியே இறக்கிக் கொண்டு விட்டான். ''இனி பேச ஒன்றுமில்லை.''

''ரொம்ப சந்தோஷம். ஆனா, நான் என்ன காரியங்களையெல்லாம் முடித்துள்ளேன் என கேட்கலாமில்லையா? எனக்குப் பேச நிறைய இருக்கு..!''

''நிச்சயமா, நிச்சயமா..''

''நான் மாண்புமிகு கெரால்டினை சந்தித்து வந்தேன். அவர் சொன்ன முழுக் கதையும், மார்ஷ் சொன்ன வாக்குமூலத்தோடு மாற்றமின்றி ஒன்றிப் போகுது. இருவர் சொல்வதும் ஒன்று போலவே இருந்தாலும், எனக்கென்னவோ, இந்த மார்ஷ், கெரால்டிடம்,

வேண்டாததைப் பேசி மயக்கியிருப்பாரோனு தோணுது. அப்படி மயக்கி, தன் கதையையே இச்சிறுமியையும் ஒப்புக் கொள்ளும்படி மூளைச் சலவை செய்திருப்பாரோனும் தோணுது. மார்ஷிடம் அத்தனை நம்பிக்கை வெச்சிருக்கு, கெரால்ட். மார்ஷைக் கைது செய்து அழைத்துப் போகும்போது நொறுங்கிட்டார்.''

''அந்தக் காரியதரிசி கரோல்..?''

''அவங்களைப் பார்த்தா - நடக்கக் கூடாதது நடப்பதாய் எண்ணுவது போல தோணலே. இது என் தனிப்பட்ட கருத்து.''

''அந்த முத்துக்களுக்கு என்னாயிற்று?'' எனக் கேட்டேன் நான். ''அவை குறித்து மார்ஷ் சொன்னதெல்லாம் உண்மைதானா?''

''அப்பழுக்கில்லாமல்..! அவற்றை வைத்து, மறுநாள் காலையிலேயே பணம் பண்ணியிருக்கார். ஆனா, இந்த முத்துக்கதை, நம் வழக்குக்கு அத்தியாவசியமற்றதாய் தான் நான் நினைக்கிறேன். நடன விருந்தில் கெரால்டைப் பார்த்ததும் தான், இந்த முத்துக் குவியல் குறித்த திட்டம், மார்ஷின் மூளைக்குள் கிளம்பியிருக்கணும். தப்பிப் பற்ற நிலையில் இருந்தார் - உடனே கை மேல் வழி கிடைச்சுடுது. இப்படி ஏதாவது செய்யணும்னு அவருக்குள் நீண்ட காலமாகவே ஒரு திட்டம் இருந்திருக்க வேண்டும் என்பதுதான் என் எண்ணம் - அதனால தான் சாவியை பத்திரமாகத் தன்னிடமே வெச்சுக்கிட்டே இருந் திருக்கார். இத்தனை நாட்கள் இல்லாமல் திடுதிப்பென்று சாவி வானத்திலிருந்து வந்து விழுந்தது என்பதெல்லாம் கற்பனைக் கதை. கெரால்டோடு பேசிக் கொண்டிருந்தபோது, அவரையும் இந்தத் திட்டத்துல புகுத்துவதால், தனக்குக் கூடுதல் பாதுகாப்பு கிடைப்பதை மார்ஷ் உணர்ந்திருப்பார். தன் மீது சிறுமிக்குள்ள பாசத்தைப் பயன்படுத்திக்கிட்டு, முத்துக் கதையை அவிழ்த்து விடறார். அந்தச் சிறுமியும், அக் கதையினை ஏத்துக்கிட்டு அரங்கேற்றிடுது. சீமான் எட்ஜ்வேரின் மாளிகைக்குள் கெரால்ட் நுழைந்த மறுகணமே, பின்னாலேயே மார்ஷும் நுழையறார். அப்படியே நூலகம் போறார். சீமான் எட்ஜ்வேர் நல்ல உறக்கத்தில் இருந்திருக்கணும். அப்போ உள்ளே போறார் இவர். ஓரிரு நிமிடங்கள் தான் - திட்டத்தை முடிச்சுட்டு நூலகத்தை விட்டு மறுபடியும் வெளியே வந்துடறார். கெரால்ட் கண்களில் அகப்பட்டுக் கொள்வதை மார்ஷ் எதிர்பார்த்திருக்க மாட்டார். மேலும், அந்த டாக்ஸி டிரைவரும், மார்ஷ் மாளிகையின் உள் வரை போவதைப் பார்த்திருக்க மாட்டான்'னே நினைக்கிறேன்.

வீட்டு வாசல் வரை போய் நின்னுக்கிட்டு, உள்ளே போன பெண் வெளியே வரும் வரை காத்திருப்பது போன்ற பதிவைத் தான், மார்ஷ், அந்த டிரைவரிடம் உண்டுபண்ணியிருப்பார். டாக்ஸி, எதிர் திசை பார்த்து நின்றுக் கொண்டிருந்தது - மேலும், டிரைவர் டாக்ஸியை விட்டு இறங்கலே - இவற்றையும் நாம மறக்கக் கூடாது.

''மறுநாள், முத்துக்களை அடகு வைத்தாக வேண்டும். செய்கிறார். கொலை குறித்த செய்தி பரவத் தொடங்கியதும், இரவு மாளிகைக்குச் சென்று வந்ததை வெளியே சொல்லவே கூடாது என சிறுமியை பயமுறுத்தறார். நடன அரங்கினை விட்டு வெளியே போகவேயில்லை என்ற கட்டுக்கதையை இருவரும் முடிவாக்கிக் கொள்கின்றனர்.''

''பிறகு ஏன் அந்தப் பொய்யைக் கடைசி வரை அவர்கள் காப்பாற்றவில்லை?'' கூராய் கேட்டான் பொய்ரெட்.

ஜேப் தோள்களைக் குலுக்கிக் காட்டினார். ''முடிவினை மாற்றிக் கொண்டார். அல்லது, அந்த சிறுமியால் ரகசியத்தை வெகு நாட்கள் மூடிக் காக்க இயலாது என உணர்ந்திருப்பார். அவள் ஒரு நரம்பதிரும் பயப் பெண்.''

''ஆமாம்'' என்றான் பொய்ரெட், சிறு சிந்தனையோடு. ''அவள் ஒரு பட படப்பு பெண் தான்.''

சில நிமிடங்கள் ஆழ்ந்த சிந்தனையிலிருந்த பொய்ரெட், ஜேப்'பை அப்பொழுது கேட்டார்: ''அவர் மட்டும் தனியாக நடன விருந்தினை விட்டு நழுவி, வெளியேறிப் போய்விட்டு, பின் ஓசையின்றி மீண்டும் விருந்துக்குள் வந்திருப்பதுதான், மார்ஷுக்கு சுலபமாயும் பாதுகாப்பாயும் இருந்திருக்கும்னு உங்களுக்குத் தோணலியா? எந்த அரவமுமின்றி, யாருக்கும் தெரியாம, மாளிகை நிலைக் கதவினை ஓசையெழுப்பாது திறந்து, உள் சென்று, பெரியப்பாவைத் தீர்த்துக் கட்டிட்டு, கமுக்கமாய் மீண்டும் நடன விருந்துக்கு வந்திருப்பது புத்திசாலித்தனமா அல்லது படபடப்பாய் எப்போ வேணும்மானாலும் காட்டிக் கொடுக்கக் கூடிய சிறு பெண்ணை அழைச்சுக்கிட்டு, ஒரு வாடகைக் காரையும் சாட்சிக்கு இழுத்துக்கிட்டுப் போய், நினைத்த காரியத்தை முடித்து விட்டு வருவது புத்திசாலித்தனமா...?!''

பேசிய ஜேப் பற்களைக் கடித்தார். ''மார்ஷ் ஒரு குற்றவாளி இல்லை எனும் பட்சத்தில், அவர் ஏன், கெரால்டைத் தன்னுடனேயே அழைத்துப் போய் திரும்பியிருக்க வேண்டும்? அதற்கு காரணம் ஒண்ணே ஒண்ணு தான், திரு. பொய்ரெட் - உண்மையான

குற்றவாளியை மறைக்க..! அதாவது தன்னை மறைத்துக் கொள்ள..! மார்ஷ், சீமான் எட்ஜ்வேரின் அறைக்குப் போகவேயில்லை என அடித்து சாட்சி சொல்ல, இப்போ கெரால்ட் தயார், இல்லையா..?!''

''உங்களின் இக்கருத்தை நான் அடியொற்றி ஏற்றுக் கொள்கிறேன்.''

''இறைவா..! இந்த ஒரு கருத்திலாவது இருவரும் ஒத்துப் போகிறோமே...!''

இப்பொழுது, ஜேப்பை, திடுமென நிமிர்ந்துப் பார்த்த பொய்ரெட், ''கர்லோட்டா மரணம் குறித்த உங்களது அபிப்ராயம் தான் என்ன?'' என்று கேட்டான்.

எதிர்பாராத கேள்வி! எதிர்பாராத தருணத்தில்! ஆயினும், ஜேப், அதிராது, தனது தொண்டையை சரி செய்துக் கொண்டு, பேச ஆரம்பித்தார்: ''அது ஒரு விபத்துனு தான் நான் நம்புகிறேன். விபத்தே! ஆடம்ஸின் கொலையுடன் மார்ஷுக்கு நேரடித் தொடர்பு இருந்ததற்கு சாட்சிகள் இல்லை. நடன விருந்து முடிந்தும் அவர் மேயர் குடும்பத்தோடு தான் இருந்துள்ளார் என்பது சந்தேகத்துக்கிடமின்றி நிஜம். நள்ளிரவு தாண்டி ஒரு மணிக்கும் மேல் வரை, அவர் அக்குடும்பத்தோடு தான் இருந்திருக்கார். இதற்கு வெகு முன்னமேயே கர்லோட்டா படுக்கப் போய் உறங்கியாயிற்று. குற்றவாளிகளுக்கு வசதியாக சில சமயங்கள்ல சிறப்பான அதிர்ஷ்டம் அடித்து விடுகின்றது - அது போல ஒன்று, ஆடம்ஸின் மரணம்...! இவ்விரு கொலைகளோடும் தொடர்பிருந்தாலும், எப்படியோ மார்ஷ் தப்பி விடுகிறார்..! ஆடம்ஸின் மரணம் எனும் விபத்து மட்டும் செயலாகா விட்டால், ஆடம்ஸை மிரட்டியே அடி பணிய வைக்க திட்டங்கள் தீட்டி செயல்படுத்தியிருப்பார்னு நினைக்கிறேன். முதலில், சீமான் எட்ஜ்வேர் மரணம் குறித்த பயத்தை, ஆடம்ஸுக்குத் திணிப்பார் - நீதான் மாறுவேடத்தில் அங்கு சென்று வந்தாய்னு சொல்லிடுவேன்னு மிரட்ட திட்டமிருந்திருக்கும் - அப்படி உண்மை கசிந்து விட்டால், தூக்கு தான் தீர்வுனு அடிபணிய வைக்க முடிவு செஞ்சிருப்பார். இப்படி ஒரு கட்டத்தை உருவாக்கி, பணம் காய்க்கும் மரமாய் ஆடம்ஸைப் பயன்படுத்துவது, அவரின் இறுதி முடிவாயிருந்திருக்கும்...''

''ஜேப்...'' என்று அழைத்து, இன்ஸ்பெக்டரின் கண்களை ஆழமாய் ஊடுருவிய பொய்ரெட் கேட்டான்: ''இன்னொரு பெண்ணைப் போல் தான் மாற, அப்பெண்ணின் மீது குற்றத்தை திசை திருப்பி அவளைத் தூக்கு மேடைக்கு அனுப்பும் சாட்சியமாக நிற்க, ஆடம்ஸ் உதவியிருப்பார் - என்றா உங்களுக்குத் தோணுது?''

''ஜானே வில்கின்ஸன் ஒன்றும் தூக்கு மேடைக்கு அனுப்பப்பட மாட்டார், பொய்ரெட். அவருக்கு சாதகமான இரும்பு சாட்சியாகத் தான், மொன்டாகு கார்னர் இல்லத்து விருந்து இருக்கே..!''

''ஓ, ஜேப்..! கொலையாளிக்கு இந்த சாட்சியம் பற்றி முன்னமேயே தெரியாதே..! அக் கொலையாளியைப் பொறுத்தமட்டில், கர்லோட்டா ஆடம்ஸ் மாறுவேடம் பூண்டு மாளிகைக்குப் போய் வந்து மூச்சு காட்டாம அமைதியாய் இருந்து விடுவதும், சீமான் கொலையை அறியும் போது மிக சுலபமாக ஜானே வில்கின்ஸன் கைதாகி தூக்குக்கு அனுப்பப்படுவார் என்பதும் தானே திட்டமாயிருந்திருக்க முடியும்..!''

''உங்களுக்கு எதையாவது பேசிக்கிட்டேயிருக்கணும்... இல்லையா, திரு பொய்ரெட்..! இப்போ, அந்த சீமான் மார்ஷ் மிக நல்லக் குழந்தை... தப்பு தகராறுக்குப் போகாத வெள்ளைப் புறா... கொலை பற்றியெல்லாம் அட்சரம் கூடத் தெரியாத பாப்பா... என்பது தான் உங்கள் தீர்மானம்! பதுங்கியும் நழுவியும் அந்த வீட்டுக்குள் சந்தேகப்படும்படியாய் ஒருவன் போனதாய் விட்டாரே ஒரு கதை, அதையும் நீங்கள் நிஜமேனு நம்பறீங்களா?''

பொய்ரெட்டிடமிருந்து பதிலில்லை.

''அது யாராயிருக்கும்னு தான் நினைச்சதா அவர் சொல்வார்னு உங்களுக்கு விளங்கிச்சா..?''

''என்னால் ஊகிக்க முடிந்தது.''

''அது, சினிமா நடிகர் ப்ரையன் மார்ட்டீன் என்று நினைத்ததாய் குறிப்பிடறார். இதுபற்றி என்ன நினைக்கிறீங்க? ஒருவன் சீமான் பட்ஜ்வேரைப் பற்றி கனவில் கூட பார்த்தறியாத - கேட்டறியாத ஒருவன், நடுநிசியில், இவர் கற்பனைக்கு வசதியாக, அம்மாளிகைக்குள் சென்றானாம்!''

''எனில் ஜேப்... அம்மாளிகையோடும், அம்மாளிகை வாசிகளோடும் துளியும் தொடர்பற்ற ஒருவன், கையில் சாவியோடு, நடுநிசியில் உள்ளே நுழைகிறான் என்றால்... அது முக்கியமாய் நாம் எடுத்துக் கொள்ள வேண்டிய தகவல் தானே..!''

''ஆஆஆ'' - தலையை இறுக்கிப் பிடித்துக் கொண்டார் ஜேப். ''திரு பொய்ரெட்...! அவர் விடும் கதையே பொய்னு நான் சொல்லிக் கிட்டுருக்கேன்... நீங்க என்னடான்னா, சம்பந்தமில்லா புது அர்த்தத்தைக் கற்பிக்கிறீங்க..! சந்தேகங் கொள்வதற்கும் ஓர் எல்லை உண்டு துப்பறியும் நிபுணரே..! கொஞ்ச காலம் எந்த வழக்கையும் எடுத்துக்காம

இருங்க... அல்லது நல்லதொரு மனநல மருத்துவரைப் போய்ப் பாருங்க. பார்க்கும் மற்றும் கேட்கும் எல்லாவற்றிலும் சந்தேகம் கொள்ளும் வியாதி உங்களைப் பிடிச்சிருக்கு...! ஒண்ணு தெரியுமா... சம்பவ இரவன்று, ஆணழகன் மார்ட்டீன், லண்டனிலேயே இல்லை. அவர், லண்டனைத் தாண்டியுள்ள கிராமப் பகுதியில், ஓர் இளைய யுவதியோடு இரவைக் கழித்துக் கொண்டிருந்திருக்கிறார். நள்ளிரவு கடந்து வெகுநேரம் கழித்து தான் இருவரும் ஊருக்குள்ளேயே வந்துள்ளனர். இதற்கு என்ன சொல்றீங்க...! ஆச்சரியமாயில்லை..!''

''நாம் சந்தேகப்படும் அனைவரும் கூண்டோடு வேறு வேறு இடங்கள்ல இருந்தார்களென்றால்... ஒரு வேளை சீமான் எட்ஜ்வேர் தற்கொலை செய்துக் கொண்டிருப்பாரோ'' என்ற என் இடைச் செருகலுக்கு மூன்று பேருமே களுக்'கென்று சிரித்து விட்டோம்.

''இதிலொன்றும் எனக்கு ஆச்சரியம் தெரியவில்லை'' என ஜேப் சொன்னதற்கு பதில் தந்த பொய்ரெட் கேட்டான்: ''யாரந்தப் பெண்? நடிகையோ...?''

''இல்லை, தொப்பிக் கடை நடத்தும் பெண். கர்லோட்டா ஆடம்ஸின் தோழி - செல்வி ட்ரைவர். இவர், நம் சந்தேகப்பட்டியலுக்கு அப்பாற்பட்டவர் என்பதை ஒப்புக் கொள்வீங்கனு நினைக்கிறேன்!''

''நான் ஆட்சேபிக்கவில்லை, இனிய ஜேப்!''

''இந்த விஷயம் பற்றி உங்களுக்குத் தெரியாதா என்ன...?''

நமுட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்ட பொய்ரெட்டைப் பார்த்த எனக்கு திடுக்கிடலாயிருந்தது. மனிதர் எப்படியோ இந்த செய்தியை அறிந்திருக்கிறார் போல - எனக்கு கூடத் தெரியாமல்!

''யாரும் அந்த வீட்டுக்குள் அப்போது நுழையவில்லை, திரு பொய்ரெட்..! சீமான் வீடு மட்டுமல்ல... அந்தப் பக்கத்து வீடு, இந்தப் பக்கத்து வீடு, என எந்த வீட்டுக்குள்ளும் ஒருவரும் நுழையவில்லை. சரடு - மார்ஷின் சரடு! மார்ஷ் - பொய் சொல்கிறார்.''

ஜேப்பின் இக்கருத்துக்கு வருத்தமாய் தலையை அசைத்து ஏற்றுக் கொண்டான் பொய்ரெட்.

ஜேப், புது ரத்தம் ஊறும் துடிப்பில், ''நாம் செய்துள்ளது தான் படு சரி'' என எழுந்துக் கொண்டார் - கிளம்பும் எண்ணத்தில்.

பொய்ரெட் ஆறுதலடைந்தவனாய் தோன்றவில்லை. ''எனில் D. பாரீஸ், நவம்பர், இவையெல்லாம் தான் என்ன?''

''அப்படியென்றால் - இவையெல்லாம் ஒரு த்ரேதாயுகக் கதை - விட்டு விடப்பா என்று அர்த்தம்! ஆடம்ஸ் பெண்ணுக்கு, ஆறு மாத

காலத்திற்கு முன்பு, இவ்வழக்கோடு சம்பந்தமே படாத வகையில், ஒரு நினைவுப் பரிசு வந்திருக்கக் கூடாதா? நமக்குக் கொஞ்சம் சந்தேகமற்ற மூளையும் வேண்டும், திரு பொய்ரெட்..!''

''ஆறு மாதத்திற்கு முன்பு...'' - இப்படிச் சொன்னான் பொய்ரெட் இத்தனை நேரமும் அவனிடமிருந்து களைப்பும் தொய்வும் நிராசையும், பொத்தானைப் போட்டது போல பறந்துப் போகும்படி...!! மறுமுறை, ''ஆறு மாதத்திற்கு முன்பு..'' என்று பொய்ரெட் சொல்லும் போது, அவன் கண்களிரண்டிலும், பல மின் சக்தி பொருந்திய பிரகாசம்..!

ஜேப், ஏதோ பொய்ரெட் தனக்குள் செய்துக் கொண்டிருப்பதாயும், அது என்னவென்று எனக்கு விமரிசையாய் விளங்கி விட்டாற் போலவும் எண்ணி, ''அவர் என்ன சொல்கிறார்?'' என்று என்னைக் கேட்டார்.

''ம்..'' என சற்றே வெறுப்பாய் கேட்ட நான், ''ஆறு மாதத்திற்கு முன்பு... என்று சொல்கிறார்'' என்றேன்.

ஜேப் அடங்கினார்!

ஓரிரு நிமிடங்கள் போல கடந்ததும், ''கவனியுங்கள்'' என்று ஜேப்பை ஆர்வமாய் நெருங்கி அவர் நெஞ்சில் வலிக்காது தட்டி விட்டு பரபரப்பான பொய்ரெட், ''செல்வி ஆடம்ஸின் வீட்டு வேலைக்காரி அந்தப் பையை ஏன் பார்த்ததே இல்லைனு சொன்னா? மிஸ் ட்ரைவராலும், ஏன் அந்த சிறு பையினை அடையாளம் காண முடியலே..?''

''என்ன சொல்ல வரீங்க..?''

''ஏன்னா, அந்தப் பை *புதிது!* வெகு சமீபத்தில்... வெகு வெகு சமீபத்தில் தான் அந்தப் பை ஆடம்ஸிடம் *கொடுக்கப்பட்டுள்ளது.* பாரீஸ் நவம்பர் என்பதெல்லாம் சரிதான் - சந்தேகமில்லாமல்..! ஆனா இக்குறிப்புகளின் அர்த்தம்..? இந்த நாளில் தான், அந்தப் பை, அன்பளிப்பாய் அளிக்கப்பட்டிருக்க வேண்டும் - இதுதான் அர்த்தம்..! அந்தப் பை, *இப்பொழுது தான்* ஆடம்ஸிடம் கொடுக்கப்படுகின்றது - *அப்பொழுது* கொடுக்கப்பட்டிருக்கவில்லை...! சம்பவ தினத்தை ஒட்டித்தான் அப்பைக் கொண்டு வரப்பட்டுள்ளது. அன்றிரவோ... அன்று காலையோ தான்...! அதனாலதான், அது எல்லோருக்கும் புதிதாய் உள்ளது. விடாதீர்கள், இனிய ஜேப்..! உங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்... இது நமக்கு வாய்த்துள்ள அற்புத வாய்ப்பு -

தவற விடாது புலன் விசாரியுங்கள் இன்ஸ்பெக்டர்! அந்தப் பை இங்கு வாங்கப்படவில்லை. வெளிநாட்டில் வாங்கப்பட்டுள்ளது. அநேகமா பாரீஸில் இருக்கலாம்! அந்தப் பை புகைப்படமெடுக்கப்பட்டு, அனைத்து செய்தித்தாள்களிலும் பிரசுரமாகியுள்ளது. மற்றும் நகைக் கடைகளுக்கும் அனுப்பப்பட்டுள்ளது. இங்கு செய்ததாயின், நமக்கு உதவ, நிச்சயம் அதை செய்த நகை வியாபாரி முன்வந்திருப்பான் - ஆனா அப்படி நடக்கலே. ஆமாமாம். பாரீஸே தான்! கெஞ்சாத குறையாய் எச்சரிக்கிறேன் - விசாரியுங்க! எனக்கு உடனே வேண்டும்... அத்தியாவசியமாய் தெரிந்தாக வேண்டும். அந்த மர்ம D யாரென்பது அவசரமாய் தெரிந்தாக வேண்டும்.''

''செய்கிறேன்'' என்றார் ஜேப், கனிவாய். ''உங்களோட இக்கருத்தால் எனக்குப் பெரிதாய் உத்வேகம் எழவில்லை. ஆயினும், பொய்ரெட் சொல்லியாயிற்று... என்னால் எது முடியுமோ நிச்சயம் செய்கிறேன். அதிகம் தகவல் தெரிந்துக் கொள்வதும் நல்லதுதானே...!''

இப்படிச் சொல்லி எங்களிருவருக்கும் புன்முறுவலைத் தந்து விட்டுக் கிளம்பினார் ஜேப்.

அத்தியாயம் - 23

# கடிதம்

"இப்பொழுது..." என்று தொடங்கிய பொய்ரெட், "ம்... ஸெம்பு" என்றான். "வா, இருவரும் லஞ்சுக்கு நல்ல பெரிய உணவகமாய் சென்று வருவோம்..!"

அவன் முஷ்டியை என் முஷ்டிக்குள் இட்டு இறுக்கிக் கொண்டான். பின் மிக அருகில் இணைந்து என்னைப் பார்த்துக் கன்னங்குவிய சிரித்தான்.

சீமான் ரொனால்ட் மார்ஷ் தான் குற்றவாளி என்பதில் எனக்கு துளியும் சந்தேகமில்லாமல் ஆகியிருந்தாலும், தனது பழைய இனிய நிலைக்கு பொய்ரெட் திரும்பி விட்டதில் எனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி ஏற்பட்டது. எனக்கென்னவோ, பொய்ரெட்டே கூட, ஜேப்புடன் நிகழ்ந்த சம்பாஷணையில் திருப்தியடைந்து, மார்ஷ் குற்றவாளி அல்ல என்ற தன் அபிப்ராயத்தை மாற்றிக் கொண்டிருப்பான் என்றே தோன்றியது. கடைசியாக, வெரோனல் வைக்கப்பட்டிருந்த அந்த சிறு பை எங்கு வாங்கப்பட்டது என கண்டறிய சொல்லியிருப்பதெல்லாம், குப்புற விழுந்தும் மீசையில் மண் ஒட்டாத கதையாய் தான் தோன்றிற்று..!

அமைதியான உரையாடலை நிகழ்த்திக் கொண்டு இருவரும் மதிய உணவினை முடித்துக் கொண்டோம்.

அப்போது, எங்கள் அறைக்கு அடுத்த அறையில், ப்ரையன் மார்ட்டினும் செல்வி ஜென்னி ட்ரைவரும் உணவருந்திக் கொண்டிருந்ததைக் கவனித்த போது, எனக்கு வேடிக்கையாகத் தானிருந்தது. அந்த ஆணழகன் எங்கே... இந்த குண்டுக் குள்ளப் பெண் எங்கே..! ஆயினும், ஏற்கெனவே இருவரும் இப்படி ஊர் சுற்றிக் கொண்டிருக்கும் செய்தியை ஜேப் மூலம் அறியப் பெற்றிருந்ததால், புதுக் காதலாய் இருக்கும் என நினைத்துக் கொண்டேன்.

அவர்களும் எங்களிருவரையும் கவனித்து விட்டனர். ஜென்னி, ஆர்வமாய் அங்கிருந்து கையசைத்துக் காட்டினார். அவரின் ஆர்வம் பொங்கும் நடத்தை, அவரிருக்கும் சுற்று வட்டாரத்திலும் கேளிக்கையைத் தூவி விட என்றும் தவறியதில்லை.

காபி குடித்து முடித்திருந்த நாங்கள், கிளம்ப எழுந்திருக்கும்போது, ஜென்னி ட்ரைவர் மட்டும், தனியாக, தன்னுடன் வைத்திருந்த நடிகனை அப்படியே விட்டு விட்டு, எங்கள் சாப்பாட்டு மேஜைக்கு வந்தார். அவருக்கே உரிய பிரகாசத் தன்மையுடனும், சக்தி வாய்ந்த சுறுசுறுப்புடனும் இருந்தார்.

''ஒரு நிமிடம்... நான் இங்கு உட்கார்ந்து உங்களுடன் பேசலாமா, திரு பொய்ரெட்?''

''கேள்வி என்ன, செல்வி! நிச்சயமா! உங்களை சந்தித்ததில் புத்துணர்ச்சி பெறுகிறேன்...! ஏன், திரு மார்ட்டீனும் நம்முடன் இணைந்துக் கொள்ளக் கூடாதா?''

''நான் தான் வேண்டாம்னு சொல்லிட்டு வந்தேன். திரு பொய்ரெட்... நான் உங்களுடன் கர்லோட்டா விஷயம் குறித்துப் பேசணும்...! இன்று மாலை இதுகுறித்துப் பேச உங்க ஜாகைக்கு வருவதாய்த் திட்டம்... அதிர்ஷ்டவசமாக இங்கேயே பார்த்துட்டேன்...!''

''ம்..!''

''அவளுடைய நெருக்கமான ஆண் நண்பர்கள் யாராவது பற்றி சிறு ஒளிக் கோடு வேண்டும்னு அன்று என்னிடம் கேட்டீங்க, இல்லையா?''

''ஆமாமாம்.''

''இக் கேள்வியை, அன்று விட்டேற்றித் தனமாக ஒரு வரியில் நான் பதில் தந்து முடித்திருந்தாலும், என்னுள்ளேயே திருப்பித் திருப்பிப் போட்டுக் கேட்டுக் கொண்டேயிருந்தேன் என்பது தான் உண்மை. ஒரு விஷயம் பற்றி ஸ்பஷ்டமாக விவரம் கிடைக்க, மீண்டும் அவ்விஷயம் பற்றிய நாட்களுக்குப் பின்னுக்குச் சென்று சிந்திக்க வேண்டியுள்ளது. அந்நாட்களில் அதிக முக்கியத்துவம் கொடுக்காது விட்டு விட்ட சிறு சிறு வார்த்தைகள் சின்னஞ்சிறு வாக்கியங்கள் என, எல்லாவற்றையும் நினைவில் மீண்டும் கொண்டுவர, மூளையைப் பிழிந்துக் கொண்டு சாறெடுக்க வேண்டியுள்ளது...! இந்தச்சாறு பிழியும் வேலையைத் தான் இத்தனை நாட்களாய் செய்துக் கொண்டிருந்தேன்...!''

மூவரின் முகத்திலும் புன்முறுவல் முளைத்து அடங்கிற்று - ட்ரைவரின் நகைச்சுவை பொடி தூவிய இக்குறிப்பினைக்

கேட்டபோது! தொடர்ந்தார்: ''நினைவுகளைத் திருப்பிப் போட்டுத் தேடினேன். ஆண் நண்பர்கள் பற்றி அவள் என்னவெல்லாம் என்னுடன் பேசினாள் என்பதை மட்டும் பிரித்தெடுத்தேன். அதனால எனக்குள் சில முடிவுகள் வரப் பெற்றேன்.''

''அவை என்னென்ன?''

''அவள் மிக அதிகமாய் மனதில் நிறுத்திக் கொண்ட ஆடவன்... அல்லது கவனிக்கத் தொடங்கிய ஆடவன் - ரொனால்ட் மார்ஷ்..! எட்ஜ்வேர் பரம்பரையின் சமீபத்திய பட்டம் அடைந்தவர்.''

''எந்தக் காரணத்தால், அவள் மனம் விரும்பிய ஆண் மகன் மார்ஷ் தான்னு நம்பறீங்க, மிஸ்..?''

''ஒருமுறை, மிகச் சாதாரண முறையில் கர்லோட்டா ஆடம்ஸ் என்னுடன் பேசியபடியிருந்தாள். அது ஓர் ஆடவனைப் பற்றியது. அதிர்ஷ்டக் கட்டையாகவே ஒருவன் வாழ நேரிடும்போது, அவனுடைய நடத்தைக் கூட எப்படிப் பாதிக்கப்படுது, இல்லையா... என்ற ரீதியில் சென்றது, அவளின் வசனங்கள்...! துரதிர்ஷ்டமே வாழ்க்கையாகிப் போகும் அப்படிப்பட்ட மனிதர்கள், எவ்வளவுதான் கண்ணியமும் மரியாதைக்கு உகந்தவராய் இருப்பினும், பாதாளத் துக்குத்தான் தள்ளப்படறாங்க'னா! இதுதான், ஒரு பெண், தன்னை ஒருவனிடம் இழக்கும்போது முதலில் செய்வது - அவனைப் பற்றியே பேசுவது! கர்லோட்டா ஆடம்ஸ் மனம் விட்டுப் பேசவே பேசாத அதிபுத்திசாலிதான், இருந்தாலும், இந்த விஷயத்துல, கட்டுக்கடங்காது என்னிடம் கொட்ட ஆரம்பிச்சுட்டா...! தன்னை மறந்த நிலையில் அவள் பேசிக் கொண்டே போகும் போது, 'கண்மணி ஆடம்ஸ்..!' என்றேன் நான் ஹாஸ்யமாய்! நினைவுக்குள் நுழைந்தவளை, 'என்னாயிற்றம்மா..' என்று கேட்டேன், கிண்டலாய்..! அப்போ கூட, கல் விழுங்கி, யாரென்று பெயர் சொல்லலே. பொதுப்படையாய் பேசிய வண்ணமிருந்தாள். பிறகு, இப்பேச்சினை அப்படியே முடித்துக் கொண்டு விட்டு, சில நிமிடங்கள் கழித்ததும், ரொனால்ட் மார்ஷ் பற்றிப் பேசத் துவங்கினாள். சற்று நேரத்திற்கு முன்னால், அதிர்ஷ்டக் கட்டை, துரதிர்ஷ்டம் என்றெல்லாம் பொதுவான ஒருத்தனுக்குப் பேசிய அத்தனை கரிசனை மிகும் வசனங்களையும், இப்போது, அவளையும் அறியாது, மார்ஷோடு இணைத்து வைத்துப் பேசிய வண்ணமிருந்தாள். மார்ஷ், மிக பரிதாபமானவர்... படு மோசமாக நடத்தப்படுகிறார்...

என்றபடியிருந்தது, அவள் பேசியவை..! இவ்விரு தனித்தனி உரையாடல்களையும் அப்போது சேர்த்துப் பார்க்க எனக்குத் தோணவே இல்லை. ஆனால் இப்போ - பிரமிப்பாய் உணர்றேன். ரொனால்டை மனதில் வைத்துக் கொண்டு தான் அன்றைய உரையாடல் முழுவதையும் அவள் நிகழ்த்தியிருக்கிறாள். நீங்க என்ன நினைக்கிறீங்க, பொய்ரெட்..?''

ட்ரைவரின் முகம், நிஜ ஆதங்கமாய், பொய்ரெட்டின் முகத்தைப் பார்த்தது.

''எனக்கு, விலைமதிப்பற்ற ஒரு தகவலைத் தந்திருக்கீங்கன்னு நினைக்கிறேன், மிஸ் ட்ரைவர்!''

''ஏய்.. நீ கில்லாடிடீ...'' என தன்னைத் தானே பாராட்டிக் கொண்டு படபடவென கைதட்டினார் ட்ரைவர்.

பொய்ரெட், சிறு குழந்தையிடம் காட்டும் கருணை பொதிந்து ட்ரைவரைப் பார்த்தார்.

''நீங்க இப்போது பேசிக்கிட்டிருக்கீங்களே... ரொனால்ட் மார்ஷ் - புதிய சீமான் - அவரைக் குறித்த சமீபத்திய செய்தி தெரியாமலேயே பேசிக்கிட்டிருக்கீங்கனு நினக்கிறேன், மிஸ் ட்ரைவர்..! அவர், இப்போ தான் கைது செய்யப்பட்டுள்ளார்...!''

''ஓ'' - கண்களும் வாயும் அதிர்ச்சியில் ஒரு சேர அகலமாய் விரிய அமைந்தது ட்ரைவரின் முகம். ''எனில், நான் சொன்ன தகவல் அத்தனையும் காலந்தாழ்த்தி உங்களை அடைந்துள்ளதா?''

''இருக்கலாம், - ஆனால் மிகவும் காலந்தாழ்ந்தல்ல..! எனக்கு, உங்களின் தகவல், புதிது!''

பிறகு ப்ரையன் மார்ட்டீனுடன் சேர்ந்துக் கொள்ள கிளம்பிப் போனார் ட்ரைவர்.

''ஏய், பொய்ரெட்'' என அழைத்த நான், ''ட்ரைவர் சொன்னவை, நிச்சயமாய் உங்கள் நம்பிக்கையைத் தவிடு பொடியாக்கியிருக்கும்'' என்றேன்.

''இல்லை ஹேஸ்டிங்ஸ்'' என்ற பொய்ரெட், ''மாறாக, மார்ஷ் குறித்த என் முடிவை இன்னும் பலப்படுத்தித்தான் விட்டுள்ளது'' என்றான், திருப்தியான சிறு சிரிப்பூடே!

மிகத் துணிவான தைரியமான வலியுறுத்தல், பொய்ரெட்டின் மேற்கூறிய அறிவிப்பில் தெறித்தாலும், ட்ரைவரின் உரையாடலுக்குப் பிறகு, அவனுக்குள் ரகசியமாக உடைந்துத் தான் போயிருக்க வேண்டும் என்றே எண்ணினேன்.

பிறகு தொடர்ந்த நாட்களில், ஒரே ஒருமுறை கூட, சீமான் எட்ஜ்வேரின் கொலை சம்பந்தமான எந்தப் பேச்சையும் பொய்ரெட் எடுக்கவில்லை. நானே வலுவுக்குப் பேசிப் பார்த்தேன் - இதில் தனக்கு சற்றும் ஈடுபாடில்லை என்பது போல் நழுவி விட்டான். எட்ஜ்வேர் கொலை வழக்கினைப் பொறுத்தவரை, பொய்ரெட், தன் கைகளைக் கழுவி விட்டான் என்று சொல்லும்படி ஆயிற்று. அவனது ஒப்புயர்வற்ற மூளைக்குள் வளைய வந்துக் கொண்டிருந்த இவ்வழக்குக் குறித்த கருத்துக்கள், முழுவதுமாய் வடிவம் பெற்று வெற்றி பெறாமல் போய் விட்டதை, மறுப்பின்றி அவன் ஏற்றுக் கொள்ள வேண்டியதாய் நிலைமை மாறியது - கர்லோட்டா ஆடம்ஸ் பற்றிய அவனது முதல் கருத்து நிஜமாகிப் போக, மார்ஷ் நிரபராதி என்ற அவனது பிற்பகுதி கருத்து, பரிதாபகரமாக தோற்றுப் போனது. ஆக முழுவதுமாய் வடிவம் பெறாமல் போய்விட்டதே... அவனால் இந்த உண்மை நிலையை ஏற்றுக் கொள்ள இயலவில்லை - துப்பறியும் நிபுணர் எனும் தனது அனுபவத்தின் மேல் அத்தனை நம்பிக்கை அவனுக்கு..! எனவே, இத்தோல்வியை உள ரீதியாக நிராகரித்தான்; வழக்கின் மீது ஈடுபாடு இல்லாதது போல் போலியாகக் காட்டிக் கொள்ள ஆரம்பித்து விட்டான்.

இதுதான், இவ்வழக்கில், அவனது புதிய குண மாற்றத்திற்கான, என் விளக்கம். வழக்கின் உண்மை நிலையை - அதாவது, அவனின் கருத்துக்களில் பாதி பொய்யாகி விட்ட நிலையை - இவ்வாறாக பொய்ரெட் தாங்கிக் கொண்டான் என்பதே நான் முடிவாக்கிக் கொண்ட கருத்து. போலீஸ் மற்றும் நீதிமன்ற நடவடிக்கைகள் எதிலும், கடுகத்தனை ஈடுபாடும் அவன் காட்டவில்லை. தன்னைத் தானே வேறு வழக்குகளில் புகுத்திக் கொண்டு அவற்றில் சுறுசுறுப்பானான்.

இப்படியாக நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. ஒரு வாரம், இரண்டு வாரம்... என்று நாட்களின் எண்ணிக்கைக் கூடிக் கொண்டேயிருந்த வேளையில், ஒருநாள், சீமான் எட்ஜ்வேர் கொலை வழக்கு சம்பந்தமாய் பொய்ரெட்டின் தலையீட்டால் நடந்த ஒரு நிகழ்வு, அவனைப் பற்றிக் கணக்கிட்டு மேலே நான் சொன்ன அத்தனை கணிப்புகளையும் பஸ்பமாக்கிப் போட்டது.

அவன் வழக்கை மறக்கவுமில்லை, கை கழுவவுமில்லை.

ஒரு தகவலுக்காகக் காத்திருந்திருக்கின்றான் - அவ்வளவே!

அன்று, அது, காலை சிற்றுண்டி அருந்தும் தருணம். அவனது உணவுத் தட்டுக்கு அருகில், முந்தைய தினம் வந்திருந்த கடிதங்கள்

அனைத்தும் குவிந்திருந்தன. வழக்கம் போல், ஏராளமாய் கடிதங்கள் வந்திருந்தன. வலக்கையால் பதார்த்தங்களையும், இடக்கையால் கடிதக் குவியலையும் களைந்துக் கொண்டிருந்த பொய்ரெட், சட்டென்று, பேராச்சரிய உணர்வினைத் தன் முகத்தில் பிரதிபலித்தான். அப்படியே தட்டிலேயே கையைக் கழுவி விட்டு, அவனுக்குள் கிளர்ச்சியை உண்டு பண்ணிய அக்கடிதத்தை எடுத்துக் கொண்டான். அது அமெரிக்க அஞ்சல் தலை தாங்கியிருந்தக் கடிதம்.

அக்கடிதத்தை, மிக சிரத்தையுடன், கடிதத்தை உரிக்க அவனிடமிருந்த சிறு கத்தியால் பிரித்தான். இப்படி பொய்ரெட் மகிழும்படியான என்ன கடிதம் அது என்றறிய சிறு ஆர்வம் உந்தித் தள்ளியது - எட்டிப் பார்த்தேன். ஒரு தாளில் எழுதப்பட்டிருந்த கடிதமும், மற்றோர் உறையும் உள்ளே இருந்தன.

முதலில், அக்கடிதத்தை, பொய்ரெட், இருமுறை, முழு கவனம் செலுத்திப் படித்தான். ''நீயும் படிக்க விரும்பறியா?'' என்ற பொய்ரெட்டின் கையிலிருந்து, அக்கடிதத்தை மட்டும் பெற்றுக் கொண்டேன். அதிலிருந்த விஷயம், பின்வருமாறு:

> அன்பு நிறை, திருமிகு ஹெர்குல் பொய்ரெட்.
>
> உங்களின் ஆதரவும் அன்பும் நிறைந்த வார்த்தைகள் என் இதயத்தைத் தொட்டு விட்டன. உங்கள் கடிதம் - ஆறுதலின் உச்சம். அதற்கு மிக்க நன்றி.
>
> நடந்துள்ள விஷயங்களால் நான் நடுநடுங்கிப் போயிருக்கிறேன். என் ஆழ்ந்த துக்கத்திற்கு நடுவில், கர்லோட்டா பற்றி குறிப்பிடப்பட்டுள்ள விஷயங் களினால் - என் அருமை... என் இனிய... என் உயிருக் குயிரான சகோதரி சம்பந்தப்பட்டிருந்ததாய் குறிப்பிட் டிருந்த விஷயங்களினால் - பலர் முன்னிலையில நான் தலை குனிந்து அவமானப்பட்டு நிற்கிறேன். கிடையவே கிடையாது, திருமிகு பொய்ரெட். கர்லோட்டா, எந்த ஒரு தருணத்திலும் போதை மருந்தினை, எந்த வடிவத்திலும் உட் கொண்டவள் அல்ல. இது நிச்சயம் - சத்தியம். அது போன்ற வஸ்துக்களைப் பேசினாலே அஞ்சி நடுங்கும் ரகம், என் ஆசை சகோதரி. போதை பற்றியெல்லாம் பேசவே கூடாது என அவளே பல முறை சொல்ல நான்

கேட்டிருக்கிறேன். சீமானின் பரிதாபமான மரணத்தில் அவளும் ஒரு பங்கு கொண்டிருப்பாள் என்பது நிஜம்தான் எனில், அது அவளையும் அறியாமல், மிக வெகுளித் தனமாய் தான் நடந்திருக்க வேண்டும். அவள் எனக்கு எழுதிய கடிதமே அதற்கு சரியான அத்தாட்சி. மாறு வேடம் பூண்டு போய் வரத்தான் பத்தாயிரம் டாலர் என்று மகிழ்ந்திருக்கிறாளே அன்றி, பிறகு ஒரு கொலை நடத்த திட்டமுள்ளது, அவளுக்குத் தெரியாமலே தானே இருந்திருக்கின்றது! இப்படி திட்டமிட்ட அந்த மாபாதகன், எவனோ!

நீங்கள் கேட்டுக் கொண்டபடியால், கர்லோட்டா எனக்கு எழுதிய கடிதத்தை அப்படியே அனுப்புகிறேன். நகல் எடுத்து அனுப்பியிருக்கலாம் - ஆனால் அசல் தான் வேண்டும் என நீங்கள் கட்டளையாய் வேண்டி யுள்ளதால், அசலையே அனுப்புகிறேன். எனக்கு, என் இனிய சகோதரி எழுதிய கடைசி ஆசை கடிதத்தைப் பிரிந்திருக்க எனக்கு சம்மதமே கிடையாது. ஆனால், என் உணர்வுகளைப் புரிந்துக் கொண்டு, கடிதத்தின் மீது முழுப் பாதுகாப்பு செலுத்தி நீங்கள் திருப்பி விடுவீர்கள் எனும் நம்பிக்கை எனக்குப் பரிபூரணமாக இருப்பதால் அனுப்புகிறேன். கர்லோட்டாவின் மரணம் குறித்த அத்தனை மர்ம முடிச்சுகளையும் அவிழ்க்க வல்லது இக்கடிதம் என்கிறீர்கள்... பின், இதை நான் வைத்துக் கொண்டிருப்பதில் லாபம்தான் என்ன...!

கர்லோட்டா, முக்கியத்துவம் கொடுத்து யாராவது நண்பர்களைப் பற்றி அவளது கடிதங்களில் குறிப்பிட்டி ருந்தாளா என்றும் கேட்டிருந்தீர்கள். பற்பலரைப் பற்றி அவள் குறிப்பிட்டிருக்கிறாள் - ஆனால், ஒருவரைக் கூட தூக்கி வைத்து அவள் எழுதியதில்லை. பல வருடங்களாக நாங்கள் அறிந்த ப்ரையன் மார்ட்டீன், ஜென்னி ட்ரைவர் என்ற பெண் மேலும் காப்டன் ரொனால்ட் மார்ஷ் ஆகியோர் தான், எனக்குத் தெரிந்தவரை, அவள் அதிகம் உபயோகித்த பெயர்கள்.

இனியும் உங்களுக்கு எப்படியாவது உதவ முடியுமா

என்று சிந்திக்கிறேன். மிகக் கனிவாகவும் என் உணர்வுகளை மனப்பூர்வமாகப் புரிந்துக் கொண்டும் கடிதம் எழுதியிருந்தீர்கள் - அதைப் படித்ததும் கர்லோட்டாவும் நானும் பிரிக்க முடியாத ஒருயிரே என நீங்கள் புரிந்துக் கொண்டுள்ளதாய் பட்டது. அதற்கு நன்றி.

மதிப்பும் நன்றியும் கலந்து,
லூசி ஆடம்ஸ்

பின்குறிப்பு: ஓர் அதிகாரி, இக்கடிதத்தைக் கேட்டு சற்று முன் தான் இங்கு வந்து சென்றார். கடிதத்தை ஏற்கனவே உங்களுக்கு அனுப்பி விட்டதாய் சொல்லி விட்டேன். இது பொய். ஏன் சொன்னே னென்றால், இக்கடிதத்தை நீங்கள்தான் முதலில் பார்க்க வேண்டும் என்றொரு குரல் என்னுள் ஒளிர்ந்தது - அதனால். கொலையாளிக்கு எதிராக வைக்க, இக்கடிதத்தை ஒரு சாட்சியாக ஸ்காட்லாண்ட் போலீஸ் தேடுகிறது. அவர்களிடம் நீங்கள் கொண்டு போய் காட்டலாம். ஆனால், திருமிகு பொய்ரெட், மற்றொரு நாள் இக்கடிதத்தை அவர்கள் உங்களிடம் திருப்பிக் கொடுத்து விடுவார்கள் என்பதை நிச்சயப்படுத்திக் கொண்டு தரவும். திருமிகு பொய்ரெட், இக்கடிதத்திலுள்ள வார்த்தைகள், கர்லோட்டா, என்னிடம் கடைசியாகப் பகிர்ந்துக் கொண்ட வார்த்தைகள். என் சொத்து. நான் பிரிய விரும்பாத வார்த்தைகள்.

*''ஒஹோ..! நீயாகவே லூசிக்குக் கடிதம் எழுதிப் போட்டுக் காத்திருக்கியா..?'' - கடிதத்தை மேஜை மீது திருப்பி வைக்கும் போது குறிப்பிட்டுக் காட்டினேன். ''ஏனிப்படி செஞ்சே, பொய்ரெட்? கர்லோட்டா ஆடம்ஸ் எழுதிய அசல் கடிதத்தை ஏன் கேட்டு வாங்கியிருக்கே...?''*

*உறைக்குள் இன்னும் வெளியே எடுக்கப்படாமலிருந்த கர்லோட்டா ஆடம்ஸின் கடிதத்தைப் பார்த்துக் கொண்டான் அவன். ''விவரிக்க முடியாத முடிச்சுகளை இக்கடிதம் விவரிக்கும் என்ற என் எதிர்பார்ப்பு கைகூடும் வரை, காரணத்தை என்னால் சொல்ல முடியாது என்பதுதான் உண்மை, ஹேஸ்டிங்ஸ்.''*

*''இக்கடித சாராம்சத்திலிருந்து அப்படி என்ன துப்புதான் புதிதாய் உனக்குக் கிடைச்சுடப் போகுதுனு எனக்குத் தெரியலே. கர்லோட்டா ஆடம்ஸே அவரது வேலைக்காரியிடம் கொடுத்து தபாலில் சேர்ப்பிக்க*

சொல்லியிருக்கிறார் - இதில் எந்த தில்லுமுல்லும் இல்லை. சராசரியாய் எழுதப்படும் கடிதமாகத்தான் இதுவும் விளங்குகின்றது.''

பொய்ரெட் பெருமூச்செறிந்தான்.

''எனக்கும் தெரியும், எனக்கும் தெரியும்! சராசரிக் கடிதமாய் விளங்குகிறதுனு சொல்றியே... அதுல நான் சிக்குண்டிருக்கிறேன். ஏன்னா ஹேஸ்டிங்ஸ்... கடிதம் இப்போதுள்ள மாதிரி அமைய... இப்போதுள்ள நிலையில் இருக்க... நிச்சயம் சாத்தியமில்லை, ஹேஸ்டிங்ஸ்.''

''முட்டாள்தனம்.''

''ஆனாலும், அது அப்படித்தான்! காரண காரியத்துடன் விவேகமாய் நானே விளக்கியது போல், இவ்வழக்கின் பல சமாச்சாரங்கள், வரிசையாய் கோர்வையாய்த் தான் செல்கின்றன. பிறகு இக்கடிதம் வருது. இது பொருத்தமாய் ஒத்து இல்லை. இக்கடிதம் எழுதப்பட்ட முறை, விதம், மற்றும் அவை உணர்த்தும் அர்த்தம் ஆகியவற்றில் எவ்வித இலக்கணப் பிழையும் இல்லை தான் - ஆனாலும், இது சாத்தியமில்லை. அப்படியென்றால் யார் தவறு? இக்கடிதமா அல்லது ஹெர்குல் பொய்ரெட்டா?''

''ஹெர்குல் பொய்ரெட்டும் தப்பாகப் போகலாம் என உனக்குத் தோணவேயில்லையோ..?'' - மிக ஜாக்கிரதையாக, கண்ணாடி பொம்மையைக் கையாள்வது போல் சொன்னேன்.

''நான் தவறுதலாய் முடிவெடுத்த சமயங்களும் உள்ளன - ஆனா இது அப்படிப்பட்ட சமயமன்று! சர்வ நிச்சயமாக, கடிதம் இப்போதுள்ள இதே பொருளடக்கத்தில், சாத்தியமேயில்லை..! இக்கடிதத்தின் ஏதோ உண்மை, நம்மிடமிருந்து நழுவியுள்ளது. உன்னால் நான் சொல்வதை ஒப்புக் கொள்ள இயலாவிட்டாலும் பரவாயில்லை ஹேஸ்டிங்ஸ்... நான் ஏதோ முக்கியத்துவம் கொடுத்து சொல்கிறேனே எனும் காரணத்திற்காகவாவது, என்னுடன் ஒத்துழை! நம்மிடமிருந்து தப்பியிருக்கும் கடிதத்தின் அந்த உண்மை என்ன என நான் அறிய தவிக்கிறேன். உதவு.''

நான் மறுப்பு சொல்லவில்லை. என்னையும் ஒரு பொருட்டாய் மதித்து பொய்ரெட் நாடுவதை நான் மிக மரியாதை கொடுத்து ஏற்றுக் கொண்டேன். பொய்ரெட் சந்தேகப்படும் கடிதமோ, கைகளில். எனில், அவன் நழுவியுள்ளதாக கருதும் கடிதம் பற்றிய உண்மை கிடைக்க இனி தாமதமாகாது. என்னதான் நடக்கிறது என பார்ப்போமே..! நான்

ஜெயித்தால் எனக்கு சந்தோஷம்! என் ஆத்ம நண்பன் ஜெயித்தால், எனக்கு இரட்டிப்பு சந்தோஷம்!

என்னிடம் மேற்கூறியவாறு பேசிய பொய்ரெட், எங்கள் விவாதத்துப் பொருளாயிருந்த அக்கடிதத்தைத் தன் கையிலெடுத்துக் கொண்டான். தன்னுடைய சிறு பூதக் கண்ணாடியையும் மேஜை தட்டிலிருந்து வெளியே எடுத்தான். பூதக் கண்ணாடியை ஒவ்வொரு தாளாக நுணுக்கமாக நகர்த்தி தனது தேடுதலை முடித்த பிறகு, கடிதத்தையும், பூதக் கண்ணாடியையும் எனக்கு நகர்த்தினான். நானும் துளாவினேன். விடுபட்டுப் போனதாய் எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. மிகச் சிறப்பாய் எழுதப்பட்டிருந்த கடிதமாய் தான் எனக்குப் பட்டது. புரியும்படியான சுமாரான கையெழுத்தில் இருந்த இக்கடிதம், ஏற்கனவே எங்களுக்குத் தந்தி மூலம் அனுப்பப்பட்டிருந்த இக்கடிதத்தின் நகலோடு, அட்சரத்துக்கு அட்சரம் ஒத்துப் போயிற்று. எல்லா தாள்களிலும் முன் பக்கம் மட்டுமே எழுதப்பட்டிருந்தன. பின் பக்கம் எழுதப்படவில்லை - இது மட்டுமே ஒரு கூடுதல் தகவல்.

பொய்ரெட் தன் இரு நெற்றிப் பொட்டுகளிலும் கைகளை வைத்து அழுத்தி விட்டுக் கொண்டு, சில முறை பெருமூச்செறிந்தான். தனது நாற்காலியில் படுத்தாற் போல சாய்ந்துக் கொண்டு விட்டத்தைப் பார்த்தபடி ஏதோ சிந்தனையில் சிறிது நேரமிருந்தான். ''இதில் போலிக் கையெழுத்தில்லை - கடிதம் முழுவதும் ஓடுவது ஒரே கையெழுத்து தான் - ஆனாலும், ஹேஸ்டிங்ஸ், நான் சொன்னது போல, இக்கடித அமைப்பு, *சாத்தியமில்லையடா - - -''*

இப்படிச் சிந்தனையாய் சொல்லிக் கொண்டிருந்தவன், சரேலென உடைந்துப் போனான். நிமிர்ந்து சரியாக அமர்ந்துக் கொண்டவன், பொறுமையற்ற துடிதுடிப்பில், என்னிடமிருந்த முழுக் கடிதத்தையும், கணமும் தாமதமின்றி ஆணையாய் கேட்டான். தன் கருத்து மீது அவனுக்கிருந்த ஸ்திரமான நம்பிக்கை, மற்றும் அதனை நிரூபிக்க முடியவில்லையே எனும் சுய பச்சாதாபம், ஆகிய இரண்டும் அவனை நிலை கொள்ளாது செய்தன.

நான் அவசர அவசரமாய் கடிதத்தைத் தந்து விட்டேன். மறுபடியும், அக்கடிதத்தைத் துளைத்தெடுக்கும் பார்வையோடு, ஆராய ஆரம்பித்தான். இது, நிமிடங்கள் கடந்து நடந்துக் கொண்டிருந்தது.

அப்போது, திடீரென ''வாஆஆஆஆஆவ்'' என ஒரு சந்தோஷ அலறல் அலறினான் பாருங்கள். சிற்றுண்டியை முடித்துவிட்டு,

பொய்ரெட்டின் சிந்தனையைத் தொந்தரவு செய்யக் கூடாது எனக் கருதி ஜன்னலருகே போய் வெளியே பார்த்துக் கொண்டிருந்த நான், அடித்துப் பிடித்துக் கொண்டு அவனை நெருங்கி ஓடி வந்து நின்றேன்.

கை கால்களெல்லாம் உதற, கிளர்ச்சிக் கொண்டு, அருள் வந்தவனைப் போல் ஆடினான் பொய்ரெட். அவன் கண்கள் இரையைப் பிடித்து விட்ட பூனையின் வெற்றி மிதப்பிலிருந்தன. "இதோ... இதோ.. இதைப் பார் ஹேஸ்டிங்ஸ்" என்று கடிதத்தின் [illegible]ந்தா ஒரு பகுதியை சுட்டிக் காட்டிய அவன் விரல்கள், கட்டுக் கடங்காத [illegible]ளர்ச்சிப் பெருக்கால், நடுக்கத்திலிருந்தன; இப்படிச் சொன்ன அவன் [illegible]மேலோ, அவன் சொன்னபடி நான் பார்க்காமல் மட்டும் இருந்து விட்டால், பிடரியில் ஓங்கி அறைந்து விடுவான் போன்ற ஊக்கம் கலந்துக் கோபத்திலிருந்தது.

The enjoyed my Shao fully. it seems! அவர் என் கிடு மணிநேர விகடகவி காட்சியை சிரித்துச் சிரித்து ரசித்ததாய் சொன்னார். சீமான் எட்ஜ்வேரே கூட ஏமாந்துப் போய் விடுவார்... அத்தனை துல்லியம் என்றவர், 'ஹேய்...! என்னிடம் ஒரு சிறு பந்தயத்துக்கு வர முடியுமா...?' என்று,

''பாரடா.. பார்.. ஹேஸ்டிங்ஸ்! இங்கே பார்..!ம் குனிந்துப் பாரடா!''

என்னத்தை குனிந்துப் பார்ப்பது! என் மண்டைக்கு ஏதாவது ஏறினால்தானே! அவனுக்கு முன்னால், கடிதத்தின் இடைப்பட்ட ஒரு பக்கத்தை விரித்துப் போட்டிருந்தான் - அதுதான் தெரிந்தது. குனிந்துப் பார்த்தாலும்! அதில், அசாதாரணமாக எனக்கு எதுவும் தெரியவில்லை.

''தெரியவில்லை..?! முட்டாள்! (நான் சற்று நேரத்துக்கு முன்பு, இவனைச் சொன்னேனல்லவா.. அதற்கு பதிலடி!) இதோ பார்... இக்கடிதத்தின் மற்ற அத்தனை பக்கங்களின் நான்கு விளிம்புகளும் பூரணமாய் உள்ளன - எந்தச் சிதைவும் இல்லை. ஆக அவை அனைத்தும் ஒற்றைத் தாள்கள். ஆனா, இது... இதோ இது...'' என்று அவன் குறிப்பிட்ட தாளை மட்டும் தனியே தூக்கிக் காட்டி விளக்கினான்: ''இதன் இடது விளிம்பு மட்டும், ஒழுங்கற்றுக் கிழிக்கப்பட்டுள்ளது பார்த்தாயா! இதனால் தான் சொன்னேன், இதுபோன்ற கடிதம் சாத்தியமில்லை என்று..! இதனால் விளைந்த என் பிற கணிப்புகளும் நிரூபணமாகத் தான் போகின்றன பார்...! கிழித்து எடுக்கப்பட்டுள்ளது, ஹேஸ்டிங்ஸ், கிழித்து எடுக்கப்பட்டுள்ளது! நான் என்ன சொல்ல வருகிறேன் என புரிகின்றதா..! கடிதத்தின் இந்தப் பகுதி மட்டும் இரட்டைத் தாளடங்கிய முழுத் தாளில் எழுதப்பட்டுள்ளது. இடப்பக்கத்தில் ஒரு பத்தியும் வலப்பக்கத்தில் ஒரு பத்தியும் எழுதப்பட்டுள்ளது. இந்த இரண்டில் ஒரு பக்கம், அதாவது இடப்பக்கம், காணவில்லை.''

முழு முட்டாளாய் விழித்துக் கொண்டிருந்தேன். ஆனாலும், ''அர்த்தமுள்ள தர்க்கம் தான் இது. ஆனா எப்படி இது சாத்தியம்?'' என்று சொல்வது தவிர்க்கயியலாததாயிற்று.

''ஆமாமாம். அர்த்தமுள்ள தர்க்கமே தான். இங்கு தான் வெளி ஆளின் புத்திசாலித்தனமாகப்பட்டது நுழைகின்றது. படி - உனக்கே புரியும்.''

நான் படிக்க முற்படவில்லை. பொய்ரெட் விளக்க ஆரம்பிக்க, அதற்கு வழி விட்டு கவனிக்கலானேன்.

''காப்டன் ரொனால்ட் மார்ஷ் பற்றி கர்லோட்டா ஆடம்ஸ் எழுதி முடிக்கும் இடத்தில், கடிதம் உடைக்கப்படுகின்றது. அவரது நிலைமைக்கு மிக வருந்துவதாய் எழுதும் கர்லோட்டா, உடனேயே, 'அவர் என் இரு மணி நேர விகடகவி நிகழ்ச்சியை சிரித்துச் சிரித்து

ரசித்ததாய் சொன்னார்' என்று எழுதுகிறார். இதுவரை கடிதம், கிழிக்கப்பட்ட பக்கத்துக்கு முன் உள்ளது. பிறகு தொடரும் கடிதம் முழுவதும், 'அவர்... ...அவர்..' என்றுதான் குறிப்பிட்டுள்ளாரே தவிர, பெயரே கிடையாது. அன்பு நண்பா... இவ்விரண்டுக்கும் இடையில் தான் ஒரு தாள் தவறியிருக்கின்றது - *களவாடப்பட்டிருக்கின்றது*. இங்கு தான் ஹேஸ்டிங்ஸ் நான் விழித்துக் கொண்டது - கடிதம் குழப்பாமல் வளர்ந்தாலும், தேவையற்ற ஒரு பெரிய பிளவு இங்கு உண்டாகியுள்ளது என்று நான் உணர்ந்தேன். இங்கு தான் நான் விழித்துக் கொண்டது! 'அவர்' என்று கடைசிப் பக்கங்களில் குறிப்பிடப்படுபவரும், 'அவர்' என்று இந்த கிழிக்கப்பட்ட பக்கத்துக்கு முன்பு குறிப்பிடப்படுபவரும் *ஒருவராக இருக்க வேண்டிய அவசியமில்லை..!* சொல்லப் போனால், கிழிக்கப்பட்ட பக்கத்துக்கு முன்பு குறிப்பிடப்படும் அவரும், பின்பு குறிப்பிடப்படும் அவரும், *ஒரே நபர் அல்ல..!* பின்னால் வரும் அவர், முழுக்க முழுக்க புது நபர் - கர்லோட்டா எடுத்து நடத்தி முடித்த ஆள் மாறாட்ட ஏமாற்று நாடகத்தை முன்மொழிந்தவன். கவனி ஹேஸ்டிங்ஸ்... கிழிக்கப்பட்ட பக்கத்துக்குப் பிறகு பெயரே இல்லாமல் 'அவர்.. அவர்...' என்று தான் செல்கின்றது! இதுதான் கொலை காரனுக்கு கிடைத்துள்ள ஜாக்பாட்...! எப்படியோ, நம் அருமை கொலைகாரன், இக்கடிதத்தைக் கிடைக்கப் பெற்றுள்ளான். படிக்கிறான். அதிலுள்ள சாராம்சம் முழுதும் அவனைத் துணுக்குறச் செய்கின்றது. இக்கடிதம் முழுவதையும் தான் அவன் அமுக்கப் பார்த்திருப்பான் - இதில் சந்தேகமேயில்லை. ஆனாலும், பிறகு, இன்னொரு முறை கடிதத்தைப் படித்துக் கொண்டே போகும் போது தான், இந்தக் கடித சமாச்சாரத்தை, வேறொரு வழியிலும் வீழ்த்திப் போடலாம் என்று அவனுக்கு விளங்குகின்றது. ஒரு பக்கத்தை எடுத்து விடு - அப்போது கூட, கடிதம், *பழியை மட்டும் இன்னொருவன் மீது மிக வசதியாக இறக்கி வைத்து விட்டு*, எவ்வித விஷய சேதாரமுமின்றி வளரும்...! பழி சுமத்தப்படும் அந்த ஆளும், சீமான் எட்ஜ்வேரின் கொலையை விரும்பும் இலக்கு கொண்டு உலவும் ஆசாமி தான் என்பது, கூடவே வரும் மற்றுமொரு அனுகூலம்...! செயல்படுத்து கிறான் - அந்த ஒரு பக்கத்தை மட்டும் கிழித்தெடுத்துக் கொண்டு, கடிதத்தை அப்படியே வைத்து விடுகிறான்.''

நான் பொய்ரெட்டை வியந்துப் போய் ஆச்சரியமாய் பார்த்தேன். ஆயினும் இப்போது பொய்ரெட் சொன்ன புதுக் கோட்பாட்டில் எனக்கு

முழு உடன்பாடு ஏற்படவில்லை. அந்தப் பக்கம் எழுதப்படாத பக்கமாயிருந்து, அதனை, கர்லோட்டா ஆடம்ஸே கூட, வேறு ஏதாவது எழுத என்று கிழித்திருக்கலாமே! இந்த மிகச் சாதாரண ஆலோசனையை வழக்கே முடிந்து விட்டது போல குதூகலித்துக் கொண்டிருக்கும் பொய்ரெட்டிடம் சொல்லி அவனது கொம்மாளத்தை அவித்துப் போட நான் விரும்பவில்லை. கடிதத் தொடர்ச்சியில் நிச்சயமாய் ஒரு தொடர்பு அறுந்துள்ளது என்று ஆழமாய் ஆராய்ந்து நம்பும் அவனுடைய நம்பிக்கையே கூட சரியாக அமைந்து விட்டால்.. பொய்ரெட்டின் நம்பிக்கைகள், என்று தான் பொய்த்துள்ளன...!

இருந்தபோதிலும், இப்படி ஒருபுது கோட்பாட்டினை பொய்ரெட் சொன்னதில் எனக்குப் புலப்பட்ட சில சிக்கல்களை முன் வைக்க நான் தவறவில்லை.

''எப்படி அந்தப் புது ஆளுக்கு இக்கடிதம் கிடைத்திருக்கும்? தன் கைப்பையிலிருந்து கடிதத்தை எடுத்து, தானே வேலைக்காரியிடம் கொடுத்து, தபாலில் சேர்க்கச் சொல்லியிருக்கிறார், ஆடம்ஸ்! இப்படித்தான் அந்த வேலைக்காரி நம்மிடம் சொன்னாள்.''

''எனவே, இரு சாத்தியக் கூறுகளில் ஒன்றினை நாம் எடுத்துக் கொள்ள வேண்டும். ஒன்று, வேலைக்காரி பொய் சொல்கிறாள், இரண்டு, அன்று மாலையில் மிஸ் கர்லோட்டா ஆடம்ஸ் கொலைகாரனை சந்தித்திருக்கிறார்.''

நான் ஆம் என தலையசைத்து ஏற்றுக் கொண்டேன்.

. ''ரெண்டாவது சாத்தியக் கூறு தான் எனக்கு சாதகமா தோணுது. மாலையில் தனது வீட்டிலிருந்து கிளம்பி பிறகு இரவு ஒன்பது மணிக்கு ஆஸ்டன் ரயில் நிலையத்தில் தனது பெட்டியை ஒப்படைத்தது வரையிலான இடைப்பட்ட நேரத்தில் மிஸ் ஆடம்ஸ் எங்கு தான் சென்றிருந்தார் என்பது இன்னும் நாம் அறியாத ஒண்ணு...! இந்நேரத்தில், ஏற்கனவே குறித்துக் கொண்ட ஒரு பொது இடத்தில, ஆடம்ஸ், கொலையாளியை சந்தித்திருப்பார் என்பது என் நம்பிக்கை. இருவரும் சேர்ந்து சாப்பிட்டிருக்கலாம். கடைசி நேரத்துக் கட்டளைகளை, அவன், ஆடம்ஸுக்குச் சொல்லியிருப்பான். கடிதம் பற்றி அப்போ என்ன நடந்திருக்கும்னு நம்மால சொல்ல இயலாது - ஆனா இத்தனை நடந்திருக்கலாம் என நம்புவதால், சற்றே ஊகித்துப் பார்க்கலாம். தபாலில் சேர்ப்பதற்காக, ஆடம்ஸ், இக்கடிதத்தை கையிலேயே வெச்சிருந்திருக்கலாம். உணவகத்தில் சாப்பிடும் போது,

கையிலிருந்தக் கடிதத்தை அப்படி மேஜை மீது வைத்திருக்கலாம். முகவரியைப் பார்த்துக் கொலைகாரன், ஆபத்தை லேசாய் நுகர்ந்திருப்பான். சாமர்த்தியமாய் அதனைக் கைப்பற்றி, இதோ வந்துடறேன்னு சற்று நேரம் உணவு மேஜையருகிலிருந்து விலகி, கடிதத்தை உடைத்துப் பிரித்துப் படிச்சிருப்பான். அவன் குற்ற மூளைக்கு, நான் மேற்சொன்ன கோட்பாடு தட்டுப்பட, அந்த ஒரு தாளை மட்டும் வேக வேகமாய் கிழித்திருப்பான். பிறகு வந்து ஓசை படாமல் மேஜையிலேயே வைத்திருப்பான் - அல்லது, அடடா... இக்கடிதம் கீழே இருந்ததேன்னு நடிச்சு திருப்பிக் கொடுத்திருப்பான்! இப்படியேதாவது ஒரு வழியில்தான் நடந்திருக்குமா என்பது நமக்குத் தேவையற்றது. ஆனா இரு விஷயங்கள் நிரூபணமாகின்றன. கொலைகாரனை, சீமான் எட்ஜ்வேர் கொல்லப்படுவதற்கு முன்போ, அல்லது பின்போ, மிஸ் கர்லோட்டா ஆடம்ஸ் சந்தித்திருக்கிறார். எனக்கு இன்னொண்ணும் தோணுது - நான் தவறாகக் கூட இருக்கலாம் அதாவது, தங்களின் முதல் சந்திப்பின் அன்பளிப்பாக, அடையாள மாக, கொலைகாரனே கூட அந்தத் தங்க முலாம் பூசப்பட்டப் பெட்டியை அளித்திருக்கலாம்! எனில் கொலைகாரன்... அந்த D தான்!''

''இப்பொழுது எதற்கு அந்த தங்கப் பெட்டி பற்றி புது அர்த்தம் தரே?''

''காரணமில்லாமலா..! கர்லோட்டா ஆடம்ஸ், போதைக்கு அடிமையானவரல்ல! லூசி ஆடம்ஸ் சொல்கிறார்; எனக்கும், ஆரம்பம் முதல் இதே கருத்துதான்! மிஸ் கர்லோட்டா ஆடம்ஸ், மிக திடகாத்திரமும் ஆரோக்கியமும் வாய்ந்த, அதிர்வற்ற பெண் - இவை, போதை பழக்கத்துக்கு அடிமையானவர்களின் குணாதிசயத்துக்கு நேர் எதிர்! அவரின் எந்த நண்பராலும், மேலும், அவருடைய வேலைக்காரியினாலும் கூட, அந்தப் பெட்டியை அடையாளம் காண முடியலே. எனில், அவர் இறந்த பிறகு, ஏன் அவர் அருகில், அவருடைய பிரத்யேகப் பெட்டி போல், அப்பெட்டி காணப்பட வேண்டும்? ஏன்னா, அவர் வெரோனல் போதை மருந்தினை எடுத்துக் கொள்பவர் என்றும், இப்போதை மருந்தினைக் கொஞ்ச நாட்களாகவே... அதாவது குறைந்தபட்சம் ஆறு மாத காலமாதமாகவாவது எடுத்துக் கொண்டிருக்கிறார் என்றும், ஒரு பதிப்பை ஏற்படுத்தத்தான்! கொலை முடிக்கப்பட்ட பிறகு, ஓரிரு நிமிடங்களுக்கு செல்வி ஆடம்ஸ் கொலையாளியை எங்கோ வைத்து சந்தித்திருக்கிறார்னு எடுத்துக்

கொள்வோம். அவர்களது திட்டம் எவ்வித குளறுபடியும் இல்லாது வெற்றிகரமாக முடிந்து விட்டதைக் கொண்டாடக் குடித்திருக்கலாம். மிஸ் ஆடம்ஸின் கோப்பையில் அளவுக்கதிகமாக வெரோனலை அந்தக் கொலையாளி கலந்திருப்பான்... அப்போதானே, மறுநாள், சீமான் எட்ஜ்வேரின் கொலை வெளியாகும் போது, ஆடம்ஸ் வெகு நேரம் தூங்கிக் கொண்டேயிருப்பார்...''

''கொடூரம்.. குரூரம்...'' - கண்ணகலச் சொன்னேன் நான்.

''நிச்சயமா சகித்துக் கொள்ளும் ஊகங்கள் இல்லை தான் இவை...! ஆனாலும் சாத்தியமானவையே'' என்றான் பொய்ரெட், வறட்சியாய்.

''இவையெல்லாவற்றையும் சுமந்துக் கொண்டு போய் ஜேப்'பிடம் சொல்லப் போறியா?''

''தற்சமயத்துக்கு இல்லை. அவரிடம் போய் என்னத்தை சொல்வது? 'ஆடம்ஸ் பெண்ணின் கடிதம் பிரிக்கப்பட்டு கிழிக்கப் பட்டுள்ளதா? இது என்ன, இன்னொரு கட்டுக் கதையா..?' எனச் சொல்லி கிண்டலடிப்பார். 'கிழித்தெறியப்பட்ட அந்த இன்னொரு பக்கத்தில் ஆடம்ஸ் பெண் எதையாவது எழுதிக் கிறுக்கித் தூக்கிப் போட்டிருப்பாள்... விட்டுத் தள்ளுங்கள்' என்பார். அவருக்கு ஒத்தூத நீ ஒருத்தன்..!''

பொய்ரெட்டுடனேயே இருந்துக் கொண்டு, ஜேப்புடன் சேர்ந்து நானும் அதிகப்பிரசங்கித் தனமாய் பேசியிருப்பது துப்பறியும் நிபுணரைப் பாதிக்கத் தான் செய்துள்ளது. நான் குற்ற உணர்ச்சியில் குனிந்துக் கொண்டேன்.

''ஒருவேளை ஜேப், நான் மேற்சொன்னது போல சொல்லி விட்டால் என்னால் என்ன சொல்ல முடியும்? ஒன்றும் சொல்ல முடியாது. அப்படியும் நடந்திருக்கலாம். அப்படி நடந்திருக்காது என்பது என் எண்ணம், ஏனெனில், *அப்படி நடந்திருக்கக் கூடாது என்பது அவசியம்.*''

பொய்ரெட் அப்படியே அமைதியானான். கனவுலக பாவம், அவன் முகத்தைத் திருடிக் கொண்டது. பிறகு சொன்னான்: ''நான் சொன்னபடியே நடந்திருப்பதாக வைத்துக் கொள்வோம்..! எனில், என் அன்பு ஹேஸ்டிங்ஸ் ... ஒழுங்கும், முறைப்படியான அணுகு முறையும் கொண்டவனாயிருப்பின், அவன், இப்படி கசாமுசாவென்று தாளைப் பிய்ச்சிருக்க மாட்டான்! அழகாய் கத்தரித்தது போல் தான் கிழித்திருப்பான்! நம்மாலும், தாள் கிழித்தெடுக்கப்பட்டிருப்பதற்கான எவ்வித அறிகுறியும் அறிய முடிந்திருக்காது.''

''ஆக, ஒழுங்கற்ற பழக்க வழக்கமுள்ள ஆள் தான் அவன் என நாம் முடிவெடுக்கிறோம்'' என்றேன் நான்.

''இல்லையில்லை. அவன் அவசரத்திலிருந்திருப்பான். கவனச் சிதைவோடு தான் அது கிழிக்கப்பட்டுள்ளது என்பது புரியுது இல்லையா..! ஆம்! நிச்சயமா நொடி கூட இல்லாத துரித கதியில் தான், அவசர அவசரமாக அவன் கிழிச்சிருக்கிறான்.''

சிறு இடைவேளை கொடுத்து சொன்னான்: ''ஆனா ஒண்ணு நிச்சயம்... அந்த மர்ம மனிதன் - அதாவது D - இவ்வழக்கில் சம்பந்தப் பட்ட அனைவரும், கொலை சம்பவித்த போது, மாளிகையில் இல்லாது வேறெங்கோ இருந்ததாய் சாட்சி வைத்திருப்பது போல, அவனும் ஒரு கதை வைத்திருப்பான்!''

''அதெப்படி சாத்தியமாகும் என எனக்கு விளங்கவில்லை. முதலில் கொலையை ரீஜெண்ட் மாளிகையில் முடித்து விட்டு, பிறகு உடனேயே கார்லோட்டா ஆடம்ஸுடன் நேரம் கழித்துள்ள ஒருவனால், எப்படி மூன்னோர் இடத்திலும் இருந்திருக்க முடியும்?''

''அவன் பெயர் D-ல் தான் துவங்குகிறதா? அல்லது D என்பது, கார்லோட்டா அவனை அழைத்த ஏதாவது செல்லப் பெயரா? ஹேஸ்டிங்ஸ், அவன் தப்பித்து தலைமறைவாவதற்குள் அவனைப் பிடித்தே தீர வேண்டும். உண்மை - மடியவோ மறையவோ கூடாதடா!''

அத்தியாயம் - 24

# பாரீஸிலிருந்து வந்த சேதி

தொடர்ந்த மறுநாள், நாங்கள், எதிர்பாராத ஒரு விருந்தாளி வரப் பெற்றோம்.

கெரால்ட் காண வந்திருப்பதாக தகவல் கிடைத்தது.

வந்த சீமானின் மகளை பொய்ரெட் அன்போடு வரவேற்று அமர ஒரு நாற்காலியைக் காட்டிக் கொண்டிருக்கும் போது, கவலையே உருவாக நடுங்கிப் போய் தோன்றிய அச்சிறுப் பெண்ணுக்காக நான் மிக வருந்தினேன். எப்போதும் இல்லாத அளவுக்கு, அவளின் கரிய விழிகள், இப்போது மிக அகலமாய் விரித்து, கரும்படலம் அடைந்து இடுங்கிப் போயிருந்தன. அவள் நிம்மதியான தூக்கம் இல்லாமல் இருப்பதற்கான அடையாளமாக, அவளின் இரு கண்களைச் சுற்றிலும் புது கரு வட்டங்கள் வளர்ந்திருந்தன. அவள் முகம், அதீத தளர்ச்சியிலும், விளக்கத்திற்கு அப்பாற்பட்ட குழப்பத்திலும், எந்த முடிவையும் எடுக்கயியலா ஒரு நிலையிலும், நிலைகுத்தியிருந்தது. குழந்தை பருவத்தை இப்பொழுது தான் கடந்து, இன்னும் சிறுமி எனும் தகுதிக்குள் முழுவதுமாக நுழைந்திடாத இந்த பால்ய ஜீவனுக்கு நடக்கும் அனைத்தும், ஒரு சாபக்கேடு என்று சொல்லாமல் வேறென்பது..!

''நான் உங்களைப் பார்க்கணும் எனும் ஒரே எண்ணத்தோடு தான் வந்திருக்கேன், திருமிகு பொய்ரெட். உங்க கனிவான முகம்... ஆதரவான குரல்... இவற்றை அனுபவிக்கணும்னு தோணிச்சு. இனி வாழ்க்கையை எப்படி எதிர் கொள்வதுனும் நடக்கும் விபரீத நிகழ்வுகளை எவ்வாறு சந்திப்பதுனும் எனக்கு தெரியலையே, திரு பொய்ரெட். நான் மனமாழம் வரை கவலையிலும் கலக்கத்திலும் உடைந்துப் போயிருக்கேன்.''

''புரிகிறது கண்மணி..!'' என்ற பொய்ரெட், ஆழ்ந்த விசாரத்துடனான கருணை மகானாய் சொன்னான்.

''கடைசியா மார்ஷ் உங்களை சந்திச்சபோது, நீங்க என்ன பேசினீங்கனு அவர் என்கிட்டே சொன்னார் - அதாவது, அவர் கைது செய்யப்பட்டாரே... அந்த திகில் பிடித்த நாளில் நீங்க சொன்னவை'' - இப்படி நினைவு கூரும் போதே பீதி நிறைந்த நடுக்கம், சிறுமியை ஆட்கொண்டது. ''வெகு நேரம் வரை பேசாமலே உட்கார்ந்திருந்த நீங்க, உரையாடலின் கடைசியில, 'உங்களில் யாருமே என்னை நம்புவதாய் தோணலை'னு அவர் விசனப்படும்போது, சட்டுனு நீங்க மட்டும் முன் வந்து, முக்கியத்துவம் கொடுத்து, 'நான் உன்னை நம்பறேன்'னு சொன்னீங்களாமே...! இது உண்மைதானா, திருமிகு பொய்ரெட்...?''

''இது உண்மைதான், மிஸ்!''

''அது தெரியும். நீங்க சொன்னது உண்மையா என்பதற்காக நான் கேட்கலே. சொன்ன வார்த்தைகளில் அர்த்தம் உண்மையா என்றறிவதற்காகக் கேட்கிறேன். அவர் அப்போது சொன்ன அனைத்தையும் நீங்க நம்பறீங்களா?''

அமர்ந்திருந்த நாற்காலியின் நுனி வரை வந்து, கைகளை ஒன்றோடொன்று பிசைந்துக் கொண்டிருந்தபடி கேட்ட கெரால்ட், பதில் என்ன சொல்வார் எனும் எதிர்பார்ப்பின் உச்ச அதிர்விலிருந்தார்.

''அவ்வார்த்தைகள் - சத்தியமே, மிஸ் கெரால்ட்!'' பொய்ரெட் அமைதியாய் பதிலளித்தான். ''உங்களோட சகோதரன் மார்ஷ், உங்க தகப்பனாரைக் கொன்றிருப்பார் என்ற கருத்தில் எனக்கு உடன்பாடு இல்லை.''

''ஓஹ், ஓஹ், ஓஹ்..!'' சிறுமியின் முகத்தில் பல வண்ணங்கள் மளமளவென ஒளிர்ந்தன. அவள் கண்கள் இப்போது மிக அகல விரிந்து, செழித்தன - திடீரென விளைந்திட்ட நிம்மதியில்! ''எனில், வேறு யாரோ தான் அப்பாவைக் கொன்றுள்ளதாய் நீங்க நினைக்கிறீங்க - இல்லையா...?''

சிரிப்பை மட்டும் பதிலாக்கினான் பொய்ரெட்.

''நான் ஒரு முட்டாள், எப்படி வார்த்தைகளை உபயோகிக்கணும்னு தெரியாம பேசறேன்! என்ன சொல்ல வந்தேனென்றால், உங்களுக்கு, அந்த யாரோ பற்றி அடையாளம் தெரிஞ்சிருக்கணும்னு நீங்களே நினைக்கிறீங்க... இல்லையா? உங்களுக்குள்ளேயே அந்த யாரோ பற்றி ஒரு முடிவு வந்திருக்க வேண்டும்... சரியா?''

உற்சாகம் புரள, இன்னும் பொய்ரெட் பக்கம் நெருக்கமாய் வளைந்துக் கொண்டாள் சிறுமி!

''இத்தனை தூரம் துப்பறிந்திருப்பதால், எனக்கு நானே உருவாக்கியுள்ள சில சிறு சிறு அபிப்ராயங்கள் இருக்கு... அவற்றை சந்தேகங்கள்னு கூட சொல்லலாம். ஆனா, அவற்றை நிரூபிக்க உண்மை சாட்சிகள் இன்னும் கிடைக்கலையே, மிஸ்.''

''அவை தான் என்னென்ன... எனக்கு சொல்லக் கூடாதா...? தயவு செய்து! தயவு கூர்ந்து.''

சிறுமியின் உச்சந் தலையை வாஞ்சையோடு தடவிக் கொடுத்த பொய்ரெட், ''இது என்ன துப்பறியும் கதையா கண்மணி, முடிவை சொல்ல...! நிஜ சம்பவம் அல்லவா...! இதில், ஒரு துப்பறியும் அதிகாரிக்குள் உருவாகும் சந்தேகங்களைப் போட்டு உடைப்பது - அழகல்ல!''

''திரு பொய்ரெட்... பொய்ரெட்...! அப்படியானா, நிச்சயமா, யாரோ குறித்து, உங்களுக்குள் சர்வ நிஜமாய் ஐயம் வளர்ந்து நிலைத்துள்ளது?''

ஆமாம் என்றும் உணர்த்தாமல், இல்லை என்றும் காட்டாமல், வெற்றியாய் தலையை அசைத்துக் காட்டினான் பொய்ரெட்.

''எனக்கு மட்டும் அவன் குறித்த சிறு குறிப்பு கிடைச்சுட்டா'' - கெஞ்சினாள் சிறுமி - ''என் இறுக்கம் முழுவதையும் அந்த சேதி தளர்த்தி விடும். அது மட்டுமல்ல... அது பட்டும் படாமல் தெரிஞ்சா கூட போதும், உங்களின் துப்பறிதலுக்கு என்னாலும் ஏதாவது உதவ முடியும். ஆமாம் திருமிகு பொய்ரெட்... நீங்க எந்தக் கோணத்தில் சிந்திச்சுக்கிட்டிருக்கீங்கனு லேசா தெரிஞ்சா கூட என்னாலும் ஏதாவது உதவ முடியலாம்...!''

அவளுடைய கெஞ்சுதல், பரிதவிப்பாய் வளர்ந்தது. ஆனால் பொய்ரெட், தொடர்ந்து, எதையும் உணர்த்தாத தலையசைப்பை மட்டுமே பதிலாக்கினான்.

''மெர்ட்டான் மாகாணத்து ராணி, என்னுடைய வளர்ப்புத் தாய் - அதாவது சித்தி தான், அப்பாவைக் கொன்றது எனும் முடிவில் பூரண ஸ்திரமாய் உள்ளார்'' - பொய்ரெட்டை தன் பக்கம் இன்னும் நெருக்கமாய் இழுக்கும் தூண்டிலாய், தொடர்பற்ற இவ்வாக்கியத்தை சிறுமி உதிர்ப்பதாய் தோன்றியது எனக்கு. இப்படிச் சொல்லி முடித்து பொய்ரெட்டைப் பார்த்த சிறுமியின் கண்களில், துப்பறியும் நிபுணர் என்ன உணர்கிறார் என்ற கேள்வியும் இருந்தது.

கல்லிலா நார் உறிக்க முடியும்? அப்பப்பா... பொய்ரெட்டால் எப்படித் தான் இப்படி உணர்வைப் பிரதிபலிக்காத முக பாவத்தைத் தொடர்ந்து நிமிடக் கணக்காய் பிரதிபலிக்க முடிகின்றதோ...!

சிறுமி தான் தொடர வேண்டியதாயிற்று. ''இப்படி ஒரு மாற்றமற்ற முடிவில் அவர் இருக்கக் காரணம் தான் எனக்குப் பிடிபடலே...''

''அவர் குறித்த உன் கணிப்பு என்ன - அதாவது, உன் சித்தியைப் பற்றிக் கேட்கிறேன்?''

''அவரைப் பற்றி எனக்கு ஒண்ணும் தெரியாது. என் அப்பா அவரை ரெண்டாந்தாரமாக மணந்துக் கொள்ளும் போது நான் பாரீஸ்ல பள்ளிக் கூடத்துல படிச்சுக்கிட்டிருந்தேன். திருமணம் பற்றி என்னிடம் சொல்லப்படவுமில்லை. நான் வீட்டுக்குத் திரும்பி வந்த பிறகு, என்னிடம் கனிவாய் தானிருந்தார். நானும் அந்த வீட்டுல தான் இருக்கிறேன்னு அவர் ஒரு நாளும் என்னை சட்டை பண்ணியது கிடையாது - இந்த அர்த்தத்துல சொல்றேன்...! மண்டையில ஒண்ணுமேயில்லாத பொண்ணாதான் எனக்கு அவர் பட்டார். ஏதோ அந்த வீட்டுக்கு கூலிக்கு வேலைக்கு சேர்ந்த மற்றொரு பெண்ணாய் தான் விளங்கினார்.''

பொய்ரெட் கிரகித்துக் கொண்டான். பிறகு கேட்டான்: ''மெர்ட்டான் ராணி பற்றிப் பேசினே...! அவரோடு அதிக பழக்கமுண்டோ?''

''ஆமாம். அவர் என்கிட்டே மிக நெருக்கமாயிருப்பார். கனிவாகவும். கடந்த பதினைந்து நாட்களா அவரோட தான் நான் அதிகமிருந்தேன். கொலை கொலை என்ற பேச்சு - நிருபர்களின் கூட்டம் - ரொனால்ட் மார்ஷின் கைது - எத்தனையைத் தான் என் தலை தாங்கும்...! பயங்கரம், பயங்கரம்!'' சொல்லும் போதே நடுங்கினார். ''எனக்கே எனக்கென்று, என் உளம் அறிந்த ஆத்மார்த்த நண்பர்கள், எனக்குக் கிடையாது. ஆனா, ராணி, ஆதரவாய் இருப்பதில் என்னை பிரமிக்க வைத்தார். அவரும் தான் - ராணியின் மகனைச் சொல்றேன்.''

''இளைய பிரபுவை உனக்குப் பிடிக்குதா?''

''ரொம்பக் கூச்சப்படுபவர் போல. இறுக்கமாய் தான் பழகுவார்னு நினைக்கிறேன். அவருடன் தொடர்ந்து இருப்பது கொஞ்சம் கஷ்டம்தான். அவரின் தாயார், நேரெதிர். நல்ல கலகல மற்றும் அசாத்திய தைரியம்! இளைய பிரபுவைப் பார்த்துப் பழகி நான் அறிந்துக் கொள்வதை விட, மேலும் மிக அதிகமாய் தெரிந்துக்

கொள்ளும்படி, எப்போதும் தன் மகன் பற்றியே தான் பேசுகிறார், ராணி.''

''ஓஹோ'' என்று உள்வாங்கிக் கொண்ட பொய்ரெட், ''சொல் செல்வி'' என்று பீடிகையோடு, பின்வரும் கேள்வியைக் கேட்டான்: ''உனக்கு, மார்ஷ் மீது ஏகமாய் பிரியமோ?''

''ஆமாம், ஆமாம். கடந்த ரெண்டு வருஷங்களாகத்தான் நான் அவரை அதிகம் சந்திக்கவில்லை. அதுக்கு முன்னாடி எங்க ரீஜெண்ட் மாளிகையிலேயே தான் அவர் இருப்பார். அப்பல்லாம், எப்போதுமே அவரை நான் அற்புதமானவராகத்தான் கருதி வந்தேன். சிரிக்கச் சிரிக்கப் பேசிக் கொண்டேயிருப்பார். ஏதாவது கிறுக்குத்தனமாய் செய்ய யோசிச்சுக்கிட்டும், அப்படி எதையாவது செய்து என்னை சிரிக்க வெச்சுக்கிட்டுமிருப்பார். தினந்தோறும் இது நடக்கும். எல்லா வகையிலும் இருளடைந்த எங்க வீட்டுல, மார்ஷின் இருப்புத் தான், எத்தனை உற்சாக வித்தியாசத்தைத் தந்தது, தெரியுமா...!''

பொய்ரெட், கருணை கொண்டு தலையசைத்து ஏற்றுக் கொண்டாலும், சிறுமி சொன்ன கருத்துக்கு அவர் தந்த பதில் குறிப்பு, ஒழுங்கற்ற அமைப்பில் தானிருந்தது.

''எனில், அவர் தூக்கில் தொங்கக் கூடாது என்பது - உனது நிலை, இல்லையா?''

''ஐயோ'' - சிறுமி, புயலால் உலுக்கப்பட்ட மரமாய் ஆடிப் போனாள். ''கூடாது, ஒஹ்...! கூடவே கூடாது! கொலையை செய்தது, அவராத்தானிருக்கும் - என் சித்தியைச் சொல்றேன்! அவர் தான்! ராணி, அவராய் தானிருக்க முடியும்னே முடிவா சொல்றார்.''

''ஆஹ்...!'' என்ற பொய்ரெட், ''இது, மார்ஷ், வாடகைக் காரிலேயே இருந்திருக்கும் பட்சத்தில் தானே சாத்தியமாகும்...?'' என்றார்.

''என்ன... என்ன...? என்ன சொல்ல வரீங்க?'' - கெரால்டின் புருவங்கள் பழைய நிலைக்கு மாறி, கிலேசமான முடிச்சுகளைப் போட்டுக் கொண்டன. ''எனக்குப் புரியலே.''

''யாரோ ஒரு மனிதன் மாளிகைக்குள் சென்றதாய் சொன்னாரில்லையா... அந்த மனிதனைப் பின்தொடர்ந்து இருவரும் மாளிகைக்குள் போகாமல் இருந்திருந்தால் தானே, மார்ஷை, முழுவதுமாக சந்தேகப் பட்டியலிலிருந்து விலக்கி வைக்க முடியும்...?! சரி... நீங்க உள்ளே இருக்கும் போது, யாராவது முன்னறைக்குள் வந்தது போல அரவம் கேட்டீங்களா...?''

''இல்லே. நான் எந்த ஓசையையும் கேட்கலே.''

''ரீஜெண்ட் மாளிகைக்குள் நுழைந்ததிலிருந்து நீங்க என்னவெல்லாம் செஞ்சீங்க?''

''நான் தாமதியாது நேரா மாடிக்கு விரைந்தேன் - ஓடினேன்னு கூட சொல்லலாம். முத்துக்களை எடுக்க.''

''அது தெரியும். முத்துக்களை எடுத்து வர உங்களுக்குக் கொஞ்ச நேரம் பிடித்தது..!''

''ஆமாம்... உடனடியா என் நகைப் பெட்டியின் சாவியை என்னால கண்டு அடைய முடியலே.''

''பல முறை இப்படி நடந்து விடுவதுண்டு. எவ்வளவுக்கெவ்வளவு தேவையற்று அவசரப்படுகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நமது செயல் வேகம் ஸ்தம்பித்துடுது. சிறிது நேரம் எடுத்துக் கொண்டு வேலையை முடிச்சுட்டு கீழே இறங்கி வரீங்க - அப்போ, உங்கள் சித்தப்பா மகனை, நட்டநடு ஹால்ல பார்க்கிறீங்க.''

''ஆமாம்'' என்ற சிறுமி, கொஞ்சமாய் உமிழ் நீரை விழுங்கிக் கொண்டு, சிறு சலனத்தோடு சொன்னாள்: ''நூலகத்திலிருந்து...!''

''புரியுது. அது உங்களைத் துணுக்குறச் செஞ்சுடுது.''

''ஆமாம். துணுக்குற்றேன்'' - சொன்னாள் கெரால்ட். பொய்ரெட்டின் குரலில் இருந்த நட்பான ஆறுதலுக்கு அவரை மிக நன்றி பொங்க பார்த்தாள். ''நான் பார்த்தது - என்ன நடக்குதுனு புரியாத அளவுக்கு என்னை மலங்க மலங்க முழிக்க வெச்சுது என்பதுதான் உண்மை.''

''சரியாய் சொன்னாய்.''

''மார்ஷ், 'என்ன கண்மணி... கிடைச்சுட்டுதா?'னு என் காதருகே வந்து, அங்கு நிலவிக் கொண்டிருந்த அமைதியைக் கிழிக்கும்படி கேட்டார். இருந்த மனக் கலவரத்தால், அருகில் எழுந்த திடீர் ஓசையில் துள்ளி விட்டேன், தெரியுமா?!''

நிச்சயம் வெலவெலத்துத் தான் போயிருக்கும் என்று தலையசைத்து ஒப்புக் கொண்டான் பொய்ரெட்.

''எப்படியோ... நான் ஆரம்பத்தில் குறித்துக் காட்டியது போல, அவர் வெளியிலேயே நின்று விடாமல் போனதுதான், பரிதாபம்...! அப்படிச் செஞ்சிருந்தா, டாக்ஸி டிரைவர், மார்ஷ் டாக்ஸியை விட்டு நகரவேயில்லைனும், ரீஜெண்ட் மாளிகைக்கு அவர் போகவில்லைனும் சொல்லவல்ல சிறப்பான சாட்சியாய் நிற்பார் - நமக்கும் பேருதவியாய் போயிருக்கும்.''

சிறுமிக்கு வழக்கு நிற்கும் நிலை இப்போது புரிந்திருக்க வேண்டும். கண்களிலிருந்து பொலபொலவென கண்ணீர் கொட்டியது. அவள் தொடைப்பகுதி முழுவதும் கண்ணீர்த் துளிகள் சொட்டுச் சொட்டாய் விழுந்து ஈரப்படுத்தின. எழுந்துக் கொண்டாள். பொய்ரெட் அவள் கைகளை ஆதரவாய் பற்றிக் கொண்டான்.

''உனக்காக, நான் மார்ஷைப் பாதுகாத்துக் காப்பாற்றணும்னு விரும்பறே, இல்லையா?''

''ஆமாம், ஆமாம்...'' - கெரால்டின் கண்ணீர் ஆறாய் பெருகிற்று. ''தயவு செய்து! முடியுமா...?'' - வார்த்தைகள் உடைந்து விழுந்தன. ''நான் எந்த அளவுக்கு கஷ்டப்பட்டிருக்கிறேன்'னு-'' - இதற்கு மேல் சிறுமியிடமிருந்து வார்த்தைகள் வருவது நின்றே போனது. துக்கம் தொண்டையை அடைக்க மிக அழுதாள்.

''செல்வி...! வாழ்க்கை எவ்வளவு மோசமா ஒரு சிறுமிக்கு அமைய முடியுமோ அவ்வளவு மோசமா தான் உனக்கு அமைந்துள்ளது என்பது எனக்குப் பரிபூரணமாய் தெரியுமடா! நீ அந்தப் புயலையும் எதிர்த்து வாழ்ந்து சாதிச்சிருக்கே. என் மனப்பூர்வமான வாழ்த்துக்கள். அதே அக்னிக் குஞ்சை நெஞ்சில் அவிய விடாமல் வளர்த்தபடி இரு. பார்ப்போம். இனிய ஹேஸ்டிங்ஸ்... கண்மணிக்கு ஒரு டாக்ஸி...!''

அவர் பேசிய முறையிலிருந்து எத்தனை அற்புத மனிதர் பொய்ரெட் என்ற வியப்போடு, அவரிட்டக் கட்டளையை நிறைவேற்ற எழுந்தேன். ஒரு டாக்ஸியைப் பிடித்து, கெரால்டை அனுப்பி விட்டுத் தான் திரும்பினேன். சுய கட்டுப்பாட்டுக்குள் நுழைந்திருந்த சிறுமியும் எனக்கு சிறப்பான நன்றியைத் தெரிவித்து விட்டுக் கிளம்பினாள்.

திரும்பி அறைக்குள் நுழைந்தபோது, அறையின் இடமும் வலமுமாய் பொய்ரெட் நடந்துக் கொண்டிருந்தான். அவனின் புருவங்கள் முடிச்சிட்டிருந்தன. சந்தோஷ மற்றுக் காணப்பட்டன.

இப்படிப்பட்ட அவனின் மனக் குடைச்சலை உடைத்தெறியும்படி தொலைபேசி ஒலித்ததில் எனக்கு நிம்மதியாயிற்று.

பொய்ரெட் தான் ரிஸீவரை எடுத்தது. ''யாரது? ஓ, ஜேப்! வணக்கங்கள்!''

''என்ன சொல்லணும்னு போன் செஞ்சாராம்?'' - கேட்டபடி தொலைபேசி பகுதியை நெருங்கினேன் நான்.

அந்தப் பக்கத்தில் என்னவோ பேசப்பட்டுக் கொண்டேயிருந்தது. பொய்ரெட் பதிலே பேசவில்லை. இந்நிலை முடிந்ததும், துப்பறியும்

நிபுணர், இத்தனை நேரம் பேசிக் கொண்டிருந்த சமாச்சாரத்தின் மீது, இந்தப் பக்கத்திலிருந்து கேள்விக் கணைகளைத் தொடுக்க ஆரம்பித்தான்.

''சரி, அதை யார் வந்து வாங்கிப் போனாங்களாம்? இதுபற்றி தகவல் கெடச்சுதா?''

அது என்ன பதில் தரப்பட்டதோ... அந்த பதில் நிச்சயமாய் பொய்ரெட் எதிர்பார்த்திருந்த பதிலில்லை. அவன் முகம் தொங்கிப் போயிற்று.

''நிச்சயப்படுத்திக் கொண்டுதானே சொல்றீங்க?''

''... ... ...''

''இல்லை. இது என்னைக் கொஞ்சமாய் பாதிக்குது. அதனால தான் கேட்கிறேன்.''

''... ... ...''

''ஆமாம். நான் என் அபிப்பிராயங்களை மாற்றி வைத்துப் பொருத்திப் பார்க்கணும்.''

''... ... ...''

''ஓ..!''

''... ... ...''

''எல்லாம் ஒண்ணு தான் திரு. ஜேப். நான் நினைச்சபடி தான். நீங்க சுற்று விலாவாரியா அதையே தான் மீண்டும் சொல்றீங்க...''

''... ... ...''

''மாட்டேன். நான் இன்னும் அதே கருத்தில் தான் இருக்கேன் - இருப்பேன். உங்ககிட்டே மறுபடியுமொரு முறை கெஞ்சிக் கேட்டுக்கறேன். மேலும் தீவிரமான விசாரணையில் இறங்குங்க. ரீஜெண்ட் பகுதி, ஆஸ்டன் மற்றும் இதனை ஒட்டி உள்ள அத்தனை தங்கும் விடுதிகளையும் நீங்க குடைய வேண்டும். அங்கொன்றும் இங்கொன்றுமாய் நீங்க விசாரித்திருப்பது சுகப்படாது.''

''... ... ...''

''ஆமாம். ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் தங்கினாங்களா... ஒரு முகப்படுத்தப்பட்டது போல, இது ஒண்ணுதான் கேள்வியா யிருக்கணும். நடன விருந்து நடந்த பகுதியை ஒட்டியும் விசாரியுங்க.''

''... ... ...''

''ஆமாம். காப்டன் மார்ஷ், மேயர் குடும்பத்துடன் தானிருந்தார் என்பது எனக்கும் தெரியும் திரு. ஜேப். ஆனா கண்களையும் மூளையும்

திறந்து வெச்சுக்கிட்டு தேடினா, யாராவது புது மனிதன் நோக்கிக் கூட ஒளி கிடைக்கும். உலகம், மார்ஷால் மட்டும் ஆக்கப்படவில்லே.''

''... ... ...''

''நிறுத்துங்க திரு ஜேப். நீங்க சொன்ன விஷயத்தை ஒற்றி உடனடியா செய்ய வேண்டியதா நான் மோப்பம் பிடிச்சுள்ள வேலைகளைத் தான் இப்போ சொன்னேன். அவற்றை ஏற்று உடனடியாய் முடிக்கும்படியும் வேண்டுகிறேன். என்னைக் கிண்டலடிக்க தொலைபேசியை உபயோகிக்கும் பட்சத்தில் நான் இணைப்பைத் துண்டிக்க வேண்டி வரும்.''

''... ... ...''

''நன்று.''

ரிஸீவரை அதனிடத்தில் வைத்தான் பொய்ரெட்.

இந்த ஜேப், பொய்ரெட்டை வெறுப்பேற்றி விட்டிருக்கிறார் என்பது, ''நீயும் ஜேப்பேடு சேர்ந்துக் கொண்டு தாளம் தட்ட, பாவம் உனக்கு அவர் பேசியவைக் கேட்கலே'' என்று விரக்தியாய் அவன் சொன்ன விதத்திலிருந்தே புரிந்தது.

நான் தலைகுனிந்துக் கொண்டு பேசாமலிருந்தேன். நிமிடங்கள் கடந்தன. ''என்னவாம்?'' என்றேன் பொறுமையிழந்து.

''நான் சொல்வதைக் கொஞ்சமும் காதுல வாங்கிக்காம ரெண்டு பேரும் என்னை விமர்சிச்சீங்க, இல்லையா?''

அவன் எதிர்பார்த்து சொன்னபடியே ஏதோ நடந்திருக்கிறது. நான் பேசவேயில்லை. அவனே தொடர்ந்தான்: ''அந்த சிறு தங்க முலாம் பூசப்பட்ட செல்வி ஆடம்ஸின் பெட்டி, பாரீஸில் தான் வாங்கப்பட்டி ருக்கு. தபால் மூலம் அப்படி ஒரு பெட்டி வேண்டும்னு வரைந்தனுப்பிக் கேட்டிருக்காங்க. இதுபோன்ற நகைகள் பதித்து பை செய்யும் மிகப் பிரபல கடை ஒண்ணிலிருந்து அந்தப் பை வாங்கப்பட்டுள்ளது. ஆக்ரெலி எனும் பெண் அவசரமாய் வேண்டி அனுப்பப்பட்டது போல கடிதம் அமைந்துள்ளதாம் - முழு பெயர், கான்ஸ்டன்ஸ் ஆக்ரெலி. கடிதத்தில் கையெழுத்து இந்தப் பெயரில் போடப்பட்டுள்ளது. ஆனா, அப்படி ஓர் ஆள் கிடையவே கிடையாது! கடிதம், கொலை நடந்த இரு தினங்களுக்கு முன்னால, கடைக்காரர்களால் பெறப்பட்டுள்ளது. கற்களில் பெட்டிக்கு வெளியே பெயரும், மூடியைத் திறந்ததும் உள்ளே செதுக்கியிருக்க வேண்டிய சங்கதியும் குறிப்பிட்டு கடிதத்தை அனுப்பியிருக்காங்க. கற்களில் பொறிக்கப்பட வேண்டிய பெயரை

வைத்துப் பார்க்கும்போது, அது, கடிதம் எழுதியவரின் பெயர் சுருக்கமாய் படுகின்றது. அதாவது, கான்ஸ்டன்ஸ் ஆக்ரெலி - C.A! அடுத்த நாளே கைக்கு கிடைத்தாக வேண்டும் எனும் துரித அவசரத்தில் வேண்டப்பட்டுள்ள பை இது! அதாவது, கொலை நடப்பதற்கு முன் தினம்!''

''பை மறுநாளே வந்துவிட்டதா?''

''வந்துவிட்டது.''

''வந்து வாங்கிச் சென்றுள்ளார்களா?''

''ஆமாம். வாங்கிச் சென்றுள்ளனர். நோட்டுக்களாக, அதற்குண்டான பணமும் தரப்பட்டுள்ளது.''

''யார் வாங்கிச் சென்றது?'' - உத்வேகத்துடன் கேட்டேன். நாங்கள் உண்மையை நெருங்கத் துவங்கியுள்ளதாய் தோன்றியது.

''ஒரு பெண் வந்து வாங்கிச் சென்றுள்ளார், ஹேஸ்டிங்ஸ்.''

''பெண்?'' - ஆச்சரியமாய் சொன்னேன்.

''பெண்ணே! குள்ளமான, நடுத்தர வயது பெண்! சக்தி வாய்ந்த மூக்குக் கண்ணாடி அணிந்திருந்த பெண்!''

அடி வேர் வரை உலுக்கப்பட்டவர்களாய் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தோம்.

## அத்தியாயம் - 25

# ஒரு சிற்றுண்டி அளவளாவல்

க்ளேரிட்ஜ் பகுதி, லண்டனின் ஒதுக்குப்புறமான அமைதி மிகும் பகுதி. நான் மேற்கூறிய பாரீஸ் செய்தி வந்ததற்கு இரண்டு நாள் கழித்து, நாங்களிருவரும் க்ளேரிட்ஜ் பகுதியில் தங்களுக்கென நல்ல பெரிய காற்றோட்டமான வகையில் விட்பர்ன் குடும்பம் வைத்திருந்த இல்லத்திற்கு, அவர்கள் ஏற்பாடு செய்திருந்த ஒரு சிறு அளவளாவல் நிகழ்ச்சிக்குச் சென்றிருந்தோம்.

எனக்கோ, பொய்ரெட்டுக்கோ, இந்த அளவளாவலுக்குச் சென்று தான் தீர வேண்டும் என்று எவ்வித ஆசையும் கிடையாது. சொல்லப் போனால், இந்த அளவளாவலுக்கு வந்தே தீர வேண்டும் என்று எங்களுக்கு வந்த ஆறாவது அழைப்பின் பேரில் தான், தட்ட முடியாமல் கிளம்பும்படி ஆயிற்று. திருமதி விட்பர்ன், கற்பனைக்கு அப்பாற்பட்ட பிடிவாதக்காரி. மேலும், சமுதாயத்தில் புகழ் பெற்ற மனிதர்களின் தீவிர ப்ரியை. எங்களின் தொடர்ச்சியான மறுப்புகளினால் துளியும் அதிராமல், வந்தே ஆக வேண்டும் என்ற உந்துதல் செறிந்து எந்த தேதி உங்களுக்கு உசிதம் என்று அவர் தந்த விதவிதமான தேதிகளின் தாக்கத்தால் 'வருகிறோம், வருகிறோம்' என நாங்கள் எங்களை ஒப்படைப்பது தவிர்க்க இயலாததாயிற்று! இதுபோன்ற தப்பிப்பற்ற அன்பு சங்கடங்களை, எத்தனை விரைவாய் முடியுமோ அத்தனை விரைவாய் முடித்து விடுவதே சிரேஷ்டம்!

பாரீஸிலிருந்து சேதி வந்த தினத்திலிருந்து, பொய்ரெட், சீமான் எட்ஜ்வேர் கொலை வழக்கு மட்டுமின்றி, வேறு எது குறித்துப் பேசுவதையும் குறைத்துக் கொண்டு விட்டான். இவ்வழக்கு குறித்து நானாக ஏதாவது பேச்சினை எடுத்தால், அவனிடமிருந்து ஒரே ஒரு பதில் தான் வந்த வண்ணமிருந்தது... அது: ''வழக்கு முட்டி நிற்கும்

இந்த இடத்தில், என்னால் கிரகித்துக் கொள்ள இயலாத - கவ்வி படுத்திக் கொள்ளயியலாத - ஒன்று - மறைந்துள்ளது.'' இது மட்டுமின்றி, ஓரிரு முறை, ''மூக்குக் கண்ணாடி - பாரீஸில் மூக்குக் கண்ணாடி - கர்லோட்டா ஆடம்ஸ் பையில் மூக்குக் கண்ணாடி'' ஆகிய மூன்று வார்த்தைகளைக் கோவையாய் முணுமுணுத்த வண்ணமிருந்தான்.

ஆகவே, முக்கியமான இவ்வழக்குக் கையிலிருக்கும்போது, திருமதி விட்பர்னின் இச்சிறு சிற்றுண்டி விழாவுக்கு வந்து நேர விரயம் செய்வதில் எனக்குத் துளியும் உடன்பாடு இல்லையென்றாலும், பொய்ரெட்டின் குழப்ப மனோநிலைக்கு ஒரு மாற்றத்தை இது தரும் என்றும் எண்ணத்தால் தான் அவனுடன் கிளம்பி வந்துள்ளேன்.

இளைஞன் ரொனால்ட் ராஸ் அங்கிருந்தான். அன்போடு என்னை நோக்கி வந்து, கலகலப்பாய் வரவேற்றான். மிக மகிழ்ச்சியாய் காணப்பட்டான். நிகழ்ச்சிக்குப் பெண்களை விட ஆண்கள் கூட்டம் அதிகமாயிருந்தது. சிற்றுண்டிக்கு எல்லோரும் ஒரு பெரிய சாப்பாட்டு மேஜையைச் சுற்றி அமரும்போது, ராஸ், எனக்கு அடுத்து அமருவது போல் அமைந்தது.

எங்களுக்கு நேரெதிராய் ஜானே வில்கின்ஸன் அமர்ந்தார். அவருக்கு அடுத்து, அவருக்கும் திருமதி விட்பர்னுக்கும் இடையே, மெர்ட்டான் மாகாணத்து இளைய பிரபு அமர்ந்தார்.

எனக்குத் தோன்றியது - நினைவிருக்கட்டும், எனக்கு வெறுமனே தோன்றிய கற்பனையாகக் கூட நான் சொல்லப் போவது இருக்கலாம் - இதுபோன்ற கூட்டத்திலெல்லாம் ஒட்டப் பிரியப்படாத தாமரை இலை தண்ணீர் போன்ற மனோ நிலையில் இளைய பிரபு விளங்கினார். எனவே, அவர் விருப்பத்துக்கும் ருசிக்கும் உகந்ததாக இல்லாத ஒரு வட்டத்துக்குள் வந்து தவிர்க்க இயலாது அவராகவே அகப்பட்டுக் கொண்டதாய் நான் நினைக்க வேண்டியதாயிற்று. அவர், தானுண்டு தன் விருப்ப வேலைகள் மட்டும் உண்டு என ஒட்டுக்குள் உறங்கும் ஒரு நத்தை; தன்னை அணுகும் எந்த ஒரு விஷயத்துக்கும், அதிர்ந்து, எதிர்ப்பு மட்டுமே தெரிவிக்குமாறு, ஒரு கோப வலைக்குள் அமுங்கியே வளர்ந்து விட்ட இளைஞன். வசந்த மணம் கமழும் விடலைப் பருவத்தின் இளமை அனுபவங்கள், வருந்தத்தக்க ஏதோ ஒரு தவறினால் நழுவிப் போய்விட, அதனால் விளைந்து நிலை பெறும், துரதிர்ஷ்டவசமான துணாதிசயம்...! இப்படிப்பட்ட கலவையான கடுமன் குணம்

அமைந்துள்ள இளைய பிரபுவுக்கு, நவநாகரீக எண்ணங்கள் மட்டுமே செறிந்து அங்குமிங்கும் உலவிக் கொண்டிருக்கும் ஜானே வில்கின்ஸனின் மீது பால் ஈர்ப்பு உண்டாகியுள்ளதை, நேரங்காலம் தெரியாது விளையாடிப் பார்க்க விரும்பும் இயற்கையின் ஹாஸ்யம் என்று சொல்வதை விட, வேறென்னென்பது..!

ஜானேயின் ஈடில்லாத பெண் வனப்பு, மற்றும், அற்பமான சாரமற்ற விஷயங்களைக் கூட வளைத்து இழுத்து பதப்படுத்திய தன் குரலின் கவர்ச்சி மிகு பங்களிப்பால் பிரமிப்பான விஷயமாக்கிப் பேசவல்ல அவரின் திறமை - ஆகிய இரண்டையும் கண்ணுற்றுத் தான், மனுஷன் தன்னைத் தாரை வார்த்துள்ளான் என்றே வியந்தேன்...! இருந்தாலும் கூட, இப்படி அடிமைத்தனமாய் தன்னை அவர் ஜானேயிடம் ஒப்படைத்துள்ள நிலையில் கூட, மூடு பனியாய் பிரபுவை போர்த்தியிருக்கும் காதல் மயக்க நிலையிலிருந்து, இதோ... இப்பொழுது, புத்திசாலித்தனமான பகுத்தறிவுக் கதிர்கள் வழிந்து வருவதாய் என் மனதுக்கு உறைத்தது. ஜானேயிடமிருந்து வெளியான, ஒரு வகையான மனிதாபிமானமற்ற கருத்து தான், இந்தப் பதிப்பை என்னுள் உண்டு பண்ணக் காரணமாயிற்று.

யாரென்று தெரியவில்லை. ஒரு குரல், காரசாரமாய், ''முதலும் கடைசியுமான தீர்ப்பு - பாரீஸுடைய உச்சநீதிமன்ற தீர்ப்பு'' என்ற பதத்தை உதிர்த்தது. இதைக் கேட்டதும், ஜானேயின் உவகையான குரல், கணீர் என்று அறை முழுவதும் வியாபிக்கும் வண்ணம் எழுந்துக் கொண்டது. ''பாரீஸ்?'' என்று கேள்வியாய் சொன்னார் அவர். ஒரு வார்த்தைதான்... ஆனாலும் அதிலிருந்த காந்தக் கவர்ச்சியால், அனைவரின் கவனமும் அவர் பக்கம் திரும்பியது. ''ஏன்...? இப்பல்லாம் பாரீஸ் தீர்ப்பு தான் இறுதியானது என்ற நிலையெல்லாம் இல்லே...! லண்டனும் நியூயார்க்கும் தான் கணக்கில் கொள்ள வேண்டியவை...!''

விருந்துகளின் இலக்கணப்படி, இந்த சிறு சம்பாஷணை, அனைவரின் வாய்க்குக் கிட்டிய அவலாகி விட, அத்தருணம், தர்மசங்கடமான கணமாயிற்று. ஆளாளுக்கு - பாரீஸ், பாரீஸ் என விதவிதமாய் கருத்துத் தெரிவிக்கத் துவங்கினர். எனக்கு வலப்புறத்தில் அமர்ந்திருந்த இளைஞன் ராஸ், எதற்காகவோ, சிறு ஓசை எழும்படி, தன் மூச்சினை ஆழ உள்ளுக்கிழுத்துக் கொண்டான் - பதற்றத்தில் செய்வது போல! ஒரு பக்கம் திருமதி விட்பார்ன் ரஷ்ய நடனம் பற்றி

பிரசங்கித்துக் கொண்டிருந்தார். எல்லோரும், அருகிலமர்ந்திருந்த வரிடம் எதையோ சப்தமாய் சொல்லிக் கொண்டு, விருந்தினை, தெரு அங்காடி போல ஆக்கி விட்டனர். தனது கருத்தால் தான் இந்த சலசலப்பு என்ற பிரக்ஞையே இல்லாது, ஜானே, தட்டுக்கும் தன் வாய்க்குமாக விளையாடிக் கொண்டிருந்தார்!

அப்போதுதான் இளைய பிரபுவைக் கவனித்தேன். அவர் உதடுகள் சிரிக்கயியலா வண்ணம் இறுக்கிக் கொண்டன. பெருக்கித் தள்ளப்பட்டதாய் உணர்ந்தார். ஜானேயிடமிருந்து கொஞ்சமாய் விலகி அமர்ந்துக் கொள்வதாயும் எனக்குப் பட்டது. அவரைப் போன்ற மாபெரும் உயரத்தில் இருக்கும் பொறுப்புள்ளவர், ஒரு ஜானே வில்கின்ஸனைப் போய் மணந்துக் கொள்வதால், அவலட்சண சங்கடங்களை உண்டு பண்ணும் எனும் நிதர்சனத்தை முன்னெச் சரிக்கை மணியாய் உணர்ந்திருக்க வேண்டும்..!

பேச்சுவார்த்தை நிகழ்த்தாது, வெறுமனே சாப்பிட்டுக் கொண்டே இருக்க முடியுமா..! விருந்துகளின் வழக்கப்படி, பக்கத்தில் அமர்ந்திருந்த குண்டான பெண்மணியிடம் நானாகப் பேச்சுக் கொடுத்தேன் - அவர், பள்ளிக் குழந்தைகளைக் கலா நிகழ்ச்சிகளுக்கு அழைத்துக் கொண்டு போய் பத்திரமாய் திரும்பக் கொண்டு வந்து விடும் தொழில் செய்பவர். நான் குண்டுப் பெண்ணிடம் பேசியதன் சாராம்சம்: ''அதோ... மேஜையின் எதிர்பக்கக் கோடியில் உட்கார்ந்திருக்கிறாளே... ஊதா நிற உடையணிந்து அசாதாரண அலங்காரத்தில், ஒரு பெண்...? அவள் யாராக்கும்?''

அது, நான் சந்தேகம் கேட்ட இந்தக் குண்டுப் பெண்ணின் சகோதரி! கேட்டது தப்பு, தப்பு என்று பற்பல முறை கன்னத்தில் போட்டுக் கொண்டேன். வெட்கக் கேடாய் போயிற்று. எனது இன்னொரு பக்கத்தில் உட்கார்ந்திருந்த ராஸ் நோக்கி திரும்பி அமர்ந்துக் கொண்டு, வேறெதையோ அவனோடு நான் பேச, என்னாயிற்றோ அந்த இளைஞனுக்கு... வரவேற்பின் போது கலகலவென இருந்த குமரன், தற்போது, தான் தரும் பதில்களெல்லாவற்றையும் ஒரே வார்த்தையில் முடித்துக் கொண்டான். எனவே ராஸோடும் உரையாட இயலாமல் ஆயிற்று.

இரு பக்கங்களிலும் ஒதுக்கப்பட்டு விட, வேறு வழியின்றி, கண்களை, வந்திருப்பவர்களின் மீது ஒவ்வொருவராய் நான் மேய விடும்போது, ப்ரையன் மார்ட்டினைக் கவனித்தேன். முன்பே அவரை

நான் கவனிக்காமல் விட்டிருப்பதற்கு, அவர் நேரங்கழித்து வந்ததுதான் காரணமாயிருக்க வேண்டும்.

என் பக்கத்து வரிசையிலேயே மேஜையின் கடைசியாய் அமர்ந்திருந்தார் மார்ட்டீன். பலவித முக ஜாடைகளை அள்ளி வீசிக் கொண்டு அவரருகிலிருந்த அழகுப் பதுமை போன்ற ஒரு பெண்ணிடம் வளவளவென பேசிக் கொண்டிருந்தார் அவர். மார்ட்டீனை மிக அருகில் பார்த்து சில பல நாட்கள் ஆகியிருந்தபடியால், அவரின் தோற்றத்தில் ஏற்பட்டிருந்த சிறப்பான முன்னேற்றம், சட்டென அடையாளம் கண்டு கொள்ளும்படியாயிருந்தது. குழப்ப ரேகைகள் அவர் முகத்தில் இல்லவே இல்லை. எனவே இன்னும் கவர்ச்சி யாகவும், இளமையாகவும், எதற்கும் எல்லாவற்றுக்கும் பொருந்தும் வசீகரம் கூடியவராகவும் தோன்றினார். அந்த அழகியுடன் பலமாய் சிரித்துக் கொண்டும், அதிகமாய் பேசிக் கொண்டும், முதல் தர மனக் கிளர்ச்சியில் இருந்தார்.

மேலும் அவரிடம் தோன்றியுள்ள குண மாற்றங்களை நான் தொடர்ந்து கவனித்துப் பதிந்துக் கொள்ள அவகாசம் தராது, எனக்கு அடுத்து அமர்ந்திருந்த குண்டுப் பெண், என்னை மன்னித்து விட்டு, தான் சமீபத்தில் ஒரு தொண்டு நிறுவனத்துக்காக அரங்கேற்றியிருந்த குழந்தைகள் கலை நிகழ்ச்சி பற்றி, நீண்டதொரு தனி ஆவர்த்தனம் நிகழ்த்தலானார்.

தன் வணக்கத்தை, தவறாது திருமதி விட்பர்னிடம் தெரிவிக்கச் சொல்லி விட்டு, ஏற்கனவே அளித்திருந்த ஒரு முன்பதிவினை கவனிப்பதற்காக, பொய்ரெட் வந்த ஜோரே தெரியாது கிளம்பி யிருந்தான். அதற்காகக் காத்திருந்தேன்... காத்திருந்தேன்... ஆனால் பொய்ரெட் இட்ட கட்டளையை நிறைவேற்ற இயலா வண்ணம், விருந்து முடித்துக் கிளம்பிக் கொண்டிருந்த அத்தனைக் கூட்டமும் திருமதி விட்பர்னைக் குழுமிக் கொண்டிருந்தன. 'வெகு விமரிசை அன்பே...' 'வரட்டுமா கண்ணே...', 'வெளுத்து விட்டாய் தோழி...' போன்ற பாராட்டு மழையில் நனைந்துத் தத்தளித்துக் கொண்டிருந்த அவரை தற்சமயம் நெருங்குவது இயலாத ஒன்றாயிருந்தது. இக்காத்திருத்தலின் போதுதான், யாரோ என் தோளைத் தொட்டனர். திரும்பினேன். அது, இளைஞன் ராஸ்.

''திருமிகு பொய்ரெட் இங்கில்லையா? நான் அவரோடு பேசணும்.''

பொய்ரெட் சில நிமிடங்களுக்கு முன் தான் கிளம்பிப் போனான் என்பதை விளக்கினேன்.

ராஸ், பெருந்தோல்வி அடைந்தவனைப் போலானான். அவனைக் கூர்ந்து கவனித்த போது அவனை ஏதோ ஒரு சமாச்சாரம் நிலைகுலையச் செய்துள்ளது என்பதை உணர்ந்தேன். அவன் முகம் வெளிறிப் போயிருக்க, மன இறுக்கம் கொண்டவனாய் தெரிந்தான். நிலையற்ற சந்தேகப் பார்வை அவன் விழிகளில் முளைத்திருந்தது. நிச்சயமாய், விருந்தின் துவக்கத்தில் வெகு கிளர்ச்சியாயிருந்த ராஸ் இல்லை இது.

''அவரை நிச்சயமா பார்த்தே ஆகணுமா..?'' - கேட்டேன் நான்.

மெதுவாய், குழப்ப பதில் வந்தது: ''ஆ..மா.. ம் - இ.. ல்.. லை.. - தெரியலே.''

ராஸ் சொன்ன விதத்தில் அவ்வளவு பயமும் சந்தேகமும் தெரிய, நான் ஆச்சரியமாய் அவனைக் கண்ணகலப் பார்த்தேன். என் பார்வையை அவன் பொருட்படுத்தவில்லை. சற்று தட்டுத் தடுமாறித் தான் பேசினான்: ''நான் சொல்வது உங்களுக்கு விந்தையாய் தெரியலாம். உண்மை என்னனா, ஏதோ சந்தேகப்படும்படியாய் நடந்திருக்கு. என்னால் அந்த 'ஏதோ'வின் அர்த்தத்தைப் பிரித்தறிய முடியலே - புரியவுமில்லே. இதுக்கு, திரு பொய்ரெட்டின் அறிவுரை எனக்குத் தேவைப்படுது. ஏன்னா... ஏன்னா... திரு ஹேஸ்டிங்ஸ், ஏன்னா... அது குறித்து என்ன செய்வதென்றே எனக்கு விளங்கலே. திரு. பொய்ரெட்டுக்கு வீணாய் தொந்தரவு தர வேணாம்னு தான் நினைக்கிறேன். ஆனால் - - - ''

ராஸ், மிகவும் சந்தோஷமற்றும், விடையறியா புதிர் ஒன்றினை எதிர்கொண்டவராயும் கலக்கமாய் தெரிய, அவனுக்கு விரைவாய் ஆறுதல் அளிக்கும் முயற்சியில் இறங்கினேன் நான்: ''பொய்ரெட், ஏற்கெனவே கொடுத்த வாக்கினைக் காப்பாற்ற, ஒரு முன்பதிவின் பொருட்டு கிளம்பிட்டான். கவலை வேண்டாம். மாலை ஐந்து மணிக்குள் திரும்பி விடும் முடிவில் தான் போயிருக்கான். அப்போ அவனுக்கு போன் போட்டுப் பேசுங்களேன்..! இல்லே, வந்து கூட பார்க்கலாம்...!''

''தவறா நினைக்க மாட்டாரே...!''

நான் இளைஞனைத் தோளோடு இறுக்கிக் கொண்டேன். ''இந்தப் பூமியில் எதற்கும் கோபப் படாது, எதிரிலிருப்பவரின் மனம் போலவே நடந்துக் கொள்ளும் ஒரே ஜீவன் - ஹெர்குல் பொய்ரெட் ஒருவன் தான் கண்ணா..!''

*ராஸ் மிக மகிழ்ந்தான். ''நன்றி, நன்றி, ஐந்து மணி தானே?''*

*''போன் செஞ்சு இருக்கானானு உறுதி செஞ்சுக்கோ, வளரும் கதாநாயகனே..!''*

*''நன்றி, நிச்சயமா அப்படியே செய்றேன். திரு ஹேஸ்டிங்ஸ்... அது... முக்கியமானதான... மிக முக்கியமான துப்பாய் இருக்கும்னு நினைக்கிறேன்.''*

*நான் ஒப்புதலாய் தலையசைத்து ஏற்றுக் கொண்டு, திருமதி விட்பர்ன், தேனொழுகப் பேசிக் கொண்டும், இறுக்கமாய் கை குலுக்கி வந்திருந்தவர்களுக்கு விடை கொடுத்தும் கொண்டிருந்த திசை நோக்கி சென்றேன். பொய்ரெட் என்னிடம் பணித்திருந்தது நிறைவேறியது. விருந்திலிருந்து வெளியேறி நான் விரையத் தொடங்கிய போது, ஒரு கை, என் உள்ளங்கைக்குள் நழுவி இறுக்கியது. கனிவான குரலில், ''விலக்கிடாதீங்க'' என்றும் வேண்டியது.*

*அது - ஜென்னி ட்ரைவர். பளபளப்பாயிருந்தார்.*

*''வணக்கம்'' என்ற நான், ''எங்கிருந்து குதிச்சீங்க?'' என்று கேட்டேன்.*

*''உங்களுக்கு அடுத்த மேஜையில் தான் நான் விருந்து சாப்பிட்டுக்கிட்டிருந்தேன்.''*

*''நான் உங்களைப் பார்க்கவேயில்லையே...! தொழில் எப்படி போய்க்கிட்டிருக்கு?''*

*''கிளம்பும் விமானம் போல் ஏறுமுகம் தான்...! நன்றி...!''*

*''அந்த சாப்பாட்டுக் கிண்ணங்கள் மார்க்கெட்டுல நல்லா போகுதா..!''*

*''சாப்பாட்டுக் கிண்ணங்கள்...? ஓ..! கர்லோட்டாவுக்கு செய்து தந்த தொப்பி வகைகளைச் சொல்றீங்களா...? மிக நல்லா விற்கின்றன. அவ்வகை தொப்பிகளை எல்லாரும் வாங்கி அணிந்துக் கொண்டு பழசான பிறகு, ஒப்பேறாத வேறு ஒரு வகை பிரபல்யமாகும். எனக்கென்னவோ, இந்த சாப்பாட்டுக் கிண்ணத் தொப்பி வகைக்கு அடுத்து, பறவை இறகுகள் தொப்பி நெடுகிலும் இங்குமங்கும் செருகப்பட்ட வகை, அடுத்து சந்தையில் பிரபல்யமாகப் போவதாய் தோணுது. அவ்வகைக்கு ஏற்கனவே கிராக்கித் தொடங்கிடுச்சு.''*

*''கண்றாவி.''*

*''கிடையவே கிடையாது. மாற்றமில்லாத வாழ்க்கையா...?'' சிரித்து விட்டு நகர்ந்தார். நழுவும்போது, ''இன்னிக்கு மத்தியானம் நான் லீவு போட்டிருக்கேன். நகரை ஒரு சுற்று சுற்றி வர ஆசை.''*

''மிகச் சரி'' என்றேன் ஒப்புதலாய். ''காற்றாட வெளியே போய் வருவதே சரி. இன்று லண்டனில் புழுக்கம் ஜாஸ்தி.''

நான் தனியாக விடப்பட்டேன். இப்படி எனக்கே நானாய் தனிமை அகப்படுவதெல்லாம் அபூர்வம். காலாற பூங்காவில் நடக்கலானேன். நடந்தே வீட்டை அடைந்தபோது மணி நாலைத் தாண்டியிருந்தது. பொய்ரெட் அது வரை வந்திருக்கவில்லை. அவன் திரும்பி வந்த போது மணி நாலு நாற்பது. நுழையும்போதே என்னைப் பார்த்து அழுத்தமாய் கண்ணடித்துக் கொண்டு பெரிய புன்னகையோடு நுழைந்தான். மிக திருப்திகரமாயிருந்தான். போன காரியம் சுபமாகி விட்டது என்று களிப்படைந்தான்.

அப்போது போன் ஒலித்தது.

''அது ராஸாக இருக்கணும்'' - தொலைபேசியை நோக்கி நடந்தபடியே சொன்னேன் நான்.

''டொனால்ட் ராஸ்..?'' என்று கேட்டான் பொய்ரெட்.

''ஆமாம்.. சிஸ்விக்கில் நாம் சந்தித்த இளம் நடிகன். உன்னை எது குறித்தோ கொஞ்சம் அவசரமா சந்திக்கப் பிரியப்படறான்.''

பொய்ரெட்டுக்குப் பதில் சொல்லியபடியே தொலைபேசியை நெருங்கிய நான் ரிஸீவரை எடுத்து, ''காப்டன் ஹேஸ்டிங்ஸ் பேசறேன்'' என்றேன்.

மறுமுனையில் ராஸ் தான்.

''ஓ...! ஹேஸ்டிங்ஸா..! திரு. பொய்ரெட் திரும்பிட்டாரா?''

''ஆமாம். அவன் இப்போ இங்கேதானிருக்கான். அவன் கூட பேச விரும்பறீயா, அல்லது கிளம்பி இங்கு வரப் போறீயா?''

''அதிகம் பேச இல்லை. விஷயத்தை போன்லேயே கூட நான் சொல்லிடுவேன்.''

''சரி, காத்திரு. இதோ பேசுவான்.''

பொய்ரெட் இணக்கமாய் முன்வந்து ரிஸீவரை எடுத்துக் கொண்டான். அமைதியான தருணம். மேலும் நான் தொலைபேசிக்கு மிக அருகில் தானிருந்தேன். எனவே, இருவருக்குள்ளும் நடக்கும் தொலைபேசி உரையாடலில், ராஸ் சொல்பவற்றை என்னால் மெலிதாய் கேட்க முடிந்தது.

''இது, திருமிகு பொய்ரெட்டா..?'' - குரல் ஆர்வமாய், கிளர்ந்தெழுந்து ஒலித்தது.

''ஆமாம். இது நான் தான்.''

''உங்களைத் தொந்தரவு செய்ய எனக்கு விருப்பமேயில்லை..! ஆனா, ஒண்ணு, சற்றே அசாதாரணமாய் எனக்குத் தோணுது. இவ்விஷயம், சீமான் எட்ஜ்வேரின் கொலையோடு சம்பந்தப்பட்டது.''

பொய்ரெட்டின் முகம் மிகையான ஆர்வம் கொள்வதைக் கண்டேன்.

''ம்.. தொடர்..''

''நான் சொல்வது உங்களுக்கு முட்டாள்தனமாகக் கூடத் தோணலாம்.''

''இல்லையில்லை. அப்படி நினைக்காது, என்ன சொல்ல வந்தியோ அதை அப்படியே சொல்லு.''

ராஸ் சொன்னான்: ''என் மகிழ்ச்சியை *பாரீஸ்* என்ற வார்த்தை தான் அவித்துப் போட்டது. அதாவது -''

இப்போது, மறுமுனையில் ஒரு மணி, அதிர்ந்து எழும்பும் ஒலியை மெலிதாய் நான் கேட்டேன்.

உடனே, ''ஒரு நொடி'' என்றான் ராஸ். அவர் கையிலிருந்த ரிஸீவர் கீழே வைக்கப்படும் ஓசை கேட்டது.

நாங்கள் காத்திருந்தோம். பொய்ரெட் ரிஸீவரோடும், நான் அவனுக்கு அருகிலேயும் காத்திருந்தோம்.

ஒரு நொடி நழுவி, இரண்டு நிமிடங்களாயின. மூன்று நிமிடங்கள் கடந்தன. நான்கு நிமிடங்கள்.. ஐந்து நிமிடங்கள்...

பொய்ரெட், ஆறுதலற்று சஞ்சலமானான். நிமிர்ந்து கடியாரத்தைப் பார்த்துக் கொண்டான்.

பதிலேயில்லாமல் போகவே, ரிஸீவரை அதனிடத்தில் பொருத்தி வைத்துவிட்டு, ''எதிர்முனையில் இன்னும் ரிஸீவர் எடுக்கப்பட்ட நிலையில் தான் உள்ளது - ஆனால், மறுபதில் தானில்லை. சீக்கிரம் ஹேஸ்டிங்ஸ், ராஸின் முகவரியைத் தொலைபேசி அட்டவணைப் புத்தகத்திலிருந்து இந்த நிமிடமே எடு. *இக்கணமே நாம் ராஸின் ஜாகைக்குப் போயாக வேண்டும். சீக்கிரம்டா!*'' என்றான்.

## அத்தியாயம் - 26

# மூன்றாவது கொலை

சில நிமிடங்களுக்குள்ளாகவே நாங்கள் ஒரு வாடகைக் காரில் புகுந்திருந்தோம்.

பொய்ரெட்டின் முகம் அதிர்ச்சிக் களேபரத்திலிருந்தது.

''எனக்கு பயமா இருக்கு ஹேஸ்டிங்ஸ்'' என்றான். ''எனக்கு பயமா இருக்கு.''

''எ..ன்..ன.. பொய்ரெட். அபசகுனமாய் எதையும் நீ - - -'' சொல்லிவிட்டு நிறுத்திக் கொண்டேன்.

''நாம் ஏற்கனவே நம்மை இரு முறை வீழ்த்தியே வென்றுள்ள யாரோ ஒருவனை எதிர்த்து மார் தட்டிக்கிட்டிருக்கோம். வீழ்த்திப் பழகியவன் அவன் - எனவே, மறுபடியும் வீழ்த்திட்டுத் தப்பிக்க அஞ்சவே மாட்டான் ஹேஸ்டிங்ஸ். நாலு பேருக்கு நடுவுல மாட்டிக்கிட்டு, உயிருக்குப் போராடி ஒளிந்தும் ஓடியும் சுழித்தும் அல்லாடும் எலிபோல அலைஞ்சுக்கிட்டிருக்கான் அவன். ராஸ் ஓர் ஆபத்து. ஆகவே ராஸ் அகற்றப்பட்டு விடுவான்.''

''பொய்ரெட்'' கதறினேன் நான். ''இளைஞன். அழகன். முன்னுக்கு வரும் கதாநாயகன். ராஸுக்கு ஒண்ணும் ஆகக் கூடாது பொய்ரெட்.''

''... ... ...''

''அப்படினா ராஸ் நம்மிடம் சொல்லத் துடித்தது அத்தனை முக்கியத்துவம் பெற்றதா, பொய்ரெட்?'' - சந்தேகமாய் கேட்டேன் நான். ''அப்படி ஒரு நினைப்புல ராஸ் இருப்பதா தெரியவே யில்லையே..!''

''உன்கிட்டே அப்படி மறைச்சது தான் அவன் செஞ்ச பெரிய தப்பு. அவன் நம்மிடம் சொல்ல விழைந்தது விண்ணுயர முக்கியம் வாய்ந்தது என்பது கண்கூடடா.''

''அப்படியேயானாலும் அவன் மனசுல அப்படி நினைச்சிருப்பதை வேறு யாரால அறிய முடியும் பொய்ரெட்..?''

''உன்னிடம் ராஸ் பேசியதா நீ சொன்னே. அங்கே, விருந்துல, உங்க ரெண்டு பேரையும் பலர் சுற்றியிருக்க, ரெண்டு பேரும் பேசியிருப்பீங்க. முட்டாள்தனம் - பைத்தியக்காரத்தனம். ஆஹ்..! அப்படி அவசரப் பட்ட ராஸை, சிக்கலான சீமோன் எட்ஜ்வேரின் கொலை வழக்கோடு மறைமுகமாக இணைந்துள்ள அவனை, நீ ஏண்டா கையோட உன்னுடனேயே அழைத்து வந்திருக்கக் கூடாது...? பாதுகாப்பா, அவனை வேறு ஒருவரும் நெருங்கிவிடா வண்ணம், அவன் என்ன சொல்ல வந்தான் என்பதை நான் கேட்டு அறியும் வரை, முட்டாள், ஏண்டா நீ அவனுக்கு ஒர் அரணா நின்னுத் தொலைஞ்சிருக்கக் கூடாது?''

''இப்படி ஆகும்னு நான் நினைக்கவேயில்லையேடா..! கனவு கூட காணலே..!'' - வார்த்தைகள் கோவையாய் வராமல் தெக்கினேன்.

பொய்ரெட் அதிகார பாவனையை உடுத்திக் கொண்டான். ''உன்னைக் குற்றம் சொல்லிக் கொள்ளாதே. உனக்கெப்படி தெரியும்..! சந்தேகப்படவே தெரியாத உண்மை விசுவாசிகள் நீயும் - அந்த ஜேப்பும்...! வீணா சந்தேகப்படுபவன்னு சொல்லுவீங்களே என்னை... இப்போ என்னாச்சு...? சரியான தருணத்தில் விழித்துக் கொண்டு சந்தேகப்படத் தெரியாத நீ, துப்பறியும் தொழிலுக்கே - - -'' பொறுமையாய் முடித்துக் கொண்டான்.

நான் தலைகுனிந்து நின்றுக் கொண்டிருந்தேன். எவ்வளவு பெரிய தப்பு செய்து விட்டேன்.

''ஹேஸ்டிங்ஸ்...! கொலைகாரன், நயவஞ்சக புலி போன்றவனடா..! பசி அடங்காத புலி..! ஆஹ்..! சீக்கிரத்தில் போய் சேர மாட்டோமா..?''

ராஸின் முகவரிக்கு வந்து சேர்ந்தோம். ஒரு வீட்டின், மேல் மாடிப்பகுதியில் தங்கியிருந்தான் ராஸ். அறைக் கதவு திறந்தேயிருந்தது. உள்ளே முதல் மாடிக்கு இட்டுச் செல்லும் விசாலமான மாடிப்படிகள் தென்பட்டன.

''ஆளரவமற்ற பகுதி. வெகு சுலபமா நுழையும்படியான வீடு. கவனிப்பாரில்லை'' - இவ்வாறெல்லாம் முணுமுணுத்தபடி முதல் மாடி நோக்கி விரைந்துக் கொண்டிருந்தான் பொய்ரெட்.

மாடிப் பகுதியின் நுழைவாயிலில் ராஸின் அடையாள அட்டை செருகப்பட்டு ஊர்ஜிதம் செய்தது. அங்கு நின்றோம். எங்கும், ஊசி முனை விழுந்தாலும் கேட்கும்படியான அமைதி.

அக்கதவைத் தள்ளினேன் - நாங்கள் ஆச்சரியப்படும்படி ஒத்துழைத்து அது விலகியது.

நுழைந்தோம்.

ஒரு முதன்மை அறை. அதன் ஒரு புறத்தில் இருந்த அறையின் கதவு திறந்திருந்தது. மறுபுறத்தில், படிக்கும் அறை போல தோன்றிய அறையின் கதவு ஒருக்களித்திருந்தது. அந்த அறைக்குள் நாங்கள் கலவரமாய் நுழைந்தோம்.

எளிமையான மரச் சாமான்களால் அவ்வறை அமைந்திருந்தது. அங்கிருந்த ஒரு மேஜையில் தான் ராஸ் எங்களுடன் பேசிய தொலைபேசி இருந்தது - அதன் ரிஸீவர், அம்மேஜையில், கவிழ்த்து வைக்கப்பட்ட நிலையிலிருந்தது.

துரிதமாய் முன்னேறிய பொய்ரெட், அவ்வறையின் சுற்றுமுற்றும் அகலக் கண் வைத்துப் பார்த்து, ''ம்ம். இங்கில்லை ஹேஸ்டிங்ஸ், வா'' என்று முதன்மை அறைக்குள் மீண்டும் நுழைந்தான். கதவு முழுதாய் திறந்திருந்த இன்னோர் அறைக்குள் பாய்ந்தோம். அது ஒரு சிறிய உணவருந்தும் அறை. அங்கிருந்த சாப்பாட்டு மேஜையில், ஒழுங்கற்ற கோணத்தில் விரிந்து விழுந்துக் கிடந்தான் ராஸ்.

பொய்ரெட், அவனைத் திருப்பினான். நேர் செய்துப் போட்டான். ராஸின் முகம் வெளிறிப் போயிருந்தது. உடல் சில்லென ஐஸ் கட்டியாயிருந்தது.

''இறந்து விட்டான். கபாலத்தின் பின்பகுதி சிதையும்படி, மிகச் சரியாய் அடிக்கப்பட்டிருக்கான்.''

இந்த வார்த்தைகளைப் பொய்ரெட் சொல்லி முடித்ததிலிருந்து தொடர்ந்த அன்றைய மதியம் முழுவதும், எனக்கு மாபெரும் தீக்கனா கண்ட பிரமையிலேயே கழிந்தது. நான் கை நழுவ விட்டு, என் கடமையிலிருந்து வழுவி நிற்கிறேனே... இந்தக் குற்ற உணர்ச்சியே என்னைத் தைத்தது. பொய்ரெட்டும் சரி, நானும் சரி, ஒருவருக் கொருவர் பேசிக் கொள்ளவேயில்லை. அன்று மாலை வெகு நேரம் கடந்த பிறகு, நான் செய்யத் தவறி விட்ட கடமைக்காக, ஆழ்ந்த வருத்தங்களையும், மன்னிப்பையும் தெரிவித்துக் கொண்டேன்.

''நீ எப்படியப்பா சந்தேகப்படுவாய். எல்லாம் வல்ல இறைவன், உன் போன்றோருக்கு சந்தேகப்படும் மூளையைக் கொடுக்கலையே...! அப்படிப்பட்ட அழுகிய மூளையையெல்லாம் எங்களுக்கன்றோ கொடுத்திருக்கான்...!''

''தயவு செய்து குத்திக் காட்டாதே பொய்ரெட். உன்னைப் பார்த்துப் பேசணும்னான். சரினேன். ஐந்து மணி போல தொடர்பு கொண்டு, நீ இருக்கியானு ஊர்ஜிதப்படுத்திக்கிட்டு வரச் சொன்னேன். அப்படியே செஞ்சான். இதுதான் நிலை. நீ என் நிலையில இருந்திருந்தால் சந்தேகப்பட்டிருப்பியா..?''

''என் நிலையும், அனுபவமும் வேறு ஹேஸ்டிங்ஸ். என் வாழ்க்கை முழுவதும் நான் கொலைகாரர்களுடனேயே தான் வளைய வந்திருக்கேன். அவர்களைப் பின்தொடர்ந்தே தான் வாழ்ந்தும் வந்திருக்கேன். ஒவ்வொரு முறையும் கொலை செய்ய வேண்டும் எனும் வெறி எப்படி வளர்ந்து பெருகும் என்றும், கடைசியில், உப்பு சப்பற்ற ஓர் அற்பமான எதிர்ப்புக்குக் கூட, அந்த வெறி இன்னும் எப்படிக் கொழுந்து விட்டு எரியத் தொடங்கி சாதிக்கும் என்றும் - - - ''

மனமுடைந்து நிறுத்திக் கொண்டான். கோரமான நிலையில் பிரேதத்தைக் கண்டறிந்ததிலிருந்தே ஒரு வார்த்தை கூட எழாது அமைதியாயிருந்தான், பொய்ரெட். போலீஸ் வந்தபோதும், வீட்டின் இன்னபிற பிரஜைகளுடனான விசாரணையின் போதும், ஒரு கொலையைத் தொடர்ந்து நூற்றியொரு கேள்விகளைக் கேட்டுக் குடைந்துக் கொண்டு நிகழும் சம்பிரதாய போலீஸ் நடவடிக்கைகளின் போதும், இவை எதிலும் தொடர்பே ஏற்படுத்திக் கொள்ளாது, சிறிது தூரப் போய் தனிமையிலேயே நின்றுக் கொண்டிருந்தான் பொய்ரெட். அந்நியனைப் போல் அமைதியாயிருந்தான். ஏதோ வரப் போவதை முன்கூட்டியே அறிந்து கொள்ளுவது போன்ற தீவிர சிந்தனை அவன் கண்களில் இருந்தது. இப்போது மனமுடைந்து பேசுவதை நிறுத்திக் கொண்ட பொழுது, அதே உத்தேசக் கருத்து நிறைந்த பார்வை, மீண்டும் வந்து குடி கொண்டது.

பிறகு, ''நமக்கு, வருந்திக்கிட்டு வீணடிக்க நேரம் கிடையாது ஹேஸ்டிங்ஸ்'' என்றான். ''இறந்துப் போய்விட்ட பரிதாபமான இளைஞன் நம்மிடம் சொல்ல என்று எதையோ வைத்திருந்திருக்கிறான். இப்போ, அந்த எதுவோ, அது - மிக மிக முக்கியமான விஷயம் தான் என்பதும் நமக்கு விளங்கிடுச்சு - இல்லைனா அவன் கொலை

•ஆறும் கொடூர நிலைக்குத் தள்ளப்பட்டிருக்க மாட்டான். இனி அவனால உயிர்த்தெழுந்து வந்து சொல்ல முடியாது. ஆகையால், நாம் தான் ஊகிச்சாகணும். நாம் சர்வ நிச்சயமா சரியா ஊகிக்கணும். ஒரே ஒரு குறிப்பினை மட்டும் கையில் வெச்சுக்கிட்டு..!''

பொய்ரெட்டின் சங்கேதக் கேள்விக்கு ''பாரீஸ்'' என்று பதில் தந்தேன் நான்.

''ஆமாம். *பாரீஸ்.*''

ஹெர்குல் பொய்ரெட் எழுந்துக் கொண்டு, இப்படியும் அப்படியுமாக நடக்க ஆரம்பித்தான். சிந்தனை. பிறகு, இத்தீவிர சிந்தனையின் முடிவாய், பேச ஆரம்பித்தான்: ''இவ்வழக்குல, பல இடங்கள்ல, பாரீஸ், மொழியப்பட்டுள்ளது. ஆனால் அனைத்தும், அதிர்ஷ்டவசமாக, வேறு வேறு சம்பவங்களில்..! தங்கப் பெட்டியில் பாரீஸ் எனும் வார்த்தைப் பொறித்தெடுக்கப்பட்டுள்ளது. சென்ற நவம்பர் மாதம் குறித்த உரையாடல்களில், பாரீஸ், மொழியப்படுது. செல்வி ஆடம்ஸ் பாரீஸில் இருந்திருக்கிறார் - அந்த சமயத்தில் - ராஸ் கூட அங்கிருந்திருக்கலாம். அப்போ, அங்கு, ராஸ் அறிந்த வேறு யாராவது இருந்திருக்கலாமோ? செல்வி ஆடம்ஸுடன் விசித்திரமான தனிப்பட்ட பிரத்யேக சூழ்நிலையில், அந்த யாரையோ, ராஸ் அசாதாரண நிலையில் பார்த்திருப்பாரோ?''

''இவையெல்லாம், நாம் அறியவே முடியாதவை'' என்றேன் நான்.

''ஆமாமாம். ஆனால், நம்மால் அறிய முடியும். நாம் அறிய வரும். மனித மூளையின் சக்தி இருக்குது பார் ஹேஸ்டிங்ஸ், அது, அறக்குறைய கணக்கிடயியலாதது! இவ்வழக்கோடு, வேறு எந்தெந்த சம்பவ நிலைகளில், பாரீஸ் எனும் வார்த்தை பரிமாறப்பட்டது? மூக்கு டையாய் கண்ணாடி அணிந்திருக்கும் நாமறியா ஒரு பெண், அங்கிருந்து வரவழைக்கப்பட்ட தங்க முலாம் பெட்டியை வாங்கியிருக்கிறார். அவள் ராஸுக்குத் தெரிந்தவரா? கொலை நிகழ்த்தப்பட்ட நாளில், மெர்ட்டான் மாகாணத்து இளவரசர், பாரீஸில் தான் இருந்திருக்கார். பாரீஸ், பாரீஸ், பாரீஸ். சீமான் எட்ஜ்வேர் பாரீஸுக்குக் கிளம்ப வேண்டும். ஆஹ்!... இங்கு நமக்கு ஓர் உளவு கிடைப்படுது..! ஒரு வேளை அவரை பாரீஸுக்கு செல்வதிலிருந்து தடுக்கத் தான் கொலை செய்யப்பட்டிருப்பாரோ..?''

புருவங்களில் இறுக்கமான வளைவு முடிச்சுகள் மீண்டும் தோன்ற, மேற்சொன்ன கேள்விகளோடு அப்படியே சிந்தனையில் அமர்ந்துக்

கொண்டான் பொய்ரெட். வெகுண்ட எண்ணங்களின் தாக்கத்தால் அவனிடமிருந்து கிளம்பிய ஒருமுகப்படுத்தப்பட்ட சிந்தனையின் அலைகளை என்னால் உணர முடிந்தது. எனவே நான் கிஞ்சித்தும் இடையூறு செய்யவில்லை.

நிமிடங்கள் கரைந்தன. ஒரு கணத்தில், அமைதியாய் ''அந்த அளவளாவலில் என்ன தான் நடந்தது?'' என, முணுமுணுப்பது போல் கேட்டான் பொய்ரெட். ''அளவளாவலின் போது, தற்செயலாய் விழுந்த ஒரு வார்த்தையோ... வாக்கியமோ... ராஸின் கருத்தில் இருந்த ஒரு தகவலின் அதி முக்கியத்துவத்தை உணர்த்தி வெளிச்சம் போட்டுக் காட்டியிருக்கும். அத்தகவல் அத்தனை முக்கியத்துவம் வாய்ந்ததுனு, அவன், அதுவரை நினைச்சுக் கூடப் பார்த்திருக்க மாட்டான். பிரான்ஸ் பற்றி ஏதாவது உரையாடல் நிகழ்ந்ததா? அல்லது பாரீஸ் பற்றி? உங்க சாப்பாட்டு மேஜையின் ஏதாவது ஒரு மூலையிலிருந்து கிளம்பியிருந்தாலும் பரவாயில்லை..! சொல் ஹேஸ்டிங்ஸ்..!''

''பாரீஸ் எனும் வார்த்தை பிரயோகிக்கப்பட்டது. ஆனால் இவ்வழக்கு சம்பந்தமா இல்லே.''

இப்படி அறிமுகம் தந்த நான், ஜானே வில்கின்ஸன், கரடுமுரடாய் பாரீஸ் பற்றிப் பேசியதை சொன்னேன்.

''அப்படிச் சொல்..! இளைஞனின் துணுக்குறலுக்கு இதுதான் காரணம்'' என சிந்தனை பொதிந்து குறிப்பிட்டான். ''பாரீஸ் எனும் ஒரு வார்த்தை போதும் - ராஸின் மூளையிலிருந்து பாரீஸோடு சம்பந்தப்பட்ட வேறு ஏதோ ஒன்றைத் தட்டியெழுப்ப...! அப்போ எதை ராஸ் பார்த்துக்கிட்டிருந்தான்? அல்லது பாரீஸ் எனும் வார்த்தை விழுந்தபோது, எது குறித்து அவன் பேசிக்கிட்டிருந்தான்?''

''பிரிட்டிஷ் நாட்டு மூட நம்பிக்கைகள் பற்றி ஏதோ பேசிக் கொண்டிருந்தான்.''

''நீ அதை கவனிக்கலையா?''

''எதை?''

''அவர் பேசிய விஷயத்தின் சாராம்சத்தை?''

''மூட நம்பிக்கைகளில், எனக்கு நம்பிக்கையில்லை..! எனவே கவனிக்கலே.''

''அவன் கண்கள் எதில் பதிந்திருந்தன?''

''நிச்சயப்படுத்தி சொல்ல முடியலே. மேஜையின் ஒரு பக்கத்துல, திருமதி விட்பர்ன் அமர்ந்திருந்த பகுதியைப் பார்த்துக் கொண்டிருந்ததாய் ஞாபகம்.''

''அவருக்கு அருகில் - அதாவது, திருமதி விட்பர்னுக்கு அடுத்து - யார் உட்கார்ந்திருந்தது?''

''மெர்ட்டான் பிரதேச இளைய பிரபு, பிறகு ஜானே வில்கின்ஸன், அப்புறம் நானறியாத ஒருவன்...''

''திரு இளைய பிரபு! பாரீஸ் எனும் வார்த்தை பிரயோகிக்கப்பட்ட போது, ராஸ், இளைய பிரபுவைப் பார்த்துக் கொண்டிருந்ததற்கான வாய்ப்பு உள்ளது. ஞாபகம் வெச்சுக்கோ ஹேஸ்டிங்ஸ்... கொலை நடந்த சமயத்தில், இளைய பிரபு, பாரீஸில் இருந்தார். அல்லது, இருப்பதாகப் பொதுக் கருத்து ஏற்படுத்தியிருந்தார்..! ஹேஸ்டிங்ஸ்... ராஸுக்கு ஏதோ ஒன்று நினைவுக்குள் மீண்டு வந்து, மெர்ட்டான் மாகாணத்து இளைய பிரபு அப்போது பாரீஸில் இல்லை என்பதை சுட்டிக் காட்டியிருந்தால்...?''

''ஏய், ஏய், பொய்ரெட்...! நண்பா..!''

''பதறாதே, எனக்கினியவனே! பொறுத்தமற்ற இந்த ஊகத்தை வெறுமனே ஒரு பேச்சுக்கு எடுத்துக் கொள்வோமே. பொறுத்தமற்றது என எல்லோரும் ஒதுக்கியுள்ள ஊகமிது! முதலில் ஒரு கேள்வி - திரு இளைய பிரபு, சீமானின் கொலை வேண்டி ஆணித்தரமான இலக்குக் கொண்டிருந்தாரா...? பதில் - ஆமாம், ஆமாம். எனில், அவர் தான் கொலை செய்துள்ளார் என கருதுவோம். - ஆங், ஆங், ஆங்... பதற்றம் வேண்டாம். அசட்டுத்தனமான அபத்தம் தான்! அவர் பெரும் பணக்காரர் - பெருமைக்குரிய உன்னத பதவி வகிப்பவர் - ஊரறிந்த பிரமுகர். இப்படிப்பட்ட உயர்ந்தவரைப் போய் ஆள் மாறாட்ட வம்பில் இழுத்து யாரும் கற்பனை செய்யப் போவதில்லை தான்! ஆயினும், பாரீஸ் போய் விட்டதாய் சொல்லிக்கிட்டு, மிகப் பெரிய ஐந்து நட்சத்திர ஹோட்டல் ஒன்றுக்குள் போய் மறைந்துக் கொள்வது, மிக சுலபம், ஹேஸ்டிங்ஸ்..! பல நூறு மாகாணங்கள்... பற்பல நூறு ராஜாங்கங்கள்... எல்லா பிரபுக்களின் முகங்களுமா எல்லோருக்கும் தெரிந்திருக்கும்..! உன்னால இதை ஜீரணிக்க முடியலை.. எனில் விட்டுடு. ஆனா இதற்கு பதில் சொல்..! இனிய ஹேஸ்டிங்ஸ்..! பாரீஸ் என்ற வார்த்தை உதிர்ந்து அனைவரின் செவிகளையும் அடைந்தபோது, ராஸ் ஒண்ணுமே சொல்லலையா? எவ்வித உணர்வையுமா அவர் பிரதிபலிக்கலே..?''

''அவர் மூச்சினை சீரற்று உள்ளுக்கிழுத்துக் கொண்டதாய் நினைவு.''

''பிறகு உன்னுடன் பேசிய போது, அவரிடம் நிலவிய குணாதிசயம்...? இது எப்படி இருந்தது? பயந்தா? அல்லது குழப்பத்திலா?''

''இரண்டுமே.''

''மிகச் சரி, மிகச் சரி. ஓர் ஊகம் அவருக்குள் வந்துள்ளது ஹேஸ்டிங்ஸ். அதை, இயற்கைக்கு விரோதமான அல்லது முட்டாள் தனமான அபிப்ராயம்னு அவரே முடிவு கட்டிக்கிறார். இருந்த போதிலும், அக்கருத்தினை சொல்லிவிட நினைக்கிறார். முதலில் என்னிடம். ஆனால்... இறைவா! இப்படி ஒரு முடிவை அவர் எடுத்துக் கொள்ளும் போது, நான் ஏற்கனவே அங்கிருந்து கிளம்பியிருக்கிறேன்.''

''இன்னும் கொஞ்சம் எனக்கு விளக்கியிருந்தால் கூட போதுமே பொய்ரெட்'' - நான் ஓலமிட்டேன்.

''இப்போ புலம்பி என்ன பயனடா? விடு! அப்போது உன்னருகி லிருந்தது யார் யார்?''

''ஏறக்குறைய எல்லோருமே! திருமதி விட்பர்னுக்கு நன்றி தெரிவித்தபடி விடை பெற்றுக் கொண்டிருந்தனர். குறிப்பிட்டு யாரிருந்தார்னு நான் கவனிக்கலே.''

பொய்ரெட் மீண்டும் எழுந்துக் கொண்டான்.

''நான் முழுக்க முழுக்க தவறாகவே இருந்துட்டேனா?'' மறுபடியும் இருதலைக் கொள்ளி எறும்பாய் அறையை வட்டமிடத் துவங்கியபோது, முணுமுணுத்துக் கொண்டான். ''இவ்வழக்கை, முழுக்க முழுக்க தவறாவே ஊகித்து அணுகியுள்ளேனா?''

என் நண்பனை மிக இரக்கமாய்ப் பார்த்தேன். அவன் மூளைக்குள் என்ன அபிப்பிராயங்களெல்லாம் சுழன்றடித்துக் கொண்டிருக்கின்றன என என்னால் மிகத் துல்லியமாய் பிரித்தறிய முடியவில்லை. ''சிப்பியப்பா நீ'' என்று வேடிக்கையாய் ஜேப் ஒரு முறை பொய்ரெட்டை வர்ணித்தார் - அது மிக பொருத்தமான வர்ணிப்பென இப்போது உணர முடிந்தது. சிப்பிக்குள்ளிருக்கும் முத்து பிறருக்கு தெரிவதேயில்லை! அவனுக்குள் அவனே போர் செய்துக் கொண்டி ருக்கிறான் என்பதை மட்டும் தான் என்னால் இக்கணத்தில் கிரகித்துக் கொள்ள இயன்றது.

சிறிது நேரத்திற்கு முன் செய்தது போலவே, நடையை நிறுத்திக் கொண்டு, சட்டென இருக்கையில் வந்து அமர்ந்துக் கொண்டான் பொய்ரெட். ''நான் முழுக்கவும், தப்புத்தப்பா போயிருக்க முடியாது, ஹேஸ்டிங்ஸ். நான் அத்தனை சாதுர்யமற்றவனல்ல. நினைவிருக்கா ஹேஸ்டிங்ஸ். சில நாட்களுக்கு முன்பு, நான் எனக்கே ஐந்து கேள்விகளைக் கேட்டுக்கிட்டேன்!''

''நினைவிருக்கு பொய்ரெட்.''

''அவையாவன: விவாகரத்துக் குறித்த விஷயத்தில், சீமான் எட்ஜ்வேர், ஏன் திடுமென மனம் மாறினார்? சீமான் அவரது மனைவிக்கு கடிதம் எழுதியதாய் சொன்னதற்கும், ஆனால், அவர் மனைவியோ, அக்கடிதத்தைத் தான் பெறவே இல்லை என்று சொன்னதற்கும் விளக்கம் தான் என்ன? சீமானை அவரது மாளிகையில் நாம் சந்தித்துத் திரும்பும்போது, நீ அவர் முகத்தில் கண்டதாய் சொன்ன குரோதமும் குரூரமும், ஏன்? கர்லோட்டா ஆடம்ஸின் கைப்பையில் மூக்குக் கண்ணாடிகளுக்கு என்ன வேலை? ஏன், சிஸ்விக்கிலிருந்த போது, திருமதி எட்ஜ்வேருக்கு யாரோ தொலைபேசி செய்து, ஆனால் ஒன்றும் பேசாது உடனடியாய் துண்டிக்க வேண்டும்?''

இவற்றில் எதற்கும் எவ்விடையும் என் மூளைக்கு எட்டாததால், நான் பதில் பேச முடியாமல் வாயடைத்துப் போய் குறுகி அமர்ந்திருந்தேன்.

''ஹேஸ்டிங்ஸ், வழக்கு நடந்துக் கொண்டிருந்த நாட்கள் நெடுகிலும், எனக்குள்ளே ஒரு சிறு அபிப்ராயம் வெச்சுக்கிட்டுத்தான் நான் இயங்கிக்கிட்டிருந்தேன். அந்த மனிதன் யார்? - அதாவது, பின்னாலிருந்து இயங்கிய மனிதன் யார் - என்பது தான் அது. மேற்சொன்ன முதல் மூன்று கேள்விகளுக்கும் எனக்குள் விளைந்திருந்த சாத்தியமான பதில்களை நான் உன்னிடம் சொல்லியிருக்கிறேன். அந்த பதில்கள், எனது சிறு அபிப்பிராயத்தினை ஒத்தே இருக்கின்றன. ஆனா மற்ற இரு கேள்விகளுக்கு என்னால் பதில் சொல்லவே முடியலையேடா..! இதற்கு என்ன அர்த்தம் தெரியுமா? அந்த மனிதன் குறித்த என் கணிப்பு தவறு - அது, அந்த மனிதனாக இருக்க முடியாது. அல்லது, விடையே காணயியலாதபடி மீதமுள்ள இருகேள்விகளும் சம்பூடனேயே தான் இருக்கப் போகின்றன. இவற்றில் எது, ஹேஸ்டிங்ஸ், எது?''

கேட்டுவிட்டு எழுந்தவன், தனது மேஜைக்கு சென்று விட்டான். அவனுக்கு அமெரிக்காவிலிருந்து லூசி ஆடம்ஸ் அனுப்பியிருந்த கடிதத்தை, மேஜையை சாவி போட்டுத் திறந்து, வெளியே எடுத்தான். ஜேப்பிடம் இக்கடிதத்தைக் கொடுத்து ஓரிரு நாட்கள் அவரை வைத்திருக்குமாறு கேட்டுக்கொண்டிருந்தான். ஜேப்பும் அப்படியே செய்து விட்டுத் திரும்பியிருந்தார். அதை தனது மேஜையில் விரித்துப் போட்டு விட்டு, ஆழ்ந்து கவனித்து தனக்குள் தீவிரமான ஆலோசனையில் மூழ்கிப் போனான்.

நிமிடங்கள் கரைந்துக் கொண்டிருந்தன. நான் கொட்டாவி விட்டபடி, ஒரு புத்தகத்தைக் கையிலெடுத்துக் கொண்டேன். பொய்ரெட், இப்படி அக்கடிதத்தைத் துளைப்பதினால், ஒரு நன்மையும் விளைந்து விடப் போவதில்லை என்றே கருதினேன். இருவரும் அக்கடிதத்தை முன்னும் பின்னும் புரட்டி எடுத்தாயிற்று. இனியும் புதிதாய் என்ன விளக்கி விடப் போகின்றது?

நான் புத்தகத்தின் பக்கங்களை ஈடுபாடின்றி திருப்பிக் கொண்டிருந்தேன்... கொஞ்சமாய், குட்டியாய், உறங்கி உறங்கி, என் தலை விழுந்து எழுந்துக் கொண்டிருந்தது...!

சிற்சில நிமிடங்கள் பற்பல நிமிடங்களாய்க் கரைந்து முடிந்துக் கொண்டிருந்தபோது, எதிர்பாராத ஒரு கணத்தில், அமைதியைக் கிழித்துக் கொண்டு அலறினான் பொய்ரெட். தூக்கி வாரிப் போட்டு எழுந்தேன். குட்டித் தூக்கமெல்லாம் கணத்தில் கலைந்துப் போக, முழுதாய் எழுந்துக் கொண்டேன்.

விவரிக்க முடியாத பாவத்தில் என்னைப் பார்த்தான் பொய்ரெட் - பளபளத்த விழிகளோடு...!

''ஹேஸ்டிங்ஸ், ஹேஸ்டிங்ஸ்.''

''என்ன அது''

''நினைவிருக்கா, ஹேஸ்டிங்ஸ்...! 'ஒழுங்கும், முறைப்படியான அணுகுமுறையும் கொண்டவனாயிருப்பின், அவன், இப்படி கசாமுசாவென்று தாளைப் பிய்த்திருக்க மாட்டான்! அழகாய் கத்திரித்தது போல் தான் கிழித்திருப்பான்'னு கொலைகாரனை நான் வர்ணித்தேனே... அது நினைவிருக்கா?''

''ஆமாம்... அதற்கென்ன...?''

''அது தவறு. இந்தக் கடிதம் கையாளப்பட்டதில் மட்டுமில்லையடா..! இக்கொலை நெடுகிலுமே, ஓர் ஒழுங்கும், சீரான அணுகுமுறையும் வியாபித்துக் கிடக்கின்றன. *இந்தப் பக்கம் கிழிக்கப்பட வேண்டும் - கத்தரிக்கப்படக் கூடாது*. புரிந்துக் கொள்ள நீயே பாரேன்.''

பார்த்தேன்!

''புரிகிறதா?''

மறுப்பாய் தலையசைத்தேன்.

''அவசரத்திலும் படபடப்பிலும் பயத்திலும் இயங்கியிருப்பான்னு சொல்ல வரியா?''

''அவசரமாயிருந்தாலும்... அவசரமற்றேயிருந்திருந்தாலும்... *இதுதான் நடந்திருக்கும்...! உனக்கு இன்னுமா புரியலே..? இந்தப் பக்கம் கிழிக்கப்பட வேண்டுமடா..''*

புரியாததை மௌனமாய் அறிவித்தேன்.

திருப்தியான, ஒலி குறைந்த குரலில், பொய்ரெட் சொன்னான்: ''நான் கொஞ்சம் முட்டாள்தனமாக இயங்கிட்டேன். சற்றே குருட்டுத் தனமாயும்! ஆனா... இனி, இனி குருடும் கிடையாது, செவிடும் கிடை யாது. ரத்தினக் கம்பளப் பிரயாணம் தான்.''

## அத்தியாயம் - 27

# மூக்குக் கண்ணாடி குறித்து...

பரபரப்பான மனோநிலைக்குள் மாறிவிட்டான் பொய்ரெட். துள்ளியெழுந்தான்.

எதனால் இப்படி ஒரு துள்ளல் என புரியாத நானும், ஒப்புதலாய் துள்ளியெழுந்து அவனோடு சேர்ந்துக் கொண்டேன்.

''ஒரு டாக்ஸியை வெச்சுப்போம். ஒன்பதுதான் ஆகுது. போய் பார்த்து வர இது ஒண்ணும் காலந்தாழ்ந்த நேரமல்ல.''

படியிறங்கி ஓடிய பொய்ரெட்டைப் பின்தொடர்ந்தேன்.

''யாரைப் போய் நாம இப்போ சந்திக்கப் போறோம்?''

''ரீஜெண்ட் மாளிகைக்குப் போய்க்கிட்டிருக்கோம்.''

இந்தப் பதிலுக்குப் பொறுமையாய் பேசாமலிருப்பதை விட வேறு எதுவும் புத்திசாலித்தனமாக ஆகாது என அறிந்துக் கொண்டேன். பொய்ரெட், கேள்விகளுக்கு விடை தந்துக் கொண்டிருக்கும் மனோ நிலையில் இல்லை. அப்படி ஒரு திருப்திகரமான கிளர்ச்சியிலிருந்தான். டாக்ஸியில் அருகருகே இருவரும் அமர்ந்துக் கொண்டு பயணித்துக் கொண்டிருந்த போது, சாய்ந்து உட்காராமல், சற்றே வளைந்து முன் வந்து அமர்ந்தபடி தனது இரு முட்டிகளிலும் தத்தம் கை விரல்களால் தாளமிட்டுக் கொண்டிருந்தான். அவனின் வழக்கமான நடத்தைக்கு மாறாக, நரம்பதிர ஓர் அவசரமும் பொறுமையற்ற ஓட்டமும் இருந்தன.

கர்லோட்டா ஆடம்ஸ் அவரது சகோதரிக்கு எழுதியிருந்த கடிதத்தின் ஒவ்வொரு வார்த்தையையும் நான் என் மனதில் ஓட்டிப் பார்த்துக் கொண்டிருந்தேன். அது, அட்சர சுத்தமாக எனக்கு மனப்பாடமாகி யிருந்தது. கிழிந்திருந்த பக்கம் குறித்து பொய்ரெட் சொல்லியிருந்த சமீபத்திய குறிப்பையும் நினைவுக்குள் கொண்டு வந்தபடியிருந்தேன்.

ஆனாலும் எதுவும் தென்படவில்லை! என்னைப் பொறுத்தவரை, கிழிந்த பக்கம் குறித்த பொய்ரெட்டின் குறிப்பானது அர்த்தமற்றது

அசட்டுத்தனமானது. ஏன் ஒரு பக்கம், கிழிக்கப்பட வேண்டும்? - ம்ம், எனக்கு பிடிபடவில்லை.

ரீஜெண்ட் மாளிகையில் ஒரு புது பட்லர் எங்களுக்கு கதவு திறந்து விட்டான். பொய்ரெட், செல்வி கரோல் வேண்டுமென கேட்டான். இதற்குப் பதிலாக அவனைத் தொடர்ந்து நாங்களும் நாங்களிருவரும் படி ஏறிக் கொண்டிருந்தபோது, அந்த 'கிரேக்கக் கடவுள்' என்ன ஆனான் எனும் கேள்வி, என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்திக் கொண்டிருந்தது. அவனை இந்த பூமியில் கண்டுபிடித்து இழுத்து வருவதில், போலீஸ் வெட்கப்படும்படி தோற்றுள்ளது. இந்த சிந்தனையின் முடிவாக, அவனும் ஒருவேளை கொல்லப் பட்டிருப்பானோ எனும் பயம் என் சிந்தையை அறைய, அமைதியான இம்மாளிகையின் சூழல், எனக்குள் சிறு நடுக்கத்தை உண்டு பண்ணியது.

எதிர்ப்பட்ட செல்வி கரோலின் சுறுசுறுப்பான, தீர்க்கமான, அச்சமற்ற பார்வை, என்னை, என் கற்பனா தேசத்திலிருந்து விடுவித்தது. பொய்ரெட்டை, ஊர் ஓசை அடங்கத் துவங்கி விட்ட இந்த இரவில் எதிர் கொள்வதில், சுத்தமாய் அதிசயித்துப் போனார் அவர்.

''இன்னும் உங்களை இங்கு பணியில் பார்ப்பதில் மகிழ்கிறேன், மிஸ்'' என்றான் பொய்ரெட், கைகுலுக்கி கொண்டே. ''நீங்க வேலையை விட்டிருப்பீங்கன்னு நெனச்சுக்கிட்டு வந்தேன்.''

''நான் வேலையை விட்டு விலகுவதை, கெரால்டால் சகிக்க இயலாது'' என்றார் கரோல். ''தொடர்ந்து பணியிலிருக்கும்படி அவ தான் கெஞ்சிக் கேட்டுக்கிட்டா. மேலும், இது போன்ற நிராதரவான சமயத்தில், அக்குழந்தைக்கும் ஒரு துணை வேண்டும். எதற்கென இல்லாவிட்டாலும், நடந்துள்ள துயரத்தின் தாக்கத்தைத் தணிக்க ஓர் ஆள் அவளுக்குத் தேவை. அப்படிப்பட்ட ஆளாய் இப்போ நான் இருக்கிறேன், பொய்ரெட்.''

''துணிச்சலான திறமை, ஊக்கமிகு சக்தி ஆகியவற்றின் உறைவிடமாய் தான் எப்பவும் நீங்க உலவறீங்க. எடுத்தக் காரியத்தை முடிக்கும் உங்கள் திறமை - அதற்கு ஒரு பெரிய வந்தனம். மிஸ் கெரால்டுக்கு இத்தகைய அனுபவம் கிடையாது - அவர் சராசரி வாழ்க்கையை தனியே எதிர்கொள்ளத் தகுந்தவர் அல்ல. உங்க முடிவைப் பாராட்டறேன்.''

''முழுக்கவும் அசாதாரணமானவள். வெளி உலகமே தெரியாது அடைக்கப்பட்டு வாழ்ந்தவள். எப்பொழுதும். ஆனா, திரு பொய்ரெட்... யார் சாதாரணமானவர், யார் அசாதாரணமானவர் என்று பட்டிமன்றம் நடத்த நீங்க இங்கு வரலேனு நினைக்கிறேன்!'' என்றார் சிறிதாய் சிரித்தபடி. ''சொல்லுங்க, திரு பொய்ரெட். எந்த வகையில் என் உதவி தேவை?'

இந்த வகையில் என்று சட்டென விஷயத்துக்குள் பொய்ரெட் நுழைய எத்தனிக்கவில்லை என்பது எனக்குப் புரிந்தது. அப்படி யிப்படிப் பேசிவிட்டு எதிர்பாராத ஒரு கணத்தில் விஷயத்துக்குள் நுழைந்து திக்குமுக்காட வைப்பதுதான், பொய்ரெட் ஸ்டைல்! செல்வி கரோலிடம், பொய்ரெட் அணுகுமுறை செல்லுமா என்பது சந்தேகமே! நான் நினைத்தது போலவே, இப்போது, தனது சக்தி வாய்ந்த மூக்குக் கண்ணாடி வழியாக, சந்தேகமாய் பொய்ரெட்டைப் பார்த்த வண்ணமிருந்தார், கரோல்.

''சில விஷயங்கள்... அவை குறித்து சுத்தமான தகவல்கள் எனக்குத் தேவை. உங்க ஞாபக சக்தி மீது எனக்கு அபரிமித நம்பிக்கை உள்ளது, மிஸ்.''

''ஞாபக சக்தி மட்டும் பரிபூரணமாயில்லா விட்டால், ஒரு துப்பறியும் நிபுணர் மெச்சத்தக்க காரியதரிசியா என்னால திகழ முடியுமா?''

''மிகச் சிறப்பான பதிலடி'' என்று பாராட்டிய பொய்ரெட் கேட்டான்: ''கடந்த நவம்பரில், சீமான் எட்ஜ்வேர், பாரிஸிலிருந்தாரா?''

''ஆமாம்.''

''எந்த தேதியில் பாரீஸில் இருந்தார்னு சொல்ல முடியுமா?''

''டைரியைப் பார்த்துத்தான் சொல்ல முடியும்.''

எழுந்து சென்ற கரோல், மேஜையின் ஒரு தட்டினை சாவி போட்டுத் திறந்து, கனமான ஒரு கையேட்டினை எடுத்து, அதன் பக்கங்களைத் திருப்பித் தேடி விட்டு, பின்வருமாறு அறிவித்தார்: ''சீமான் எட்ஜ்வேர் நவம்பர் மூன்று பாரீஸுக்குச் சென்று, ஏழு அன்று திரும்பியிருக்கார். மறுபடியும் நவம்பர் 20 கிளம்பி டிஸம்பர் நான்கு அன்று திரும்பியிருக்கார். இதில், வேறு ஏதாவது தகவல்...?''

''தேவைதான். என்ன காரணத்திற்காக அவர் சென்று வந்தார்?''

''வாங்கி வந்த வரவேற்பறையில் வைப்பதற்காக சில சிலைகளை முடிவு செய்ய, முதல் பிரயாணத்தின் போது போயிருக்கார்.

அச்சிலைகள் பிறிதொரு தேதியில் ஏலம் விடப்படும் போது வாங்கத் திட்டம். எனக்குத் தெரிந்த மட்டில், இரண்டாவது பிரயாணத்திற்கு எந்தக் காரணமும் இல்லை.''

''ஏதாவது ஒரு முறையாவது மிஸ் கெரால்ட் அவருடன் கூட்டிப் போகப்பட்டாரா?''

''எந்தப் பொழுதிலும் தன் தந்தையுடன் அவள் சென்றதில்லை, திரு பொய்ரெட். அப்படியெல்லாம் பெண்டாட்டி பிள்ளைகளை அழைச்சிக்கிட்டு வெளி வாசல் சென்று வருவதையெல்லாம், சீமான் மார்ஷ்வேர் கனவில் கூட செய்ய மாட்டார்! அந்த சமயங்களில், பாரீஸில் உள்ள ஓர் ஆங்கிலப் பள்ளிக் கூடத்துல, அவ படிச்சுக்கிட்டிருந்தா. அங்கு போயும் அவளைப் பள்ளியில் போய் சந்தித்தோ, அல்லது வெளியே எங்காவது அழைத்துப் போயிருப்பாரோ என்பதெல்லாம் சந்தேகமே! அப்படி ஏதாவது அவர் அங்கு செஞ்சிருந்தா, என் வாழ்க்கையின் பெரிதான ஆச்சரியம் அதுவாய் தானிருக்கும்...!''

''நீங்களும் அவருடன் போகலே, இல்லையா?''

''இல்லை.''

இப்போது பொய்ரெட்டை விநோதமாகப் பார்த்த கரோல், இடைபுகுந்துக் கேட்டார்: ''இந்தக் கேள்விகளையெல்லாம் என்னிடம் ஏன் கேட்கிறீங்க, திரு பொய்ரெட்? என்ன காரணம்?''

இக் கேள்விகளுக்கு பொய்ரெட் பதில் தரவில்லை. மாறாக, கேட்டான்: ''செல்வி கெரால்ட், தனது சித்தி பையன், அதாவது தற்போதைய சீமான் மார்ஷ், இவர் மீது அபரிமித அவா கொண்டவர், இல்லையா?''

''ஆமாமாம், திரு பொய்ரெட். இந்தத் தகவல் உங்களுக்கு எந்த வகையில் தேவைப்படுதுன்னு தான் எனக்கு விளங்கலே.''

''கெரால்ட், ஒரு நாள் என்னைச் சந்திக்க வந்திருந்தார், தெரியுமா?''

''இல்லையே, எனக்குத் தெரியாதே'' - விழித்தபடி கேட்டார்: ''என்ன சொன்னா?''

''நேரடியா வார்த்தைகளை இட்டு விளக்காவிட்டாலும், தனது சகோதரன் மீது அளவுக்கடந்த பிரியம் உண்டு என்பதைப் புரிய வைத்தாள்.''

''எனில், என்னை ஏன் மறுபடியும் கேட்கணும்?''

''ஏனெனில், அதில், உங்க கருத்தும் எனக்கு தேவைப்பட்டது.''

இதற்கு கரோல் பதில் தர முடிவெடுத்துக் கொண்டார். ''ஏகமாய்

அவர் மீது பிரியம் உள்ளது என்பதே என் கணிப்பு. எப்பொழுதும், இப்பொழுதும்.''

''எட்ஜ்வேர் பரம்பரையின் தற்போதைய சீமானை உங்களுக்குப் பிடிக்காதா?''

''அப்படி நான் சொல்லலே. அவருக்கு இப்போது நான் உதவிகரமாயில்லை - அவ்வளவுதான். சீமான் எட்ஜ்வேரைப் போல சீமான் மார்ஷ் ஆழ்ந்த சிந்தனையுள்ளவர் அல்ல. ஆனாலும், பழக இனிமையானவர். பேசிப் பேசியே உங்களை வளைத்துப் போட்டு விடுவார். ஆனா எனக்கு கெரால்ட் மீது இன்னொரு சந்தேகம் சமீப காலமாய் வலுத்துள்ளது, திருமிகு பொய்ரெட்.''

''சொல்லுங்க.''

''மார்ஷை விட, முதுகெலும்பு வலுவாய் உள்ள வேறு யாரோ மீது அவளுக்கு ஈடுபாடு வந்துள்ளது.''

''மெர்ட்டான் மாகாணத்து இளைய பிரபு போல...?''

''எனக்கு அந்த இளைய பிரபுவைத் தெரியாது. அவரது பதவிக்கான கடமைகளை வெகு சிரத்தையாய் செய்யக் கூடியவர்னு கேள்விப் பட்டிருக்கேன். ஆனா, அவர், அந்தப் பெண்ணின் பின்னால் - ஜானே வில்கின்ஸன் - ஓடுகிறாராமே! புத்தி சொல்ல யாருமில்லையா?''

''அவர் தாயார் பற்றி - - - ''

''ஓஹ்! எங்கு வேணும்னாலும் சத்தியம் அடிச்சுச் சொல்வேன். வயது வித்தியாசம் பாராது, அவரது தாயார், நிச்சயமாய் இளைய பிரபுவைக் கெரால்டுக்கு மனமுவந்துத் தந்து விடுவார். ஆனா அம்மாக்களால் தான் என்ன செஞ்சுட முடியும்? தாய் சுட்டிக் காட்டும் பொண்ணை எந்த மகன் தான் கட்டிக்கிட்டிருக்கான்.''

''அப்படி நடந்துட்டா, இப்போதைய சீமான் ஒதுக்கப்பட்டு விடலாம்னு கருதறீங்களா?''

''அப்படி நான் நினைக்கலே.''

''ஆனாலும், நடக்கலாம்..?''

கரோல் இதற்கு பதிலளிக்கவில்லை.

''இனியும் உங்களை நிறுத்தி வைப்பது தவறு'' என்றபடி எழுந்துக் கொண்டான் பொய்ரெட். ''ஆங், ஒரு நிமிஷம்... உங்களுக்கு கர்லோட்டா ஆடம்ஸைத் தெரியுமா?''

''அவர் நடிக்கப் பார்த்திருக்கிறேன். படு திறமைசாலி.''

''ஆம். அவர் புத்திசாலியே'' - சிந்தனையாய் சொன்னான் பொய்ரெட். அப்படியே சில நொடிகளிருந்தான். பின் ''ஆஹ்.. என் கையுறைகளை விட்டு விட்டேனே'' என்றான்.

பொய்ரெட், வந்ததும், கையுறைகளைக் கழற்றி வைத்திருந்த, உயரம் குறைந்த, சிறு வரவேற்பறை மேஜையிலிருந்து அவற்றை எடுத்துக் கொள்ள குனியும்போது, அவனின் முஷ்டி, கரோல் அணிந்திருந்த மூக்குக் கண்ணாடியிலிருந்து தொங்கிக் கொண்டிருந்த சங்கிலியில் பட்டு இழுத்து, அந்த கண்ணாடியைத் தரையில் வீசி விட்டது. கையுறையையும், கம்பளியில் விழுந்து விட்டிருந்த மூக்குக் கண்ணாடியையும் எடுத்த பொய்ரெட், நடந்த சம்பவத்திற்கு மனம் கனிந்து பற்பல மன்னிப்புக்களைக் கேட்டுக் கொண்டான். ஒன்றுமில்லாத இதற்கு ஏன் இப்படி உணர்கிறீர்கள் என கரோல் சொல்லிக் கூட என் இனிய நண்பன் மன்னிப்புக் கோருவதை நிறுத்தியபாடாய் தெரியவில்லை.

''உங்களைத் தொந்தரவு செய்து விட்டதற்கு மீண்டும் மன்னிக்க'' என்று தொடங்கிய பொய்ரெட் பின்வருமாறு முடித்தான்: ''சீமான் எட்ஜ்வேர், யாருடனோ சென்ற வருடம் கடுங்கோபம் கொண்டு புரிந்த வாக்குவாதத்தில் உபயோகமாய் ஏதாவது துப்பு கிடைக்கலாம் என நெனச்சு வந்தேன். அதனால தான் திரும்பத் திரும்ப பாரீஸ் பற்றியே கேட்டுத் துளைத்தேன். ஆனால், செல்வி, நீங்க சீமானைக் கொலை செய்தது மார்ஷ் அல்ல என்பதில் தெளிவாய் இருக்கீங்க. நல்லிரவு, மிஸ். தொந்தரவுக்கு மீண்டும் மன்னிக்க.''

''போதும், திரு பொய்ரெட். ஒரு தொந்தரவும் இல்லை.''

வாசல் வரை வந்தபோது, மீண்டும் எங்களை அழைத்த கரோலின் குரல், எங்கள் கால்களைக் கயிறிட்டு இழுத்தது போல் நிறுத்தியது.

''திரு பொய்ரெட். நில்லுங்க, நில்லுங்க. இது என் மூக்குக் கண்ணாடி கிடையாது. இதுல பார்த்தா எனக்கு ஒண்ணுமே தெரியலே.''

பொய்ரெட், பேராச்சரியம் மிகுந்து கரோலைப் பார்த்தான். ஆனால், உடனேயே அது தெரிந்து விடாவண்ணம், தன் முகம் முழுவதிலும் சிரிப்பைக் கொண்டு வந்து விட்டான். ''ஓ, மன்னிக்கவும், மடையன் நான். கீழே விழுந்து விட்ட உங்களுடைய கண்ணாடியையும், என்னுடைய கையுறைகளையும் எடுக்க நான் குனிந்தபோது என் மூக்குக் கண்ணாடியும், சட்டைப் பையிலிருந்து தவறி விழுந்துடுச்சு. இரண்டு கண்ணாடிகளையும் போட்டுக் குழப்பியிருக்கிறேன். அட.... பாருங்க இரண்டும் ஒண்ணு போலவே இருக்கிறதை!''

புன்சிரிப்பினூடே இரு கண்ணாடிகளும் மா. க் கொள்ளப் பட்டன. ''மன்னிப்பு கேட்க என்றே, பாவம், நீங்க இங்கு வந்தீங்க போல'' என்று பொய்ரெட்டைப் பார்த்து க 'ரால் சொன்ன ஹாஸ்யத்துடன் நாங்கள் வெளியேறினோம்.

தெருவிறங்கியிருந்தபோது, ''பொய்ரெட்'' என்றழைத்த நான், ''நீ மூக்குக் கண்ணாடி போடுபவன் கிடையாதே'' என்றேன்.

கதிர் வீச்சாய் என்னைப் பார்த்தான். ''கற்பூரம். இந்தக் காரியத்தையாவது உடனடியாய் கிரகித்துச் சொன்னாயே!''

''கரோலுக்கு மாற்றித் தந்தது, கர்லோட்டா ஆடம்ஸ் கைப் பையிலிருந்து எடுக்கப்பட்ட மூக்குக் கண்ணாடியா?''

''சரி.''

''அது, செல்வி கரோலுடையதாயிருக்கலாம் என ஏன் நினைச்சே?''

ஏனோ என்பது போல தோள்களைக் குலுக்கிக் காண்பித்தான் பொய்ரெட். ''இவ்வழக்கோடு சம்பந்தப்பட்டு, மூக்குக் கண்ணாடி அணியும் ஒரே நபர் - கரோல்.''

''அது, கரோலுடையவை அல்ல'' - சிந்தனையோடு சொன்னேன்.

''அதைத்தான் உறுதியாக்கிட்டாரே.''

''சந்தேகத்தை ரத்தமாய் கொண்டுள்ள காட்டேரியப்பா நீ.''

''அப்படி கிடையாது கண்ணா! ஜேப் போலீஸ்! நீ துப்பறியும் அதிகாரி! அவரைப் போலவே, உண்மை எதுவானாலும் போகட்டும்... வழக்கு நம் கையை விட்டுப் போனா போதும் என்பது போல பேசலாகுமா..! உண்மை உறங்கக் கூடாது நண்பா!''

குறுக்கும் நெடுக்குமாய், மிக உல்லாசமாய், காலியாய் போயிருந்த தெருவில் நடக்கலானேம். ஒரு வாடகைக் காரைக் கூப்பிட ஆலோசித்தேன். ஆனால் பொய்ரெட்டோ மறுத்துத் தலையசைத்து விட்டான்.

''சிந்திக்க வேண்டிய தேவை எழுந்துள்ளது, நண்பா. அதற்கு, சிறு நடை, எனக்கு அபரிமிதமாய் உதவும்.''

நான் மறுக்கவில்லை. இரவு, மிகுந்த மந்தகாசமாயிருந்தது. எனக்கும் வீட்டுக்குப் போயே ஆக வேண்டும் என்ற அவசரமெல்லாம் ஒன்றுமில்லை.

''எனக்கு ஒரு சந்தேகம், பொய்ரெட். பாரீஸ், பாரீஸ்னியே... உண்மையில்தானா? இல்லை, உண்மை நிலை வெளியில் தெரியாமல் பாதுகாக்கப்பட நீயாகவே உருவாக்கியுள்ள ஒரு கவசமா?'' - ஆர்வம் பொங்கித் ததும்பக் கேட்டேன்.

''பொல்லாதவனடா நீ'' என்று கள்ளத்தனமாய் சிரித்துக் கொண்ட பொய்ரெட், ''முழுக்கவும் இப்படிச் சொல்லிவிட முடியாது'' என்றான்.

''D என்ற அட்சரத்தில் தொடங்கும் பெயர் குறித்த மர்மத்தை நாம் இன்னும் அவிழ்த்தபாடில்லை'' என சிந்தனை பொதிந்து குறிப்பிட்டேன். ''இவ்வழக்கோடு தொடர்புள்ள ஒருவர் கூட D எனும் முதலெழுத்து அமையப் பெற்ற பெயரோ, புனைப் பெயரோ கொண்டிருக்கவில்லை என்பது துரதிர்ஷ்டம் தான்'' என்ற நான், ''ஏய், ஏய், பொய்ரெட்'' என்று ஆர்வமாய் கூவினேன். ''ராஸ் பெயர் Dல் தானே ஆரம்பிக்கிறது - டொனால்ட் ராஸ்! ஓ...ஆனால் அவன் இறந்து விட்டானே...!''

''ம்'' என்றார் பொய்ரெட் சோகையான குரலில் - ''அவன் இறந்து விட்டான்.''

இந்த இரவில் நாங்கள் இப்போது நடந்து கொண்டிருக்கும் அனுபவம், இதேபோல் ஒரு நாள், நாங்களிருவரும் ராஸோடு நடந்து போனதை, எனக்குள் நினைவு படுத்திற்று. கூடவே வேறொன்றும் நினைவுக்குள் வர, உள் மூச்சினை ஆழமாய் இழுத்துக் கொண்டு படபடப்பானேன்.

''அடக் கடவுளே'' என்று பொய்ரெட் பக்கம் திரும்பிய நான், ''நினைவிருக்கா?'' என்றேன்.

''எதை? ஏன் திடீர்னு தலையும் இல்லாம வாலும் இல்லாம கேட்கிறே ஹேஸ்டிங்ஸ்?''

''பதின்மூன்று பேர் கலந்துக் கொண்டிருந்த விருந்து பற்றி ராஸ் சொன்னது பொய்ரெட்...! நினைவிருக்கா? அவர் தான் முதலில் முடித்து விட்டு எழுந்ததாய் குறிப்பிட்டாரே!''

பொய்ரெட் பதில் சொல்லவில்லை. இதனால் நான் அசௌகரிய மானேன்.

''இது சந்தேகத்தைத் தூண்டுது'' - என் குரல் தாழ்ந்து ஒலித்தது. ''இது சந்தேகத்தைத் தூண்டும் ஒண்ணுனு நீயும் ஒப்புக் கொள்ளத்தான் வேணும்.''

''ஓ...?''

''ராஸ் மற்றும் பதின்மூன்று குறித்து நான் சந்தேகம் எழுப்பறேன் பொய்ரெட். என்னத்தை நினைச்சுக்கிட்டு நிக்கறே..?'' முக்கியத்துவம் கொடுத்து கேட்டபடி நானும் நின்றேன்.

என் முழு ஆச்சரியத்துக்கும் வியப்புக்கும் இடமளிக்கும் வகையில், என்னை வெறுப்பேற்றும்படி குலுங்கக் குலுங்க சிரிக்க ஆரம்பித்தான்

பொய்ரெட். குலுங்கினான், குலுங்கினான். அவனுடைய உள்ளத்தைக் கொள்ளைக் கொண்டு கவரும்படி, ஏதோ களிப்பு உண்டாகியுள்ளது. அப்படி சிரித்தான்.

''ஏனிப்படி பைத்தியக்காரத்தனமாய் நடந்துக்கறே?'' - நான் கூராய் கேட்டேன்.

''ஓஒஒ'' - மூச்சு வாங்கியது பொய்ரெட்டுக்கு. ''கோபப்படாதே. ஒண்ணுமேயில்லை. நான் கேள்விப்பட்ட ஒரு விடுகதை எனக்குத் தோணிச்சு. உன்கிட்டே சொல்றேன். இரு கால்களும் இறகுகளும் கொண்டு ஆனால் நாய் போல குரைக்கும் - அது எது?''

''மண். அது கோழி'' - களைப்பாய் சொன்னேன். ''குழந்தைப் பள்ளியிலேயே நான் படித்தது இது.''

''இருந்தாலும், 'எனக்குத் தெரியாது'னு தான்நீ சொல்லணும். பிறகு, நான் 'அது கோழி' என்பேன். இதுக்கு, 'ஆனா கோழி நாயைப் போல குரைக்காதே'னு நீ குறுக்குக் கேள்வி கேட்கணும். 'ஆஹ்! கேள்வியைக் கடுமையாக்க நானாய் சேர்த்துக் கொண்டது அது' என்பேன் நான். ஒருவேளை, அந்த Dக்குத் தேவையான பதில், அன்பு ஹேஸ்டிங்ஸ், இந்த விடுகதையில் நமக்குக் கிடைத்து விட்டால்..!''

''முட்டாளாக்காதே பொய்ரெட்.''

காதலியை அணைப்பதைப் போல என்னை இறுக்கமாய் அணைத்துக் கொண்ட பொய்ரெட், ''சில மூளைகளுக்கு இது முட்டாள்தனம்''என்று என் மண்டையைத் தட்டிக் காட்டினான். என் கோபம் சற்றுத் தணிந்தாற் போலாயிற்று.

இப்போது நாங்கள் ஒரு பெரிய திரையரங்கத்தைக் கடந்துக் கொண்டிருந்தோம். படம் முடிந்திருந்தது. மக்கள் கூட்டம் அலை அலையாய் உள்ளிருந்து வந்துக் கொண்டிருந்தது. குடும்ப சமாச்சாரங்கள், வேலையாட்கள், எதிர்ப்பால் ஈர்ப்பு, இவற்றோடு, பார்த்து முடித்த படம் குறித்தும் அவ்வப்போது பேசியபடி கூட்டம் கலைந்துக் கொண்டிருந்தது.

அப்படிப்பட்ட ஒரு சிறு கூட்டத்தோடு சேர்ந்துக் கொண்டு, நாங்களும் சாலையைக் கடந்துக் கொண்டிருந்தோம். அப்போது, எங்கள் முன்னால் சென்றுக் கொண்டிருந்த பெண், ''எனக்கு ரொம்பப் பிடித்தது'' என்றார் படத்தை. ''இதில் தோன்றியது போல் வேறெதிலும் ப்ரையன் மார்ட்டீன் அதிரூபனாய் தோன்றியிருக்கவே முடியாது. மார்ட்டீன் படம் ஒண்ணு கூட இனி விடக் கூடாது. அப்பப்பா.. அந்த குன்றினை தாண்டித் தாண்டி அவர் ஓடும் கா...காத்திர அழகு... சரியான

நேரத்தில் நீதிமன்றத் தாள்களைக் கொண்டு வந்து சேர்த்து விடும் வீரம்... வாவ்...''

அவளின் ஆண் தோழன், அப்படி ஒன்றும் ஈடுபாடாய் இல்லை. ''முட்டாள்தனமான கதையடீ. ஆரம்பத்திலேயே எல்லீஸை நேரடியா கேட்டிருக்கலாமில்லையா...! மூளை உள்ள எவனும் செய்திருக்க வல்லது அது தான் - - -''

பிறகு அவர்கள் என்ன பேசிக் கொண்டு சென்றார்கள் என்பது தெரியவில்லை. பாதைகள் மாறின. இவ்வாறு அந்த இளைய ஜோடி பேசிக் கொண்டிருந்ததையே கவனித்துக் கொண்டு வந்த நான், எதிர்புறத்து நடைபாதையை அடைந்ததும், பொய்ரெட்டுக்காக திரும்பினால்... எதிர் எதிராய் இருபுறத்திலிருந்தும் வாகனங்கள் முழங்கிக் கொண்டு அதிவேகமாய் இழைந்துக் கொண்டிருக்க, நட்ட நடு சாலையில் அப்படியே நின்றுக் கொண்டிருந்தான் பொய்ரெட். கதி கலங்கிப் போனேன் நான். ஜேப் குறிப்பிட்டது போல மனநல மருத்துவரிடம் அழைத்துப் போக வேண்டியதுதானா? என் இரு கைகளும், தன்னிச்சையாக கண்களை மூடிக் கொண்டன. சாலையைக் கிழித்தெறிவது போன்ற ப்ரேக் போடும் ஓசைகளும், தொடர்ந்து கேவலமான ஓட்டுநர்களின் வசவுகளும் ஒலித்தன. மரியாதை மிகுந்த நடை நடந்தபடி, நான் நின்றிருந்த நடைபாதையை அடைந்தான் பொய்ரெட். தூக்கத்தில் நடப்பது போல் இருந்தது அவனது நடை.

''பொய்ரெட்..?'' என்றேன், பற்கள் நரநரக்க, நரம்பு புடைக்க, அவன் கையில் ஒன்றை இறுக்கமாய்ப் பிடித்து இழுத்து..! ''பைத்தியம் பிடிச்சுடுச்சா? போய் தொலையட்டும் இந்த வழக்கு. முடியும்போது முடியட்டும். இப்படி மூளை குழம்பிப் போகாதே.''

''ஒண்ணுமில்லைடா. விட்டுடு. மறந்துடு. அதான் வந்துட்டேன்லே. அந்த இடத்துல ஏதோ ஒண்ணு எனக்குள் ஒளி விட்டது. அதோ... அங்கு... அக்கணத்துல..!''

''மறக்க முடியாத கணம்'' என்றேன் நான், நான் பயந்ததை மனதில் கொண்டு.

''கவலையை விடு. நான் குருடனா, செவிடனா, உணர்ச்சியற்று இருந்தேன்னு கலங்கினேனில்லையா...? இனி அக்கலக்கமே இல்லையாது. இப்போ, அந்த ஐந்து கேள்விகளுக்கும் எனக்கு விடைகள் கிடைத்து விட்டன. ஆமாம் - *ஐந்துக்கும்!* ஆமா, ஹேஸ்டிங்ஸ்... எனக்கு விடைகள் தெரிகின்றன...! மிக எளிய பதில்கள் தெரியுமே..! குழந்தைத்தனமான பதில்கள்...!

அத்தியாயம் - 28

# பொய்ரெட் சில கேள்விகள் கேட்கிறார்

தற்போது நடந்த சம்பவங்கள் ஏற்படுத்திய ஆர்வம் மிகுந்த சிந்தனைகளோடு நாங்கள் நடந்தே வீடு வந்து சேர்ந்தோம். பொய்ரெட், சந்தேகத்துக்கிடமின்றி, தனது மூளையில் வரிசை வரிசையாக குவித்துக் கொண்டிருந்த சிந்தனைகளின் ஆதிக்கத்திலேயே இருந்தான். அவ்வப்போது, அவன் மூச்சுக் காற்று ஓசையைவிட, சற்றே அதிக ஒலியோடு, பக்கத்திலிருப்பவருக்குக் கூட கேட்கா வண்ணம் சில வார்த்தைகளை முணுமுணுத்தான். ஓரிரு வார்த்தைகளை மட்டும் என்னால் பிடிக்க முடிந்தது. ஒரு முறை 'மெழுகுவர்த்திகள்' என்றான். மற்றொரு முறை சொன்னது பாதி கேட்டு, மீதி கேளாது குழம்பிற்று! போதுமான அளவு சூட்டிகை நிறைந்த புத்திசாலியாக நான் இருந்திருந்தால், எந்த திசை நோக்கி அவனது சிந்தனைக் கோடு பயணித்துக் கொண்டிருக்கிறது என்பதை அறிந்திருக்க முடியும் - அதுதான் இல்லையே! அவனது சிந்தனையை அடியொற்றிப் போனால், என்ன நினைக்கிறான் என்று கண்டறிந்து விடலாம் - அத்தனை தெளிவான நிலைதான்...! ஆனாலும், எனக்கு, பொய்ரெட் தேவையற்று இப்படி சிந்தித்துக் கொண்டிருக்கிறான் என்றே பட்டது.

வீட்டுக்குள் நுழைந்தது தான் தாமதம்... இறக்கை விரித்துப் பறந்து விரைந்து, தொலைபேசியை நெருங்கினான், பொய்ரெட்! சவாய்க்கு இணைப்புப் பெற்று, சீமான் எட்ஜ்வேரின் மனைவியோடு பேச வேண்டும் என்றான்.

ஜானே வில்கின்ஸனின் அறைக்கு இணைப்பு அளிக்கப்படுவதற்குள், ''அவர் கிடைக்க மாட்டார். துப்பறியும் நிபுணரே..''என்று சிரித்தபடி குறிப்பிட்டேன். வழக்கு - அதை துப்பறிதல் - அது சம்பந்தப்பட்ட சேதிகளை மட்டும் பதிந்துக் கொள்ளுதல் - இவை தான்

பொய்ரெட். நான் அடிக்கடி பொய்ரெட்டிடமே குறிப்பிடுவது போல, தினசரி நாட்டு நடப்புகள் பற்றி மிக மோசமாக தகவல் அறிந்து வைத்திருக்கும் உலகின் முதல் நபர் - இவனே தான்! ''உனக்குத் தெரியாதா?'' என தொடர்ந்த நான், ''அவர், இன்று அரங்கேறும் புது மேடை நாடகம் ஒன்றில் நடிக்கிறார். எனவே கலாரங்கில் தான் இருப்பார்'' என்றேன்.

பொய்ரெட் என் வசனங்களைக் கவனித்த மாதிரி தோன்றவில்லை. அப்போது இணைப்பில் வந்த சவாய் வரவேற்பாளரோடு பொய்ரெட் பேசிக் கொண்டிருக்க, அவனோ, நான் சொன்னதை அப்படியே பிசகாது சொல்லிக் கொண்டிருப்பது புரிந்தது.

''ஆஹ்..! அப்படியா என்ன? பரவாயில்லே! எனில், நான் அவரோட பணியாளோட பேசணும்..!''

உடனே ஜானேயின் அறைக்கு இணைப்பு தரப்பட்டது.

''யாரது...? எட்ஜ்வேர் மனைவியின் பணியாளா? இது பொய்ரெட் ஹெர்குல் பொய்ரெட் நினைவிருக்கா?''

''... ... ...''

''இப்போ முக்கியமான சூழ்நிலை ஒன்று உருவாகியுள்ளதம்மா..! நீங்க உடனடியாய் புறப்பட்டு வந்து என்னைப் பார்க்க வேணுமாய் பிரியப்படறேன்..!''

''... ... ...''

''ஆனா, இது ரொம்ப முக்கியம், மேடம். எனவே நீங்க வந்துதான் தீரணும்னே சொல்வேன். முகவரி சொல்றேன். கவனமாய் கேட்டுக்குங்க... தேவைப்பட்டா எழுதிக்கங்க.''

முகவரியை இரு முறை நிதானமாய் கூறினான். பிறகு ரிஸீவரை அதனிடத்தில் பொருத்தினான், சிந்தனை பொதிந்த முகத்தோடு..!

''இதென்ன புதுக் கூத்து பொய்ரெட்..? என்ன செய்ய திட்டம்...?'' கேட்டேன் சிறு ஆர்வத்தோடு. ''உண்மையிலேயே அப்படி முக்கியமா ஏதேனும் துப்புக் கிடைச்சிருக்கா...?''

''இல்லை ஹேஸ்டிங்ஸ்'' என்ற துப்பறியும் நிபுணன் சொன்னான்: ''அவ தான் எனக்கு துப்புக் கொடுக்கப் போறா..!''

''ஓஹ்...! ஆவலைத் தூண்டறே. என்ன துப்பு அது?''

''ஒருவரைப் பற்றிய தகவல்.''

''ஜானே வில்கின்ஸன்?''

''ஆஹ்..! அவரைப் பொறுத்தவரை, எனக்குத் தேவைப்படும் அத்தனை தகவல்களும் யதேஷ்டமாய் உள்ளன. முன்னும் பின்னும் அவரைப் பற்றித் தெரியும்.''

''பின், யார்...?''

பதில் தராது, கேள்வி கேட்டவரை எரிச்சலாக்கி மண்டைக் காய விடவல்ல பொய்ரெட்டின் அழுத்தம் பொதிந்த சிரிப்பு தான் விடையாயிற்று. காத்திருந்து பார் என்றான்.

அறையை சுத்தம் செய்வதில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருந்தான் பொய்ரெட்.

பத்து நிமிடங்கள் கழித்து அந்தப் பணியாள் வந்து சேர்ந்தாள். தீர்மானமற்றவளாயும், ஒரு வித அதிர்வில் இருப்பவளாயும் தோன்றினாள் அவள். கச்சிதமான உடல் வாகு கொண்டிருந்த அப்பணியாள் கறுப்பு உடை உடுத்தியிருந்தாள். நிச்சயமற்ற சந்தேகம் அவளிடம் தெரிந்தது. பேசாது என்பது போல தன் உதடுகளை இறுக்கியிருந்தாள்.

''ஓ... வந்துட்டீங்களா..! உள்ளே வரவும். உங்க கனிவான நடத்தைக்கு நன்றி. இப்படி உட்காரலாமே, மிஸ்.. ம்..ம்.. எல்லீஸ். சரிதானே...!''

''ஆமாம் ஸார். எல்லீஸ் நான்.''

அவளுக்காக பொய்ரெட் முன்னால் இழுத்துப்போட்ட இருக்கையில் அமர்ந்துக் கொண்டாள் எல்லீஸ்.

உள்ளங்கைகளை ஒன்றுக்குள் ஒன்றாய் புகுத்தி, அவற்றை அதிர்வோடு பிசைந்துக் கொண்டே, ஒருவர் மாற்றி மற்றொருவராய் எங்களை மானைப் போல் மிரட்சி பார்வை பார்த்தபடி அமர்ந்தாள் எல்லீஸ்.

''மிஸ் எல்லீஸ்... நீங்க எத்தனை காலமா திருமதி எட்ஜ்வேருடன் இருக்கீங்க?''

''மூன்று வருடங்கள்.''

''நானும் அப்படியே நினைச்சிருந்தேன். அவருடைய தொடர்புகளெல்லாம் உங்களுக்கும் தெரிஞ்சிருக்கணும்.''

எல்லீஸ் இதற்குப் பதில் சொல்லவில்லை. ஏற்றுக் கொள்ள முடியாது என்ற பார்வையை வீசினார்.

''அவருடைய எதிரிகள் யார் யார் என்பது குறித்த சிறப்பான ஊகங்கள் உங்களுக்கு இருக்கணும் - என்று சொல்ல வந்தேன் மிஸ் எல்லீஸ். வேறொண்ணுமில்லே.''

எல்லீஸ் இன்னும் இறுக்கமாக தன் உதடுகளை வைத்துக் கொண்டார்.

''என்ன எல்லீஸ்... என் கருத்துக்கு உங்க பதில் வேணுமே.''

''பல பெண்கள் அவரைத் திணறடித்துத் தள்ளி விட முயன்றார்கள் என்பது உண்மை, ஸார். பற்பல பெண்கள். ஆமாம். அவர்களனைவரும், முதலாளியம்மாவுக்கு எதிராய் தான் இயங்கினார்கள். எல்லாம் பாழாய் போன பொறாமையால்...!''

''பெண்களுக்கு அவரைப் பிடிக்கவில்லை.''

''அப்படி முடிவாக்கிட முடியாது ஸார். அவர் தேவ லோக நங்கை போல அத்தனை அழகு. அப்ஸரஸ். என்ன நினைக்கிறாரோ அதனை அப்படியே அடைந்து விடும் ராசிவேறு. இது யாருக்கும் வாய்க்காத ராசி ஸார். இந்தக் கனவுலகில் நிலவும் பொறாமை பற்றி சொல்லி மாளாது.''

''ஆண்கள் பற்றி..?''

எல்லீஸ், அவரது வாடிப் போயிருந்த முக சாயலில், வெறுப்பான புன்னகை ஒன்றினைத் தவழ விட்டார். ''தான் என்ன நடத்த நினைக்கிறாரோ, அதனை, ஆண்களிடம் நடத்தி வெற்றி பெற்று விடுவார், ஸார். ஆமாம், இது ஓர் உண்மை.''

''உங்க கருத்தை நான் ஆமோதிக்கிறேன்'' என்றார் பொய்ரெட். ''அப்படியே இருந்தாலும் கூட எல்லீஸ், திடீரென எழும் சமய சந்தர்ப்பங்கள் ---''

ஏதோ சொல்ல வாயெடுத்தவன் அப்படியே நிறுத்திக் கொண்டான். சற்று மாற்றம் கொண்ட அதிகாரக் குரலில் கேட்டான்: ''உங்களுக்குப் ப்ரையன் மார்ட்டீனைத் தெரியுமா? நடிகர்...?''

''ஓ, தெரியும் ஸார்.''

''ரொம்ப நல்லா...?''

''ரொம்ப நல்லாவே தெரியும் ஸார்.''

''ஒரு வருஷத்துக்கு முன்னால, ப்ரையன் மார்ட்டீன், உங்க முதலாளியம்மாவோடு, தீவிரக் காதலில் இருந்தார் என்று நான் சொன்னா, இத்தகவலில் தவறேதும் இல்லைனே நினைக்கிறேன். உங்கள் கருத்து?''

''ஒரு சிறு மாற்றம் செய்யலாமா, ஸார்.''

திகைத்துப் பார்த்தான் பொய்ரெட். நான் கூட இதுவரை அறிந்திராத பொய்ரெட் சொன்ன இத்தகவலில், அவனுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை உள்ளது என்பது, அவனுடைய ஆணித்தரமான வாதங்களிலிருந்து என்னால் அறிய முடிந்தது. அப்படிப்பட்ட தகவலில் மாற்றமா எனும் நினைப்பு அவனைத் துணுக்குற வைத்தது.

''ம்'' - என ஒப்புதல் அளித்தான்.

''இருந்தார் அல்ல ஸார். இருக்கிறார்.''

''ஒஹ்..'' என்று லகுவான துப்பறியும் நிபுணர், ''ஒரு வருஷத்துக்கு முன்னால, உங்க முதலாளியம்மா அவரை மணந்துக் கொள்வார் என்ற ஆழமான நம்பிக்கையில் மார்ட்டீன் இருந்திருக்கிறார், இல்லையா...?'' என்று கேட்டான்.

''ஆமாம், ஸார்.''

''சரி! உங்க முதலாளியம்மா, மார்ட்டீனை மணந்துக் கொள்வது குறித்து, எப்போதாவது தீவிரமா சிந்திச்சதுண்டா?''

''நினைத்தார் ஸார்! ஆரம்பத்திலேயே சீமான் எட்ஜ்வேரிடமிருந்து முதலாளியம்மாவுக்கு விடுதலைக் கிடைத்திருக்குமாயின், அவர் நிச்சயமா மார்ட்டீனை மணந்திருப்பார்.''

''பிறகு, இடையில், மெர்ட்டான் மாகாணத்து இளைய பிரபு, காட்சிக்குள் நுழைகிறார்னு நினைக்கிறேன்.''

''வெகு சரியா சொன்னீங்க. பிரபு, மாவட்ட ரீதியாக ஓர் அரசு முறைப் பயணம் மேற்கொண்டிருந்தார். கண்டதும் காதல் - இவர்கள் இருவருக்குள்ளும் விளைந்தது.''

''ஆக, ப்ரையன் மார்ட்டீன் கனவுகளுக்கு, 'டாடா' காட்டப்படுகின்றது.''

எல்லீஸ் ஒப்புதலாய் தலையசைத்தார்.

''ப்ரையன் மார்ட்டீன் ஏகமாய் பணம் சம்பாதித்து விட்டார். ஆனா, இளைய பிரபுவுக்கு பதவியும் பட்டமும், கூட உள்ளனவே! முதலாளியம்மாவுக்கு பட்டம் பதவி மீது பேயாசை உண்டு. இளைய பிரபுவை மணந்துக் கொள்ளும்போது, மெர்ட்டான் மாகாணத்து முதல் பெண்மணியாகி விடுவார் இல்லையா..!''

இப்படிச் சொன்னாலும் கூட எல்லீஸ், சொன்ன வார்த்தைகளில் நேர்த்தியான மரியாதை கலந்து தான் சொன்னார்.

''ப்ரையன் மார்ட்டீன் கை கழுவப்படுகிறார்...! அது சரி மேடம்... இதனை ப்ரையன் மார்ட்டீன் எப்படி எடுத்துக்கிட்டார்?''

''துப்பாக்கி முனையில் கூட ஒரு நாள் மிரட்டிப் பார்த்தார். இதுபோல இன்னும் என்னவெல்லாமோ பயங்கரக் காட்சிகள் நடத்திக் காட்டினார். பயந்தே போனேன் தெரியுமோ..! நொறுங்கிப் போனார். ஏகமாய் குடிக்க வேறு செய்தார்.''

''ஆனா, இறுதியில அவர் குளிர்ந்து அடங்கி அமைதியாகிப் போனார்...இல்லையா...?''

''அப்படித்தான் தோணிச்சு ஸார். ஆனா உண்மையிலேயே அமைதியானாரானு தெரியாது. இன்றும் முதலாளியம்மாவோடு அவர் சுத்திக்கிட்டுதான் திரியறார். அவர் பார்வையே எனக்குப் பிடிக்காது, தெரியுமோ! கண்றாவி... ஊடுருவும் பார்வை...! முதலாளியம்மாவிடம் கூட இதுபற்றி சொல்லியிருக்கிறேன். சிரித்துவிட்டு, விட்டு விடுவார். தனது கவர்ச்சி சக்தி குறித்து பெருமை கொண்டு இறுமாப்புக் கொள்ளும் ரகம் அவர்... புரியுதா, ஸார்?''

''நீங்க என்ன சொல்ல வரீங்கனு நல்லாவே புரியுது...''

''ஆனா ஒண்ணு... சமீப காலமா அவரை அடிக்கடி வீட்டுப் பக்கம் காண முடிவதில்லை ஸார். ஒரு விதத்துல நல்லதுதான், போங்க. முதலாளியம்மாவை நினைப்பதிலிருந்து மெதுவாக நழுவ ஆரம்பித்துள்ளார்னு நினைக்கிறேன்.''

''இருக்கக் கூடும்.''

இப்படி சொன்ன பொய்ரெட்டின் விதத்திலிருந்து எதுவோ எல்லீஸுக்கு உறைத்திருக்க வேண்டும். படபடப்பாய் கேட்டார்: ''முதலாளியம்மா, ஆபத்துல இருப்பதாயெல்லாம் நீங்கள் நினைக்கலே... இல்லையா, ஸார்...?''

''செல்வி எல்லீஸ்...'' என ஆதரவாய் குறிப்பிட்ட பொய்ரெட், ''உங்க முதலாளியம்மா சர்வ நிச்சயமாய் ஆபத்தில் தானிருக்கிறார். ஆனா, இந்த ஆபத்து, அவரே வலியப் போய் கொண்டு வந்து சேர்த்துள்ள ஆபத்து'' என்றான்.

இப்படிச் சொன்ன பொய்ரெட், தன் அருகிலிருந்த பூச்சட்டி நோக்கி நோக்கின்றி கைகளைக் கொண்டு செல்ல, அது எதிர்பாராது கவிழ்ந்து விட, அதனுள்ளிருந்த தண்ணீர் கவிழ்ந்துக் கொட்டி, மேஜையிலிருந்து நழுவி சிதறியது. பூச்சட்டி, அமர்ந்திருந்த எல்லீஸின் உயர அளவுக்கும் மேலேயிருந்தபடியால், கொட்டிய நீர், அவர் தலை, முகம் எங்கும் பரந்தது. இப்படியெல்லாம் பொய்ரெட் அபத்தமாய் செய்யக் கூடியவனே அல்ல. ஆதலால், அவன் மூளைக்குச் சொல்லொணா எண்ணம் ஒன்று எழுந்திருக்க வேண்டும் என கருதிக் கொண்டேன். பொய்ரெட் கதிகலங்கிப் போனான் - துடைத்துக் கொள்ள ஒரு துண்டு தேடி ஓடினான் - பட்டும் படாது, எல்லீஸ் துடைத்துக் கொள்ள உதவி புரிந்தான் - பல நூறு மன்னிப்புகளைத் தெரிவித்தான்.

பிறகு, இவ்வளவு தூரம் உடனடியாய் வந்து சிறப்பித்த எல்லீஸின் கனிவான குணத்துக்கு நன்றி என்று சொன்ன பொய்ரெட், அவரை

வழியனுப்பி வைத்தான். ''நேரம் ஆகவில்லை மிஸ் எல்லீஸ். உங்க முதலாளியம்மா இன்னும் வந்திருக்க மாட்டாங்க.''

''அதனால பாதகமில்லே ஸார். இரவு உணவுக்கு வேறு யாருடனோ அவர் வெளியே போகப் போறார். தவிர, அவருக்கு என் துணை தேவைப்படாத பட்சத்தில், நான் வீட்டுக்குள்ளேயே தான் அடைஞ்சுக் கிடக்கணும்னெல்லாம் அவர் எதிர்பார்க்கவே மாட்டார்.''

கிளம்பிய எல்லீஸின் நடையைக் கவனித்த பொய்ரெட் மிகக் கரிசனமாக, ''நீங்க நொண்டுறீங்க மேடம்'' என்றான்.

''ஒண்ணுமில்லை ஸார். என் கால்களில் வலி.''

''ஆணி...?''

சொன்னது போலவே எல்லீஸ் காலில் ஆணி வந்திருந்தது. அதற்காக சிறப்பான மருந்துவத்தை விளக்கினான் பொய்ரெட். கேட்டுக் கொண்டு, பொய்ரெட்டிடம் பிரிய முடியாத அளவு ஒட்டிக் கொண்ட எல்லீஸ், கிளம்பினார்.

பொய்ரெட், துப்பறியும் நிபுணரே அல்ல... வசியக்காரன். எப்படி எல்லோரையும் கட்டிப் போட்டு விடுகிறான்...!

நடந்த அத்தனையையும் கவனித்துக் கொண்டிருந்த நான், எதற்காக இந்த சந்திப்பு என்பதை அறிந்துக் கொள்வதில் மிக ஆவலாயிருந்தேன்.

''என்ன.. என்ன பொய்ரெட்?''

என் படபடப்பைக் கவனித்து உதடு பிரியாது சிரித்தான்.

''இந்த மாலைக்கு இது போதும், இனியவனே! இனி எந்தச் சந்திப்பும் கிடையாது! நாளை பொழுது விடிந்ததும், ஜேப்புக்கு தொலைபேசி செய்றே. அவரை உடனடியாய் இங்கு வரும்படி அப்போ சொல்றே. ப்ரையன் மார்ட்டீனுக்கும் தொலைபேசி செய்து வரச் சொல்லணும். அவரிடமிருந்து சுவை மிகும் செய்திகள் உதிரும், பார்..!''

பேசிய பொய்ரெட்டைப் பக்கவாட்டிலிருந்து கவனித்தேன். விநோதமாய் அவன் தனக்குத்தானே சிரித்துக் கொண்டிருந்தான்.

''எதெப்படியோ...'' என்று தொடங்கிய நான், ''சீமானைக் கொன்ற கொலைகாரனாக, நீ ப்ரையன் மார்ட்டீனை எண்ண வில்லைனே நினைக்கிறேன். ஜானேயின் கணவனைக் கொன்று அதன் மூலம் தனது மாஜிக் காதலிக்கு விடுதலை ஏற்படுத்தி அவள் வேறொருவனை மணக்க வழி செய்து தருவதெல்லாம்... ... ...'' என்றேன், கனிவாய்.

''ஆழ்ந்த பகுத்தறிவு நிறைந்த தீர்ப்பு...!''

''ஏய்.. ஏய்... பொய்ரெட்..! போதும், போதும்..! சுற்றி வளைத்து ஒளிவு மறைவா பேச வேணாம். என்னால் இனி தாங்காது. என் சிறு மூளைக்கும் ஒன்றும் பிடிபடவில்லை. சொல்லு... இத்தனை நேரமாய் எதை மனசுல வெச்சுக்கிட்டு அவளைக் கிண்டிக்கிட்டிருந்தே...?''

கையில் தான் வைத்திருந்த மூக்குக் கண்ணாடியைத் தூக்கிக் காட்டி, ''இதோ... இதோடு... அழகு எல்லீஸின் இந்த மூக்குக் கண்ணாடியோடு கிண்டிக் கொண்டிருந்தேன், என் மிக இனியவனே...!''

''குழப்ப வேண்டாம். இங்கிருந்து வெளியேறியபோது, அவர் மூக்கில் கண்ணாடி இருந்தது.''

மறுத்து, அதே சமயம் வெற்றிப் புன்னகையோடு தலையசைத்தான் பொய்ரெட்.

''கிடையாது! கிடையவே கிடையாது! வேலையற்றா தண்ணீரை அவர் மீது கொட்டி அவர் மூக்குக் கண்ணாடியை அவிழ்க்க வைத்தேன்...! எல்லீஸ் கண்ணாடி இதோ, என் கையில்...! அவர் அணிந்துப் பறந்தது, நண்பா, கர்லோட்டா ஆடம்ஸின் கைப்பையிலிருந்து நாம் எடுத்த மூக்குக் கண்ணாடி.''

என் மூச்சு நின்றுப் போனது.

அத்தியாயம் - 29

# பொய்ரெட் பேசுகிறார்

மறுநாள் காலை ஜேப்புக்கு தொலைபேசி செய்ய வேண்டிய வேலை என்னுடையதானது.

அவர் குரல் சோர்ந்து ஒலித்தது. ''ஓ... காப்டன் ஹேஸ்டிங்ஸா..? என்ன சேதி?''

பொய்ரெட் சொல்லச் சொல்லியிருந்த விஷயத்தைச் சொன்னேன்.

''பதினோரு மணிக்கு? வர முடியும் காப்டன் ஹேஸ்டிங்ஸ். இளைஞன் ராஸின் கொலை சம்பந்தமா உதவ அவர் ஏதாவது துப்பு வெச்சிருக்கிறாரா என்ன..? சிறு துப்புக் கிடைத்தால் கூட போதும்... அதைப் பிடிச்சுக்கிட்டு மேலேறிவிடலாம். மேலதிகாரிகள் என்னைக் கொடஞ்செடுக்கிறாங்க. எவ்வகை துப்பும் கிடைக்காத வழக்கா இருக்கு. மிக மர்மமான கொலையப்பா..!''

''அவன் உங்களுக்கு உதவ ஏதோ வெச்சிருக்கான் என்பது என் கணிப்பு'' - பட்டும் படாமல் சொன்னேன். ''இதுவரை நம் மூளையைக் குடைய வைத்த எல்லா நிகழ்வுகள் குறித்தும், தனக்குத் தானே மிக திருப்தி கொண்டு தோன்றுகிறான் - இனி எவ்வித குழப்பமும் கிடையாது என்பது போல.''

''நல்லது, கேப்டன் ஹேஸ்டிங்ஸ். நான் அங்கிருப்பேன்.''

ப்ரையன் மார்ட்டீனுக்கு தொலைபேசி செய்வது, என் அடுத்த வேலையானது. அவரிடம், நான் என்ன சொல்ல வேண்டும் என அறிவுறுத்தப்பட்டிருந்தேனோ அதை அப்படியே சொன்னேன். சீமான் எட்ஜ்வேர் வழக்கு தொடர்பாக, கேட்பதற்கு மிக ஈடுபாடு ஏற்படுத்தும் எதையோ பொய்ரெட் கண்டுபிடித்திருப்பதாகவும், அதை, மார்ட்டீன் கேட்டறிய பிரியப்படுவார் என துப்பறியும் நிபுணர் நினைக்கிறார் என்றும், அதற்காகத் தான் பொய்ரெட் வரச் சொல்கிறார் என்றும் சொன்னேன். அப்படி என்ன மனோஹரமான விஷயமது என்று அவர்

கேட்டதற்கு, எனக்கு எவ்வித அபிப்பிராயமும் இல்லை என்றேன். என்னிடம் பொய்ரெட் அதெல்லாம் ஒன்றும் அறிவிக்கவில்லை என்றும் விளக்கினேன். இதற்கு, மறுமுனையில், சற்று அமைதி நிலவியது.

இறுதியாக, ''சரி'' என்று கூறிய மார்ட்டீன், ''நான் அங்கே வரேன்'' என்றார்.

இவ்விரு தொலைபேசி பணியும் முடிந்த பிறகு, எனக்குள் ஆச்சரியத்தை உண்டு பண்ணும்படி, பொய்ரெட், ஜென்னி ட்ரைவருக்கு தொலைபேசி செய்து, அவரையும், உடனடியாக புறப்பட்டு வரும்படி பணித்தான்.

பிறகு, பொய்ரெட் ஆழ்ந்த கருத்து பொதிந்த சிந்தனையிலிருந்தான். அமைதியாயுமிருந்தான். நான் குறுக்கிட்டு எதுவும் பேசவில்லை.

இவர்களில் ப்ரையன் மார்ட்டீன் தான் முதலில் வந்து சேர்ந்தார். நல்ல மனோநிலையில் அவர் இருந்தார் - ஆனாலும் - நான் வெறுமனே கூட இப்படி நினைத்திருக்கலாம் - அவரிடம் ஓர் ஆறுதல் தேடும் சஞ்சலம் தெரிந்தது. அடுத்த கணமே... உடனடியாக, ஜென்னி ட்ரைவர் வந்து சேர்ந்தார். மார்ட்டீனைப் பார்த்ததில் ஆச்சரியமடைந்தவராய் ஆனார் ட்ரைவர்; அந்த ஆச்சரியத்தை, மார்ட்டீனும் பகிர்ந்துக் கொண்டதாய் பட்டது.

பொய்ரெட் இரு இருக்கைகளைக் கொண்டு வந்து, வந்திருந்த இருவரையும் உட்கார்ந்துக் கொள்ளும்படி உபசரித்தான். அப்போது தன் கைக்கடிகாரத்தைப் பார்த்து கொண்டவன், ''இன்னும் சில நிமிடங்களில் இன்ஸ்பெக்டர் ஜேப்பும் வந்துடுவார்'' என அறிவித்தான்.

''இன்ஸ்பெக்டர் ஜேப்?'' - ப்ரையன் மார்ட்டீன், அதிர்ந்து விதிர்ப்பது போல் தோன்றியது.

''ஆமாம்'' என்றான் பொய்ரெட். ''அவரை நான் இங்கு வந்து போக சொல்லியுள்ளேன். போலீஸாக அல்ல. நட்பு ரீதியாக.''

''ஓ..'' - இப்படிச் சொன்ன மார்ட்டீன், அமைதிக்குள் அடைக்கலமானார். எதுவோ உந்தித் தள்ள மார்ட்டீன் மீது பார்வையைப் பதித்துக் கொண்ட ட்ரைவர், பிறகு சுதாரித்துக் கொண்டு, உடனடியாய் பதித்த பார்வையை அகற்றிக் கொண்டார். காலையில் அவரது தொப்பிக் கடையில் நடந்த எது குறித்தோ அவர் மூளை அசைபோட்டுக் கொண்டிருக்கிறது..!

சில நிமிடங்கள் கழித்து, ஜேப், நாங்களிருந்த அறைக்குள் நுழைந்தார்.

மார்ட்டீனையும், ட்ரைவரையும் ஒரு சேர பார்த்ததில் அதிசய ஆச்சரியம் தான் அவர் அடைந்தார்! ஆனால் அப்படி தான் அதிசயித்துப் போனதற்கான சுவடே இல்லாது நடந்துக் கொண்டார்! வழக்கமான தனது கிண்டல் தொனியிலே தான் பொய்ரெட்டுக்கு வணக்கம் தெரிவித்தார்: ''என்ன மிஸ்டர் பொய்ரெட்...? நீங்க, திரு மார்ட்டீன், செல்வி ட்ரைவர்... என்ன இதெல்லாம்? சீமான் எட்ஜ்வேர் கொலை வழக்கு சம்பந்தமாய் இப்போ ஏதேனும் புதுசா கோட்பாடு வரைஞ்சிருக்கீங்களா?''

பொய்ரெட், கதிர் வீச்சாய் ஜேப்பைப் பார்த்தான். கிண்டலடிக்கும் தருணமில்லை என அறிந்து அடக்கிக் கொண்டார் ஜேப்.

''இல்லை திரு.ஜேப். பிரமாதமாய் ஒண்ணுமில்லை. சும்மா... ஒரு கதை. ஒரு சின்ன கதை. ஒரு குட்டிக் குழந்தைகள் கதை. மிக சுலபமான... அதாவது, ஆரம்பத்திலேயே புரிந்துக் கொள்ளாமல் அதை இத்தனை நாட்கள் கழித்துப் புரிந்துக் கொண்டுள்ளேனு நானே வெட்கப்படும்... மிக மிக சுலபமான கதை..! நீங்க அனுமதிச்சா, உங்களை, மீண்டும் வழக்கின் ஆரம்பத்திற்குக் கொண்டு போய், இக்கதையை ஆரம்பிக்க விரும்பறேன்.''

ஜேப் பெருமூச்சு ஒன்றினை விடுவித்து விட்டு தன் கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டார்.

''ஒரு மணி நேரத்திற்கு மேல நீங்க எடுத்துக் கொள்ளாமல் இருக்கும் பட்சத்தில்...'' என்றார்.

''நிச்சயமா'' என்ற பொய்ரெட், ''அத்தனை நேரம் பிடிக்காது ஜேப். உங்களுக்கு, யார் சீமான் எட்ஜ்வேரைக் கொன்றது, யார் கர்லோட்டா ஆடம்ஸைக் கொன்றது, யார் டொனால்ட் ராஸைக் கொன்றது ஆகிய அனைத்துக்கும் விடை தெரியணும் - அப்படித்தானே..?''

''எனக்கு அந்தக் கடைசிக் கேள்விக்கான விடை மட்டும் போதும்'' என்றார் ஜேப் எச்சரிக்கையாக.

''இனி என்னைக் கவனியுங்கள் - கூர்ந்துக் கவனியுங்கள் - அனைத்துக்கும் விடை வரும். இந்த வழக்குல, குற்றங்கள் எவ்வா றெல்லாம் இடம் பெற்றுள்ளன என்று ஒவ்வொரு படியாய் உங்க முன்னாடி நான் விரிச்சுப் போடப் போறேன். கண் கட்டுக் கட்டி நான் எப்படி ஏய்ப்புக் காட்டப்பட்டுள்ளேன் என்பதைக் காட்டப் போறேன். அவ்வப்போது, எப்படி உற்சாகமிழந்து பலவீனமாக்கப்பட்டேன் என

விளக்கப் போறேன். என் நண்பன் ஹேஸ்டிங்ஸுடனான உரையாடலும், யாரென்றுத் தெரியாத ஒரு பாதசாரியின் வசனமும் எப்படி இவ்வழக்கை முடித்துக் கொடுத்துள்ளன அப்படினு படம் பிடிச்சுக் காட்டப் போறேன்.''

சிறு இடைவேளை கொடுத்தான். தன் தொண்டையைச் செருமிக் கொண்டு, அவனுக்கே உரிய பேராசிரியர் பாணியில் விளக்க ஆரம்பித்தான்.

''சவாயில் அளிக்கப்பட்ட இரு கலைஞர்களுடனான விருந்திலிருந்து துவங்கறேன்... சீமான் எட்ஜ்வேரின் மனைவி என்னை அடையாளம் கண்டு அறிமுகம் செய்துக் கொண்டு, தனியா என்கிட்டே பேசுவதற்கு அனுமதி கேட்கறார். அவர் கணவரிடமிருந்து தப்பித்துவிட வேண்டும் என்கிற தன் உடனடி தேவையைச் சொல்றார். அன்றைய எங்கள் சந்திப்பின் முடிவில், முட்டாள்தனமாக என்று நான் நினைத்தபடி, ஒரு வாடகைக் காரை வைத்துக் கொண்டு நேராக தானே சென்று சீமானைக் கொன்று விடவும் தயங்க மாட்டேன் என அறிவிக்கிறார் அவர் - *பலர் முன்னிலையில்...!* அந்த விபரீத வார்த்தைகளை, அப்போ தான் உள்ளே நுழையும் *ப்ரையன் மார்ட்டின் கேட்கிறார்.'*

*மார்ட்டின் ஒரு சுற்று சுற்றி நின்றார் எனலாம்* - அந்த அளவுக்குத் *துணுக்குற்றார்.*

''*அப்படித்தானே, மார்ட்டின்?*''

''*நாம் எல்லோரும் கேட்டோம். திரு பொய்ரெட். நீங்க, விட்பர்ன் குடும்பத்தினர், கர்லோட்டா, சமீப சீமான் மார்ஷ் - என எல்லோரும்.*''

''*ஓஹ்! ஏத்துக்கறேன். வெகு சரினு ஏத்துக்கறேன். ஆனா, சீமான் எட்ஜ்வேரின் மனைவி சொன்ன அந்த விபரீத வார்த்தைகளை நான் மறக்க வாய்ப்பில்லாது செய்தது, அவர்களில் ஒருவருமல்ல... அது நீங்க தான்! திரு ப்ரையன் மார்ட்டின், அது நீங்க தான்...! அதிவேக விரைவோடு, கால தாமதம் ஏற்படாம, மறுநாளே என்னைக் காண, அழைப்பின்றி, நீங்களாகவே வரீங்க - ஜானே சொன்ன கடைசி வார்த்தைகளை என்னுள் ஆழமாய் நிலைநிறுத்திப் பதிய வைக்க...!*''

''*நிச்சயமா கிடையாது*'' - கோபத்தில் கதறினார் *மார்ட்டின்.* ''*நான் வந்தது எதுக்குன்னா - - -*''

''*ஒரு காட்சியை நடத்திக் காட்ட..!*'' என முடித்த பொய்ரெட் தொடர்ந்த வண்ணமிருந்தான்: ''*உங்களை யாரோ ஒருவன் தொடர்ந்துக்*

கொண்டேயிருக்கிறான் எனும் நர்ஸரி வகுப்புக் கதையை என் தலையில் கட்ட வந்தீங்க...! அது கதை, கட்டுக் கதை. ஒரு குழந்தை கண்டுபிடித்திருக்கும் அது பொய் என்று - ஆனா நான் ஏமாந்துட்டேன். ஏதோ ஒரு பழங்கால ஓடாத திரைப்படத்திலிருந்து அந்தக் காட்சியைத் திருடி, என்னிடம் நடத்திக் காட்டினீங்க. எப்படி எப்படி - ஒரு பெண்... அவள் அனுமதி கிடைச்சா தான் நான் அந்த நிழல் மனிதனைத் துப்பறியத் துவங்கலாம் - தங்கப்பல் கட்டிய மனிதன் - என்றெல்லாம் காதில் பூ சுத்தறீங்க. ஒண்ணு தெரியுமா மார்ட்டீன். எந்த இளைஞனும் உடைந்த தன் பல்லுக்கு வெள்ளைப் பல் தான் கட்டிப்பானே தவிர, வயதான தாத்தா போல தங்கப்பல் கட்டிக்கிட்டு இளிக்க மாட்டான்! தங்கப்பல் கட்டிக் கொள்வதெல்லாம் பழைய நாகரீகம் ஆகிவிட்டதால் யாரும் இங்கு தங்கப்பல் தயார் செய்து கொண்டு அலைவதில்லை, நண்பா - அதுவும் நவநாகரீக அமெரிக்காவில்...! ஓஹ்...! இவை அத்தனையும் முட்டாள்தனம் என்பதற்கான பகட்டான உதாரணங்கள். இந்தப்·பாட்டிக் கதையை என்னிடம் சொல்லி முடித்தவுடன் நீங்க என்னைக் காண வந்ததற்கான உண்மையான நோக்கத்தை நிறைவேற்றத் துணியறீங்க - ஜானேவுக்கு எதிராக என் மூளையில் நஞ்சு கலக்கும் நோக்கம்! ஜானே, ஒரு கொலையை செய்தால், அதுகுறித்து நீங்கள் ஆச்சரியப்பட மாட்டீர்கள் என்றெல்லாம் சாட்சியங்களோடு பேசி என்னை மூளைச்சலவை செய்ய முயல்றீங்க.''

''நீங்க எதுபற்றி என்ன பேசறீங்கன்னு எனக்குத் துளியும் விளங்கலே. நீங்க கற்பனையில் உச்சத்துல இருக்கீங்க.'' - விண் விண்ணென்று வார்த்தைகள் மார்ட்டீனிடமிருந்து வந்து விழுந்தன. செய்வதறியாது அவர் முகம் வெளிறிக் கொண்டே போனது.

''இன்னும் இருக்கு மார்ட்டீன், வெயிட்...! சீமான் எட்ஜ்வேர் விவாகரத்துக்கு ஒப்புக் கொள்வார் எனும் கருத்தையே நீங்கள் பெருக்கித் தள்ளிடறீங்க. நான் மறுநாள் தான் சீமானைப் போய் சந்திக்கப் போறேன் என்ற நினைப்புல நீங்க பேசினீங்க. ஆனா, முன் பதிவு மாற்றப்பட்டது! நான், நாம் சந்தித்தஅன்று காலையே போய் சீமானை சந்தித்துப் பேசி விட்டு வந்து விடுகிறேன் - அவரும் ஜானேக்கு விடுதலை தர முழு மனதோடு சம்மதிச்சுடறார். ஆக, சீமான் எட்ஜ்வேரைக் கொலை செய்யணும் எனும் இலக்கிலிருந்து ஜானே விடுபடுகிறார். மேலும், இது குறித்து, தான் ஏற்கனவே தனது மனைவியான ஜானேக்கு கடிதம் எழுதியிருப்பதாகவும், சீமான் என்னிடம் சொல்றார்.

''ஆனா சீமோனின் மனைவி என்ன சொல்றார் - அந்தக் கடிதம் தனது கைக்கு கிடைக்கவேயில்லைனு சொல்றார்! இது உண்மையா - தெரியாது. ஒண்ணு, ஜானே பொய் சொல்லணும் - அல்லது சீமோன் எட்ஜ்வேர் பொய் சொல்லணும் - அல்லது கடிதம் பதுக்கப்பட்டிருக்கணும் - எனில் யார் பதுக்கியது?

''இந்தத் தருணத்துல எனக்கு நானே ஒரு கேள்வி கேட்டுப் பார்க்கிறேன் - ஏன், நடிகர் ப்ரையன் மார்ட்டீன், தன்னை வருத்திக் கொண்டும் தனது பொன்னான நேரத்தை வீணடித்துக் கொண்டும், வலுவுக்கு என்னை வந்து சந்தித்து இத்தனை பொய்களையும் சொல்ல வேண்டும்? - இது தான் கேள்வி! எந்த உள் சக்தி அவரை இயக்கியுள்ளது? நீங்க, அந்தப் பெண்மணியோடு, பைத்தியமா காதல் கொண்டிருந்திருக்கீங்க அப்படினு ஓர் அபிப்பிராயத்தை நான் உருவாக்கிக்கிறேன். மூர்க்கத்தனமான காதல். ஒரு நடிகனைத் திருமணம் செய்யவுள்ளதாய் தான் ஜானே சொன்னதாய் என்னிடம் கூறுகிறார், சீமோன் - இது நினைவிருக்கட்டும்! இது உண்மைதான் என்றே வைத்துக் கொள்வோம் - ஆனா, என்ன காரணமோ, ஜானே மனதை மாத்திக்கறார். சீமோன் எட்ஜ்வேர் விவாகரத்துக்கு ஒப்புக் கொண்டு எழுதிய கடிதம் வந்திருக்கும்போது, வேறு யாரையோ மணந்துக் கொள்ளும் முடிவுக்கு ஜானே சென்று விடுகிறார். நீங்கள் கை கழுவப்படறீங்க! அந்தக் கடிதத்தை அப்படியே அபகரித்து மறைத்துவிட, உங்களுக்கு வலுவான காரணம் ஏற்படுகின்றது.''

''நான் அப்படி ஏதும் - - -''

பொய்ரெட் அவரைப் பேச விடவேயில்லை. ''இப்போ, என்னவெல்லாம் பேசத் தோணுதோ அப்படியெல்லாம் தான் பேசத் துடிப்பீங்க..! பொறுங்க... என்னைக் கவனியுங்க.''

''உங்க மனோநிலையும் சிந்தனையும் அப்போ எப்படியிருந்திருக்கும்? தடுக்கயியலா வஞ்சமும் பழி வாங்கும் வெறியும் தலை தூக்கி ஆட, ஜானேக்கு இயன்றவரை கடுமையான இக்கட்டினை அள்ளி வீசும் தாகம் மட்டும் கொண்டு அலைபாய்ந்திருக்கும் என்பது என் கணிப்பு. தூக்கு மேடை வரை கொண்டு செல்ல வசதியா அமைந்துவிடும் ஒரு கொலையை செய்தவர் என்ற குற்றத்தை அவர் மீது சுமத்துவதை விட பெரிய இக்கட்டினை உங்களால் அவருக்கு ஏற்படுத்த முடியாது, இல்லையா?''

''அடக் கடவுளே'' - சொன்னார் ஜேப்.

இப்படி பிரமித்துப் போய் சொன்ன ஜேப் பக்கமாய் திரும்பிய பொய்ரெட், ''இந்த சிறு அபிப்பிராயம் தான் முதலில் என் மூளைக்கு விளைந்து உருப்பெறத் தொடங்கிச்சு. பிறகு, பற்பல சம்பவங்கள், வளரும் இந்த அபிப்பிராயத்துக்கு வலு சேர்த்தன என்பதையும் கவனிக்கணும். கர்லோட்டா ஆடம்ஸுக்கு இரண்டு முக்கிய ஆண் நண்பர்கள் இருந்தனர் - மார்ஷ் மற்றும் மார்ட்டீன். எனில், மாபெரும் பணக்காரரான ப்ரையன் மார்ட்டீன் தான், ரீஜெண்ட் மாளிகைக்கு, மாறுவேடத்தில் போகச் சொல்லி கர்லோட்டா ஆடம்ஸைத் தூண்டியவர் என்றும், இதனை வெற்றிகரமா முடித்துக் காட்டினால், பத்தாயிரம் டாலர் எனும் பெருந் தொகையைத் தருவதாக ஆசை காட்டியிருப்பார் எனவும் எண்ணும் சாத்தியக் கூறுகள் மிகுகின்றன. மார்ஷ் பந்தயம் கட்டி பத்தாயிரம் டாலர் தருவதாய் சொல்லியிருந்தால், கர்லோட்டா சத்தியமாய் நம்பி இறங்கியிருக்க மாட்டார் என்பதுதான் ஆரம்பத்திலிருந்தே என் நிலை...! மார்ஷ் ஓர் ஓட்டாண்டி என்பது ஆடம்ஸ் அறிந்ததே! எனவே, மார்ட்டீன் தான், இந்தப் பந்தயக் கேள்விக்கான பொருத்தமான விடை...!''

''இல்லை... நான் இல்லை... மறுபடியும் சொல்றேன். நீங்க சொல்பவையெல்லாம் அதீத கற்பனை...!'' செய்வதறியாது பரிதவித்த மார்ட்டீனின் வாயிலிருந்து, வார்த்தைகள் ஆதரவு தேடி வந்து விழுந்தன.

''கர்லோட்டா ஆடம்ஸ் அவரது சகோதரிக்கு எழுதிய கடித சாராம்சம் வாஷிங்டனிலிருந்து நமக்கு வந்து சேர்ந்தபோது, ஓஹ்... என்னுள் இத்தனை தூரம் வழக்கினை வளர்த்து வந்திருந்த நான் குலைந்துப் போனேன். நான் போட்டிருந்ததாய் மேற்சொன்ன அத்தனை கணக்குகளும் தவறோ... எனும்படி ஆயிற்று. ஆனா, இந்த குழப்பம் நீண்ட நாட்கள் தொடரலே. பிறகு நான் இன்னொண்ணைக் கண்டறிந்தேன். கடிதப் பிரதி வேண்டாமென்றும், கடிதமே வேண்டுமென்றும் நான் கேட்டுக் கொண்டதன்படி, அசல் கடிதமே என்னை வந்தடைந்தது. அதில் ஆழ்ந்து ஆராய்ந்தபோது, அதில் ஒரு பக்கம் விடுபட்டிருப்பதை என்னால் காண முடிந்தது. ஆக, அதில் வரும் அவர், மார்ஷ் இல்லாமல் வேறு யாரோ ஒருவரைச் சுட்டுவது, புரிந்தது.

''இந்நிலையில் இன்னொரு சாட்சியம் - காப்டன் மார்ஷ் கைது செய்யப்பட்டபோது, குறிப்பிட்டுச் சொல்கிறார் ரீஜெண்ட்

மாளிகைக்குள், ப்ரையன் மார்ட்டீன், சம்பவ இரவன்று நுழைந்தார் - என்று...! கைது செய்யப்பட்ட ஒருவரிடமிருந்து இந்த வார்த்தைகள் வந்தபடியால், தான் தப்பிக்கத் தான் இப்படி அவர் இட்டுக் கட்டுகிறார்னு, அவ்வார்த்தைகளுக்கு எவ்வித கவனமும் காப்படவில்லை. மேலும், அந்த இரவில் ஊரிலேயே மார்ட்டீன் இல்லையென்றொரு செய்தியும் உலவியது! இச்செய்தி, கற்பனையாய் ஏற்பாடு செய்ததாகக் கூட இருக்கலாம் இல்லையா...! எனவே அதனை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று. திரு மார்ட்டீனே கொலை செய்திருக்கும் பட்சத்தில், நிச்சயம் ஊரிலில்லாதது போல ஓர் ஏற்பாட்டினை அவர் செய்துத் தானிருப்பார் என்பது இயற்கையே..! இதனை உறுதிப்படுத்த ஒருவரால்தான் முடியும் - அது செல்வி ட்ரைவர்.''

பல்லிடுக்கில் எதையோ நாக்கால் நிரடி எடுக்கும் பணியில் இருந்த ட்ரைவர், ''எது பற்றி?'' என்றார், துளியும் அசராது.

''பெரிசாய் ஏதுமில்லை, செல்வி'' என்றான் பொய்ரெட், சிரித்தபடி. ''நீங்கள் திரு மார்ட்டீனுடன் லஞ்ச் எடுத்துக் கொண்டிருப்பதை நான் பார்த்தேன். அங்கிருந்து எழுந்து, நீங்களாகவே முன் வந்து என்னை நெருங்கி, என்னிடம் அமர்ந்து, மிஸ் கர்லோட்டா ஆடம்ஸ், மார்ஷைத் தான் அதிகம் விரும்பினார்னு சொல்லி என்னை நம்ப வைக்க முயன்றீங்க. அப்பவே நெனைச்சேன்... கர்லோட்டா ஆடம்ஸுக்கு ப்ரையன் மார்ட்டீனை அதிகம் பிடிக்காதுனு நீங்க ளாகவே சொல்வீங்கனு என எதிர்பார்த்தேன் - அதுவும் நடந்தது!''

''நீங்க ஊகிப்பதுல துளியும் உண்மை கிடையாது'' - உரக்கச் சொன்னார், காதல் மன்னன்.

''இருக்கலாம், திரு மார்ட்டீன்..! மேற்சொன்ன விஷயங்களைத் தான் ட்ரைவர் என்னிடம் வந்து பேசினார் என்பதை நீங்க அறியாமலேயே கூட இருக்கலாம்'' என்று அமைதியாய் குறிப்பிட்ட பொய்ரெட் தொடர்ந்தான்: ''ஆனா அவர் சொன்னவை பொய்யல்ல. ஜேனின் மீது அவருக்குள் உண்டாகியிருக்கும் வெறுப்பினை, வேறெதையும் விட இது, உன்னதமாய் எடுத்துத்தான் கூறுகிறது. அந்த வெறுப்பு - உங்க சார்பில் பிரதிபலித்த வெறுப்பு - உங்க மன ஓட்டத்தை ட்ரைவரிடம் அழுந்தந்திருத்தமாய், உங்கள் நடிப்புத் திறமையைக் காட்டி பதிச்சிருப்பீங்க, உண்டா இல்லையா..! அந்த மூளைச் சலவையின் விளைவு..''

''ஆ.. ஆ.. ஆமாம், அதாவது.. என் மன பாரத்தை.. எங்காவது... யாரிடமாவது... இறக்கி..''

''... வைக்க உங்களுக்கு ஓர் ஆள் - கருணையாய் தோள் தந்து கேட்கும் ஓர் ஆள் - தேவைப்பட்டது. ஹாஸ்யமும் கருணையும் மிகுந்தவர் தான், ட்ரைவர் - இதை நானே உணர்ந்திருக்கேன். சரி - இதுக்குப் பிறகு என்ன நடக்குது தெரியுமா? ரொனால்ட் மார்ஷ் - இவர் கைது செய்யப்படறார். உடனடியா உங்களுடைய ஆத்ம ஊக்கம் கூடுது. கண்டுபிடித்து விடுவார்களோ என்று உங்களுக்குள் இருந்து வந்த பயத் தேடல் தீர்ந்துடுது. கடைசி நிமிடத்தில் சர் மொன்டாகு கார்னர் விருந்துக்குப் போவதாய் ஜானே எடுத்துக் கொண்ட முடிவினால் உங்களுடைய சதித் திட்டம் தவறிப் போய்ட்டாலும், வேறு யாரோ ஒருவர் பலிகடாவாகி, நீங்களாவே உங்களுக்குள் வளர்த்து கொண்டிருந்த பயப் படபடப்பிலிருந்து உங்களை விடுவிச்சுடறார். பிறகு, ஓர் அளவளாவல் கூட்டத்தில், அந்த அழகிய, ஆனால், மூளையற்ற அழகு இளைஞன் ராஸ், ஹேஸ்டிங்ஸிடம் என்னவோ பயந்துப் பயந்து சொல்வதைக் கேட்கிறீங்க. அது உங்களுக்குள் உறங்கிப் போயிருந்த பயப் படபடப்பினை மீண்டும் எழுப்பி, நீங்க இன்னும் முழுவதுமாக பாதுகாப்பு வளையத்துக்குள் போகவில்லை என்ற சந்தேகத்தினை வலுக்க வெக்குது.''

''அய்யய்யோ... இவற்றில் எதுவுமே மெய்யில்லையே..! ஏன் எல்லோரும் என்னை இப்படி சந்தேகக் கண்களோடு துளைக்கிறீங்க...? பொய்ரெட் சொல்லிட்டா எதுவும் உண்மையா...? திரு பொய்ரெட்... திஸ் ஈஸ் டூ மச்!'' - குதித்தார் மார்ட்டீன். பய வியர்வை அவர் முகமெங்கும் கசிந்து கொட்டியது. அவர் கண்கள் அச்சத் திகிலின் உச்சத்திலிருந்தன. ''நான் மீண்டும் மீண்டும் அடித்துச் சொல்றேன். நான் எதையும் கேட்கலே. எதையும் பார்க்கலே. எங்கும் போகலே. எதையும் செய்யவுமில்லே. ஓ, கடவுளே...!'' மலங்க மலங்க விழித்தபடி கண்களை இடமும் வலமும் ஆட்டி தயவு தேடிய மார்ட்டீனின் உதடு முதல் அடித் தொண்டை வரை, அரிசிப் புடைக்கும் முறம் போல் வறண்டு ஜீவனற்றுப் போயின.

இப்பொழுது, மார்ட்டீனின் நெஞ்சுடைந்துப் போன இந்தக் கதறலுக்குப் பிறகு, அக்காலையின் பெரும் ஆச்சரிய அதிர்வு எங்களை அடைந்தது.

''ஆம். நீங்க எதையும் பார்க்கலே - கேட்கலே - செய்யலே - என்பவை, சந்தேகத்துக்கிடமின்றி உண்மையே'' - பொய்ரெட்

அமைதியாய் சொன்னான். ''என்னிடம், ஹெர்குல் பொய்ரெட்டிடம் வந்து, பாட்டிக் கதை ஒன்றினை அவிழ்த்து விட்டுக் குழப்பியதற்கான சரியான தண்டனையை, வேண்டுமளவுக்கு அனுபவிச்சுட்டீங்கனு நினைக்கிறேன்...!'' என்றும் அமைதியாய் சொன்னான்.

இதைக் கேட்ட நாங்களெல்லோரும் மூச்சடைத்துப் போனோம். எனில் இத்தனை நேரம் பொய்ரெட் சொன்னவை அத்தனையும் தவறா...?!

பொய்ரெட் மட்டும், தொய்வின்றி தொடரலானான்: ''ஃபிரெண்ட்ஸ்...! இவ்வழக்கினை நான் அணுகியபோது எப்படியெல்லாம் வழுக்கி விழுந்து தவறு செய்தேன்னு உங்களுக்குக் காட்டிக்கிட்டிருக்கேன். இத்தனை நேரம் நான் விளக்கியது போல, தப்புத் தப்பாய் நான் முடிவெடுக்கும்படி என்னை வேண்டுமென்றே திசை திருப்பி விட்ட மார்ட்டீனுக்கு சிறப்பான ஒரு தண்டனையை அள்ளித் தந்தபடி, வழக்கு பற்றிய என் கணிப்பில் நிகழ்ந்துள்ள தவறுகளைக் காட்டிக்கிட்டிருக்கேன்'' என்று கண்ணடித்து எங்கள் குழப்பத்தை விளக்கிய துப்பறியும் நிபுணன் தொடர்ந்தான்:

''ஐந்து கேள்விகள் உள்ளன - எனக்கு நானே கேட்டுக் கொண்டவை. ஹேஸ்டிங்ஸுக்கு அவை தெரியும். அவற்றில் மூன்று பதில்கள் என் ஊகங்களுக்குள் பொருந்தி அழகாய் நின்றன. யார் அக்கடிதத்தை அமுக்கியது? சந்தேகத்துக்கிடமின்றி - ப்ரையன் மார்ட்டீன். அடுத்த கேள்வி: யார் சீமான் எட்ஜ்வேரை, திடுதிப்பென்று விவாகரத்துக்கு ஒப்புக் கொள்ளும்படி தூண்டியது? இதற்கு என்னிடம் ஊகம் ஒன்று இருந்தது. யாரையோ பார்த்து மயங்கி மூன்றாவது கலியாணத்திற்கு ஆசைப்பட்டிருக்க வேண்டும் - ஆனா, இதனைக் குறிப்பாய் காட்ட, உபயோகமாய் எந்தத் துப்பும் அகப்படலே; இல்லை, ஏதோ ஒரு வகையில, பயமுறுத்தல் வந்திருக்கணும் - ப்ளாக் - மெய்ல்! சீமான் எட்ஜ்வேர் விநோதமான விருப்பங்கள் கொண்டிருந்த வித்தியாசமான மனிதன். உடனடி விவாகரத்து அளிக்கப்படாத பட்சத்தில், அவருடைய சுய ரூபம் குறித்த உண்மைகள், பொது மக்களின் பார்வைக்கு கொண்டு செல்லப்படும் என்றும், அவருடைய பெயருக்குக் களங்கம் கற்பிக்கப்படும் என்றும், அவர் மனைவியால் அச்சுறுத்தல் வந்திருக்கும். அது தான் நடந்திருக்கும்னே நினைக்கிறேன். ஏற்கனவே முதல் மனைவி எங்கோ ஓடிப் போய் மடிந்து விட்ட நிலை. இப்போ, ரெண்டாவது மனைவி எது சொன்னாலும் ஊர்

கேட்கும். அவரோ, பசுத் தோல் போர்த்திய புலி வாழ்வை வாழ்பவர். எனவே, தன் பெயருக்கு வெளிப்படையான அவதூறு ஒன்று உருவாவதை அவர் விரும்பலே. விவாகரத்தைக் கொடுத்துவிட முடிவெடுக்கிறார். ஆனாலும், அப்படிக் கொடுக்க அவருக்கு சம்மதமே கிடையாது! இதனால் உருவாகும் வெறி, இவ்விவாகரத்து பற்றிப் பேசுவோர் நகர்ந்ததும், யாருமற்ற தனிமையில், அவர் முகம் எங்கும் வெடித்து, கொலை வெறி நர்த்தனமாடும் நிலைக்குத் தள்ளி, அவரை நிலையில்லாமல் தான் ஆக்குது. இந்த ஊகத்தை, ஒரு வித சந்தேக உந்துதலோடு அவர் சொன்ன 'அந்தக் கடிதத்திலிருந்து ஏதோ ஒரு சாராம்சத்தினால் அல்ல!' என்ற வார்த்தைகளும் - அதாவது, 'ஜானே விவாகரத்துக் கேட்டு எழுதிய கடித விஷயம் ஏதேனும் உங்களின் மனத்தினை மாற்றி விட்டதா' என்று நான் கேட்பதற்கு முன்னமேயே அவர் விழுந்தடித்துக் கொண்ட இவ்வார்த்தைகளும் - நிச்சயமாக்குகின்றன.

''இவை கடந்தும் இரண்டு கேள்விகள் விடை காணாது தொக்கி நின்றன. தேவையற்ற, கர்லோட்டா ஆடம்ஸ் கைப்பையில் கிடந்த, அவருக்கு சம்பந்தமில்லாத, ஒரு மூக்குக் கண்ணாடி. மேலும், சிஸ்விக்கில் விருந்தில் இருந்த திருமதி எட்ஜ்வேருக்கு, காரணமின்றி ஏன் ஒரு தொலைபேசி வந்தது? இவ்விரு கேள்விகளுக்குள்ளும், எவ்வழியிலும் என்னால் திரு மார்ட்டீனை பொருத்திப் பார்க்க முடியலே.

''மூளையைப் பிசைந்துக் கொண்டுப் போராடியும் விடை கிடைக்காத ஒரு நிலையில், ஒண்ணு, திரு மார்ட்டீனைப் பற்றிய என் கணிப்பு தவறு. அல்லது, இப்படி இரு கேள்விகளையே நான் கேட்டுக் கொண்டிருக்கக் கூடாது எனும் முடிவுக்குத் தள்ளப்பட்டேன். உதவிக் கரமே இல்லாத இந்தக் கட்டத்தில், செல்வி கர்லோட்டா ஆடம்ஸ் அவரது சகோதரிக்கு எழுதிய கடித அசலை, வெகு சிரத்தையோடு, மறுபடியும் படிச்சேன்.அப்போ - பொறி கிளம்பியது. ஆமாம், பொறி கிளம்பியது!

''நீங்களே இக்கடிதத்தைப் பாருங்க. அந்தத் துப்பு இங்குள்ளது... இதோ... கிழிந்த பக்கத்தின் உச்சியில்...! பக்கம் கிழிக்கப்பட்டுள்ளது தெரியுதா? அவசரத்தில் எப்போதும் நடப்பது போல், சீராக இல்லாமல்...! கிழிந்த இப்பக்கத்தின் ஆரம்பத்தில் மட்டும் ஒரு வாக்கியத்தை ஆங்கிலத்தில் எழுதியிருக்கார்...! இந்த ஒரே ஆங்கில

...யம் தான் என் கை விளக்கு! வழக்கின் உண்மையை வெளிச்சம் ...டுக் காட்டின சத்திய தேவதையின் கை விளக்கு! நண்பர்களே...! ...ிந்த இப்பக்கத்தின் துவக்கத்தில் உள்ள வார்த்தை - he அல்ல... she!... ...s மட்டும் கிழித்து எடுக்கப்பட்டிருப்பது தெரியுதா...! இப்போ ...வது போல, அது, he அல்ல... ஆனால், அது she...! ஒரு கணம் ...ந்து சிந்தித்து, கிழிந்த பக்கத்துக்குப் பிறகு இடம் பெறும் அனைத்து ...'களையும் அர்த்தப்படுத்த முயற்சி செய்யுங்க..!''

...ல நிமிடங்கள் நடந்தார். நாங்கள் ஒருவர் முகத்தை மற்றொருவர் ...த்துக் கொண்டு, விடையை முதலாவதாய் சொல்லிடக் கூடாதா என ...த்தோமே தவிர, ஹெர்குல் பொய்ரெட் எதைத் தான் ...பார்க்கிறான் என்பது விளங்காமல், கடைசியில் ஓய்ந்துப் ...னோம் என்பது தான் உண்மை.

''அந்த அவர் ஏன் ஓர் ஆணாகத்தான் இருக்கணும்னே நாம ...க்கைக் கையாளணும்...? ஒரு வேளை, அந்த 'அவர்', அதாவது ...ிந்த பக்கத்துக்குப் பிறகு இடம்பெறும் அவர், ஏன் ஒரு பெண்ணைக் ...க்கக் கூடாது...?!

''ஆஹ்..! அதுதான்... அதேதான்! கர்லோட்டா ஆடம்ஸ் கடைசி ...ங்களில் விவரிக்கும் 'அவர்' - ஒரு பெண்ணே தான்! கர்லோட்டா ...ஸுக்கு ஆள் மாறாட்ட வஞ்சக சவாலை விடுத்தது - ஒரு பெண்! ...ல் இருக்கும் s மட்டும் அறுபடும்படி கிழித்தெடுத்திருப்பதால் ...ன் ஹேஸ்டிங்ஸ், நான், இப்பக்கம் கிழிக்கப்பட்டிருக்க ...ண்டும்னு ஆணித்தரமாய் வாதாடினேன்...!

''உடனே, மிகக் கொஞ்சமான தொடர்பு கொண்டிருந்தாலும் ...யில்லை... இவ்வழக்கோடு தொடர்புடைய அத்தனை ...ங்களையும் பட்டியலிட்டேன். ஜானே வில்கின்ஸன் தவிர, மேலும் ...வர் அகப்பட்டனர் - கெரால்ட், கரோல், ஜென்னி ட்ரைவர் ஆகிய ...ன்று செல்விகள் மற்றும் மெர்ட்டான் மாகாணத்து விதவை ராணி.

''இந்த நால்வரில் என் கவனத்தைப் பூரணமாய் இழுத்தவர் செல்வி ...ரால். கரோல், கண்ணாடி அணிபவர் - அவர் மட்டும் தான் அன்றிரவு ...ளிகையில் இருந்திருக்கிறார் - ஜானே வில்கின்ஸனை வம்பில் ...ழுந்துப் போட வேண்டும் என்ற எண்ணத்தினால், அவர், தனது ...ியத்தில் பிழையாகவே நடந்துக்கிட்டிருக்கார் - மேலும், கொலை ...ன்ற பெரும் குற்றத்தை நிகழ்த்தத் தேவையான செமத்தியான ...மும் தைரியமும் நடுக்கமுமற்ற மனமும் கொண்ட பெண் அவர்!

சீமானைக் கொல்ல, அவரிடம் தெளிவற்ற இலக்கு தான் காணப்படுது. ஆனாலும், சீமானின் நெருக்கமான முதல் காரியதரிசியாக சில வருடங்கள் அவர் உழைத்திருக்கிறாரே; சீமானின் குணாதிசயத்தால் ஏதாவது பெரிதாய் வெடித்து, அது கொலை வரை கொண்டு போய் விட்டிருக்கலாம் - இது நாமறியாதது.

''இவ்வழக்கிலிருந்து கெரால்டை முழுவதுமாக தள்ளி வைப்பது சரியல்ல என்பதும் என் கருத்தாய் அமைந்தது. சிறுமி, அவள் தந்தையை வெறுத்தவள் - என்னிடமே அப்படி சொல்லியிருக்கா. என்ன செய்கிறோம் என்பதை அறியாமல் தடம்புரள வல்ல நரம்பதிர்வுப் பேர்வழி - எந்தக் கணத்திலும் தன் கட்டுப்பாட்டை முழுக்க இழக்கவல்ல பெண்! சம்பவ இரவன்று மாளிகைக்கு உள்ளே போன கெரால்டு, வெகு முன்னெச்சரிக்கையா தன் தந்தையைப் போட்டுத் தள்ளி விட்டு, பிறகு எதுவும் தெரியாதது போல் மாடிக்கு முத்துக்கள் எடுக்கப் போவதாய் வைத்துக் கொள்வோம். இதுவும் சாத்தியம்தான். கெரால்ட் அதீதமாய் விரும்பிய தனது அண்ணனை - அதாவது சீமான் மார்ஷ் - வெளியே டாக்ஸி அருகே இல்லாமல் வீட்டுக்குள் நுழைந்திருப்பதைப் பார்த்த கணத்தில், சிறுமிக்குள் விளைந்திட்ட தீவிர வேதனையையும் மனக் குடைச்சலையும் வைத்து சீர்தூக்கும் போது, அவரது அந்தத் திகில் நிறைந்த துணுக்குறலுக்குக் காரணம் கொலை போன்றதொரு தீவிரக் குற்றமேனு நான் குறிப்பிடுவது உங்களுக்கும் விளங்கும்.

''கலவரமடையும் அவளது குணாதிசயம், இதன் மூலம் சிறப்பாய் புரியும். அவரது சகோதரன் சீமான் மார்ஷ் நூலகத்துப் பகுதியிலிருந்து வந்துக் கொண்டிருந்ததாக, மிக பவ்யமாய் வெகுளித்தனமாய் சொல்கிறாள் சிறுமி - இது உண்மையா, அல்லது தப்பிக்க பயன் படுத்தும் கவசமா? இன்னுமொரு சிறு துப்பும் உள்ளது. கர்லோட்டா ஆடம்ஸின் பையிலிருந்து எடுக்கப்பட்ட சிறு தங்க முலாம் பூசப்பட்ட பெட்டியில் D எனும் ஒரு பெயரின் ஆரம்ப எழுத்து இருந்தது. கெரால்டை, அவரது சகோதரன் உறவு வரும் மார்ஷ், 'டைனா' என்று செல்லமாய் குறிப்பிடுவதை நான் கேள்விப்பட்டிருக்கேன். கடந்த நவம்பரில் சிறுமி பாரீஸில் தங்கி படித்துக் கொண்டிருந்தாள் - அங்கு, அப்போ, கர்லோட்டா ஆடம்ஸை, இவள் சந்தித்திருக்கும் வாய்ப்புக்கும் பஞ்சமில்லை.

''இப்பட்டியலில், விதவை ராணியையும் சேர்த்திருப்பது சரியே என நீங்களெல்லோரும் நினைக்கலாம். அவர் என்னைச் சந்திக்க

யந்திருந்தார். அப்போ அவருக்கிருந்த 'மகன் அபிமானம்' என்னை ஆட்டிப் பார்த்தது! தனது வாழ்க்கையின் அச்சாணியாக, தனது வாழ்க்கையின் அர்த்தமாக, அவர் தனது மகனை எண்ணி வாழ்ந்துக் கொண்டிருப்பது, மாபெரும் பிரமிப்பு! சீமானை விட, ஏதாவது தந்திர சூழ்ச்சி திட்டம் தீட்டி, தனது மகனின் வாழ்க்கையையே நாசமாக்க வல்லவளாக அவர் கருதிய ஜானே வில்கின்ஸனை அழிக்கத்தான் அவர் முனைந்திருப்பார் என்பதுதான் நிஜம் - ஆகவே, ராணி, சுலபமாக என் பட்டியலிலிருந்து அகன்று விடுகிறார்.

''பிறகு - பட்டியலில் மிஞ்சுபவர், ஜென்னி ட்ரைவர்...''

ஜென்னியைப் பார்த்தபடி சற்றே பேசுவதை நிறுத்தினான் பொய்ரெட். ஒரு பக்கமாய் தன் தலையைச் சாய்த்தபடி, துளியும் பாதிப்பின்றி பொய்ரெட்டை மறு பார்வை பார்த்தார், ட்ரைவர். அசந்துப் போனேன் நான். இப்பொழுது மட்டுமல்ல... தொடர்ந்து ஜென்னி ட்ரைவரை, பொய்ரெட் குற்றவாளியாக்கிப் பேசிய போதெல்லாம் கூட, தொப்பிக் கடைக்காரி அதிர வேண்டுமே - ம்ம்!

''ம்... என் மீது சொல்ல என்ன வெச்சிருக்கீங்க...?'' - ட்ரைவர் கேட்டார்.

''இருக்கு. நீங்க ப்ரையன் மார்ட்டீனின் தோழி - மற்றும் உங்கள் பெயரும் D என்பதில் தான் துவங்குது.''

''இத்தகவலால் ஒன்றும் ஒப்பேறாது, திருமிகு பொய்ரெட்!'' - நமுட்டுச் சிரிப்பு சிரித்தபடி பேசினார் ட்ரைவர்.

''இவை தவிரவும் ஒன்றுள்ளது, செல்வி! உங்களுக்கு, திட்டமிடும் மிகச் சிறப்பான மூளையும், எந்தக் குற்றத்தையும் நடுக்கமின்றி மதிய உணவு சாப்பிடுவது போல செய்து முடிக்கவல்ல மன உறுதியும் உள்ளன. இவ்வழக்கில் சம்பந்தப்பட்டுள்ள ஓர் ஆணுக்குக் கூட உங்கள் துணிச்சல் கிடையாது!''

ட்ரைவர் ஒரு சிகரெட்டைத் தன் வாயில் பொருத்திப் பற்ற வைத்துக் கொண்டார். ''தொடருங்க, இந்தக் கதை கேட்க ருசிகரமாயுள்ளது''என்றார் ஆர்வமாய்.

''திரு மார்ட்டீன் சம்பவ இரவன்று ஊரில் இல்லை என்றாரே - அது உண்மையா, பொய்யா? இதனை நான் முடிவு செய்துக் கொள்ள வேண்டிய கட்டம் வந்தது. கதாநாயக நடிகர் ஊரில் இல்லை என்பது உண்மையாகும் பட்சத்தில், மாளிகைக்குள் நுழைவதாய் ரொனால்ட் மார்ஷ் பார்த்தது யாரை? இந்தக் கேள்விக்குள் நுழைந்து, நான் இவ்வழக்கோடு சந்தித்த நிகழ்வுகளையெல்லாம் மீட்டிப்

பார்க்கும்போது, எனக்கு ஒண்ணு ஞாபகத்துக்கு வந்தது. ஆணழகனாய் திகழ்ந்த ரீஜெண்ட் மாளிகையின் பட்லர், வார்ப்பெடுத்தாற் போல் அப்படியே மார்ட்டீனை உரித்து வைத்திருந்தது ஞாபகத்துக்கு வந்தது. எனில், பட்லரைத் தான், மார்ஷ் மாளிகைக்குள் நுழைவதாய் பார்த்திருக்கார். இதன் அடிப்படையில் எனக்குள் பின்வருமாறு ஒரு கோட்பாடு - தியரி - உருவானது. பட்லர் தான் முதன் முதலில் தனது எஜமானன் கொலையாகிக் கிடப்பதைப் பார்க்கிறான். அவருக் கருகிலேயே நூறு பவுண்டுகள் மதிப்புமிக்க பிரெஞ்சு பண நோட்டுக்கள் அடங்கிய உறை ஒன்றும் உடனே அவன் கண்களுக்குப் படுது. பணம் - நூறு பவுண்டுகள்... அந்தப் பணத்தை எடுத்துக்கிட்டு, மாளிகையை விட்டு நழுவி, அப்பணத்தை பட்லருடைய ஒப்பேறாத ஒரு நண்பனிடம் பாதுகாப்பாய் வைத்துக் கொள்ளும்படி கொடுத்துவிட்டு, சீமானின் சாவியையே உபயோகப்படுத்தி, ஓசைப்படாது மீண்டும் உள்ளே நுழைந்து விடுகிறான். கொலையை மறுநாள், அறை கூட்டும் பெண்மணி பார்த்து அறிவிக்கட்டும்னு விட்டு விடுகிறான். ஜானே வில்கின்ஸன் தான் கொலையை செய்தவர் என்ற எண்ணத்தாலும், கிடந்த பவுண்டு நோட்டுக்கள் விடியுமுன் சில்லறையாக மாற்றப்பட்டிருக்கும் ஆதலால் அது காணாமல் போனதை யாரும் கண்டுபிடிக்க முடியாது எனும் எண்ணத்தாலும், தனக்கு இனி ஆபத்தேயில்லை என முடிவு கட்டிக்கிறான். எனினும், ஜானே வில்கின்ஸன் அன்றிரவு அங்கு வரலே என்ற செய்தி பரவ, அதனை ஸ்காட்லாண்ட் போலீஸ் முக்கியத்துவம் கொடுத்து துருவ ஆரம்பிக்க, தனக்கு ஆபத்து வந்து விடலாம் என்ற தேவையற்ற சந்தேகத்தின் வலுவால், தலைமறைவாகிடறான்.''

ஜேப் மிகச் சரி என தலையசைத்துக் காட்டினார்.

''அப்பொழுதும், அந்த மூக்குக் கண்ணாடி குறித்த கேள்விகள் என்னுள் தீர்க்கப்படாமல், முழித்துக் கொண்டு நின்றன. ஒருவேளை அதன் சொந்தக்காரி செல்வி கரோலாயிருந்தால், எவ்வித சிரமுமின்றி வழக்கு முடிந்து விடும். கரோல் தான் கடிதத்தை அமுக்கியிருப்பார் - மாலையில் கர்லோட்டா ஆடம்ஸை சந்தித்து மாறுவேட திட்டத்தைப் பற்றிப் பேசும்போது, பிசகாக கண்ணாடி இடம் மாறி கர்லோட்டா ஆடம்ஸின் பைக்குள் சென்றிருக்கணும்.

''ஆனா மூக்குக் கண்ணாடிக்கும் கர்லோட்டா ஆடம்ஸுக்கும் எவ்விதத் தொடர்புமின்றிப் போயிற்று. இது, ஒரு முடிவறியாது முட்டி நிற்கும் மூலையாய் போயிற்று. இவ்வழக்கு முடியவே முடியாதா என்று

மனமுடைந்து ஹேஸ்டிங்ஸோடு நடந்து வந்துக்கிட்டிருந்தேன். அப்போதுதான் அந்தஅதிசயம் அரங்கேறியது. அதிசயம்தான் அது - உண்மையை நாடிய என் மன உளைச்சல் கண்டு இறைவனே நடத்திக் காட்டிய அதிசயம்.

''நடந்து வந்துக் கொண்டிருக்கும் போது ஹேஸ்டிங்ஸ் புத்திசாலித் [illegible], வழக்கு குறித்த சமாச்சாரங்களை, அழகாய் ஒரு வரிசைப்படுத்திப் பேசிக்கிட்டிருந்தான். சிஸ்விக் விருந்தில், அங்கு வந்திருந்த பதின்மூன்று பேரில் ராஸும் ஒருத்தன் என்றும், அவன் தான் முதல்ல முடித்து எழுந்தது என்றும் சொன்னதாய் நினைவு கூர்ந்தான். இதிலெல்லாம் கவனம் செலுத்தாதவாறு, என்னுள் ரயில் பெட்டிகள் போல வரிசையாக சிந்தனையின் தாக்கம் நீண்டுக் கொண்டேயிருந்தது. அப்போ, ஒருவேளை அவளது காதலர் யாராவது [illegible]ந்திருப்பாரோ என்று அசட்டு சிந்தனை எனக்கு வந்தது. [illegible]ந்திருக்கலாம். ஆனா அந்தக் காதலருக்கு ஜானே இங்கிருப்பது எப்படி தெரியும் - போன்ற கேள்விகள் எழலாம். எப்படியிருந்தாலும் யாரந்தக் காதலனாயிருக்கும் என்ற கேள்வி என்னுள் வலுத்தபோது, [illegible]யான் மார்ட்டீனுக்கு, ஜானே குறித்து உள்ள உணர்வுகள் பற்றி அறிய ஓர் எண்ணம் ஒளிர்ந்தது. யாரைப் போய் கேட்பது? ஜானேயையே கேட்டிருக்கலாம் - ஆனா உண்மை வராதே! அப்போதுதான், எங்களைக் கடந்து சென்றுக் கொண்டிருந்த ஒரு பாதசாரி, அவர் பார்த்து திரும்பிக் கொண்டிருந்த ஒரு திரைப்படம் பற்றி, தன் தோழியிடம் விவரித்துக் கொண்டிருந்தான் இப்படி: 'எல்லீஸைக் கேட்டிருக்கணும்...!'

''இதுதான் எனக்கு கிடைத்திட்ட தெய்வ வாக்கு. எல்லீஸை வரச் சொன்னேன். அவளுடனான விசாரணையில் இருண்ட அறையில் நடந்த என் அனைத்து சந்தேகங்களுக்கும் ஒளி கூட்டப்பட, எல்லாம் வெளிச்சத்துக்கு வந்து வரிசையாய் விழுந்தன. மூக்குக் கண்ணாடி, தொலைபேசி அழைப்பு, பாரீஸிலிருந்து அந்த சிறு தங்கப் பெட்டியை கடவிந்த பெண், எல்லாம்...! ஒவ்வொன்றும் விளங்கின - மெழுகு வர்த்திகள், ஒளியற்ற விளக்குகள் - திருமதி வேன் ஸ்டெல்லா, எல்லாமும்...! ஆம், இப்போ, எல்லாம் எனக்குத் தெரியும்...!''

மெழுகு வர்த்திகளா... அது யார் திருமதி ஸ்டெல்லா... ஒளியற்ற விளக்குகளின் அறிமுகம் புதிதாய் இப்பொழுது ஏன்... வழக்கு விசாரணை நாட்கள் நடக்கும்போது இருந்த துடிப்பை விட, இப்போது பொய்ரெட்டிடமிருந்து உதிர்ந்த இப்புதுப்புது வார்த்தைகள், துடிதுடிப்பை அதிகமாகவே தந்தன...!

அத்தியாயம் - 30

# முடி கதை

போய்ரெட் எங்களனைவரையும் ஒரு சுற்று வட்டமாய்ப் பார்த்தான்.

''மை டியர் ஃப்ரண்ட்ஸ்... இனி குழப்பமிருக்காது'' - மென்மையான தனது குரலை மேலும் மென்மையாக்கிப் பேசி, அதன் மூலம் இருந்த அனைவரையும் இன்னும் நெருக்கமான நண்பர்களாக்கிக் கொண்ட பொய்ரெட், ''அந்த இரவில் என்னதான் நடந்துள்ளது என்பதன் உண்மையை - சத்தியத்தை - இதோ, உங்களுக்குக் காட்டறேன்'' எனத் துவங்கினான்.

''கர்லோட்டா ஆடம்ஸ் சம்பவ இரவன்று ஏழு மணிக்கு தனது குடியிருப்பை விட்டுக் கிளம்பறார். அங்கிருந்து ஒரு வாடகை டாக்ஸியை அமர்த்திக்கிட்டு, ஐந்து நட்சத்திர ஓட்டலான லில்லி மாளிகைக்கு நேரா போறார்.''

''என்ன பொய்ரெட்...?'' - நான் ஆச்சரியத்தின் உச்சத்திலிருந்து கண்ணகலக் கதறினேன்...!

''பொறு, பொறு! பல ஆச்சரியங்கள் இருக்கு. ஒவ்வொண்ணுக்கும் இப்படி இடைமறிச்சா கதையின் சுவை குன்றிடும், இனிய நண்பா...! லில்லி மாளிகைக்குப் போறார். அன்று மதியமே திருமதி வேன் ஸ்டெல்லா எனும் பெயரில் அங்கு ஓர் அறையை எடுத்துடறார். பெரிய அளவிலான ஒரு மூக்குக் கண்ணாடியை அணிந்து தான், அவர் லில்லி மாளிகையில் அறிமுகமாகிறார்; அப்படிப்பட்ட முக அகல மூக்குக் கண்ணாடி, ஒருவரின் தோற்றத்தை மாற்றவல்லது என்பதைக் கவனிக்க. நான் சொன்னபடி அங்கு ஓர் அறையை பதிவு செய்துக் கொள்ளும்போது, இரவு ரயிலில் பக்கத்திலிருக்கும் லிவர்-பூல் மாகாணத்துக்கு செல்வதாயும், தன்னுடைய பெட்டி படுக்கைகள்

எல்லாம் ஏற்கனவே ரயிலடிக்கு சென்று விட்டதாயும் பொருத்தமான ஒரு கதையை, அறைக்கான முன்பணத்தோடு சேர்த்துக் கட்டி விடுகிறார்...! இரவு எட்டரைக்கு அங்கு வரும் நிஜ ஜானே வில்கின்ஸன், திருமதி ஸ்டெல்லாவின் அறையைக் கேட்கிறார்...! பணியாள் மூலமாக ஸ்டெல்லா அறை வரை திருமதி ஜானே கொண்டு ...ாய் சேர்க்கப்படுகிறார். அங்குதான் அவர்கள் உடையலங்காரங்களை மாற்றிக் கொள்கின்றனர். பளபளக்கும் வெள்ளி முலாம் பூசிய பொய் கூந்தல், வெண்ணிற உடை மற்றும் மேலங்கி என மாறும் கர்லோட்டா ...ம்ஸ், அங்கிருந்து கிளம்பி, ஜானே வில்கின்ஸனாக சிஸ்விக்கில் ...பெறும் சர் மொன்டாகு கார்னர் விருந்துக்கு செல்கிறார். ஜானே வில்கின்ஸன் விருந்துக்குப் போகலே. ஆமாம், ஆமாம். சந்தேகமாய் ...நருக்கொருத்தர் பார்த்துக்க வேணாம். இது நிச்சயம் சாத்தியம் - ...ந்திருப்பதும் இதுவே..! விருந்து நடைபெற்ற இல்லத்திற்கு, நான் ...று சாயங்காலம் சென்றிருந்தேன். அங்கிருக்கும் பெரிய சாப்பாட்டு ...றை பல மெழுகுவர்த்திகளால் தான் ஒளியூட்டப்படுகின்றது. சில ...க்குகள் தான் உள்ளன - அவையும் மிக ஒளி குன்றியே ...க்கப்பட்டுள்ளன. விருந்துக்கு வந்திருந்த யாருக்கும், ஜானே வில்கின்ஸனோடு நெருக்கமான பழக்கமெல்லாம் ஒண்ணும் ... யாது. அங்கிருந்த கர்லோட்டாவிடம், ஜானேயின் வெள்ளிக் கூந்தல் இருக்கு - கொஞ்சிக் கிறங்கடிக்கும் கவர்ச்சி குரல் இருக்கு - ...போன்ற நடை - உடை - பாவனை இருக்கு - எல்லாவற்றுக்கும் ...ாக, இருட்டு இருக்கு...! பிறகு யாரால் வித்தியாசம் காண ...யும்..! ஒருவேளை இத்திட்டம் பொய்த்திருந்தால் - யாராவது ...பொய்யை உணர்ந்து அறிவித்திருந்தால் - வேண்டாமே; இப்படி ...தற்கே வாய்ப்பில்லை..! லில்லியில், நிஜ ஜானே வில்கின்ஸன், ... பொய் கூந்தலை அணிஞ்சுக்கிட்டு, கர்லோட்டா உடுத்தியிருந்த ...களையும் அந்தப் பெரிய கண்ணாடியையும் போட்டுக்கிட்டு ...யறி, கொடுக்க வேண்டிய அறை வாடகையையெல்லாம் ...த்து முடிச்சுட்டுக் கிளம்பறார். தனது கைப்பெட்டியோடு, ...கக் காரினை அமர்த்திக் கொள்ளும் ஜானே வில்கின்ஸன், ... ஆஸ்டன் வந்தடைகிறார். அங்கு, கழிவறையில், தனது கறுப்பு ... கூந்தலை அகற்றி விட்டு, கைப் பெட்டியை நிலையத்தின் ...த்தில் ஒப்படைக்கிறார். அங்கிருந்து புறப்பட்டு ரீஜெண்ட் ...கைக்குப் போகுமுன், சிஸ்விக்'குக்கு தொலைபேசி செஞ்சு,

இணைப்பு கிடைத்ததும் திருமதி எட்ஜ்வேருடன் பேசணும் என்கிறார். இது, அவர்களிருவருக்குள்ளும் செய்துக் கொள்ளப்பட்ட சிறு ஏற்பாடு. எல்லாம் சுமூகமாக சென்றுக் கொண்டு, கர்லோட்டா அடையாளம் காணப்படாத பட்சத்தில், அங்கிருந்து அவர், ''ஆமாம் சரிதான்'' என்று பதில் தர வேண்டும்! ஆனா இப்படி வரும் ஜானேயின் தொலைபேசி அழைப்பின் பின்னால் ஒளிந்திருக்கும் அத்தனை விபரீதமும், பாவப்பட்ட கர்லோட்டாவுக்கு துளியும் தெரிந்திருக்க வாய்ப்பில்லைனு நான் சொல்லித்தான் நீங்க தெரிஞ்சுக்கணுமா..! இவ்வார்த்தைகளைக் கேட்டதும், தனது திட்டத்தில் முன்னேறுகிறார், ஜானே. ரீஜெண்ட் மாளிகைக்குச் சென்று, சீமான் எட்ஜ்வேரைப் பார்க்கணும்னு சொல்லி, எதிர்படும் பட்லரிடமும் தான் யாரென்று அதிகாரமாய் காட்டிக்கொண்டு, நூலகத்துக்குள் நுழைகிறார். *அங்கு தனது முதல் கொலையை செய்து முடிக்கிறார்.* இங்கு அவருக்கு ஏற்படும் முதல் சறுக்கு: மாடியிலிருந்து இவர் உள்ளே வந்து நுழைவதைக் காரியதரிசி கரோல் முதல் தளத்திலிருந்து பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனியாதது...!

''இங்கிருந்து உடனே புறப்பட்டு ஆஸ்டன் ரயிலடி வரும் ஜானே, தனது வெள்ளிக் கூந்தலிலிருந்து மீண்டும் கறுப்புப் பொய்க் கூந்தலுக்கு மாறிக் கொண்டு, கறுப்பு உடையலங்காரத்தைப் பூணுகிறார். கைப் பெட்டியை எடுத்துக்கிட்டு கிளம்பறார். சிஸ்விக்கிலிருந்து கர்லோட்டா ஆடம்ஸ் திரும்பும் வரை நேரம் கழித்தாகணும். ஒருவரை ஒருவர் மறுபடியும் சந்தித்துக் கொள்வதாயும், அதுவரை, யார் முதல்ல வருகிறார்களோ அவங்க எப்படியாவது நேரத்தைக் கழித்துத்தான் ஆக வேண்டும் என்றும், திட்டமிடும் போதே பேசி வெச்சுக்கிறாங்க. அப்போதுதான், லையன்ஸ் கார்னர் இல்ல விடுதியில் போய் ஜானே காத்திருக்கிறார். அவ்வப்போது தனது கைக்கடியாரத்தைப் பார்த்துக் கொண்டு நேரம் ஓடாதானு சற்றே தவிக்கிறார். அங்கு தான் தனது இரண்டாவது கொலைக்கு வேண்டிய அத்தனையையும் தயார் செய்கிறார்! தனது கையோடே கொண்டு வந்திருந்த கர்லோட்டா ஆடம்ஸ் கைப்பையில், பாரீஸிலிருந்து அவசர அவசரமாக ஜானே தருவித்திருந்த தங்க முலாம் பூசப்பட்ட பையினைத் திணிக்கிறார். அப்படி, கர்லோட்டாவின் கைப்பையைத் திறந்து, தங்க முலாம் பூசப்பட்ட பையினை வைக்கும்போது தான், *அந்தக் கடிதத்தை,* ஜானே பார்த்திருப்பார். அது யாருக்கு அனுப்பப்படுகிறது என்று

மேலோட்டமாகப் பார்க்கும் ஜானே, பெறுநர் முகவரியைக் காணும் மாத்திரத்தில், ஆபத்து இருக்குமோ என முகர்கிறார். எனவே, கடிதத்தைத் திறக்கிறார் - அவரது சந்தேகம், சந்தேகத்துக்கிடமின்றி ஊர்ஜிதமாயிடுது.

''நடுக்கம்...! இந்த பய வெறியில், முதல் வேலையாய், கடிதத்தைக் கிழித்துத் தூர எறியத் தான் முனைந்திருப்பார். ஆனா, உடனேயே அப்படிப்பதை விட சிறந்த மற்றொரு வழியை, அவரது குரூர மூளை அடையாளம் கண்டுடுது. அதிலிருந்து ஒரே ஒரு பக்கத்தை மட்டும் கிழித்தெடுத்து விடுவதன் மூலம், கடிதம் சேதாரமின்றி தொடர்வதோடு மட்டுமல்லாது, பழியை விமரிசையாக மார்ஷின் மீது - அதாவது, சைமன் எட்ஜ்வேரின் மீது விரோதம் கொண்டு கொலைக்கான சக்தி வாய்ந்த இலக்கு உள்ள ஒருவரின் மீது - போடுகின்றது..! ஒருவேளை மார்ஷ், சம்பவ இரவன்று இங்கில்லாமல் வேறெங்காவது இருந்திருந்தாலும் கூட, கடிதத்தின் S-ஐக் கிழித்தெடுக்கும் பட்சத்தில், அவரை நிச்சயம் தூக்கு மேடைக்கு அனுப்பி வைக்கும் சிறப்பான சாட்சியாய் தான் கடிதம் விளங்கியிருக்கும். எனவே - இதனை செய்து முடிக்கிறார். பிறகு கடிதத்தை அதன் உறையில் மீண்டும் வைக்கிறார்; உறையை ஆடம்ஸின் கைப்பைக்குள் வைக்கிறார்.

''இதில், கிழிக்கப்பட்ட பக்கம் மட்டும் ஒரே தாளின் இரு பக்கங்களாய் அமையாது, மற்ற பக்கங்களைப் போலவே தனித் தனியாய் அமைந்திருந்தால், கிழிக்க வேண்டி நேர்ந்திருக்காது. நாமும் வழக்கினை முடித்திருக்க முடியாது..!

''கிளம்ப வேண்டிய நேரம் வந்ததும் சவாய் உணவகம் நோக்கி பயணித்து, சவாயை அடைந்து, முதல் தளத்திலிருக்கும் தனது அறையுள் நுழைகிறார். ஒருவரது கவனத்தையும் கவரயியலாத கறுப்புடை அலங்காரத்தில் தானிருக்கிறார் ஜானே. ஒளி கம்மியான விளக்கொளியில் சவாய். எனவே, யாரும் அவரை அடையாளம் கண்டிருப்பர் என்பது அநேகமாக இயலாத காரியம்.

''கர்லோட்டாவும், இருவரும் சொல்லி வைத்துக் கொண்டிருந்த அதே நேரத்தில் தான் ஜானேயின் அறைக்கு வரார். ஜானேயும், அப்போதுதான் தானும் உள்ளே நுழைவதாய்க் காட்டிக் கொள்வதால், ஆடம்ஸுக்கு எவ்வித சந்தேகமும் தட்டுப்படாமல் போயிடுது. வேலைக்காரியின் துணை தேவையில்லாதபோது, தனக்காக அவளைக் காத்திருக்க வைக்கும் பழக்கம் ஜானேவுக்குக் கிடையாது. ஆகவே,

*அவள் முன்னிரவிலேயே தூங்கச் சென்று விடுகிறாள். தத்தம் உடைகளை மாற்றிக் கொண்டு, மாறுவேடமற்று நிஜ மனுஷிகளாய் ஆகிடறாங்க. இப்போது தான், ஜானே, வெற்றியைக் கொண்டாட, கொஞ்சம் குடிக்கலாம்னு முன் மொழிந்திருக்க வேண்டும் என்பது என் கணிப்பு. அந்தக் கோப்பையில் கலக்கப்படுகின்றது - வெரோனல். தனது திட்டத்திற்கு இரையாகப் பயன்பட்டுள்ள ஆடம்ஸுக்கு வாழ்த்துக்களைத் தெரிவிக்கும் ஜானே வில்கின்ஸன், மறுநாள் காலை, தாமதமின்றி, ஒப்புக் கொண்ட தொகையான பத்தாயிரம் பவுண்டுக் குண்டான காசோலை, ஆடம்ஸ் வீட்டு வாசலில் வந்திறங்கும் என்கிறார். வெற்றிக் களிப்பில் கர்லோட்டா ஆடம்ஸ் தனது குடியிருப்புப் பகுதிக்குப் போறார். மிகக் களைப்பு மற்றும் கட்டுப்படுத்தயியலாத தூக்கம் அவரை அசத்துது. இருந்தாலும் தனது நெருக்கமான நண்பர் யாருக்கோ தொலைபேசி செய்ய நினைக்கிறார். அபரிமித வெற்றி என வந்துவிட்டால் யாரிடமாவது சொல்லத்தானே மனம் நினைக்கும்..! திரு மார்ட்டீன் அல்லது திரு மார்ஷ்..! இருவருக்கும் விக்டோரியா பிரதேச எண்கள் தான் உள்ளன. ஆனா, அவரால ஸ்மரணையுடன் இயங்க முடியாம போயுடுது. வெரோனலின் வேலை! தூங்கப் போகிறார் - பிறகு அவர் எழுந்திருக்கவே இல்லை.*

''இரண்டாவது மரணம் பிழையின்றி நிறைவேற்றப்பட்டது.

''இப்போ மூன்றாவது கொலைக்கு வருவோம். திருமதி விட்பர்ன் அளித்த அளவளாவலில், அங்கு வந்திருந்த சர் மொன்டாகு கார்னர், சம்பவ இரவன்று, ஜானே வில்கின்ஸனாக சிஸ்விக் போயிருந்த கர்லோட்டா ஆடம்ஸிடம், பாரீஸ் நகர மற்றும் கிரேக்க நாகரீக வளர்ச்சி பற்றிப் பேசியதன் சாரமாக, பாரீஸ் எந்த அளவுக்கு பழமையிலிருந்து புதுமைக்கு வளர்ந்துள்ளது எனும் அர்த்தத்தில், 'முதலும் கடைசியுமான தீர்ப்பு - பாரீஸின் உச்ச நீதிமன்ற தீர்ப்பு' என்பதை ஜானேவுக்காக, குறும்பாக குறிப்பிடறார். சர் மொன்டாகு கார்னர், ஒரு கலை ப்ரியர். கலை பற்றி உணர்ந்து பேச ஓர் ஆள் கிடைச்சுட்டா போதும்... விட மாட்டார்..! அவருக்கு, அன்றிரவு பேசிக் கொண்டிருந்த கிரேக்க நாகரீக வளர்ச்சி குறித்து மீண்டும் ஜானேயிடம் தொடர்ந்து பேச ஆசை! எனவே, சிஸ்விக் விருந்து நடந்த இரவு சம்பாஷணையைக் குறிப்பாய் சொல்லிக் காட்டி, மீண்டும், தொடர்ந்து அது குறித்து, 'ஜானேயிடம்' நீண்டதொரு உரையாடல் நிகழ்த்த ஆசைப்படுகிறார். இதெல்லாம் அறியாத நிஜ ஜானே, பாரீஸ் மட்டும் தானா தீர்ப்பு வழங்க முடியும் என்ற ரீதியில், அடிமட்ட, சமயோஜிதமற்ற, சொல்லப்

போனால் முட்டாள்தனமான ஒரு குறிப்பைக் காற்றில் விடுகிறார். இப்படிச் சொல்லிவிட்டு, தனது சாப்பாட்டு வேலையை அவர் தொடர்ந்திருக்க வேண்டுமென நான் நினைக்கிறேன்.''

நான் மிகச் சரி என தலையசைத்தேன்- நடந்ததை எத்தனை சுத்தமாய் கணிக்கிறான் என்கிற பிரமிப்பில்!

''ஆனா, அளவளாவலில் இப்படிச் செய்யும் ஜானே வில்கின்ஸனின் எதிரில், சிஸ்விக் விருந்திலும் இடம் பெற்றிருந்த கட்டிளங்காளை ராஸ் அமர்ந்திருக்கிறார். அந்த சிஸ்விக் இரவில், கிரேக்க வளர்ச்சி குறித்த புள்ளி விவரங்களை அடுக்கி அடுக்கிப் பேசிய புத்திசாலி ஜானேவா இப்படி அடி முட்டாளா பேசறதுனு நுணுக்குறுகிறார், ராஸ் - அதிர்கிறார் என்பது கூட சரி தான்..! சார்லோட்டா, தேர்ச்சி பெற்ற, பற்பல கற்ற பெண் - ஆனா ஜானே அப்படியல்லவே! ராஸுக்குப் புரியலே. விழிக்கிறார். குழம்புகிறார். நீதிமன்றத் தீர்ப்பு என்று சொன்னதை, நேரான அர்த்தத்தில் சர் மொன்டாகு கார்னர் சொல்லலையே... ஹாஸ்யம் கலந்து, பாரீஸின் நாகரீக வளர்ச்சி குறித்து மீண்டும் நெடு நேரம் உரையாடத் துடிக்கும் ஆசையில் அல்லவா குறிப்பிட்டார்... என நிஜ விஷயமறிந்த ராஸ் புருவங்கள் முடிச்சிட முழிக்கிறார்! கிறுக்குத்தனமாய் பேசி விட்டு சாப்பிட்டுக் கொண்டிருக்கும் ஜானேயையே வெறிக்கிறார். மின்னலென உண்மை அகப்பட்டு விடுகின்றது. *இது, அந்தப் பெண் அல்ல.* சொல்லொணா துயர் கொள்கிறார். பயம், கவ்வுது. நிலைதடுமாறுகிறார். தான் இப்படி நினைப்பது சரியா என்பதில் கூட அவருக்கு சந்தேகம் வந்துடுது. குழப்பம் விலக அவருக்கு யாராவது ஆலோசனை தர வேண்டும். அதற்கு என்னை நினைக்கிறார். நான் எங்கே என ஹேஸ்டிங்ஸிடம் பேசுகிறார்.

''ராஸின் துரதிர்ஷ்டம் இப்போது விளையாடுது. ஜானே, ராஸ் பேசுவதை ஒட்டுக் கேட்டுடறார். இது போன்ற விஷயங்களில் அவர் புத்திசாலி - துரிதமானவர். தானே வீணாக வலை விரித்து அகப்பட்டுக் கொண்டு விட்டதை மோப்பம் பிடிச்சுடறார். ஹேஸ்டிங்ஸ், நான் ஐந்து மணி வரை வீட்டில் இருக்க மாட்டேன்னு தரும் தகவலையும் அந்தக் கொலைகார காதுகள் கேட்கின்றன. நாலரை மணி கடந்து, ராஸின் பகுதிக்குச் செல்கிறார் ஜானே வில்கின்ஸன்.''

நாங்கள் எல்லோரும் வார்ப்பெடுத்த சிலையாய் அசையாது, பொய்ரெட் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தோம். எல்லோர்

முகங்களிலும், எப்படிப்பட்ட ஒரு பெண்ணுடன் பழகி வந்திருக்கிறோம் என பயப் பீதி படர்ந்துக் கிடந்தது.

''கதவைத் திறக்கிறார் ராஸ். பிரபல நடிகையை சந்திப்பதில் அவருக்கு ஆச்சரியம் - ஆனா, வர வேண்டியது ஆச்சரியமல்ல, பயம் என்று அவருக்குப் புலப்படலே..! உடலெங்கும் இளமை புடைத்து நிற்கும் தனிமை ஆண் மகனுக்கு, கவர்ச்சியாய் ஒரு பெண் தனித்து வந்து கிறங்கப் பேசினால் பயமா வரும்..! தனது வனப்பைப் பயன்படுத்தத் துவங்கறார், ஜானே வில்கின்ஸன். இருவரும், சாப்பாட்டு மேஜைக்குச் செல்கின்றனர். ராஸை மடக்கிப் போட என்றே தன் கையோடு கொண்டு வந்திருந்த ஒரு கதையை அவிழ்த்து விடுகிறார், ஜானே; உரையாடல் வளர வளர, தனது உடைகளைக் கூட அவர் அவிழ்த்திருக்கலாம். கவர்ச்சிப் புயலுக்கு சொல்லியா தரணும்...! தனது கவர்ச்சிக் குரலின் பங்களிப்பில், இளம் வாலிபனை நெருங்கி, அணைத்து, மயக்கி, அவன் கழுத்தைக் காதல் கொள்வது போல் எண்ண வைத்து அணைத்து, இறுக்கி - - - கபால இடத்தை நிச்சயப் படுத்திக் கொண்டு, சீமானிடம் காட்டிய அதே திறமையை, நொடியின் பின்ன நேரத்தில், ராஸிடமும் முடித்து ஓய்கிறார். வலி தாங்காது ஒரு கதறு கதறியிருக்கலாம், விடலைக் கூட மாறாத இளைஞன். ஆனால் குத்தின் துல்லியம், நொடிப் பொழுதிலன்றோ உயிர் பிடுங்கி யிருக்கும்...! பிறகெங்கே தொடர்ச்சியாய் கத்துவது..! அவரும் அடக்கப்படுகிறார்...!''

அறை முழுவதும் அமைதி - மயான அமைதி. இந்த அமைதியை ஜேப் தான் கலைத்தார். அவரால் கூட, ரகசியமான குரலில் தான் பேச திராணி இருந்தது: ''எனில், ஜானே தான் அதுனு சொல்ல வரீங்களா, திருமிகு பொய்ரெட்?''

பொய்ரெட் மிக பவ்யமாக தலை வளைத்து ஒப்புதலைத் தெரிவித்தான்.

''எதுக்காக? சீமான் விவாகரத்துக்கு உடனடியாக தயாராயிருக்கும் போது, இதெல்லாம் ஏன், திருமிகு பொய்ரெட்?''

''ஆங்கில கத்தோலிக்க மதம் மற்றும் அதன் கொள்கைகளை, ஆணித்தரமாய் கடைப்பிடிக்கும் அசைக்கயியலா தூண் - மெர்ட்டான் மாகாணத்து இளவரசர்..! விவாகரத்து கிடைத்தாலும் கூட, கணவன் உயிரோடு இருக்கும் ஒரு பெண்ணை மணக்க அவர் மதமும், அவர் மனமும் இடம் தரவே தராது..! தன் மதத்தின் மீது வெறி கொண்ட

(இ)ளைஞன் அவர். ஜானே வில்கின்ஸன் ஒரு விதவையாகி விடும் ...த்தில், தங்கு தடையின்றி தன் மனம் கவர்ந்தவளை மறுக்காமல் ...ப்பார் இளைய பிரபு - இப்படிப்பட்ட சீர்திருத்தத்தையும் அதிகம் ...ரும்பும் மதம், அவர் மதம்..! ஆரம்பத்தில், இளைய பிரபுவுக்கு, ...வாகரத்து எனும் ஆசை காட்டித் தான் பார்த்திருப்பார் இந்த ஜானே - ...னால் இளைய பிரபு ஸ்திரமாய் மறுத்திருப்பார்.''

''பிறகு உங்களை எதற்காக சீமான் எட்ஜ்வேரைப் போய் பார்த்துப் ...கும்படி அந்த அளவுக்கு வற்புறுத்தியிருக்க வேண்டும்?''

''என் கண்களைக் கட்டி விடத்தான்!'' - இத்தனை நேரமாக நட்புறவு (இ)ல்லாது, ஒரு துப்பறியும் நிபுணராக, அதிகார தோரணையோடு பேசி ...ந்த பொய்ரெட், இப்போது, தனது இயல்பான இனிய நிலைக்குத் ...ரும்பி விட்டிருந்தான். ''ஜானேயிடம் கொலைக்கான இலக்கு ...யவே கிடையாது என என்னையே ஒரு சாட்சியாக மாற்றத்தான்..! ...ப்பா பெண்ணா அவள்..! ஆமாம், என்னை, ஹெர்குல் ...ய்ரெட்டையே, அவள் பகடைக் காயாக ஆக்கியிருக்கிறாள் - ...ந்தப் பகடை விளையாட்டில் வென்றுமிருக்கிறாள்! குழந்தை ...ன்ற விகல்பமற்ற போர்வைக்குள் - ஓ, கடவுளே எப்படியாப்பட்ட ...ற்றவாளி..! அவர் நடிகைதான். அவரது அனைத்து நடிப்புப் ...களிப்புகளுக்கும் சிகரமாய் நிற்பது - அந்தக் கடிதம் குறித்த ...டிப்புத்தான். விவாகரத்துக்குத் தயார் என்று சீமான் எட்ஜ்வேர் எழுதிய ...டிதத்தை வாங்கித் தொடைக்கு அடியில் போட்டுக் கொண்டு விட்டு, ...ப்படி ஒரு கடிதமே வரலைனு எத்தனை உண்மையாய் கடைசி வரை ...டித்தே விட்டார்! மூன்று உயிர்களைக் காட்டேறியாய் குடித்துள் ...ரே... இதற்கு, சிறிதாவது பச்சாதாபம் காட்டியிருப்பாரா...! நிச்சயம் ...டையாது.''

இப்போது, ''ஜானே இப்படிப்பட்ட கொடுமையானவள்னு தான், நான் ஆரம்பத்திலேயே சொன்னேனே, திருமிகு பொய்ரெட்...! ...டுத் தொலைத்திருக்கக் கூடாதா...! இத்தனை உயிர்கள் பலி ...ங்கப்பட்டிருக்காதே'' என துடித்தார் மார்ட்டீன். ''நான் ...ன்னேனே...! தலை தலையாய் அடிச்சுக்கிட்டேனே..! என்னிடம் ...த்தனை பேசியிருக்கிறாள் ஜானே. அதை வைத்து கிரகிச்சுட்டேன் - ...யம் சீமானைக் கொல்லாம விட மாட்டாள்னு சரியா மோப்பம் ...டிச்சு வெச்சிருந்தேன். அவ புத்திசாலி - அதாவது, கொடூர புத்திசாலி. ...லி. அவளுக்கு தண்டனை கிடைத்தே ஆகணும். எத்தனை

அழகானவர் ஆடம்ஸ்! ஆண்களையே வசியம் போட்டு இழுக்கும் ராஸ்! ஓ, கடவுளே...! அவளைத் தூக்கில் ஏற்றாமல் ஓயக் கூடாது, திரு பொய்ரெட்.''

அவர் முகம் சிவந்துக் கிடந்தது. முடிவான தீர்ப்பாய் அவரிடமிருந்து வார்த்தைகள் வந்து விழுந்தன.

''அடங்கு அடங்கு'' என்று, இந்தத் தருணத்தில் கூட முகத்தில் புன்சிரிப்பு குறையாது மார்ட்டினை நோக்கி முன்வந்தார், குண்டு ஜென்னி ட்ரைவர்.

''அந்தத் தங்க முலாம் பூசப்பட்ட பெட்டி, திருமிகு பொய்ரெட்?'' - கேட்டார் ஜேப். ''அதிலிருந்த D, பாரீஸ், நவம்பர்..?''

''அப்படி அலங்கரிக்கப்பட்ட ஒன்று உடனடியாய் வேண்டுமென பதிவு செய்தது, ஜானேதான். ஆனா அது பாரிஸிலிருந்து தயாரிக்கப்பட்டு வந்ததும், அதை வாங்கி வரும்படி, எல்லீஸ் எனும் அவரது பணியாளை அனுப்புகிறார். முதலாளியம்மாவின் கட்டளையை ஏற்று அதற்குண்டான பணத்தைத் தந்து பொருளை வாங்கி வந்து விடுகிறார் எல்லீஸ். உள்ளேயிருப்பது என்ன என்றெல்லாம் அந்த வேலைக்காரப் பெண்ணுக்குத் தெரியாது - தெரிய வாய்ப்பும் கிடையாது. மேலும், எல்லீஸிடமிருந்து, அவரது மூக்குக் கண்ணாடியை, ஒரு நாள் இரவுக்கு மட்டும் வாங்கிக் கொள்கிறார் ஜானே - மாறுவேடத்தில் அது ஏதாவது உதவக் கூடும் என்ற எண்ணத்தில்...! ஒரு கட்டத்தில் அதனை கர்லோட்டா ஆடம்ஸின் கைப்பைக்குள் போட்டு வைக்கும் ஜானே, அதன் தேவை எழாததால், அதனை மறந்தே விடுகிறார் - அவர் செய்த தவறு... ஒரே தவறு!

''தங்க முலாம் பூசிய பெட்டி சம்பந்தமான இவையனைத்தும் அகலமான நெடுஞ்சாலையைக் கடக்கும்போது சர்சர் என்று எனக்குள் ஒளிர் விட, அப்படியே ஸ்தம்பித்து நட்டநடுத் தெருவில் நின்றே விட்டேன்! படிப்படியா பின்வரும் யோசனைகள் என்னுள் ஒளிர்ந்ததால், நான் என் நிலை மறந்த நேரமது! மூக்குக் கண்ணாடி - இது அணியும் கரோலுக்கு வழக்கோடு சம்பந்தம் கிடையாது - அடுத்து, அணிபவர் பட்டியலில் மிஞ்சும் எல்லீஸ் - எல்லீஸ் - எல்லீஸின் மூக்குக் கண்ணாடி - மூக்குக் கண்ணாடி அணிந்தவர் தான் பெட்டியைப் பெறுகிறார், எனில், அது எல்லீஸ் - எல்லீஸ். எனில், உடனே தொடர்புடையவர் ஜானே வில்கின்ஸன் - இவையெல்லாம் வந்து அருவியாய் கொட்டுகின்றன. மூக்குக் கண்ணாடியைத் தரும்போது, அது சக்தி வாய்ந்த கிட்டப் பார்வை கண்ணாடி என்பதை எல்லீஸும்

ருந்திருக்கணும் - வாங்கியதும் போட்டுப் பார்க்காததால், ஜானே ருக்கும், அது, தான் அணிந்துக் கொள்ள உகந்தது அல்ல என்பது அறிந்திருக்காது. இரவில் வீட்டிலிருப்பதால் தனக்கு எதற்கு கண்ணாடி என விட்டேற்றியாக எல்லீஸ் விட்டிருப்பார். இது சாத்தியமே. என் நண்பர்கள் பலர், இரவில் இளைப்பாறும் போது தங்களது கண்ணாடி களை அவிழ்த்து வைத்து விடுவதை நானே பார்த்திருக்கிறேன்..! கண்ணாடியை வாங்கிக் கொள்ளும் போது, கூடுதலாக மூன்றொன்றையும் அவர் கடனாக பெற்றிருப்பார். இரவில் தனியாக வரும் போது பாதுகாப்பாயிருக்கட்டும் என்று - ஒரு சிறு காய்கறி நறுக்கும் கூரான கத்தி.''

நான் நடுங்கிப் போனேன்.

அறையில் மீண்டும் அமைதி - மயான அமைதி.

பொய்ரெட்டின் கூற்றுகள் அனைத்திலும் நம்பிக்கை மிகுந்தவராய், ஆனாலும் பின்வருமாறு கேட்டார் ஜேப்: ''திருமிகு பொய்ரெட்! இவையெல்லாம் - உண்மைதானா?''

''உண்மையே, இனிய ஜேப்!''

''செல்வி கரோல் - செல்வி எல்லீஸ் - மற்றும் உங்கள் கையிலுள்ள மூக்குக் கண்ணாடி - என எல்லாமும் ஒரே மாதிரியாகவே அமைந்து விட்டது, ஓர் அனுகூலம்.''

''அனுகூலமெல்லாம் இல்லை, திரு. ஜேப். சொல்லப் போனா, இதுபோன்ற, எவ்விதமான அனுகூலமுமில்லாத, சிக்கலான ஒரு கொலை வழக்கினை நான் இதுவரையும் சரி... இனியும் சரி... எதிர் கொள்ளப் போவதில்லை. இரு செல்விகளும் இளசுகள். புத்தம் புது மூக்குக் கண்ணாடி வகையான இதனையே விரும்பி வாங்கி அணிந்துள்ளனர். அதிக கவர்ச்சியையும் இளமையையும் முகத்திற்கு தரும் இது, சந்தையில், ஒரு வெற்றி பெற்ற மூக்குக் கண்ணாடி வகை. அவ்வளவே. அதே மாதிரியான மூக்குக் கண்ணாடி சட்டத்தில், அதே சக்தி நிறைந்த கண்ணாடிகளை நான் செய்துக் கொண்டேன் - புரிபடறிவதற்காக!''

சிறு பெருமூச்சினை வெளியிட்ட பொய்ரெட், ''கடைசியாக - அந்த ...'' என்றான். ''நம்மைக் குழப்பி ஸ்தம்பிக்க வைக்கவென்றே பிரயோகப்படுத்தப்பட்டுள்ள அட்சரம்.''

''ஓர் அட்சரத்தை வைத்துக் கொண்டு நாம் ஸ்தம்பித்து விடுவோமா என்ன?'' என சந்தேகம் மேலோங்கக் கேட்டார் ஜேப்.

''நின்றோமா இல்லையா...? பிறகென்ன கேள்வி'' என்றேன் நான். எவ்வளவு சீரிய பணியை முடித்து விட்டு, ஒரு துப்பறியும் சிகரமாய் எங்கள் முன்னால் என் இனிய பொய்ரெட் நின்றுக் கொண்டிருக்கிறான்... வெண்ணெய் போல இப்படி ஒரு கேள்வியைக் கேட்கும் ஜேப்பை அடித்து விடலாமா என்று கூட எனக்குள் வெறி ஏறியது! நாளை, ஊர் முழுக்க, பொய்ரெட் சொன்ன அத்தனையையும் தானே முடித்தது போல தம்பட்டம் கொட்டும் போது மட்டும், பொய்ரெட்டின் முடிவுகள் இனிக்கும் போல..!

பொய்ரெட் பார்வையால் என்னை அடக்கி விட்டு, ''சாலையின் நடுவே என்னையறியாது நின்னுட்டேன். வந்த அதிவேக வாகனங்கள் என்னை முட்டி மோதிக் கொன்றா விட்டன...?! எவன்டா இவன், பாதையை மறைப்பதுனு ஸ்தம்பித்துத் தானே போனாங்க..?! புரியாத ஒன்றில் மனம் ஸ்தம்பித்து நின்று விடுவது, மனித உளவியல், இனிய ஜேப்! இதைத் தான் திருமதி ஜானே வில்கின்ஸன் எட்ஜ்வேர் (பெயரைக் கிண்டல் கலந்த மரியாதையாய் சொன்னான், பொய்ரெட்) தனக்கு சாதகமாக பயன்படுத்திக் கொண்டுள்ளார்'' என்று விளக்கினான்.

இப்போது, தனது அழகு சொரூபத்துக்கு சற்றும் பொருந்தாத அழகற்ற ஆத்திரக் குரலில், ''என்னை என்னை கவனியுங்க, திரு பொய்ரெட்'' என எகிறலாக அழைத்தார் ப்ரையன் மார்ட்டீன். ''எனக்கு என்ன பதில் சொல்லப் போகிறீர்கள்? என்னை ஏன் மூச்சு நின்று மடிந்துப் போகும் அளவுக்கு பயமுறுத்தினீங்க?''

பொய்ரெட் அவரை அளக்கும் பாவனையில் பார்த்தார். ''உங்களை தண்டிக்க, திரு மார்ட்டீன்! என்னை அவமதித்து அதிகப்பிரசங்கித் தனமாய் நீங்க நடந்துக் கொண்டதற்கான தண்டனை அது! எத்தனை தைரியமிருந்தா, உங்க கற்பனைக் கதைகளை, ஸ்காட்லாண்ட் போலீஸே அணுக அஞ்சும் ஒரு முதல் தர துப்பறியும் நிபுணரிடம் ஹெர்குல் பொய்ரெட்டிடம் காட்டி, விளையாடியிருப்பீங்க..?'' பொய்ரெட்டின் குரல், கண்டிப்பில் இருந்தது.

மார்ட்டீன் பதில் பேசவில்லை.

''காரணமின்றி நீங்கள் என்னை திசை திருப்ப முயன்றது, சட்ட விரோதம், திரு மார்ட்டீன்!''

நடிகனின் முகம் வெளிறியது.

இதைக் கவனித்த ஜென்னி ட்ரைவர் சற்றே அடக்க முடியாமல் தான் முதலில் சிரிக்க ஆரம்பித்தார். பிறகு அவரோடு வரிசையாக நாங்களும்

(மு)ணைந்துக் கொள்ள, அறையே சிரிப்பொலி கொள்ளாது நிறைந்து வழிந்தது.

''வேண்டும் ப்ரையன் உனக்கு..! முகத்தைப் பார்... ஐயய்யோ பாவம்!'' - ட்ரைவரின் இத்தகைய கிண்டலைத் தாளாது, மார்ட்டீனும் மங்களின் சிரிப்பில் பங்கெடுத்துக் கொள்ளும்படி ஆயிற்று!

இப்பொழுது பொய்ரெட் பக்கம் நிதானித்துக் கொண்டு திரும்பிய ட்ரைவர், ''கர்லோட்டா ஆடம்ஸின் வெகுளித்தனமான மரணத்தின் காரணகர்த்தா தண்டிக்கப்படுவதில் நான் மிக மகிழ்கிறேன். ப்ரையன் இங்கு இருப்பதால், இப்பொழுதே ஒரு விஷயத்தை உங்களிடம் சொல்லப் பிரியப்படறேன், திருமிகு பொய்ரெட். நான் இவரை மணக்கவுள்ளேன். ஹாலிவுட் பாணியில், இரண்டாண்டுக்கு ஒரு முறை விவாகரத்து செய்து புதுப்புது பெண்ணாய் இவர் மணப்பதா யிருந்தாலும் எனக்கு ஆட்சேபணையில்லை... இப்போதைக்கு... நான் இவரை விரும்பறேன்... எப்போதும் விரும்புவேன்...!'' என்றார்.

தைரியமான, முடிவான, மாற்றமற்ற பெண்ணின் ஸ்திரமான முகத்தை ரசித்துப் பொய்ரெட் பார்த்துக் கொண்டேயிருக்க, என் முடிவும் இதுவே என்பதை, செல்வி ட்ரைவரின் கைகளை இறுக்கமாய் பிடிப்பதில், சொற்கள் இன்றி விளக்கிக் கொண்டிருந்தார், மார்ட்டீன்.

''.அப்படி ஏதும் நடக்காது, இனிய மிஸ் ட்ரைவர். மார்ட்டீன், பல பெண்களை நாடுபவர் அல்ல என்பதை, சீமான் எட்ஜ்வேர் குறித்த ஆராய்த் துலக்கலின் போது நான் அறியப் பெற்றேன். அப்படி ஏதாவது நடந்தாலும் பாதகமில்லை - தோளில் விழுந்த தூசியாய் அதைத் தட்டி விட்டு மேற்கொண்டு பயணிக்கும் மரபணுக்கள் கொண்டவர் நீங்கள்...! உங்களது வற்றாத சுறுசுறுப்பு, நான் என்றும் தலைவணங்கும் விசேஷமாக குணாதிசயம்!''

அத்தியாயம் - 31

# ஒரு மனித சாசனம்

பிறகு ஜானே வில்கின்ஸனை நான் சந்திக்க முடியாமலே ஆயிற்று. அவர் குறித்த செய்திகளையும், விசாரணை உரையாடல்களையும், குற்றம் எவ்வித சந்தேகங்களுக்கும் இடம் தராது ஊர்ஜிதமாகி விட்டதையும், ஜானே வில்கின்ஸனுக்கு தூக்கு தண்டனை தீர்ப்பானதையும், தினந்தோறும் விடிந்ததும் செய்தித் தாள்களில் படித்து அறிந்துக் கொண்டிருந்தேன். உண்மை பரிபூரணமாய் விளக்கப்பட்டு, ஜானே வில்கின்ஸன் நோக்கி நீதியின் விரல்கள் நீண்டு நிலைத்ததும் சுக்கு நூறாய் நொறுங்கிப் போயிருக்கிறார், நடிகை. தனது புத்திசாலித்தனம் குறித்து அவர் மிகுந்த தற்பெருமை கொண்டிருந்த வரையிலும் - அவரது அத்தனை திட்டங்களும் தவறேயின்றி நிறைவேறி, அவர் பக்கம் துளியும் சந்தேகப் பார்வைகள் விழாத வரையிலும் - மார் நிமிர்த்தி வளைய வந்துக் கொண்டிருந்த ஜானேயின் தன்னம்பிக்கை, யாரோ ஒருவர் அவரின் குற்றங்களனைத்தையும் கண்டுபிடித்து விட்டார் என்று அறிய நேர்ந்ததும் தோற்றுப் போய், அவரை பூகம்பம் கண்ட நாடாய் நொறுக்கித் தள்ளி விட்டது. எந்தக் கள்ளங்கபடத்தையும் உள்ளடக்கி வைக்கும் சாத்தியமற்ற குழந்தை, தான் ஏமாற்றப்பட்டுத் தோற்று விட்டதும் அழுவதைப் போல, அலற ஆரம்பித்து விட்டார். அதிலும், குறுக்கு விசாரணை வலுத்தெழுந்து அவரை பயமுறுத்தும் போது, மயக்கம் கொள்ளுமளவுக்கு தவிடு பொடியாகியிருக்கிறார்.

ஆக, அளவளாவல் விருந்து தான் அவரை நான் கடைசியாகப் பார்த்த தருணமாய் ஆனது. ஆனால், இத்தனை குறிப்புகள் அவரைப் பற்றி சில நாட்களாக பொது மக்களை அடைந்த வண்ணமிருந்தாலும், என்னைப் பொறுத்தவரை, ஜானே வில்கின்ஸன் என்பவர், சவாய் உணவகத்தில் கண்ணாடி முன்னால் நின்றுக் கொண்டு தன்

*...யலங்காரம் நன்றாய் அமைந்துள்ளதா என்று முகத்தை மிக ...டாய் வைத்து இடவலமாய் ஆடியாடி பார்த்துக் கொண்ட, அதே ...ரிஷமற்ற பெண்மணி தான்..! அது - நடிப்பு அல்ல. அதுதான் அவர். ...ந்தை - வளர்ந்த குழந்தை.*

*...அவரிட்ட அத்தனை திட்டங்களும் - மூன்று திட்டங்களும் - வெற்றி ...டந்தன. எனவே அவரிடம் எந்தத் தடுமாற்றமும் இல்லை; ...ப்பமும் இல்லை. இப்படி மூன்று கொலைகளை செய்து ...டோமே என்று கண நேரம் கூட அவர் பச்சாதாபமோ பரிதாபமோ ...ந்தவரல்லர். குழந்தை நம்மைப் பல் பதிய, பதிந்த இடத்தில் ...ம் வர கடிக்கிறது - பரிதாபப்படுகிறதா... இல்லையே!*

*...ருமதி ஜானே வில்கின்ஸன் எட்ஜ்வேர் - மனதால், ஒரு குழந்தை. ...னது மரணத்துக்குப் பிறகு பொய்ரெட்டுக்கு உடனடியாய் ...பிக்க வேண்டும் என்று அவர் எழுதி அனுப்பியிருந்த கடிதம்... ...அல்ல... மனித சாசனம்... அதனை அப்படியே இங்கே உள்ளபடி ...றேன். இதுதான், அந்த, மிக மிக இனிமையான ஆனால் ...தாபிமானமற்ற பெண்ணின் அடையாளம் - முகவரி!*

அன்பான திரு பொய்ரெட்,

நடந்த எல்லாவற்றையும் துளி விடாமல் அசை போட்டுக் கொண்டிருக்கிறேன். இப்படி மீட்டிப் பார்க்கும்போது, அவற்றையெல்லாம் உங்களுக்கு எழுதி தெரியப்படுத்தி விடுவது தான் சரி என தோன்றியது. சமயம் கிடைக்கும்போது, உங்களை மிகவும் அலைக்கழித்த அல்லது பாதித்த வழக்குகளை நீங்கள் அச்சேற்றுவதாய் நானறிகிறேன். இருந்தாலும் சம்பந்தப்பட்ட குற்றவாளியே சாசனம் எழுதித் தர, அதை நீங்கள் உங்கள் பதிப்பில் இடம்பெறச் செய்திருக்கவே மாட்டீர்கள் என்றே நான் நினைக்கிறேன். ஒவ்வொன்றையும் நான் எப்படி நடத்தி முடித்தேன் என்பதனை உள்ளது உள்ளபடி அப்படியே அனைவரும் அறிய வேண்டும் என்றே நான் உணர்கிறேன். நான் அகப்பட்டு எல்லாம் முடிந்திருக்கலாம் - ஆனாலும், ஒவ்வொரு நகர்த்தலும் மிக அற்புதமாய் திட்டமிட்டுத் தான் நிறைவேற்றப்பட்டுள்ளன என்றே நான் இன்னமும்

கருதுகிறேன். நீங்கள் மட்டும் இக் கதைகளில் நுழையாமலிருந்திருந்தால், என் அத்தனை திட்ட மிடலும் சுமுகமாக முடிந்து தொலைந்திருக்கும் - ஆனால் நீங்கள் நுழைய, நானே ரத்தினக் கம்பள வழி வகுத்து விட்டேன். இதனால் உங்கள் மீது எனக்கு கடுமையான கடுப்பு உள்ளது - இல்லாமலிருக்குமா...! இக்கடிதத்தை உங்களுக்கு நான் எழுதி அனுப்புவதால், நீங்கள் நிச்சயம் இதற்கு முக்கிய விளம்பரம் தருவீர்கள் என எனக்குத் தெரியும். செய்யத் தான் போகிறீர்கள் - இல்லையா? செய்யுங்கள். நான் நினைவுக் கொள்ளப்பட வேண்டும். யாரைப் போலவும் இல்லாத, என்னைப் போல் மட்டுமே உள்ள, தன்னிகரற்ற தனித்துவம் வாய்ந்த பெண்மணி நான் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை எனக்கு உண்டு. ம்...! (பெருமையாய் பெருமூச்சு!) என்னைச் சுற்றியிருந்த அத்தனைக் கூட்டமும் கூட இப்படித்தான் நம்பியிருந்தன என்பது, அவர்கள் ஒவ்வொருவராய் என்னிடம் - என் அணுகுமுறையிடம் சிக்கி - மண்டை யைப் போட்டதிலிருந்தே தெரியும்..! ஹாஹ்ஹாஹ்ஹா...!

இத்தனை அத்தியாயங்கள் வளர்ந்து முடிந்துள்ள இக்கதை ஆரம்பமானது, அமெரிக்காவில், நான் மொர்ட்டான் இளைய பிரபுவை முதன் முதலில் பார்த்த ஒரு தினத்தில்! அன்று, அவருடைய நடத்தை யிலிருந்து, நான் விதவையானாலே ஒழிய அவர் என்னை மணந்துக் கொள்ள மாட்டார் என்பதை அழுத்தந் திருத்தமாய் அறிந்துக் கொண்டு விட்டேன். அவருக் கிருந்த இப்படிப்பட்ட (மூட)நம்பிக்கையை அகற்றப் பாடுபட்டேன். ஆனால் உபயோகமில்லாமல் போயிற்று. மத நம்பிக்கைகளில் உடும்பாய் அவர் விளங்குவது புரிந்ததால், இவ்விஷயத்தை ஜாக்கிரதையாகத்தான் கையாள வேண்டும் என உணர்ந்தேன்.

சில நாட்களுக்குள்ளாகவே, மொர்ட்டான் இளைய பிரபுவைக் கைப்பிடிக்க வேண்டுமாயின் என் கணவர் வேறு வழியின்றி செத்துத் தான் தீர வேண்டும் என்று

முடிவாய் புரிந்துக் கொண்ட நான், ஆனால், இதனை எப்படி அடைவது என புரியாமல், உதவும் ஒரு வாய்ப்புக்காக, ஒவ்வொரு நொடியும் கண்களையும் காதுகளையும் திறந்து வைத்துக் கொண்டுக் காத்திருந்தேன். அமெரிக்க நாடாயிருந்தால், எனக்குத் தேவைப்படும் சீமானின் கொலையையெல்லாம், அடியாட்களிடம் காசை வாரி வீசி, நாம் காபி கலந்து குடித்து முடிப்பதற்குள் நிறைவேற்றியாயிற்று என செய்தி வரும்படி முடித்து விடலாம். ஆனால், கொலை நிரூபணமாகி விட்டால் எந்த முறையீடுமற்ற தூக்கு தான் தண்டனை என்ற நமது இங்கிலாந்து சட்டதிட்டத்தில், போலீஸ் கெடுபிடியும் நூற்றியொரு சதம் வலுவா யிருக்கும் இங்கு அதெல்லாம் எங்கிருந்து சாத்தியம்...! எனவே யோசித்தேன், யோசித்தேன், மேலும் யோசித் தேன் - என் அவசரத்துக்கு வழி தான் கிடைக்கவில்லை. அப்போதுதான், கர்லோட்டா ஆடம்ஸ், என்னை அப்படியே நகலெடுத்து மேடையில் நடித்துக் காட்டிய விகடகவி நிகழ்ச்சியைக் கண்டேன். ரசித்தேன், வானமே கையில் கிட்டி விட்டதென கருதி ரசித்தேன். ஹேஸ்டிங்ஸ் கூட, நான் ஏதோ கர்லோட்டாவின் திறமையைக் கண்டு பிரமிப்பதாய் தான் நினைத்ததாய்ச் சொன்னார் - அல்ல அல்ல - எனக்கு மின்னல் வெட்டினாற் போல், சீமானைக் கொன்று போட ஒரு வழி கிடைத்து விட்டதை எண்ணியெண்ணித்தான் அப்படி சிரித்தேன்! அக்கணமே திட்டமிடல் துவங்கியது!

அதிர்ஷ்டக் காற்று வீசத் துவங்கிய வசந்த நேரமது.

கர்லோட்டாவின் துணையால், நானில்லாத எந்த இடத்திலும், நானிருந்ததைப் போன்ற மாயையை சிருஷ்டித்துக் கொள்ளலாம் என்பது தான் கரு. அன்று மாலையே உங்களையும் நான் சந்திக்க நேர்ந்தது. அப்போது, உங்களை என் கணவரிடம் அனுப்பி என்னுடைய விவாகரத்து குறித்துப் பேசச் சொல்வது உதவிகரமாயிருக்கும் என்று ஒரு பொறி என்னுள் உடனடியாய் கிளம்பியது. அதே நேரத்தில், நான் என்

கணவனைக் கொன்று போடக் கூட தயங்க மாட்டேன் என, சும்மா, விட்டேற்றித் தனமாய், கொஞ்சம் ஹாஸ்யம் கலந்து பேசி விட வேண்டும் என்றும் முடிவாயிருந்தேன். ஏனென்றால், விளையாட்டாய் ஒருவர் குறிப்பிடும் குற்றம், எப்பொழுதுமே வினையாய் கொள்ளப்படு வதில்லை என்பது என் பொது அனுபவம். பல சமயங்களில் எனக்கிது சொந்த அனுபவமாயும் அமைந்துள்ளது! மேலும், நாம் முட்டாளாய் இல்லாத பட்சத்திலும், முட்டாள் போலவே அனைவரிடமும் நடந்து வருவது கூட ஒரு கவசம் தானே!

கர்லோட்டாவுடனான என்னுடைய இரண்டாவது சந்திப்பில் இந்த சமாச்சாரத்தைத் திறந்தேன். இந்த திட்டம் வெறும் பந்தயம் தானேயன்றி வேறில்லை என நான் சொன்னதுக்கு மறுப்பேதுமின்றி அக்கணமே விழுந்து விட்டார் அந்த விகடகவி! பலர் கூடியிருக்கும் ஏதாவது ஒரு விருந்தில் 'நானாக' அவர் போய் வர வேண்டும் - விருந்து முழுவதும் யாரும் அடையாளம் காணாத பட்சத்தில், அவருக்கு நான் தரும் பரிசுத் தொகை பத்தாயிரம் டாலராக இருக்கும் - இதுதான் பந்தயம். அந்த சமயத்தில் எந்த விருந்தில் என்றெல்லாம் முடிவாகவில்லை - சிஸ்விக் பிறகு முடிவான விருந்து! மிக பிடிப்பு கொண்டு பரபரப்பானார் கர்லோட்டா. மேலும், இந்த பந்தயத்தில் பல திட்டங்கள் அவர் முன் மொழிந்தவைதான் - உடைகளை மாற்றிக் கொள்வது, எங்கு அதை செய்வது போன்ற அனைத்தும்! இந்த உடை மாற்றும் படலத்தை என் ஜாகையில் செய்ய முடியாது. காரணம் எல்லீஸ். மற்றும் இதனை அவரது இருப்பிடத் திலும் மேற்கொள்ள முடியாது. காரணம் அவரது பணியாள். பணியாள்களுக்கு தெரியும்படி எதுவும் வேண்டவே வேண்டாம் என்பதில் ஸ்திரமாயிருந்தார் அவர் - முட்டாள்தனம்! அந்த சமயத்தில் தான் எங்காவது உணவகத்தில் இதனை மேற்கொள்ளலாம் என முடிவாயிற்று. எல்லீஸின் மூக்குக் கண்ணாடியையும் பெற்றுக் கிளம்பினேன்.

இந்தத் திட்டத்தை இருவரும் தீட்டத் தொடங்கிய சீக்கிரத்திலேயே, கட்டாயமாக கர்லோட்டாவைக் காதும் காதும் வைத்தது போல அழித்து விட வேண்டும் என்பது என் நிலையாயிற்று. பரிதாபம்தான். இருந்தாலும் வேறு வழி கிடையாது - சீமான் எட்ஜ்வேரின் கொலை வெளியே தெரிய வந்தபோது, என் திட்டம் முழுவதும் அவளுக்குப் புரிந்துத்தான் போகும். எனக்கு அவ்வப்போது வெரோனல் உட்கொள்ளும் வழக்கம் உண்டு - என்னிடம் எப்போதும் கொஞ்சம் இருப்பு இருக்கும். ஆக, கர்லோட்டாவுக்கு முடிவு வெரோனாலால் இருக்கட்டும்! கதையின் இந்தப் பகுதிக்கான திட்டத்தையும், மிக தனித்துவம் மிகுந்து தான் தீட்டினேன்!

கர்லோட்டா தீவிரமாக வெரோனலை உட்கொண்டு வந்திருக்கிறாள் என ஒரு கானல் அபிப்ராயத்தை ஏற்படுத்துவது மிக ஒத்தாசையாயிருக்கும், இல்லையா, என்ன சொல்கிறீர்கள்? இதற்கு ஒரு பெட்டியை, எப்படி வேண்டுமோ அப்படி பிரதி ஒன்றினை வரைந்தனுப்பி செய்தேன். அதில் செல்வி கரோட்டா ஆடம்ஸின் C.A. எனும் ஆரம்ப அட்சரங்கள், மற்றும் உள்ளிருந்த முகவரி எல்லாவற்றையும் பொறிக்கச் சொன்னேன். அந்த D! தேவையில்லாமல் இப்படி ஓர் அட்சரத்தைப் போட்டு, நவம்பர் என்றெல்லாம் கூட சேர்த்துக் கொண்டால், போலீஸ் மண்டையைப் பிய்த்துக் கொண்டு வழக்கைப் பரணில் ஏற்றி விடும் என்று எதிர்பார்த்து நிறைவேற்றி னேன். அப்படித்தான் வழக்கும் பரணில் ஏறியது - நீங்கள் விழித்துக் கொண்டு விட்டீர்கள் - இறங்கி விட்டது. வந்து சேர்ந்ததும், பெட்டியை, எல்லீஸை விட்டு வாங்கி வரச் செய்தேன். அவளுக்கு, பாவம், உள்ளிருந்த இத்தனை விஷயங்களும் தெரியாது.

அந்த இரவில், எல்லாமும் மிக அழகாக, திட்டப்படி பிசகே இன்றி, முடிந்தன. எல்லீஸிடமிருந்து மிக மிகக் கூரான கத்தி ஒன்றினை வாங்கிக் கொண்டேன்.

சான் பிரான்ஸிஸ்கோவில் ஒரு விருந்து, திருமிகு பொய்ரெட்! ஒரு மருத்துவர், முதுகெலும்பு மற்றும் கழுத்துப் பட்டை எலும்பு ஆகியவை விபத்துக்களில் உடைந்துப் போனால், எந்த அளவுக்கு அது முகுளத்தையும் அதற்கான இணைப்புகளையும் துண்டித்து மரணத்தை ஏற்படுத்தி விடும் என்று மிக ருசிகரமாய் விளக்கிக் கொண்டிருந்தார். பிற்காலத்தில் அறிவு மிக்க மருத்துவர் பாத்திரம் ஏதாவது கிடைத்தால் உதவட்டுமே என்று, அவரின் அங்க அசைவுகளை அப்படியே நான் என்னுள் இறக்கிக் கொண்டிருந்தேன் - இதற்காகத்தான் பற்பல விளங்காத மருத்துவ வார்த்தைகளை இட்டு அவர் புரியாமல் பேசியதையும் தாங்கிக் கொண்டு அமர்ந்திருந்தேன். அந்த விரிவுரையின் முடிவில், கழுத்தின் அடியில் எங்கு முகுளத்தின் நரம்புகளெல்லாம் கூடுகின்றன என்றும், ஒரு குறிப்பிட்டக் கோணத்தில் (ப்ளாஸ்டிக்கினாலான ஒரு மாதிரி மனிதத் தலையை வைத்துக் கொண்டு, செய்தும் காட்டினார்) வெறும் முகச்சவரம் செய்யும் ப்ளேடினால் குறி பார்த்து இந்த நரம்பு முடிச்சினை வெட்டி விட்டால், முப்பது நொடிகளில் மூளைக்கும் உடலின் ஏனைய பகுதிகளுக்குமான தொடர்பு ஸ்தம்பித்து விடும் என்றும், பிறகு, அதிகபட்சம் முப்பது நொடிகளில் இறப்பு சம்பவித்து விடும் என்றும் பயமுறுத்தினார். நடிப்புக்கு உதவலாம் எனும் நினைப்பில், பலமுறை அவரிடம் செய்துக் காட்டி பயிற்சி பெற்றேன் நான்! எனக்கு இந்தக் குறிப்புகள் மிகவும் பிடித்துள்ளன என்றும், ஒரு நாள் நிச்சயம் இவற்றையெல்லாம் உள்ளடக்கி ஒரு பாத்திரத்தில் நடிக்காமல் விட மாட்டேன் என்றும் அவரிடம் சொன்னேன். அதற்கு அவர் விளையாட்டாய், படத்தில் நடத்துங்கள்... நிஜத்தில் நடத்தி விடாதீர்கள் என்றார்...! பாவம்!

எங்கள் திட்டத்தை உடனடியாக தனது சகோதரிக்கு எழுதியது, கர்லோட்டா செய்த மாபெரும் துரோகம். யாரிடமும் நாங்கள் நடத்திய ஆள் மாறாட்ட நாடகத்தைச்

சொல்லக் கூடாது என்று என்னிடம் சத்தியம் பெற்றவர் அவர் - ஆனால் காரியம் நடந்து முடிப்பதற்குள், சகோதரிக்கு கடிதமாம்..! அவர் மீது எனக்கிருந்த கடுகத்தனை பச்சாதாபமும் அவிந்துப் போயிற்று. ஒரு பக்கத்தைக் கிழித்தெடுத்து விட்டு, அடுத்த பக்க ஆரம்ப அட்சரமான S-ஐயும் கிழித்து விட்டால் she க்கு பதிலாக he வரும் என்று சமயோஜிதமாய் நான் எடுத்த முடிவினை, மகா புத்திசாலித்தனமான முடிவு என எனக்கு நானே பாராட்டிக் கொண்டதுண்டு. இது, முழுக்க முழுக்க என் திட்டம்! சீமானின் கொலை வளர்ந்து வளர்ந்து என்னவெல்லாமோ வடிவம் எடுத்திருந்தாலும், இந்தக் கடிதத் திட்டம் மட்டும் எனக்கு கிரீடம் சுமத்தும் வெற்றியே! நான் நடந்துக் கொள்ளும் இயல்பை வைத்து, மூளையற்றவள் என்று எல்லோரும் என்னைக் கேலி செய்வார்கள் - ஆனால், இக்கடித சங்கதி போன்றவற்றை யெல்லாம் நடத்தி முடித்து வெற்றிக் கொடி கட்ட, சிறப்பான மூளை அவசியம்... என்ன திரு பொய்ரெட்!

எல்லாம் முடிந்தன - சிறப்பாய். பிறகு நான் மிக சந்தோஷமாகவும், போதுமென்ற மனம் பெற்றவளாகவும் ஆனேன். ஒரு மாகாணத்தின் ராணியாகப் போகிறேன் - இனி என்ன வேண்டும்! என் அதிர்ஷ்டம் தொடர்ந்துக் கொண்டேயிருக்க, இனி எல்லாமும் நாம் நினைத்தபடி மன நிறைவாய் செல்லும் என்று தான் நான் நினைத்தேன். அந்தக் கிழ ராணி எனக்கெதிராய் மிகக் கசப்பாய் இயங்கிக் கொண்டிருந்தாள்... போய்த் தொலையட்டும்... ஆனால் இளைய பிரபு, என் மேல் உயிரையே வைத்திருந்தார். எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் என்னை மணமுடிக்க துடித்துக் கொண்டிருந்த அவருக்கு, என் மேல் துளியேனும் சந்தேகமில்லை.

திரு பொய்ரெட்... நான் வாழ திட்டமிட்டிருந்த வாழ்க்கைக்கு இடையூறாய் இருந்த அத்தனையும் தவிடு பொடியாகிய அந்த ஒரு சில வார கொம்மாளத்தை, நான் என் வாழ்நாளில் என்றுமே கண்டவளில்லை. அத்துணை

குதூகலம்..! என் கணவரின் சகோதரன் மகனான மார்ஷ் கைதான போது, இனி நம்மை எந்த போலீஸும் அணுகாது என அதீத பாதுகாப்பினை அடைந்தேன். கர்லோட்டா ஆடம்ஸின் கடிதத்திலிருந்து அந்த S-ஐக் கிழித்ததனால் தானே நான் தப்பி, மார்ஷ் அகப்பட்டுள்ளார்... என்னே புத்திசாலித்தனமான மூளை, என்று மீண்டும் என்னை நானே மிகப் பெருமையாய் பாராட்டிக் கொண்டேன்.

டொனால்ட் ராஸின் சங்கதி - என் துரதிர்ஷ்ட விதியின் துவக்கம். எதை வைத்து அவர் எங்களின் ஆள் மாறாட்டத்தைக் கண்டுபிடித்தார் என இன்னமும் கூட எனக்கு நம்பிக்கையில்லை. அளவளாவலின் போது, அத்தனை பட்டவர்த்தனமாகவா நான் என் பொது அறிவு அற்ற மூளையைப் பிரகடனப்படுத்தி விட்டேன்... இதனடிப்படையிலா ராஸ் என்னை அடையாளம் கண்டு கொண்டார்...! இல்லை, திரு பொய்ரெட்... அந்தக் கணம்... என் துரதிர்ஷ்டம் சோம்பல் முறித்து எழுந்துக் கொண்ட கணம்... வேறென்னென்பது...!

அதிர்ஷ்டம் நமக்கு எதிராய் இயங்க ஆரம்பித்து விட்டால், நிற்காமல் இயங்கிக் கொண்டேயிருக்கும் என்பது தான் எத்தனை ஆச்சரிய சங்கதியாய் உள்ளது! பட்ட காலிலே தானே படும்! இந்த ராஸை விட்டு வைக்கவே கூடாது. அவன் குறித்து ஏதாவது முடிவெடுத் தாக வேண்டும் என்று மிக அவசரப்பட்டேன். அவசரம், அவனிருக்கும் ஒவ்வொரு கணமும் எனக்கு ஆபத்தே என்ற உந்துதலினால் விளைந்த தீவிர அவசரம். இம்முறை நான் புத்திசாலித்தனமாக திட்டமிடாமல் இயங்கி விட்டது தான் நான் செய்திட்ட மாபெரும் தவறு. மற்ற இரு கொலைகளின் போதும் நான் நிகழ்த்திய ஆள் மாறாட்ட நாடகத்தை, ராஸ் கொலையிலும் நிகழ்த்தியிருக்கத்தான் வேண்டும் - விட்டு விட்டேன்.

எல்லீஸ், நீங்கள் அவளைக் கூப்பிட்டு அனுப்பிய தாகவும், பல கேள்விகள் கேட்டு விசாரித்ததாகவும் சொன்னாள்... அப்பொழுது கூட ப்ரையன் மார்ட்டீன் பற்றி அறியத்தான் அவளிடம் விசாரணை மேற்

கொண்டுள்ளீர்கள் என எண்ணி விட்டு விட்டேன். இதைத் தவிர, வேறு எதனைத் தேடியும் அவளிடம் நீங்கள் விசாரணை செய்திருக்க மாட்டீர்கள் என்று இருந்து விட்டேன் - கவனித்தீர்களா, தொடரும் துரதிர்ஷ்டத்தை...! பாரீஸிலிருந்து வந்த பெட்டியை அவள்தான் போய் வாங்கி வந்தாளா என நீங்கள் அவளிடம் கேட்கவேயில்லை..! அதனை அவள் அப்படியே என்னிடம் வந்து சொல்லி விட்டால் நான் உஷாராகி விடுவேன் என நீங்கள் எண்ணியிருக்க வேண்டும் - இல்லையா! இறுதியில் அந்த பெட்டி சமாச்சாரம் - அதனைப் போய் எல்லீஸ் வாங்கி வந்தது - என எல்லாவற்றையும் நேரில் கண்டதைப் போல அல்லது ஞான திருஷ்டி நிறைந்த ஞானியைப் போல நீங்கள் கண்டுபிடித்துப் பிட்டுப் பிட்டு வைக்கும்போது, என்னால் துளியும் நம்ப முடியவில்லை, திரு பொய்ரெட்...! அமானுஷ்யமாய் உள்ளது, நான் செய்த அத்தனையையும் நீங்கள் துப்பறிந்துள்ள விதம்.

இனி நான் எதிர்த்து நிற்க இயலாது என அறிந்தேன். குறுக்கு விசாரணைகளில், படம் பிடித்தது போல அத்தனையும் வந்து சபையில் விழும் போது, நான் என்ன செய்ய...! வெட்கித் தலைகுனிந்து நொறுங்கிப் போனேன்! துரதிர்ஷ்டத்துக்கு எதிராக யாரால் தான் என்ன செய்து விட முடியும்..!

நான் இத்தனை திட்டங்களை மனதில் வைத்துக் கொண்டுதான் உங்களை ரீஜெண்ட் மாளிகைக்குத் தூது போக அனுப்பியுள்ளேன் என்பதை எண்ணும் போது உங்களுக்கு என் மேல் வருத்தம் வரலாம். நான், நான் நினைத்த வழியில் சந்தோஷமாய் வாழ எண்ணியதன் விளைவு. அப்படி உங்களை நான் அங்கு அனுப்பாமல் இருந்திருந்தால், இந்த வழக்கோடு உங்களுக்கு எந்தத் தொடர்பும் இருந்திருக்காது - நானும் தப்பித்திருப்பேன், என்றே நினைக்கிறேன்.

இப்படி ராட்சஸத்தனமான சாதுர்யம் மிக்க மகா புத்திசாலியாய் நீங்கள் விளங்குவீர்கள் என, திரு

பொய்ரெட், நான் நினைத்ததேயில்லை - சொல்லப் போனால் பார்ப்பதற்கு நீங்கள் சாதாரண புத்திசாலி போலக் கூடத் தெரியவில்லை.

இன்றைய தேதியில் நான் வெளிறிப் போய் விட்டேன், திரு பொய்ரெட். இளைத்தும் விட்டேன். அடங்கி ஒடுங்கி விட்டேன். இவையும் எனக்குப் பொருத்தமாய் தான் உள்ளன! கற்பனைக்கப்பாற்பட்ட தைரியசாலி - வீராங்கனை நான், என்கிறார்கள்! இது தைரியமில்லை, திரு பொய்ரெட்... அடைய வேண்டியதை எப்படியாவது அடைந்தே தீர வேண்டும் எனும் நீதி வழுவிய கண்மூடித்தனமான வெறி! நான் தைரியசாலி என வர்ணித்தெழுதுவோருக்கு, என் இவ்விளக்கத்தை மட்டும் தெரிவித்து விடுகிறீர்களா...!

வரலாற்றில், எனக்கு முன்னால், என்னைப் போன்ற ஒரு 'குடும்பக் கொலைகாரி' இருந்திருக்கவே மாட்டாள் என்பது என் அசைக்க முடியாத நம்பிக்கை.

இதுதான் கதை.

உங்களிடமிருந்து விடை பெறும் தருணம் வந்து விட்டது என நினைக்கிறேன். விநோதமான வழக்கு. இப்பொழுது கூட நான் நடந்த எதற்கும் வருத்தப்பட வில்லை, தெரியுமோ! வருத்தப்படத் தெரியவில்லை என்று கூட சொல்லலாம்! இது ஏன், திருமிகு பொய்ரெட்...!

உங்களை மன்னிக்கும், (எதிரிகளை மன்னித் தாகத்தான் வேண்டும்... இல்லையா!)

ஜானே வில்கின்ஸன்.

(முடிந்தது)

ஒரே ஓர் ஆங்கில அட்சரம்.
இது தான் கதையின் உயிர் நாடியே.
இதை மட்டும் வைத்துக்கொண்டு துப்பறியும் கதை நாடும் வாசகனுக்குத் தேவையான த்ரில்லர் தீனியை அள்ளித்தந்து கதையை நகர்த்தியிருக்கிறார் அகதா.

பிரபல நடிகை ஜானே வில்கின்ஸனுக்கு அவருடைய கணவரான சீமான் எட்ஜ்வேரிடமிருந்து விவாகரத்து பெற்றுத் தந்து விட தூது போகிறார், துப்பறியும் நிபுணர் ஹெர்குல் பொய்ரெட். விவாகத்தை ரத்து பண்ண கணவன் ஒப்புக் கொள்ளவில்லையென்றால் ஒரு டாக்ஸி வைத்துக் கொண்டு நேராய் சீமான் மாளிகைக்குப் போய் தலையைச் சீவி விடுவேன் என்று ஜானே வில்கின்ஸன் பரபரப்பாய் பேட்டி தந்திருந்த நேரத்தில் - நிஜமாகவே அப்படியே சீவிக் கொல்லப்பட்டுவிடுகிறார் எட்ஜ்வேர்!

யாரால்?

இந்த சஸ்பென்ஸைப் பொத்தியெல்லாம் வைக்காமல் கதையின் முதல் பக்கத்திலிருந்தே கதாசிரியர் திறந்து போட்டேயிருந்தாலும் வாசகன் அதன் அடையாளத்தைக் கடைசி அத்தியாயமான 30 வரை கண்டுபிடிக்கவே முடியாமல் தோற்று விடுவது, கதையை விட செம த்ரில்லிங்.

இந்நாவலின் விமரிசையென, மடித்து மடித்துக் காட்சிகளை அழகாய் அடுக்கியுள்ள நேர்த்தியை சொல்லலாம். எத்தனை பெரும் திட்டமிடல் இருந்திருக்க வேண்டும் என வியப்பு உண்டாகிறது, உலக அளவில் அங்கீகாரம் பெற்றுள்ள இந்நாவலின் கதையமைப்பினை நோக்கும்போது.




ISBN 978-81-8402-527-9

